| | |
|---|---|
| சொல்லினால் | ஒரோப்ரயோஜநங்களாலே |
| சுருங்க | ஸங்க்ஷேபேண |
| நின் | உன்னுடைய |
| குணங்கள் | ப்ரத்வஸாதகாதி குணங்களை |
| சொல்லவல்லரே | பேசவும் ஸமர்த்தரோ? |

(௧௧)

அ:—பதினோராம்பாட்டு. (௧) "[illegible]" (௨) "[illegible]—ஹிரண்யசர்பஸ்ஸமவர்த்ததாக்ரே" என்றுப்ரஹ்மாதிகளுக்கும்காரணத்வஞ் சொல்லுகிறதில்லையோவென்ன; உன்றலேஸ்ருஷ்டராய் உன்பெருமையை ஒரோப்ரயோஜநங்களிலேபேசக்ஷமருமன்றிக்கேயிருக்கிற விவர்கள் ஆஸ்ரயணீயராக ப்ரஸங்கமென்? கீழ்ச்சொன்னகாரணவாக்யமும் ‡(அவ்வஸ்துவைப்பற்ற) அந்யபரமென்கிறார்.

வ்யா;—(சொல்லினால் தொடர்ச்சி நீ) ஶப்தத்தாலே ஸித்தமான புருஷார்த்தத்திலே இழிந்தார்க்கு அதிலே உறவுபிறப்பிப்பாயும் நீ. தொடர்-உறவு. அதாவது-ப்ரத்யக்ஷவிஷயமான ஶப்தாதிகளே புருஷார்த்தமென்றிருக்கும் ஸம்ஸாரிகளை யொழிய வேதாந்தமுகத்தாலே வேதைகஸமதிகம்யமான வஸ்துவையறிந்து அவ்வஸ்துவைப்பெற ஆசைப்பட்டவர்களுக்கு உபக்ரமதசையிலே ருசிஜநகன் நீ; ப்ரஹ்மாதிகள் ப்ராப்தரான ஜநகரல்லாமையாலே ருசிஜநகருமல்லர். (சொல்லப்படும் பொருளும் நீ) ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளில் ஆஶ்ரயணீயராய்த்தோற்றுகிறதேவதைகளுக்கு ஆத்மாவும் நீ. "[illegible] - ஏநமேவேவதந்த்யக்நிம்" (௩) "[illegible] - சதுர்ஹோதாரோயத்ரஸம்பதம் கச்சந்தி" (௪) "[illegible]-யேயஜந்தி". (சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதிநீ) வேதத்தால் பரிச்சேதிக்கப்படாதென்று தோன்றுகிற தேஜஶ்ஶப்தவாச்யன் நீ. (௫) "[illegible] - யதோவாசோ நிவர்த்தந்தே",

---

பதினோராம் பாட்டு. (அந்யபரம் ப்ரஶம்ஸாபரம். (ஶப்தம்) வேதஶப்தம். (ஜநகரல்லாமை) யதாவானகாரண பூசரல்லாமை. ப்ரஹ்மாவேதத்தைக்

---

(௧) (௨) யஜு-௪ கா-௪. (௩) ஆரண ௩.
(௪) கீ- (௫) தை-ஆ- ‡ குண்டலிதமதிகம்.

மூ.—உலகுதன்னை நீபடைத்தி யுள்ளொடுக்கிவைத்தி மீண்
டுலகுதன்னுள்ளேபிறத்தி ஓரிடத்தையல்லை, ஆல்
உலகுநின்னொடொன்றி நிற்கவேறுநிற்றி, ஆதலால்
உலகு நின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே. (௧௨)

(௧) "𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌾𑌮𑍍 - அவிஜ்ஞாதம்விஜாநதாம்" (௧) "𑌯𑌸𑍍𑌯𑌾𑌮𑌤𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌤𑌮𑍍 - யஸ்யாமதம் தஸ்யமதம்" (௨) "𑌪𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍁𑌪𑌸𑌂𑌪𑌦𑍍𑌯 - பரஞ்ஜ்யோதிருப ஸம்பத்ய" (௩) "𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌪𑌰𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 - நாராயண!பரோ ஜ்யோதிஃ" இத்யாதிகளிலே உன் ஸ்வரூபாதிகள் அபரிச்சிந்நங்களென்றும் பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யன் நீயென்றும் சொல்லப்படா நின்றதிறே.

(சொல்லினல்படைக்க) (௪) "𑌯𑍋 𑌵𑍈 𑌵𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌹𑌿𑌣𑍋𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑍈 - யோவைவேதாம்ஶ்ச ப்ரஹிணோதிதஸ்மை" நீ கொடுத்த வேதத்தைத்ருஷ்டியாகக்கொண்டு ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுவாராக. (௫) "𑌸 𑌭𑍂𑌰𑌿𑌤𑌿 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌤𑍍 - ஸபூரிதிவ்யாஹரத்". (நீ படைக்கவந்து தோன்றினர்) (௪) "𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 - யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" என்கிறபடியே - நீ ஸ்ருஷ்டிக்க உன்திருநாபீ கமலத்திலே வந்துதோன்றின ப்ரஹ்மா முதலான தேவர்கள். (சொல்லினற் சுருங்க நின்குணங்கள் சொல்லவல்லரே) உன் குணங்களையறிந்து பரக்கப் பேசமாட்டாமையன்றியே, ஒரோ ப்ரயோஜநங்களிலே ஸங்க்ஷேபேண உன் குணங்களைப் பேசமாட்டார். பரத்வஸூசகமான குணங்கள், ஜகத்காரணத்வஸூசகமான குணங்கள், ஆஶ்ரிதார்த்தமான குணங்கள் இவற்றிலே ஒரோகோடியைக் கரைகாணமாட்டார்கள். (௧௧)

பன்னிரண்டாம்பாட்டு (உலகித்யாதி).

உலகுதன்னை லோகத்தை
நீ நீ
படைத்தி ஸ்ருஷ்டியாநின்றி;

கொண்டு ஸ்ருஷ்டிக்குமோவென்ன வருளிச்செய்கிறர் (ஸபூரிதிவ்யாஹரத் என்று. ... ... ... ... (௧௧)

(௧) கேந-௨-௩. (௨) சாந்தோ-அ-௪௨-௨. (௨) தை-நா-௧௧.
(௪) ஶ்வேதா-௬-௧௮. (௫) யஜுஸ-அஷ்ட.

| | |
|---|---|
| உள் | வயிற்றிலே |
| ஒடுக்கி | ஸங்குசிப்பித்து |
| வைத்தி | வையாநின்றி; |
| மீண்டு | காரணத்வப்ரயுக்த வைபவத்தினின்றும் நிவ்ருத்தனாய்,(அன்றிக்கே) |
| மீண்டு | திரியட்டுமென்னுமாம்; |
| உலகுதன்னுளே | லோகத்துக்குள்ளே |
| பிறத்தி | அவதரியாநின்றாய்; |
| ஓரிடத்தையல்லையால் | ஒருஸ்த்தலத்தை யுடையவனென்று நிர்ணயிக்கவொண்ணாதவனாகையாலே |
| உலகு | ப்ரபஞ்சமானது |
| நின்னொடு | ஶரீரியான வுன்னோடு |
| ஒன்றி | ஶரீரபூ(ஸ-ரு)ய |
| நிற்க | வர்த்திக்க |
| வேறு | ஶுபாஶ்ரயமாகைக்கு அஸாதாரணவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு |
| நிற்றி | வ்யாவ்ருத்தராயிராநின்றி; |
| ஆதலால் | ஒருவகையாலும் பரிச்சேதிக்க வொண்ணாமையாலே |
| உலகு | லோகத்திலே |
| சூழலுள்ள | ஆஸ்சர்யமான படிகளையுடைய |
| நின்னை | உன்னை |
| யாவர் | யார் |
| உள்ள | அறிய |
| வல்லரே | ஶக்தர். (௧௨) |

அவ;—பன்னிரண்டாம்பாட்டு. ஜகத்காரணபூதனாய் ஸ்ருஷ்ட்யாதி முகத்தாலே நின்று ரக்ஷிக்குமளவேயன்றியே, அஸாதாரண விக்ரஹயுக்தனாய் அவதரித்து ரக்ஷிக்கும் உன்படியை லோகத்தில் ஆர் நினைக்கவல்லாரென்கிறார்.

வ்யா. (உலகுதன்னை நீ படைத்தி) அசித்தை உபகரணமாகக்கொண்டு ப்ராக்ருத ஸ்ருஷ்டியைப் பண்ணினநீ, ப்ரஹ்மாதிஸகல தேவதாந்தர்யாமியாய்க் கொண்டு ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்

டியாநிற்றி. (உள்ளொடுக்கிவைத்தி) நித்ய நைமித்திகாதி ப்ரளயாபத்துக்களிலே நாமரூபங்களையிழந்த பதார்த்தங்களை உன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷியாநிற்றி. இத்தால் - ஸகல பதார்த்த ஸ்ருஷ்டிக்கும் கர்த்தாவாய் ஸகல ஸம்ஹாரங்களிலும் ரக்ஷகனுமாயிருக்கிறான், அடியிலே, (க) "பஹுஸ்யாம் - பஹுஸ்யாம்" என்கிற ஜகதுபாதாநகாரண பூதனென்றதாய்த்து. (மீண்டுலகுதன்னுளே பிறத்தி) ஜகதேக காரணத்வத்தால் வந்த வைபவத்தினின்றும் மீட்டு உன்னாலே ஸ்ருஷ்டமான இவ்வுலகத்திலே சில க்ஷேத்ரஜ்ஞர்க்குப்புத்ரனாய் வந்தவதரியாநிற்றி. (மீண்டு) அதுபோராமே திரியட்டு மென்றுமாம். ஸகல பதார்த்தங்களுக்கும் ஜநகனான நீ உன்னாலே ஸ்ருஜ்யனாயிருப்பானொரு க்ஷேத்ரஜ்ஞனை ஜநகனாக்கிக்கொண்டு ஜநிப்பதே. ப்ரளயாபத்திலே ஸகல பதார்த்தங்களையும் உன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த நீ ஒரு ஸ்த்ரீவயிற்றிலே கர்ப்பபூதனாவதே!. (உ) "[Grantha] - ப்ரீத்யாத்வம் தாரயேமாநம் த்ருதம்யேநாகிலம்ஜகத்" என்னக் கடவதிறே.

(ஓரிடத்தையல்லையால்) ஒரு ஸ்த்தலத்தாயென்று நிர்ணயிக்கவொண்ணாதவனாகையாலே ஒருகோடியிலே சேர்த்தறியப்போகிறதில்லை; அதாகிறது - †(உபாதாந)காரணத்வத்திலே புரையில்லாமையாலே கார்யமென்ன வொண்ணாது, அவதாரத்தில் ஸஜாதீயபாவத்தில் புரையில்லாமையாலே காரணமென்ன வொண்ணாது, இது என்னபடி யென்கிறார். (உலகுநின்னொடொன்றிநிற்கவேறுநிற்றி) ஜகத்து உனக்கு ஶரீரமாகையாலே உன்னைப்பிரியாதேநிற்க, அஸாதாரண விக்ரஹயுக்தனாய்க்கொண்டு வ்யாவ்ருத்தனாயிருத்தி. அதாகிறது – விமுகரான காலத்திலே ஆத்மாவாய் நின்று ஸத்தையை நோக்கியும், அபிமுகீகரித்தவன்று ஶுபாஶ்ரயனாகைக்கு அஸாதாரண விக்ரஹயுக்தனாயுமிருக்குமென்கை. (ஆதலால்)ஒருவகையாலும் பரிச்சேதித்தறியவொண்ணாமையாலே. (உலகுநின்னையுள்ளசூழல்யாவருள்ளவல்லரே) ஆஶ்சர்யமானபடிகளையுடைய வுன்னை லௌகிகபுருஷர்களில் அறியவல்லவரார். சூழல்—சூழ்ச்சி. (கஉ)

---

அரு. பன்னிரண்டாம் பாட்டு. (மீண்டு)காரணத்வத்தில்நின்றும் மீண்டென்னுதல், காரணமானதுக்குமேலே யென்னுதல். (ஸ்த்ரீவயிற்றிலே) என்றதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (ப்ரீத்யாத்வமித்யாதி). சூழலுள்ள நின்னை - உலகில்-யாவருள்ளவல்லரென்றபடி. சூழ்ச்சி-வ்யாபாரம். (கஉ)

---

(க) தை-ஆ- (உ) வி-பு-ரு-உ.-உக. † குண்டலிதம்அதிகம்.

௩௩.—இன்னையென்று சொல்லலாவதில்லை யாதுமிட்டிடைப்
பின்னைகேள்வனென்பருன் பிணக்குணர்ந்த பெற்றியோர்
பின்னையாயகோலமோடு பேருமூருமாதியும்
நின்னையார்நினைக்கவல்லர் நீர்மையால் நினைக்கிலே. (௧௩)

---

பதின்மூன்றும்பாட்டு. (இன்னையென்றித்யாதி).

இன்னை என்று அஜஹத்ஸ்வபாவாதி கோடியில் ஏவம் விதனென்று
சொல்லலாவது சொல்லத்தக்கது
யாதுமில்லை ஒன்றுமில்லை;
இட்டு நேரிய
இடை மத்யத்தையுடைய
(யத்வா - "யாதுமிட்டு" என்று கூட்டி)
யாதும் அல்லாத ரூபாஶ்ரயங்களையடைய
இட்டு விட்டு
இடை கோபஸஜாதீயையாய் வந்தவதரித்த
பின்னை நீளாதேவியான நப்பின்னைக்கு
கேள்வனென்பர்- வல்லபனென்றுசொல்லுவர்கள்;
உன்பிணக்கு உன்னுடைய அவதாரநாமசேஷ்டிதவிஷயமான ஆஶ்ரிதாநாஶ்ரிதர்களுடைய விவாதத்தை
உணர்ந்த அறிந்த
பெற்றியோர் பண்டிதர்கள்
பின்னை இதரஸஜாதீயனாயவதரித்து நிற்கச்செய்தே
ஆய இதரவிலக்ஷணமான
கோலமோடு விக்ரஹத்தோடு
பேரும் திருநாமங்களென்ன,
ஊரும் அவதரித்ததேசப்ரபாவமென்ன,
ஆதியும் அவ்வவதார விக்ரஹத்துக்குநிதாநமென்ன, இவற்றையுடையவுன்னை,
(யத்வா)
பின்னை அவதாரஸமாப்தியில்

| | |
|---|---|
| ஆய | விஸ்ரமஸ்த்தலமான |
| கோலமோடு | வ்யூஹவிக்ரஹங்களோடு கூடிய |
| பேரும் | அக் குணசேஷ்டிதங்களுக்கு வாசகங்களான திருநாமங்களென்ன, |
| ஊரும் | அவ்வ்யூஹஸ்த்தலங்களான ஆமோதாதிகளென்ன, |
| ஆதியும் | இவற்றுக்கடியான பரத்வமென்ன; இவற்றையுடைய |
| நின்னை | உன்னை |
| ("நீர்மையால் நினைக்கிலல்லது ஆர் நினைக்கவல்லர்" என்று கூட்டி) | |
| நீர்மையால் | உன்ஸௌலப்யத்தாலே |
| நினைக்கிலல்லது | அறியுமத்தனையொழிய |
| யார் | ஆர் |
| நினைக்கவல்லர் | ஸ்வஸாமர்த்யத்தாலே அறியஶக்தர், ("அல்லது" என்று அத்யாஹாரலப்தம்) (கங) |

அவ;—பதின்மூன்றும்பாட்டு. இவ்வவதாரரஹஸ்யம் ஒருவர்க்கறிய வொண்ணுதோ வென்னில்; கோ(மோ)பஸஜாதீயனுய்வந்தவதரித்த நீ காட்டித்தர உன்வைலக்ஷண்யம் காணுமதொழிய ஸ்வஸாமர்த்யத்தாலே காணமுடியாதென்கிறார்.

வ்யா;—(இன்னேயென்று சொல்லலாவதில்லையாதும்) அவதரித்து நிற்கிறநிலையில் அஜஹத்ஸ்வபாவங்களென்ன, ஸௌலப்யாதிகளென்ன, இவற்றிலே ஒருகோடியாலே உன்னைப் பரிச்சேதிக்கப்புக்கால் ஏவம் விதனென்றுசொல்லலாவதொன்றுமில்லை. (இட்டிடைப்பின்னை கேள்வனென்பர்) (க) "தஸ்யதீரா: பரிஜாநந்தி யோநிம் – தஸ்யதீரா: ப[illegible]நந்தியோநிம்" என்கிறபடியே அவதாரரஹஸ்யஜ்ஞானமுடையவர்களும் "மிதுநமேஆஶ்ரயணீயம்" என்று ஸஜாதீயரிற்காட்டில் [illegible]வ்ருத்தனனவுன்னை உபதேஶிப்பார்கள். நேரிதான இடையையுடையநப்பின்னைப்பிராட்டிக்குவல்லபனென்று சொல்லுவர்கள். "யாதுமிட்டு" என்றுகிமோடே கூட்டின

அரு. பதின்மூன்றும்பாட்டு. (யாதும்) ஒன்றும். "இட்டு" என்றது- இட்டளமாய், அத்தால்-ஸங்கோசமாய், (நேரிது) என்கிறது; யாதுமிட்டு - அட

(க) ஆரணம்-ந.

போது, ஶுபாஶ்ரயத்தையோதுகிற ப்ரகரணங்களில்*அங்குஷ்ட்டமாத்ரமென்றும்(க) "அக்நிர்மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ - அக்நிர்மூர்த்தா சக்ஷுஷீசந்த்ரஸூர்யௌ" என்கிறபடியே த்ரைலோக்ய ஶரீரனென்றும் சொல்லுகிற ஶுபாஶ்ரயங்களை யடங்கவிட்டு, (உ) "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ-மநுஷ்யத்வேசமாநுஷீ" என்று கோ (மா) பஸஜாதீயனாய் வந்தவரித்த நீளாவல்லபனை ஶுபாஶ்ரய மென்பர்கள். (உன்பிணைக்குணர்ந்த பெற்றியோர்) உன் நிமித்தமாக ஆஶ்ரிதர்க்கும் அநாஶ்ரிதர்க்குமுண்டானவிவாதத்தை அநுஸந்தித்திருக்கும்பண்டிதர்கள். அதாகிறது-(ங) "பேருமோராயிரம் பிறபலவுடையவெம்பெருமான்" என்றுய்த்து ஆஶ்ரிதருடையவறிவு; "பேருமோருருவமுமுளதில்லை" என்றுய்த்து அநாஶ்ரிதருடைய வறிவு. இவ்விவாதத்துக்கடி நீ யென்றறியுமவர்கள்.

(பின்னையாயகோலமோடு பேருமூருமாதியும் நின்னை) இதரஸஜாதீயனாய்வந்தவதரித்து நிற்கச்செய்தே ஸர்வ விஸஜாதீயமான வைலக்ஷண்யத்தையுடைய விக்ரஹமென்ன, அவதாரத்தில் குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களென்ன, அவதரித்ததேஶப்ரபாவமென்ன, அவ்விக்ரஹத்துக்குநிதாநமென்ன, இவற்றையுடையனைவுன்னை. அதவா, அவதாரஸமாப்தியில்விஶ்ரமஸ்தலமான வ்யூஹ விக்ரஹங்களென்ன, தத்தத்குண சேஷ்டித வாசகங்களான திருநாமங்களென்ன, ஆமோதாதிவ்யூஹ†ஸ்வபாவங்களென்ன, இவற்றுக்கடியானபரத்வமென்ன, இவற்றையுடையவுன்னை யென்றுமாம். (நீர்மையால் நினைக்கிலல்லது ஆர்நினைக்கவல்லார்) உன்னுடைய நீர்

ங்கஇட்டு, வேதங்களிலே சொல்லுகிறப்ரகாரங்களில் எல்லாப்ரகாரங்களையுமிட்டுச்சொன்னாலும் இப்படிப்பட்டவனென்று சொல்லலாவதில்லை -சொல்லப்போகாதென்றபடி. இடை - இடைக்குலமாதல்; நீயென்றறிகையாவது - ஜ்ஞாநாஜ்ஞாநங்களைக் கர்மாநுகுணமாகக் கொடுத்துவிவாதத்தைப்பண்ணுகிறவன்நீயென்று அறியுமவர்களென்றபடி.

பின்னையாயகோலம் - இதரவ்யாவ்ருத்தமாண விக்ரஹமென்னுதல்; மநுஷ்யத்வத்துக்கு அவரமாயிருக்கிற திர்யகாதிகளென்னுதல். "என்றுமாம்" என்று - தாம் சொன்ன ஜபிக்கும்பொருள் - திர்யகாதிகளென்று சொன்ன இரண்டாமர்த்தம். ... ... ... (கங)

(க) முண்ட்-உ-க-ச. (உ) வி-பு-க-கூ-கச ரு. (ங) தி-வாய்-க-ங-ச.
(ச) (ரு) † (பா) ஸ்த்தாநங்களென்ன.

மூ.—தூய்மையோகமாயினுய் துழாயலங்கல் மாலையாய்!
ஆமையாகியாழ்கடற் றுயின்ற வாதிதேவ ! நின்
நாமதேயமின்னதென்ன வல்லமல்லவாகிலும்
சாமவேதகீதனாய சக்கரபாணியல்லையே. (கச)

---

மையாலே நீ அறிவிக்க அறியுமத்தனையொழிய வேறு அறியவல்லாரார். அதாகிறது - (க) "ப³ஹூநி மே வ்யதீதாநி - பஹூநி மேவ்யதீதாநி" என்று தொடங்கி, (உ) "ஜந்ம கர்ம ச மே தி³வ்யம் - ஜந்மகர்மசமேதிவ்யம்" என்றுநீ அறிவித்தாப்போலே அறிவிக்க அறியுமித்தனை. (கரு)

பதினான்காம்பாட்டு. (தூய்மையித்யாதி)

| | |
|---|---|
| தூய்மை | ஸம்ஸாரிஶுத்தியினுடைய |
| யோகமாயினுய் | யோகநிர்வாஹகனானவனே! |
| துழாயலங்கல் | திருத்துழாயிதழ்களுடைய |
| மாலையாய் | மாலையையுடையவனே! |
| ஆமையாகி | கூர்மரூபியாய் |
| ஆழ் | கம்பீரமான |
| கடல் | ஸமுத்ரத்திலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளுகிற |
| ஆதி | காரணபூதனான |
| தேவ | அந்தகாரணத்வத்தைத்யோதிப்பிக்கிறவனே; (தி³வு - க்ரீடா³ - திவு-க்ரீடாத்யுதியிறே) |
| ஆதியென்று | பா(ஹா)வப்ரதாநமாய், ஆதித்வத்தை — காரணத்வத்தை யென்றாகவுமாம்; |
| நின் | கூர்மரூபியான தேவருடைய |
| நாமதேயம் | திருநாமங்களுக்கு வாச்யங்களான குணசேஷ்டிதங்களை [னுகைக்கு |
| இன்னதென்ன | ஏவம்விதமென்று பரிச்சேதித்துச் சொல் |
| வல்லம் | ஸாமர்த்யத்தையுடையோம் |
| அல்லவாகிலும் | அன்றாகிலும், (நான் அஸமர்த்தனாகிலு மென்றபடி. |

---

(க) கீதை-ச-ரு. (உ) கீ-ச-௯.

சாமவேத சாந்தோக்யத்திலே
கீதனைய ப்ரதிபாதிதனை
சக்கரபாணி யல்லேயே } த்ருதரூங்க்க சப்ரனை ஆதித்யாந்தர்வர்த்தியன்றோ. (கச)

அவ;—பதினான்காம்பாட்டு. நம்மவத ரரஹஸ்யம்நீரறிந்தபடியென்னென்னில்; ப்ரயோஜநாந்தரபரர்க்காக திர்யக்ஸஜாதீயனாய் வந்தவதரித்த உன்குணங்களைப்பரிச்சேதித்தறிய மாட்டேனேயாகிலும், அவ்வடிவழகு வேதைகஸமதிகம்யமென்றறிந்தேனென்கிறார்.

வ்யா. (தூய்மையோகமாயினாய்) அசித்ஸம்ஸர்க்கத்தாலே அஶுத்தனான ஸம்ஸாரிக்குஉன்க்ருபையாலேஅசித்ஸம்ஸர்க்கத்தை யறுத்துநித்யஸூரிகளோடேசேர்த்து உன்னை அநுபவிப்பிக்கவல்ல ஶுத்தியோகத்தை யுடையவனே! ஸம்ஸாரி ஶுத்தியோகத்துக்கு நிர்வாஹகனானவனே, இத்தால்-ஸம்ஸாரோத்தரணத்துக்கு உபாயமும் நீயென்கை. ஹேயப்ரத்யநீகனானவனே யிறே சேதநர்க்கு ஸம்ஸாரமாகிற அசுத்தியைப் போக்கவல்லான். (துழாயலங்கல்மாலையாய்) ஸர்வேஸ்வரத்வ சிஹ்நமான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனானவனே. திருத்துழாய் நாதத்வசிஹ்நமாகையாலும், போக்யத்வ சிஹ்நமாகையாலும், ப்ராப்யபூதனும் நீயேயென்கை. (ஆமையாகி)ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக அம்ருதமதநத்துக்கு அநுகூலமான கூர்ம வேஷத்தைக் கொண்டு, (ஆழ்கடல் துயின்ற) அகாதமான கடலிலே மந்தரம் அமிழ்ந்தாதபடி உன்முதுகிலே அது நின்றுசுழலக்கண்வளர்ந் தருளினவனே! (க) "க்ஷீரோதமத்யே ப⁴க³வாந் கூர்மரூபீ ஸ்வயம் ஹரி꞉ - க்ஷீரோதமத்யேத்வபவத் கூர்மரூபீஸ்வயம்ஹரி꞉" என்னக்கடவதிறே. (ஆதிதேவ) ஜகத்துக்கு நீயே காரணபூதனென்னுமிடத்தை ப்ரகாசிப்பித்தவனே. ப்ரயோஜநாந்தரபரரென்று பாராதே அவர்களாபத்துக்கு உன்னையழிய மாறி உதவுகையாகிறவிது உத்பாதகனுக்கல்லது கூடுமோவென்கை.

(நின்னுமதேய மின்னதென்ன வல்லமல்லவாகிலும்) கூர்மரூபியானதேவருடைய குணசேஷ்டிதங்களை ஏவம்விதமென்றுபரிச்சேதித்துச் சொல்லவல்லோமல்லோமேயாகிலும், "நின்னுமதேயம்" என்று

---

அரு;—பதினான்காம்பாட்டு. "நாமதேயம்" என்பதால் குணசேஷ்டிதங்களைக்காட்டுமோ வென்னவருளிச்செய்கிறார் (நின்னுமதேய மித்யாதி), அதிரமணீயம் - கீதத்துக்கு போக்யமானவிக்ரஹ மென்றபடி. ... (கச)

---

(க) வி-பு-

மூ.—அங்கமாறுவேத நான்குமாகி நின்றவற்றுளே
தங்குகின்றதன்மையாய் தடங்கடற்பணத்தலைச்
செங்கணாகணைக்கிடந்த செல்வமல்குசீரினாய்
சங்கவண்ணமன்னமேனி சார்ங்கபாணியல்லையே. (கரு)

---

வாச்யமான குணசேஷ்டிதங்களைத் தத்வாசகமான சப்தத்தாலே லக்ஷிக்கிறது(சாமவேதகீதனாயசக்கரபாணியல்லையே) ¶ அழிவுக்கிட்டகூர்ம விக்ரஹம்சாந்தோக்யஸித்தமாய்,கையும்திருவாழியுமான அதிரமணீயமான ஹிரண்மயவிக்ரஹயென்றறிந்தேன். (க) "யஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே - யஏஷோந்தராதித்யேஹிரண்மயப்புருஷோத்ருஶ்யதே" என்றும், (உ) "ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ நாராயண: ... த்ருதஶங்கசக்ர:-ஸவித்ரு மண்டலமத்யவர்த்திநாராயண:-த்ருதஶங்க்கசக்ர:" என்றும்சொல்லக்கடவதிறே. (கச)

பதினைந்தாம்பாட்டு. (அங்கமித்யாதி).

அங்கம் ஸீக்ஷாத்யங்கங்களினுடைய
ஆறும் ஷட்கமென்ன,
வேதநான்கும் அங்கியான வேதசதுஷ்டயமென்ன, இவற்றுக்கு
ஆகிநின்று நிர்வாஹகனாய் நின்று
அவற்றுளே அந்த ஸாங்கமான வேதங்களினுள்ளே (அன்றிக்கே)
அங்கமாறும் ஸீக்ஷாத்யங்கஷட்கமென்ன,
வேதநான்கும் அங்கியான வேதசதுஷ்டயமென்ன,இவற்றுக்கு நிர்வாஹகனே!
"ஆகி நின்றவற்றுள்" என்று கூட்டி
ஆகி நிர்த்தோஷப்ரமாணமாய்
நின்றவற்றுளே வர்த்திக்கிற அந்த வேதங்களினுள்ளே
தங்குகின்ற ப்ரமேயமாய் வர்த்திக்கிற [டையவனே!
தன்மையாய் ஸத்யத்வஜ்ஞாநத்வாதி ஸ்வபாவங்களையு
தடம் இடமுடைத்தான

---

(க) சாந்தோ-க-சு-சு- (உ)

கடல் க்ஷீரஸமுத்ரத்திலே
பணை ப(ஃ)ணங்களையுடைய
தலை அக்ர(ம ர)த்திலே யிருக்கிற
செம் சிவந்த
கண் திருக்கண்களையுடையவனான
நாகணை திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே
கிடந்த கண்வளர்ந்தருளுகிற
மல்கு நிரவதிகமான
செல்வம் ஐஶ்வர்யமென்ன
சீர் கல்யாணகுணங்களென்ன, இவற்றையு டையவனே!
சங்க சங்கத்தினுடைய
வண்ணமன்ன வர்ணம்போலே யிருக்கிற
மேனி திருமேனியை யுடைத்தாய்
சார்ங்கபாணி பின்பு க்ஷத்ரிய குலத்திலே அவதரித்து யல்லையே ஸ்ரீஶார்ங்கத்தைத்தரித்தவனல்லையோ;
"இப்படிப்பட்ட வுன்னுடைய நீர்மையைப் பரிச்சேதித்தறியவல்லாரார்" என்று வாக்ய சேஷம். (௧௫)

அவ;—பதினைந்தாம்பாட்டு. வேதைகஸமதிகம்யமான ஸ்வபாவத்தையுடைய நீ ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாக அவதாரகந்தமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி, அது பரதசையென்னும்படி அங்கு நின்றும் ஆஶ்ரிதருகந்த ரூபத்தையே உனக்குருபமாகக்கொண்டு வந்தவதரித்த உன்னுடைய நீர்மையை ஒருத்தரால் பரிச்சேதிக்கப்போமோ வென்கிறார்.

வ்யா. (அங்கமாறுவேதநான்குமாகிநின்று)ஶீக்ஷாத்யங்கங்களாறும், அங்கியான வேதங்கள் நாலுமாகிற இவற்றுக்கு ப்ரவர்த்தகனாய் நின்று. (அவற்றுளே தங்குகின்ற தன்மையாய்) ஸாங்கமான வேதங்களினுள்ளே ப்ரமேயமாய்வர்த்திக்கிற ஸ்வபாவங்களையுடையவனே."ஆகிநின்றவற்றுளே" என்று நிர்த்தோஷப்ரமாணமாய்நின்றவற்றுளென்னவுமாம். வேதப்ரதிபாத்யமான ஸ்வபாவங்

அரு;—பதினைந்தாம்பாட்டு. ஶீக்ஷை, வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ்ஸு, ஜ்யோதிஷம், கல்பஸூத்ரமாகிற அங்கங்களாறும். ... (௧௫)

களாவன - (க) "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 - ஸத்யம்ஜ்ஞாநம்" இத்யாதிகளிற் சொன்ன ஸர்வாதிகத்வமென்ன, (உ) "𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 - யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" இத்யாதிகளிற்சொன்ன கல்யாணகுணங்களென்ன, (ங) "𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 - வ்யாப்யநாராயணஃ ஸ்த்திதஃ" இத்யாதிகளிற்சொன்ன உபயவிபூதிநாதத்வமென்ன, (ச) "𑌮𑌾𑌹𑌾𑌰𑌜𑌨𑌂 𑌵𑌾𑌸𑌃 - மாஹாரஜநம்வாஸஃ" இத்யாதிகளிற்சொன்ன விக்ரஹயோகமென்ன, (ரு) "𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - யஏஷோந்தராதித்யே ஹிரண்மயஃபுருஷஃ" இத்யாதிகளிற்சொன்ன அவதாரங்களென்ன, (சு) "𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 - தத்விஷ்ணோஃபரமம்பதம்" இத்யாதிகளிற் சொன்ன நித்யவிபூதியோகமென்ன இவை.

(தடங்கடலித்யாதி) வேதைக ஸமதிகம்யமாய் ஸ்வபாவங்களைக்கேட்டே போகாதபடி திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி இக்குணங்களை ப்ரகாசிப்பித்தவனே!; இடமுடைத்தான கடலிலே உன்னுடைய ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணத்தின் தலையிலே மதுபாநமத்தரைப்போலே சிவந்த திருக்கண்களையுடையனான திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலேகண்வளர்ந்தருளி, நிரவதிகமான ஐஶ்வர்யத்தையும் கல்யாணகுணங்களையுமுடையவனே. (சங்கவண்ணமன்னமேனியித்யாதி) க்ஷீரார்ணவஶாயித்வம் பரதசையென்னும்படி அங்குநின்றும்க்ருதயுகத்திலேசேதநர்விரும்புகைக்காகசங்கம்போலே யிருக்கிற திருமேனியையுடையையாய்த்திருவவதரித்து, அதுக்குமேலே த்ரேதாயுகத்திலே, ஆஶ்ரிதவிரோதிகளான ராவணுதிகண்டகரை நிரஸிக்கைக்கு க்ஷத்ரியகுலத்திலே வந்தவதரித்து ஸ்ரீ ஶார்ங்கத்தைத்திருக்கையிலே தரித்தவனல்லேயோ? இப்படி உன்னுடைய காளமேகநிபஶ்யாமமான திருநிறத்தையழியமாறியும், (எ) "𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 - ஆத்மாநம் மாநுஷம்மந்யே" என்றுபரத்வத்தையழியமாறியும் ரக்ஷித்தவுன்னுடைய நீர்மையைப்பரிச்சேதித்தறிய வல்லாராரென்று வாக்யசேஷம். ... (கரு)

---

(க) தை-ஆ-சு. (உ) முண்ட-க-க-சு. (ங) தை-நா-கக.
(ச) ப்ருஹ-ச-ங-சு. (ரு) சாந்தோ-க-சு-சு. (சு) ஸாம-உத்தர-
(எ) ரா-யு-கஉ0-கக.

மூ.—தலைக்கணத்துகட்குழம்பு சாதிசோதி தோற்றமாய்
நிலைக்கணங்கள்காணவந்து நிற்றியேலும்நீடிரும்
கலைக்கணங்கள்சொற்பொருட் கருத்தினால் நினைக்கொணா
மலைக்கணங்கள்போலுணர்த்தும் மாட்சிநின்றன்மாட்சியே.

பதினாறும்பாட்டு (தலைக்கணமித்யாதி)

| | |
|---|---|
| தலைக்கணம் | ப்ரதமமான தேவகணமென்ன, |
| துகள் | க்ஷுத்ரமானஸ்த்தாவரமென்ன, |
| குழம்புசாதி | மிஸ்ர யோநிகளான மநுஷ்யதிர்யக்குக்களென்ன, இவற்றிலே |
| சோதி | அப்ராக்ருதஜ்யோதிர்மயவிக்ரஹத்தோடே |
| தோற்றமாய் | அவதரித்து |
| நிலைக்கணங்கள் | ஸ்த்தாவரங்கள் |
| காணவந்து | அநுபவிக்கும்படி வந்து |
| நிற்றியேலும் | நின்றாலும் |
| நீடு | நித்யமாய் |
| இரும் | விஸ்த்ருதமான |
| கலை | வேதவேதாங்கங்களுடைய |
| கணங்கள் | ஸமூஹங்கள்,(அபிதாநவ்ருத்தியென்ன) |
| சொல்பொருள் | பதார்த்தத்வமென்ன, |
| கருத்து | தாத்பர்யவ்ருத்தியென்ன, இவற்றாலே |
| நினைக்கொணா | நினைக்கவொண்ணாது; (ஆகையாலே) |
| மலைக்கணங்கள்போல் | பர்வத ஸமூஹங்கள்போலே அபேத்யமாய், அபரிச்சிந்நமான |
| நின்தன்மாக்ஷி | உன்னுடைய அவதார வைலக்ஷண்யம் |
| மாட்சியென்றுணர்த்தும் | வைலக்ஷண்யமென்றறிவிக்கப்படும், பரிச்சேதிக்கப்படுமதன்று. (கசு) |

அவ;— பதினாறும்பாட்டு. திருப்பாற்கடலிலே நின்றும் தேவ மநுஷ்யாதிகளிலே அவதரித்து ரக்ஷிக்குமளவன்றிக்கே, ஸ்த்தாவரபர்யந்தமானசதுர்விதஸ்ருஷ்டியிலும்அவதரித்துஉன்னை ஸர்வாநுபவ யோக்யமாக்கினாலும்ப்ரமாணகணங்கள் பரிச்சேதிக்க மாட்டாதபடியிறே உன்னுடைய அவதாரவைலக்ஷண்ய மிருப்பதென்கிறார்.

வ்யா;—(தலைக்கணத் துகட்குழம்புசாதி) தேவகணமென்ன, க்ஷேத்ரகணமென்ன, நடுவுண்டான மநுஷ்ய திர்யக்குக்களென்ன, என்று சொல்லுகிற சதுர்வித ஶரீரங்களிலே. (குழம்புசாதி) தேவகணம் புண்யயோநியாய், ஸ்த்தாவரங்கள் பாபயோநியாய், மநுஷ்யதிர்யக்குக் களிரண்டும் புண்யபாப மிஶ்ரயோநிகளாகை யாலே "குழம்புசாதி" என்கிறது. திர்யக்குக்களுக்கு மிஶ்ரயோநித்வம் ஆஹாரநித்ராதிகளாலே மநுஷ்யஸாம்ய முண்டாகை யாலே. க்ஷேத்ரகணமென்று - ஸ்த்தாவரத்துக்கு உபலக்ஷணம். (துகள்) குற்றமும், புழுதியும். (சோதிதோற்றமாய்) (க) "பரஞ்ஜ்யோதிரூபஸம்பத்ய" - பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" என்கிற அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தை சதுர்விதஜாதிகளிலும் ஸஜாதீயமாக்கியவதரித்து. ஸ்த்தாவரஜாதியிலும் குப்ஜாம்ரமாய் அவதரித்தானிறே. (நிலைக்கணங்கள் காணவந்து நிற்றியேலும்) தேவாதிகளே யன்றியே ஸ்த்தாவரங்களும் உன்னை அநுபவிக்கும்படி வந்துநின்றாலும். அதாவது - உன்னை ஸ்பர்ஶித்தவாயு அவற்றைஸ்பர்ஶிக்கஸ்தாவரத்வஹேதுவானபாபம்போமென்கை.

(நீடிருங்கலையித்யாதி) நீ இப்படி தாழநின்றாலும் ப்ரமாணங்கள் உன்னுடைய அவதாரவைபவத்தை நெஞ்சாலும் பரிச்சேதிக்க மாட்டாது. (நீடிரும்கலைக்கணங்கள்) ஸ்வரூபேணவும் ப்ரவாஹரூபேணவும் நித்யமாய்ப் பரப்புடைத்தாயிருந்துள்ள சதுர்த்தஶவித்யாஸ்த்தாநங்களும். "கலை" என்று-வேதமும், அங்கமும். (உ) "ஶ்ருதயோ வேதா: - அங்காநிசதுரோவேதா:" இத்யாதியாலே சதுர்த்தஶ வித்யாஸ்த்தலங்கள் சொல்லப்பட்டதிறே. (சொல்பொருள் கருத்தினில் நினைக்கொணு) அபிதா(ஷியா)நவ்ருத்தியாலும் தாத்பர்யவ்ருத்தியாலும் ஒரோஅவதாரத்தை நெஞ்சாலும்பரிச்சேதிக்க மாட்டாமையாலே. (மலைக்கணங்களித்யாதி) பர்வதஸமூஹங்கள்போலே அஸங்க்யமாய் அபரிச்சிந்நமான உன்னுடைய அவதாரகுண சரித்ரங்களென்றவற்றாலே அறிவிக்கப்படும் வைலக்ஷண்யம் உன்வைலக்ஷண்யம். மாட்சி - அழகு. ... (கசு)

அரு;—பதினாறும்பாட்டு.(ந) "வாஹிமெகை:ஷை க்ஷிமௌ ம்ருதா:..." பக்ஷிம்ருகதாம்" என்று திர்யக்குக்கள் பாபயோநியாயிருக்க, புண்யம் கலசினபடி எப்படியென்னவருளிச்செய்கிறார் (திர்யக்குக்களுக்கித்யாதி)' வ்ருத்தியென்று - எல்லாஸம்பந்தங்களையும் சொல்லும். அபிதாநவ்ருத்தி யென்று- வாச்யவாசக ஸம்பந்தம். சப்தார்த்தங்களுக்குண்டான தாத்பர்ய வ்ருத்தியாவது - லக்ஷணாரூபஸம்பந்தம். (கசு)

(க) சாந்தோ-அ-கஉ-உ. (உ) அமரகோ- (ந) மநு.

மூ·—ஏகமூர்த்தி மூன்றுமூர்த்தி நாலுமூர்த்திநன்மைசேர்
போகமூர்த்திபுண்ணியத்தின்மூர்த்தியெண்ணில்மூர்த்தியாய்
நாகமூர்த்திசயநமாய் நலங்கடற் கிடந்துமேல்
ஆகமூர்த்தியாயவண்ணமென் கொலாதிதேவனே. (௧எ)

---

பதினேழாம்பாட்டு. (ஏகமூர்த்தியித்யாதி).

ஏகமூர்த்தி பரவாஸுதேவ விக்ரஹனாய்,
மூன்றுமூர்த்தி ஸங்கர்ஷணாதி வ்யூஹத்ரய ரூபமான மூன்று மூர்த்திகளையுடையனாய்,
நாலுமூர்த்தி பராவஸ்த்தையும் வ்யூஹங்களோடேகூட்டி நாலு மூர்த்தியாய்

(அன்றிக்கே)

நாலுமூர்த்தி ப்ரதாநபுருஷாவ்யக்தகாலங்களாகிறமூர்த்திசதுஷ்டயயுக்தனென்றாகவுமாம்.
நன்மைசேர் அநுக்ரஹ ப்ராசுர்யமாகிற நன்மையோடுகூடின
போக போக்யமாயிருக்கிற
மூர்த்தி விபவமூர்த்தியை யுடையவனாய்,

(அன்றிக்கே)

நன்மை ஆமுஷ்மிகத்தில் நித்யாநுபவமாகிறநன்மையோடே
சேர் கூடியிருக்கிற
போக ஐஹிகபோக்யமாயிருக்கிறவென்றுமாம்;
புண்ணியத்தின் } பாக்யாதிகருடைய ஸுக்ருதபரிபாகத்தின்பலமான
மூர்த்தி அந்த விபவமூர்த்தியை யுடைத்தாய்,
எண்ணில் ஸங்க்க்யாஶூந்யமான
மூர்த்தியாய் அந்த விபவஸஜாதீயமான மூர்த்திகளையுடையனாய்,

(நாகமூர்த்தியித்யாதி)

“நலங்கடலிலே நாகமூர்த்திசயநமாய்க்கிடந்து” என்று கூட்டுவது. [யுடைய
நலம் ப்ரளயாவதிகாவஸ்த்தாநமாகிற நன்மை

கடல் க்ஷீரார்ணவத்திலே
நாக திருவநந்தாழ்வானுடைய
மூர்த்தி திருமேனியாகிற
சயநமாய் ஶய்யையையுடையவனாய்
கிடந்து கண்வளர்ந்தருளி
மேல் ததநந்தரம்
ஆக ஆஶ்ரிதருகந்தத்ரவ்யமாகிற
மூர்த்தியாய் அர்ச்சாவதாரமாய் அவதரித்த
வண்ணம் ஸ்வபாவம்,
என்கொல் என்னாயிருக்கிறது.
ஆதிதேவனே காரணபூதனான ஶேஷியானவனே. (௧௭)

அவ;—பதினேழாம்பாட்டு. பரமபதநிலயனாயிருந்து நித்ய விபூதியை நிர்வஹித்தும், வ்யூஹம் முதலாக ஸ்தாவரபர்யந்தமாக அவதரித்து லீலாவிபூதியை நிர்வஹித்தும் போருகிற விவையோரொன்றே ப்ரமாணகணங்களால் பரிச்சேதிக்க வொண்ணாதிருக்க அதுக்கு மேலே அர்ச்சாவதாரஸுலபனாய் ஆஶ்ரிதருடைய இச்சாதீநனாய்த் தன்னை நியமித்த இஸ்ஸ்வபாவம் என்னாயிருக்கிறதோ வென்று அதிலே வித்தராகிறார்.

வ்யா.—(ஏகமூர்த்தி) (௧) "வாஸுதேவோஸிபூர்ணஃ- வாஸுதேவோஸி பூர்ணஃ" என்கிறபடியே ஜ்ஞாநாதிஷட்குணபூர்ணனாய், நிஸ்தரங்க ஜலதிபோலே பரமபதத்திலே எழுந்தருளியிருந்து நித்ய ஸித்தரும் முக்தரும் அநுபவிக்கவிருக்கிற அத்விதீயமான மூர்த்தியையுடையையாய். (மூன்றுமூர்த்தி) அந்தஷட்குணங்களிலே இவ்விரண்டுகுணங்களை ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகைக்காக ஸங்கர்ஷணாதி ரூபத்தாலே மூன்று மூர்த்தியாய். (நாலுமூர்த்தி) பராவஸ்தையையும் வ்யூஹங்களோடே எண்ணலாம்படி பரார்த்தமாயிருக்கையாலே அதையுங் கூட்டி "நாலுமூர்த்தி" என்கிறது. அதவா, வ்யூஹகார்யமான ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு உபயோகமாயிருக்கிற ப்ரதாந புருஷ அவ்யக்தகாலங்களை ஶரீரமாகவுடையனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறதென்னவுமாம்.

---

(௧)

(நன்மைசேர் போகமூர்த்தி) அநுக்ரஹப்ராசுர்யமாகிற நன்மையையுடைத்தாய் ஸம்ஸாரிகளுக்கு போகயோக்யமான மூர்த்தி. அநுக்ரஹ ப்ராசுர்யமாவது - ஸ்வாஸாதாரணமாய் அப்ராக்ருதமான விக்ரஹத்தை, தேவாதி ஸஜாதீயமாக்கிக்கொண்டு ஸம்ஸாரிகளுக்கு சக்ஷுர்விஷயமாம்படி பண்ணுகை. அதவா, ஆமுஷ்மிகத்தில் நித்யாநுபவத்தோடே சேரும் தன்மையையுடைத்தாய் ஐஹிகத்தில் போக(ஹோம)யோக்யமாயிருக்கும்மூர்த்தியென்னவுமாம். (புண்ணியத்தின்மூர்த்தி) அதுதான் பாக்யாதிகருடைய புண்யவிபாகத்திலேபலிப்பதாயிருக்கை. (க) "பரித்ராணாய ஸாதூநாம்" என்று - பரமபக்தி யுக்தர்க்கு ஸ்வயம் ப்ரயோஜநமாய், ஸித்தஸாதந பரிக்ரஹயுக்தர்க்கு ஶரண்யமாயும் உபாஸகர்க்கு ஶுபாஶ்ரயமாயுமிறேயிருப்பது. (உ) "அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாஶ்ரிதம் । பரம்பாவமஜாநந்தஃ" என்று பாக்யஹீநராய் அவதாரத்துக்கு இழவாளராகச்சொல்லா நின்றதிறே. (எண்ணில் மூர்த்தியாய்) இப்படி அஸங்க்யாதமான விபவஸஜாதீய விக்ரஹத்தையுடையையாய். (ங) "பஹுதா விஜாயதே-பஹுதா விஜாயதே" என்று ஶ்ருதி; (ச) "பஹூநி-பஹூநி" என்று ஸ்வவாக்யம்; (ரு) "சன்மம்பலபல" என்று அபியுக்தர்வாக்யம்.

(நாகமூர்த்தி யித்யாதி) இப்படி அஸங்க்யாதமான அவதாரங்களைப் பண்ணினவிடத்திலும் தன் திருவுள்ளத்துக்கேற ஸம்ஸாரிகள் தன்னைவந்துகிட்டாமையாலே உபேக்ஷித்துப்பரமபதத்திலே போக ப்ராப்தமாயிருக்க, ரக்ஷணத்தில் நசையாலே திருப்பாற் கடலிலே சேர்ந்தநீர்மையைச் சொல்லுகிறது. (நலங்கடலிலேநாக மூர்த்தி ஶயநமாய்க்கிடந்து). அவதாரஸ்த்தலங்கள் போலேசிலகாலாவதியின்றிக்கே ப்ரளயாவதியாக விரும்பிக் கண்வளர்ந்தருளுகையாலே "நலங்கடல்" என்கிறது. திருவநந்தாழ்வான் திருமேனி

அரு;—பதினேழாம்பாட்டு. சேருந்தன்மை-சேர்க்குமென்றுய், இவனை அநுபவத்தோடே சேர்க்கும் ஸ்வபாவத்தை யுடைத்தாய். அவதாரம் உபாயமும் உபேயமுமாயிருக்கு மென்றபடி. ஆகமூர்த்தி - மூர்த்தியாக. (கஎ)

(க) கீ-ச-அ. (உ) கீ-க-கக. (ங) யஜு-ஆரண்-ங.
(ச) கீ-ச-ரு. (ரு) தி-வாய்-ங-க0-க.

மூ.—விடத்தவாயொராயிர மிராயிரங்கண்வெந்தழல்
விடுத்துவீள்விலாத போகமிக்கசோதி தொக்கசீர்
தொடுத்துமேல்விதானமாய பௌவநீரராவணைப்
படுத்தபாயில்பள்ளிகொள்வதென்கொல்வேலைவண்ணனே.

யாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளி. (மேலாகமூர்த்தியாயவண்ணமென்கொல்) அதுக்குமேலே ஆஸ்ரிதர் தேவர்க்கு விக்ரஹமாக நினைத்த த்ரவ்யத்திலே ஸ்வாஸாதாரண விக்ரஹத்தில் பண்ணும் விருப்பத்தைப்பண்ணுகிற இஸ்ஸ்வபாவம் என்னாயிருக்கிறது. (க) "ஸ்ருதம்ஸத்ஜ்ஞ நாமயம் - ஸ்ம்ருதம்ஸங்கல்பநாமயம்" என்றும் (௨) "யெயம்ஶாஶ்வதம் - யேயதாமாம் ப்ரபத்யந்தே" என்றும் சொல்லுகிறபடியே - ஆஶ்ரிதர் உனக்கு விக்ரஹமாக நினைத்த த்ரவ்யத்தையிறே ஸ்வாஸாதாரண விக்ரஹத்தோபாதிவிரும்புவது. (ஆதிதேவனே) ஜகத்துக்கெல்லாம் காரணபூதனான நீ கார்யபூதனாயிருப்பானொரு சேதநனுடைய இச்சாதீநமாக உன்னைப்பண்ணுவதேயென்று கருத்து. இவ்விருப்பத்துக்கு அடியுடையவனாகையாலேயென்று ஹேதுவாகவுமாம். (௧எ)

பதினெட்டாம்பாட்டு (விடத்தித்யாதி).

| | |
|---|---|
| விடத்து | விஷத்தையுடைத்தான |
| வாயொராயிரம் | ஆயிர வாயையுடைய |
| இராயிரங்கண் | இரண்டாயிரம் கண்களாலே |
| வெந்து | க்ரூரமான |
| அழல் | விஷாக்நியை |
| விடுத்து | புறப்படவிட்டு |
| வீழ்வு | பகவத்விஸ்லேஷம் |
| இலாத | இல்லாத |
| போக | போகத்தையுடைய<br>[போகம்—அஹேஃகாயஃ] |
| மிக்க | அதிகமான |
| சோதி | தேஜஸ்ஸையுடைய |

(க) வி-பு-௫-௧எ-ச. (௨) கீ-ச-௧௧.

(தொக்கசீரித்யாதி)

"விதாநமாய்மேல்தொக்கசீர்தொடுத்து" என்றுகூட்டுவது;

விதாநமாய் விதாநாத்மகமான ப(ஙெ)ணங்களுடைய

மேல் உபரிப்ரதேஸத்திலே

தொக்க திரளாயிருக்கிற

சீர் அழகை

தொடுத்து க்ரதி(யி)த்து

(பௌவநீர்த்யாதி)

"பௌவநீர்படுத்தஅராவணைப்பாயில்"என்றுகூட்டுவது

பௌவநீர் ஸமுத்ரஜலத்திலே

படுத்த படுக்கப்பட்ட

அராவணை திருவநந்தாழ்வானுகிற

பாயில் படுக்கையிலே

பள்ளிகொள்வது } கண்வளர்ந்தருளுகிற விது

என்கொல் என்னோ?

வேலை ஸமுத்ரஜலம்போலிருக்கிற

வண்ணனே வர்ணத்தையுடையவனே! (௧அ)

அவ;--பதினெட்டாம்பாட்டு. "நாகமூர்த்திஶயநம்" என்றும் "தடங்கடல்பணத்தலை" "செங்கணுகணைக்கிடந்த" என்றும்அவதாரகந்தமானக்ஷீராப்திஶயநம் ப்ரஸ்துதமானவாறே திருவுள்ளம்அங்கேதாழ்ந்து,(க) "சுயி-லிதாஜா நஃஷெவொகெ - அர்த்திமேதாமாநுஷேலோகே" என்கிறபடியே அவதாரங்களிலுண்டான அர்த்தித்வமன்றிக்கே யிருக்க விஸத்ருஶதேஶத்திலே வந்து கண்வளர்ந்தருளுகிற தேவரீருடைய வாசியை ஆரறிந்து ஆஶ்ரயித்துக்காரியங்கொள்ளவென்கிறார்.

வ்யா;—(விடத்தவாயொராயிரம்) விஷத்தை உமிழாநின்றுள்ள ஆயிரம் வாயையுடையனாய். (இராயிரங்கண் வெந்தழல் விடுத்து) இரண்டாயிரங்கண்ணாலும் வெவ்விய அழலைப் புறப்படவிட்டு. பகவதநுபவமே யாத்ரையாயிருக்கிற திருவநந்தாழ்வானுக்கு ரோஷகார்யமான இந்தக்ரௌர்ய மூண்டாவானென்னென்னில்; துஷ்

(க) ஶ்ரு-ஆயோ-௧-௭.

ப்ரக்ருதிகள் ஸஞ்சரிக்கிற தேசத்திலே கண்வளர்ந்தருளுகிற விவ னுக்கு ஆராலேயென்னவருகிறதோவென்னு மதிஶங்கையாலேவந் தது. அநுபவம் ராககார்யமானவோபாதி ப்ரதிகூலஸ்த்தலத்திலே த்வேஷமும் ராககார்யமிறே. இத்தால் - துஷ்ப்ரக்ருதிகளுக்குக் கணிசிக்கவொண்ணாதபடி திருவநந்தாழ்வானாலே ஸுரக்ஷிதனாய்க் கண்வளர்ந்தருளப்பெற்றோமென்று த்ருப்தராகிறார். (வீள்விலாத போகம்) ஈஶ்வரன் அணைத்தால் ஒருவகையாலும் பிரியவொண் ணாததிருவுடம்பையுடையனாய்; (௧)"ஸுநஹோமிநி- அநந்தபோகி நி" என்றுதிருவநந்தாழ்வானுடைய திருமேனியை "ஹோமமிழ-போக ம்" என்னக்கடவதிறே. இத்தால் - ஆத்மகுணங்களாலே ரக்ஷகனா னாப்போலே ரூபகுணங்களாலே போக்யபூதனானபடியைச் சொல் லுகிறது. (மிக்கசோதி) இப்படிகிஞ்சித்கார பூதனாய்க்கொண்டு உன்னை அநுபவிக்கையாலேவந்த நிரவதிகதேஜஸ்ஸையுடையனாய்.

(தொக்கசீர்தொடுத்து மேல்விதாநமாய்). விதாநமான பண ங்கள் பலவற்றிலே யுண்டான மிக்க வழக்கைத்தொடுத்து. தொ க்கு-திரட்சி. சீர் - அழகு. இத்தால்—ஸ்பர்ஶத்தால் வந்த அநு பவமேயன்றிக்கே, தர்ஶநீயமாய் நாநாவர்ணமான பணங்களினழ கைச் சேர்த்தநுபவித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற படியைச் சொல்லுகிறது. (பௌவநீரராவணைப் படுத்தபாயில்) கடல்நீரில் அது உறுத்தாமைக்குப் படுத்த திருவநந்தாழ்வானாகிற படுக்கை யிலே. (பள்ளிகொள்வதென்கொல்) கண்வளர்ந்தருளுகிறவிது வென்னோ. தங்களாபத்துக்கு உதவுகைக்கு ப்ரஹ்மாதிகள் அர்த் திக்கத்தான் செய்தருளிற்றோ. (வேலைவண்ணனே) வெள்ளைக்கட லிலே ஒரு நீலக்கடல் சாய்ந்தாப்போலே தேவரீருடைய பரபாக (ஸாம)ரஸத்தைச்சிலர் அறிந்து அநுபவிக்கைக்காகச்செய்தருளிற் றோ. இப்பாட்டில் - திருவநந்தாழ்வானோட்டை யநுபவத்தைச் சொல்லிற்று, - அடிமைசெய்வாரில்லாமையன்று, ஸம்ஸாரிகளிழ வைப்பார்த்து, பரார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற தென்று தோன்றுகைக்காக. (௧அ)

---

(௧) ஸ்தோ-ர-௩௪.

மூ.—புள்ளதாகிவேதநான்கு மோதினயதன்றியும்
புள்ளின்வாய்பிளந்து புட்கொடிப்பிடித்த பின்னரும்
புள்ளையூர்தியாதலால தென்கொல் மின்கொள்நேமியாய்
புள்ளின்மெய்ப்பகைக்கடல் கிடத்தல்காதலித்ததே. (௬௬)

---

பத்தொன்பதாம்பாட்டு. (புள்ளதாகியித்யாதி).

இப்பாட்டில் வாக்யத்வயம்; அதிலே "புள்ளின் வாய் பிளந்து அதன்றியும் புட்கொடிப்பிடித்தபின்னரும் புள்ளையூர்தி மின்கொள் நேமியாய், ஆதலால் புள்ளதாகிவேதநான்கு மோதினய்" என்று ப்ரதமவாக்யம்;அநந்தரம் "கடல் புள்ளின்பகை மெய்க்காதலித்துக்கிடத்தல் அதென்கொல்" என்றுத்வீதீயவாக்யம்.

| | |
|---|---|
| புள்ளின் | பகாஸுரனுகிற பக்ஷியினுடைய |
| வாய் | மூக்கை |
| பிளந்து | பே(ஹெ)தித்து |
| அதன்றியும் | அவ்வளவன்றிக்கே |
| புள் | பெரியதிருவடியை |
| கொடி | த்வஜத்திலே |
| பிடித்தபின் | பிடித்தவளவன்றிக்கே |
| அரும் | அநந்யஸுலபனை |
| புள்ளை | திருவநந்தாழ்வானை |
| உளர்தி | வாஹநமாக நடத்தாநின்றாய், |
| மின் | தேஜஸ்ஸை |
| கொள் | ஸ்வீகரியாநின்ற |
| நேமியாய் | திருவாழியாழ்வானையுடையவனே! |
| ஆதலால் | இப்படிநிருபாதிகரக்ஷகனுகையாலே |
| புள்ளதாகி | ஹம்ஸாவதாரத்தைப்பண்ணி |
| வேதநான்கும் | நாலுவேதத்தையும், |
| ஓதினய் | உபதேசித்தாய்; |
| கடல் | திருப்பாற்கடலிலே |
| புள்ளின் | பெரியதிருவடிக்கு |
| பகைமெய் | ஸஹஜஶத்ருவாய்த் தோற்றுகிற திருவநந்தாழ்வான்மேலே |

காதலித்து அவர்களை அநந்யாநரக்தராக்கிஅடிமைசெய்யும்படி பண்ணிக்கொண்டு
கிடத்தல் அதென்கொல் } கண்வளர்ந்தருளுகிறவதுஎன்றோ?(கக)

அவ;—பத்தொன்பதாம்பாட்டு. அர்த்தித்வ நிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிறவிது என்ன நீர்மையென்றார் கீழ்; இங்கு,பண்ணின ஜகத்ரக்ஷணங்களைக்கண்டு, (க) "நஹிபாலநஸாமர்த்ய-ம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்-நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்" என்கிறபடியே பாலநதர்மத்துக்கு வேறு ஶக்தரில்லாமையாலும், ஜகத்து தேவரீர்க்கு அநந்யார்ஹஶேஷமாகையாலே ரக்ஷிக்குமிடத்தில் அர்த்தித்வம் மிகையாகையாலும், வந்து கண்வளர்ந்தருளுகிற இத்தனையென்று அந்த ரக்ஷணங்களைப்பேசி, ஸாமாந்யத்ருஷ்டியால் ஸஹஜஶத்ருக்களாய்த்தோற்றுகிற பெரியதிருவடியும் திருவநந்தாழ்வானும் ஏககண்டராய் தேவர்க்குப் பரியும்படியாகக் கண்வளர்ந்தருளுகிறவிது என்ன ஆஶ்சர்யமென்கிறார்.

வ்யா.—(புள்ளதாகி வேதநான்குமோதினாய்) வேதத்தினுடைய அபௌருஷேயத்வஸித்திக்காக ஸ்வாஸாதாரண விக்ரஹத்தை திர்யக்ஸஜாதீயமாக்கிக்கொண்டு ஹம்ஸாவதாரத்தைப்பண்ணி தத்வஹிதங்களுக்கு ஜ்ஞாபகமான நாலு வேதங்களையும் ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கும்படி யருளிச்செய்தாய். (உ) "ஜ்ஞாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி - ஜ்ஞாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி" என்னக்கடவதிறே. (அதன்றியும்) ஸஹஜஶத்ருவான அஜ்ஞாநத்தைப் போக்கினதுக்குமேலே. (புள்ளின்வாய் பிளந்து) பகாஸுரன் வாயைக் கிழித்து. இத்தால் - ப்ரமாணஜ்ஞாநத்தாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கினாப்போலே, பகாஸுரனை நிரஸித்து ப்ரமேயபூதனை தன்னைத்தந்து, ஆஶ்ரிதர்க்கு ப்ராணப்ரதிஷ்டை பண்ணினபடியைச்சொல்லிற்று.(புட்கொடிப் பிடித்தபின்னரும் புள்ளையூர்தி)தன்பக்கலிலே ஆர்த்தரடங்கவந்து காரியங்கொள்ளும்படி பெரியதிருவடியை ரக்ஷண தர்மத்துக்கு த்வஜமாகப்பிடித்து,அவ்வளவுமன்றிக்கே, ஆஶ்ரிதரிருந்த விடங்களிலேவந்து உதவுகைக்கு அவனை வாஹநமாகககொண்டு நடத்தாநிற்றி.

---

(க) வி-பு-க-உஉ-உக. (உ)

மூ.—கூசமொன்றுமின்றி மாசுணம்படுத்து வேலைநீர்
பேசநின்றதேவர்வந்து பாடமுன்கிடந்ததும்
பாசநின்றநீரில்வாழு மாமையான கேசவா
ஏசவன்று நீ கிடந்தவாறுகூறு தேறவே. (௨௦)

---

(மின்கொள்நேமியாய்) திருநிறத்துக்குப்பகைத்தொடையாய் மின்னுநின்ற திருவாழியையுடையவனே! இத்தால் - ரக்ஷகத்வமே நிரூபகமென்று தோற்றும்படி * கைகழலா நேமியானுயிருக்கிற படியைச் சொல்லிற்று. (ஆதலால்) நிருபாதிகரக்ஷகனுகையாலே "புள்ளதாகி வேதநான்குமோதினுய்" என்று கீழோடே அந்வயம். "அதென்கொல்" என்கிறவிது பாட்டின் முடிவிலே அந்வயம்; (புள்ளின்மெய்ப்பகைக் கடல்கிடத்தல் காதலித்தது - என்கொல்) ஸாமாந்யத்ருஷ்டியால் பார்த்தால் திருவடிக்குஸஹஜஶத்ரு வென்னலாயிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே இருவருங்கூட விரும்பி அடிமை செய்யும்படி கண்வளர்ந்தருளுகிறவிது என்கொலோ. ஸஹஜஶத்ருத்வ புத்தி பண்ணியிருக்கும் ஸம்ஸாரத்திலே இருவரையும் ஏககண்டராக்கி அடிமைகொண்டவிது, தேவரீருடைய ஸர்வஶக்தித்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகவோவென்று கருத்து. அநாதியாய் அஹங்காரத்தை விரும்பிப்போந்த சேதநனை, ஶேஷத்தைகரஸரான நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்குவது இஶ்ஶக்தியிறே, ... ... (கக)

இருபதாம்பாட்டு (கூசமொன்றுமித்யாதி)

கூசம் — "ஆராலென் வருகிறதோ" என்று கூசம்
ஒன்றுமின்றி — ஒன்றுமில்லாமல்
மாசுணம்படுத்து — திருவநந்தாழ்வானை விரித்து
வேலைநீர் — ஸமுத்ரஜலம்
பேச — கோஷிக்க,
(அன்றிக்கே)

---

அரு.—பத்தொன்பதாம்பாட்டு. "கடலிலே காதலித்துக் கிடத்தல் என்கொல்" என்றந்வயம். (கக)

("வேலைநீர்மாசுணம்படுத்து"என்றுகூட்டி "பேசநின்ற"
என்றுகூட்டுவது)

| | |
|---|---|
| பேச | ஸ்தோத்ரம் பண்ணுகைக்காக |
| நின்ற | வ்யவஸ்த்திதரான, |
| | ("நீர்பேச"என்கிற பூர்வாந்வய பக்ஷத்திலே) |
| நின்ற | ஜகத் ரக்ஷணத்திலே வ்யவஸ்த்திதரான |
| தேவர் | ப்ரஹ்மாதிகள் |
| வந்து | ஊர்த்த்வலோகங்களில் நின்றும்வந்து |
| பாட | ஸ்தோத்ரம் பண்ணும்படி |
| முன் | ஸ்ருஷ்டிகாலந்துடங்கி |
| கிடந்ததும் | கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரமும் |
| பாச | பாசங்கள் |
| நின்ற | நிற்கிற |
| நீரில் | ஸமுத்ர ஜலத்திலே |
| வாழும் | ஹ்ருஷ்டனான |
| (அன்றிக்கே) | |
| பாசம் | ப்ரேமம் |
| நின்ற | நிற்கிற |
| நீரில் | ஸமுத்ர ஜலத்திலென்னவுமாம். |
| வாழும் | ஹ்ருஷ்டனான |
| ஆமையான | கூர்மஸஜாதீயனாயவதரித்த |
| கேசவா | ப்ரஹ்மருத்ரோத்பாதகனே! |
| ஏச | உன்படி அறியாதாரேசும்படி, |
| அன்று | தேவதைகள் ஸாபேக்ஷராய்நின்றவன்று |
| நீகிடந்தவாறு | நீ, மந்தரம்முதுகிலே சுழலக்கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரத்தை |
| தேற | தெரியும்படி |
| கூறு | அருளிச்செய்யவேணும். |

" கூசமொன்று மின்றிகூறு " என்று கூட்டவுமாம்

| | |
|---|---|
| கூசமொன்று மின்றி | அதிகாரி விரஹத்தால்வந்த கூசமேதுமில்லாமல் |
| கூறு | அருளிச்செய்யவேணும். (உ௦) |

அவ;—இருபதாம்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளேத்தத் திருப்பாற்கடலிலேகண்வளர்ந்தருளுகிற இம்மேன்மைதானே நீர்மைக்கெல்லைநிலமாயிராநின்றது; அம்ருதமதநவேளையில் மந்தரதாரணார்த்தமாக ஆமையான நீர்மைதானே மேன்மைக்கு எல்லை நிலமாயிராநின்றது, இவைகளைப்பிரித்து என்னெஞ்சிலே பட வருளிச்செய்ய வேணுமென்கிறார்.

வ்யா;—(கூசமொன்றுமின்றி)மாயாகுஶலரான அஸுரராக்ஷஸர் ஸஞ்சரிக்கிறதேசம், ஆராலே யென்வருகிறதோ வென்று ஒரு கூசமின்றியே யென்னுதல்; பிராட்டிமாருக்கும் அடுத்துப் பார்க்கப்பொறாத ஸுகுமாரமானவடிவு துஷ்ப்ரக்ருதிகள் விஷத்ருஷ்டிக்கு விஷயமாகிறதோவென்றுவேறுகூசாதே யென்னுதல். அதவா "கூசமொன்றுமின்றி-கூறுதேறவே று" என்று அந்வயித்து, தன்படிகளைச் சொல்லுகைக்கு அதிகாரிகளில்லையென்று அதிகாரிவிரஹத்தால் கூசாதேயென்றுமாம். அதாவது - மேன்மையைச் சொல்லில் துஷ்ப்ராபமென்று அகலுதல்; நீர்மையைச் சொல்லிக் காற்கடைக் கொண்டகலுதலென்கை. (மாசுணம்படுத்து) நீருறுத்தமே திருவநந்தாழ்வானை விரித்து. (வேலைநீர்பேச) ஸ்வஸந்நிதாநத்தாலே வந்த ப்ரீதியாலே கடல்நீர் கோஷியாநிற்க. (நின்றதேவர்) ஜகத்ரக்ஷண தர்மத்திலே வ்யவஸ்த்திதராய் நின்ற ப்ரஹ்மாதிகள். பேசநின்றதேவரென்றுமாம். (க) "பேசநின்றசிவன்" என்னக்கடவதிறே., (வந்துபாட)ஊர்த்த்வலோகங்களில் நின்றும் வந்துதந்தாமுடைய அபிமதஸித்திக்காக ப்ரீதிப்ரேரிதராயேத்த. (முன்கிடந்ததும்) ஸ்ருஷ்டிகாலமே தொடங்கிக் கண்வளர்ந்தருளுகிறவிதுவும்; ஸமுத்ரகோஷத்தோடு, ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுடைய ஸ்தோத்ரத்தோடு, அநந்ய ப்ரயோஜநரான ஶ்வேதத்வீபவாஸிகளுடைய ஸ்தோத்ரத்தோடு வாசியற முகங்கொடுத்து நிற்கிறவிது என்ன ஶீலமென்று கருத்து.

(பாசநின்ற நீரில்வாழுமாமையானகேசவா) ஸமுத்ரமதநவேளையில் வருணபாசங்களை யுடைத்தான கடலிலே முதுகிலே மந்த

அரு.—இருபதாம்பாட்டு. ஆமையாயிருக்கச்செய்தேயும் "கேசவா" என்கையாலே (மேன்மைக்கெல்லைநிலம) என்கிறது. "மாசுணம்" பெரும்பாம்பு. "பேசநின்ற" ப்ரஶம்ஸாபரமாகப் பேசநின்ற. கடல்வருணனுக்கு இருப்பிடமாகையாலே அவனுடைய ஆயுதத்தையுடைத்தாயிருக்கை. பாசம்-ஆயுதம். ப்ரஹ்மாதிகள் ஸ்தோத்ரம் பண்ணக்கிடக்கிற மேன்மையிலே அசேதநமான ஸமுத்ரகோஷத்தைக் கேட்டுக்கொண்டு கிடக்கையாலே நீர்மை ப்ரகாஶிக்கிறது.

(க) தி-வாய்-ச-க0-ச.

மூ.—அரங்கனே தரங்கநீர் கலங்கவன்றுகுன்றுசூழ்
மரங்கள்தேய மாநிலங்குலுங்க மாசுணஞ்சுலாய்
நெருங்கநீகடைந்தபோது நின்றசூரரென்செய்தார்
குரங்கையாளுகந்த வெந்தை கூறுதேறவேறிதே.

ரம் சுழலுகிற விது ஸ்வப்ரயோஜநமாக நினைத்துக்கூர்மஸஜாதீயனு னவனே!“பாசநின்றநீர்” என்று-பரமபதத்திற்காட்டில் ப்ரேமஸ்த தலமான கடலிலேயென்னவுமாம். கேசவாவென்றது-ப்ரஹ்மாதிக ள்சரணம்புகுர,தத்ரக்ஷணார்த்தமாக கூர்மஸஜாதீயனுகையாலே அ வ்வளவாலும்ப்ரஹ்மருத்ரர்களுக்கு உத்பாதகனுனமேன்மை அழி யாதிருக்கிறபடி.(எசவன்றுநீ கிடந்தவாறு) தேவதைகளடங்கஸா பேக்ஷராய் நின்றவன்று ஸர்வாதிகனுன நீ, உன்படியறியாதார்“ஆ மையானுன்”என்றுஉன்னுடை யாரையேசும்படி,மந்தரம்முதுகிலே நின்றுசுழலக் கண்வளர்ந்தருளின ப்ரகாரம்·(கூறுதேறவே). தெரி யும்படி யெனக்கருளிச் செய்யவேணும். ஆமையான நீர்மையிலே ஸர்வாதிகத்வமும் ப்ரகாசியாநின்றது, ப்ரஹ்மாதிகளேத்தக் கண் வளர்ந்தருளுகிற விடத்திலே நீர்மைப்ரகாசியா நின்றது. இவற் றைப் பிரித்துத்தெரிய வருளிச்செய்யவேணுமென்று கருத்து(உ0)

இருபத்தோராம்பாட்டு (அரங்கனித்யாதி)
“அரங்கனே” என்கிறஸம்போதநம் வாக்யாந்தேக்ரியை யோடே கூட்டுவது.

| | |
|---|---|
| தரங்க | அலைகளையுடைத்தான |
| நீர் | ஸமுத்ரமானது |
| கலங்க | க்ஷோப(ஜு)மாக |
| குன்று | மந்தர பர்வதத்தை |
| சூழ் | சூழ்ந்த |
| மரங்கள் | வ்ருக்ஷங்கள் |
| தேய | வாஸுகி ஸங்க்கட்டநத்தாலே உரைய |
| மா | மஹத்தான |
| நிலம் | புஷ்கரத்வீபபூமி |
| குலுங்க | அசைய |

(மாசுணமித்யாதி)
“நெருங்கமாசுணம்சுலாய்” என்றுகூட்டி,

| | |
|---|---|
| நெருங்க | நெருங்கும்படி |
| மாசுணம் | வாஸுகியை |
| சுலாய் | சுலாவி; சுற்றியென்றபடி; |
| நீகடைந்தபோது | நீ அம்ருதமதநம் பண்ணபோது |

"அன்று"என்றப்ராதமபாதஸ்தத்தை இங்கேகூட்டுவது.

| | |
|---|---|
| அன்று | துர்வாஸஶ்ஶாபத்தினலேநஷ்டஶ்ரீகரான தேவதைகள்கைவாங்கிநின்றவன்று, |
| †நின்றசுரர் | நின்றதேவர்கள் |
| என்செய்தார் | மந்தராத்ஷ்ட்டாநத்வாதிகளிலே எத்தைச் செய்தார்; |
| குரங்கை | வாநரங்களை |
| ஆளுகந்த | ஜயஶீலரென்றுதரித்த |
| எந்தை | என்னையனே |
| அரங்கனே | திருவரங்கத்தாய்! |
| இது | இத்தை |
| வேறு | விஶிஷ்ய |
| தேற | அறியும்படி |
| கூறு | அருளிச்செய்யவேணும். (உக) |

அவ;—இருபத்தோராம்பாட்டு. ஸமுத்ரமதநவேளையில் ஆமையான நீர்மைக்குமேலே ஸகல வ்யாபாரங்களையும் தேவரீரே செய்தருளி, "தேவர்கள் கடல் கடைந்தார்கள்" என்று தேவர்கள் தலையிலே யேறிட்டுக்கொண்டாடினபடி, ராவணனை தேவரே அழியச்செய்து முதலிகள் தலையிலே விஜயத்தையேறிட்டுக்கொண்டாடினப்போலேயிருந்தது யென்று இவ்வாஶ்ரித பக்ஷபாதத்தை வேறாகத்தெரியவருளிச் செய்யவேணுமென்கிறார். ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமா யிருக்க இதொருபக்ஷபாதமிருந்தபடி யென்னென்று விஸ்மிதராகிறார்.

வ்யா.—"அரங்கனே" என்கிறவிது விஶேஷ்யமாகையால் க்ரியையோடே அந்வயிக்கக்கடவது.(தரங்கநீர்கலங்க) (க)" ஸுவ்ரே

அரு;—இருபத்தோராம்பாட்டு. (ஸர்வஸாதாரணம்) தேவர்களுக்கும் அஸுரர்களுக்கு மொத்திருக்கை. நெருங்கக் கட்டிக் கடைகைக்கு வாஸு

(க) ரா-யு-கக-௩க. † வ்யாக்க்யாநாநுகுணம்.

யோஹோஷயிः - அப்ரமேயோமஹோததிः'' என்கிறபடியேஅத்யகாதமான கடலாகையாலே தன்னையநுபவிக்க விழிந்தாரைக் கரையிலே ‡ யேறிட வல்லதிரைக்கிளர்த்தியையுடைத்தான கடல் குளப்படிபோலே கலங்க. (அன்று) ஸகலதேவதைகளும் துர்வாஸஶ்ஶாபத்தாலே நஷ்டஶ்ரீகராய்த் தங்களைஸ்வர்யத்துக்குதேவரீர் கைபார்த்து நின்றவன்று. (குன்றசூழ்மரங்கள்தேய) மந்தரத்தைச்சூழ்ந்த மரங்கள் வாஸுகியுடல் பட்டுத்தேய, (மாநிலங் குலுங்க) ஸமுத்ர கோஷத்தினுடைய அதிசயத்தாலே அத்தோடே சேர்ந்த புஷ்கரத்வீபங்களாகிற மஹாப்ருத்வி குலுங்க. (மாசுணம் சுலாய்நெருக்க)[நெருங்க-மாசுணம்சுலாய்]வாஸுகியை நெருங்கச் சுற்றி. சுலாய்—சுலாவி, சுற்றியென்றபடி; ஸ்வதேஜஸ்ஸாலே உபப்ரும்ஹிதமானபடியாலே கூசாதே மந்தரத்திலே வாஸுகியை நெருங்கச்சுற்றி.(க)''அதிஷ்டாநம் ப்ரமதோபூக்''என்று மந்தரத்துக்கு அதிஷ்டாநமும் தானேயென்றும்,(உ)''தேஜஸா நாகராஜாநம் ததாவ்யாபிதவாந்ப்ரபுः''என்று வாஸுகிக்கு ப(வ)லகரனும் தானேயென்றும்சொல்லக்கடவதிறே.

(நீகடைந்தபோது)(௩) ''ததோமதிதுமாரப்தாः.''என்று-தேவர்களுக்கு ஆரம்பமாத்ரமேயாய், (ச) ''ஆயிரந்தோளாலலைகடல்கடைந்தான்'' என்கிறபடியே அக்கடலை தேவரீரேகடைந்தபோது(நின்றசூரரென்செய்தார்) அதிபலபராக்ரமரான தேவர்களும் அஸுரர்களும் செய்ததென்? அம்ருதமதநஸாமர்த்த்யத்தை தேவர்கள்பக்கலிலே யேறிட்டுக்கொண்டாடுகைக்கு அவர்கள்செய்த கார்யமென்?கூர்மரூபியாய் மந்தராத்ரிக்கு அதிஷ்டாநமானார்களோ;(ரு) ''உபர்யாக்ராந்தவாந்ஶைலம் ப்ருஹத்ரூபேண கேஶவः''என்றுமந்தரம் சலியாதபடி நோக்கினார்களோ; தேஜஸ்

கிக்கு ஶக்தியுண்டோவென்ன வருளிச்செயகிறார் (ஸ்வதேஜஸ்ஸாலே யித்யாதி). (உபப்ரும்ஹிதம்) பெருக்கப்படுகை. நின்றசூரர் - பராக்ரமமாதல்,

(க) வி-பு-க-கூ-அஅ. (உ) வி-பு-க-கூ-கூக. (௩) வி-பு க-கூ-அச.
(ச) தி-மொ-ரு-எ-ச. (ரு) வி-பு-க-கூ-கூ0. ‡ (பா) ஏறடவல்ல.

மூ.—பண்டுமின்றுமேலுமாயோர் பாலனாகி ஞாலமேழும்
உண்டுமண்டியாலிலைத் துயின்றவாதிதேவனே!
வண்டுகிண்டுதண்டுழாயலங்கலாய் கலந்தசீர்ப்
புண்டரீகபாவை சேருமார்ப! பூமிநாதனே, (உஉ)

ஸாலேவாஸூகிக்குபலகரானார்களோ; ப(ல)லபோ(ஹா)க்தாக்களாய் நின்றவிதுஹேதுவாக அவர்களையேகர்த்தாக்களுமாக்கின வித்தனையன்றோ. (க) "தேவதாநவயத்நேந ப்ரஸூதாம்ருதமந்தநே -தேவதாநவயத்நேந ப்ரஸூதாம்ருதமந்தநே" என்று அம்ருதமதந வ்யாபாரம் அஸுரர்களுக்குமொத்திருக்க அவர்களைக்லேஶ(ஸா)பாகிகளாக்கி தேவர்களை அம்ருதபாகிகளாக்கின விதுவும் அதுக்குமேலே ஒரு பக்ஷபாதமிறே. ப்ரயோஜநாந்தர பரரென்றுபாராதே தேவர்கள்பக்கல் பக்ஷபாதத்துக்கடி, (உ) "ஶரண்யம் ஶரணம் நாத்வா:- ஶரணம் த்வாமநுப்ராப்தா:" என்று ஶரணமென்றவிதுவேயிறே.

(குரங்கையாளுகந்தவெந்தை) கீழ்ச்சொன்ன பக்ஷபாதத்துக்குத்ருஷ்டாந்தம் சொல்லுகிறது. ராவணனை தேவரீரே யழியச்செய்து, ப்ரதிபக்ஷத்தை வென்று தந்தார்களாக ஸ்ரீவாநரவீரர்களை ஆதரித்தாப்போலே. "எந்தை" என்று-நித்யஸூரிகளை அடிமைகொள்ளுமேற்றத்தை யுடையனாய்வைத்து, "திர்யக்குக்கள்" என்று இகழாதே அடிமைகொண்டவித்தைத் தம்பேறாகவினைத் திருநகையாலே என்னுதனே யென்கிறார். (அரங்கனே- கூறுதேறவேறிதே) "ஈஶ்வரன் ஒருவனுளன்" என்று அறியாத ஸம்ஸாரத்திலே இவ்வாஶ்ரிதபக்ஷபாதத்தைப்ரகாஶிப்பிக்கைக்காக அர்த்தியாய் வந்து கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற தேவரீர் இத்தை விசேஷித்துத் தெரியவருளிச் செய்யவேணும். கீழ் - வ்யூஹத்திலும் விபவத்திலும் சொன்னபக்ஷபாதங்கள் காணலாவது பெரியபெருமாள் பக்கவிலே யென்று கருத்து. ... ... ... .... (உக)

இருபத்திரண்டாம்பாட்டு (பண்டுமித்யாதி)

பண்டும் ஸ்ருஷ்டே: பூர்வகாலமென்ன,
இன்றும் ஸ்ருஷ்டிகாலமென்ன,

ஶரீராதல். (அதுக்குமேலே) தான் கடைந்து அவர்கள்மேலே எறிட்டதுக்குமேலே.

(க) வி-பு-க-கூ-கசக. (உ) வி-பு-க-கூ-கூடு.

மேலும் ப்ரளயகாலமென்ன, (இவற்றிலே)
ஆய ரக்ஷகனானவனே!
ஓர் அத்விதீயமான
பாலனாகி ஶிஶுவாய்,
ஞாலமேழும் பூலோகப்ரப்ருதி ஸப்தலோகங்களையும் "மண்டியுண்டு" என்றுகூட்டுவது.
மண்டி விரும்பி
உண்டு அமுதுசெய்து
ஆலிலை வடதளத்திலே
துயின்ற கண்வளர்ந்தருளின
ஆதி காரணவஸ்துவான
தேவனே ப்ரகாஶகனே!
வண்டு ப்ர(ஹ்ர)மரங்கள்
கிண்டு கிளறும்; பறக்குமென்றபடி;
தண் ஶ்ரமஹரமான
துழாயலங்கலாய் திருத்துழாய் மாலையுடையவனே!
கலந்த நித்யஸம்ஶ்லிஷ்டையாய்
சீர் கல்யாணகுணங்களையுடையளாய்,
புண்டரீக தாமரைப்பூவை ஜந்மபூமியாகவுடையவளாய்,
பாவை நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையளான பிராட்டி
சேரும் நித்யவாஸம் பண்ணுகின்ற
மார்வ திருமார்பையுடையவனே
பூமிநாதனே ஶ்ரீபூமிப்பிராட்டிக்கு நாதனானவனே!
"இப்படிப்பட்ட தேவர்க்கு ஆஶ்ரிதவத்ஸலரென்னுமிது ஓரேற்றமோ" என்று வாக்யஶேஷம். (உஉ)

அ.—இருபத்திரண்டாம்பாட்டு. ப்ரளயாபத்திலே வரையாதே யெல்லாரையும், வடதளஶாயியாய் ஸர்வஶக்தித்வந்தோற்ற சிறிய திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த தேவரீருக்கு "ஆஶ்ரித விஷயத்தில் வத்ஸலர்" என்னுமிது ஓரேற்றமோ வென்கிறது.

வ்யா;— (பண்டுமின்றுமேலுமாய்) “பண்டு” என்கிறது—ஸ்ருஷ்டே: பூர்வகாலத்தை; “இன்று” என்கிறது-ஸ்ருஷ்டிகாலத்தை; “மேல்” என்கிறது—ப்ரளயவேளையை. (க) “ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்” என்கிறபடியே நாமரூபங்களை இழந்து அசிதவிசேஷிதமாய் ஸூக்ஷ்மதசாபந்நமான ஸகலபதார்த்தங்களையும், (௨) “தமேகீபவதி” என்கிறபடியே தன் பக்கலிலே ஏறிட்டு நோக்கியும்; ஸ்ருஷ்டிவேளையில் கர்மாநுரூபமாகஸ்ருஷ்டித்தும், ததநுரூபமாக ரக்ஷித்தும், ப்ரளயங்கொள்ளுமளவில் வயிற்றிலே வைத்துநோக்கியும் போருமவனுகையாலே. “ஆய்” என்றது-ஆகையாலேயென்று ஹேதுகர்ப்பமாய்க்கிடக்கிறது. (ஓர்பாலனாகி) அத்விதீயமான முக்த்த ஶிசுவாய். (ஞாலமேழு முண்டுமண்டி) ஸகல லோகங்களையும் தன்பேறாகவிரும்பியமுதுசெய்து.சிறியவயிற்றிலே ஸகலலோகங்களையுமடக்கின அக(ஹ)டிதக(ஹ)டநாஸாமர்த்த்யத்தால்தேவரீருடைய ஐஶ்வரமானஶக்தியைப்ரகாசிப்பித்தபடியிறேயிது. (ஆலிலைத்துயின்ற வாதிதேவனே) ஒருபவனை ஆலிலையிலே ஜகத்காரணவஸ்துவென்று தோற்றும்படி கண்வளர்ந்தருளினவனே.

(வண்டுகிண்டு தண்டுழாயலங்கலாய்) இப்படி ப்ரளயார்ணவத்திலே பரிவரொருவரின்றிக்கே தனியே கண்வளர்ந்தருளுகிறவன் ஸர்வாதிகன் கிடீரென்கிறது இப்பாட்டில் ஶேஷமும். செவ்வியாலே வண்டுகள் புக்குப்பருகும் ஶ்ரமஹரமான திருத்துழாய்மாலையை யுடையவனே; கிண்டல்—கிளர்தலும், கிழித்தலும். இத்தால்-ஆதிராஜ்யஸூசகமான திருத்துழாய்மாலையையுடையவனென்கை. (கலந்தசீர்ப்புண்டரீகப்பாவைசேருமார்ப) ஸ்வரூபநிரூபகபூதையாகையாலே நித்யஸம்ஶ்லேஷஸ்வபாவையாய், தாமரைப்பூவை ஜந்மபூமியாக வுடையளாய், நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடைய பிராட்டி,(௩)“அகலகில்லேனிறையும்”என்று அவள்ஆதரிக்கும்திருமார்பையுடையவனே. (பூமிநாதனே.)ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாதனானவனே. இத்தால் - (௪) “ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்சபத்ந்யௌ” என்கிறபடியே ஸ்ரீ பூமீஸஹிதனான ஏற்றத்தை யுடையவனென்கை. இப்படி ஸர்வாதிகன் கிடீர், ப்ரளயா

(க) சாந்தோ-௬-௨-க (௨) ஸுபால-௨. (௩) தி-வாய்-௬-௧௦-௧௦ (௪) யஜு-ஆர-௩

மூ.—வானிறத்தோர் சீயமாய்வளர்ந்த வாளெயிற்றவன்
ஊனிறத்துகிர்த்தல மழுத்தினாயுலாயசீர்
நால்நிறத்தவேதநாவர் நல்லயோகினால் வணங்கு
பால்நிறக்கடற்கிடந்த பற்பநாபனல்லையே. (உங)

---

ர்ணவத்திலே ஒருவரில்லாதாரைப்போலே தனியே கண்வளர்ந்த
ருளுகிறானென்கை. .... .... .... (உஉ)

இருபத்துமூன்றாம்பாட்டு (வானிறத்தித்யாதி)

| | |
|---|---|
| வானிறத்து | வெளுத்தநிறத்தையுடைய |
| ஓர் | விலக்ஷணமான |
| (அன்றியே) | |
| ஓர் | போக்யதையிலே அத்விதீயமான |
| சீயமாய் | ஸிம்ஹஸஜாதீயனாயவதரித்து, |
| †வளர்ந்த | வளராநின்றுள்ள |
| வாள் | ஒளியையுடைய |
| எயிற்றவன் | பற்களையுடைத்தானஹிரண்யனுடைய |
| ஊனிறத்து | ஶரீரத்தின் மர்மத்திலே |
| உகிர்த்தலம் | நகங்களுடையப்ரதேஶத்தை |
| அழுத்தினாய் | அழுத்தினவனே! |
| உலாய | ஸர்வலோகப்ரஸித்தமான |
| சீர் | ப்ராமாண்யத்தையுடைத்தாய், |
| நால் | சதுர்விதமான |
| நிறம் | உதாத்தா z நுதாத்தஸ்வரிதப்ரசயரூபமான மேனியையுடைத்தான |
| வேதம் | வேதங்களை |
| நாவர் | நாக்கிலேயுடைத்தானவைதிகாக்ரேஸரர் |
| நல்ல | நன்றாயிருக்கிற |
| யோகினால் | பக்த்யுபாயத்தாலே, (அன்றிக்கே) விலக்ஷணமானப்ரபத்த்யுபாயத்தாலே யென்னுமாம், |
| வணங்கு | ஆஶ்ரயியாநிற்கிற |
| பால் | க்ஷீரத்தினுடைய |

---

† மூலாநுகுணம்.

நிற வர்ணத்தையுடைத்தான
கடல் ஸமுத்ரத்திலே
கிடந்த கண்வளர்ந்தருளுகிற
பற்பநாபன் பத்மநாபன்
அல்லையே அன்றே ?

"இப்படிப்பட்ட வுன்னுடைய அக(வ)டிதக(வ)டநா ஸாமர்த்யத்தையார் பரிச்சேதிக்கவல்லார்" என்று வாக்யசேஷம். (உ௩)

அ.—இருபத்து மூன்றாம்பாட்டு. ப்ரளயாபத்ஸகனைக்கு வடதளசாயியான அகடிதகடநாஸாமர்த்யத்தளவன்றியேதேவரீருடைய அஸாதாரண விக்ரஹத்தை, (க) "நாமனுஷ்யம் ந ஸிம்ஹம் ததா - நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும்ததா" என்கிறபடியே ஏகதேசத்தை மநுஷ்யஸஜாதீயமாக்கியும் ஏகதேசத்தை திர்யக்ஸஜாதீயமாக்கியும் இப்படி யோநித்வயத்தை ஏகவிக்ரஹமாக்கி,அர்த்தித்வ நிரபேக்ஷமாகப்பிதாவாலேபுத்ரனுக்குப்பிறந்த ஆபத்தை தேவர்பொறுக்க மாட்டாமையாலே தூணிலே தோற்றின அகடிதகடநாஸாமர்த்யத்தை அநுஸந்தித்து, இத்தையாவர் பரிச்சேதித்து அறிய வல்லாரென்கிறார்.

வ்யா:—(வானிறத்தோர் சீயமாய்) புருஷோத்தமன் தன்னை அழியமாறி ஸிம்ஹஸஜாதீயனானப்போலே ஸ்வாபாவிகமான நிறத்தையும் மாறுடுவதே யென்கிறார். வால்நிறம்—வெளுத்தநிறம். (ஓர்சீயமாய்) (உ) "பஹுதா விஜாயதே - பஹுதாவிஜாயதே" என்றும், (௩) "பஹூநி - பஹூநி" என்றும் சொல்லுகிற அஸங்க்யாதமான அவதாரங்களிலே இங்ஙனிருப்பதொன்றில்லாமையாலே அத்விதீயமென்கிறார்.(ச)"அழகியான்றானே" என்கிறபடியே போக்யதையில் அத்விதீயத்வத்தைச்சொல்லவுமாம். சீயம்—சிங்கம். (வளைந்தவாளெயிற்றவன்) வளைந்துஒளியையுடைத்தான எயிற்றையுடைய ஹிரண்யன். இத்தால் - வரபலத்திலே அந்தர்ப்பவியாத ஆஸுரமான புஜபலத்தைச் சொன்னபடி. (ஊன்நிறத்து உகிர்த்தலமழுத்தினாய்) சரீரத்தில் மர்மத்திலே திருவுகிரை அழுத்தினவனே."உகிர்த்தலமழுத்தினாய்"என்று-அவன்வரத்திலே

(க) ப்ரஹ்மபு-கா௩-௬க (உ) யஜு-ஆர-௩ (௩) கீ-ச-டு (ச) ச-திருவ-உஉ.

மூ;—கங்கைநீர்பயந்தபாத பங்கயத் தெம்மண்ணலே
அங்கையாழிசங்குதண்டு வில்லும் வாளுமேந்தினய்
சிங்கமாயதேவதேவ தேனுலாவுமெனமலர்
மங்கைமன்னிவாழுமார்ப வாழ்மேனிமாயனே. (உச)

அந்தர்ப்பவியாத வ(ய)தஸாதநத்தாலே அநாயாஸேந அழித்தபடி சொல்லிற்றுகிறது. (உலாயசீர் நால்நிறத்த வேதநாவர்) ஸர்வ லோக ப்ரஸித்தமான ப்ராமாண்யத்தை யுடைத்தாய், உதாத்தாநுதாத்த ஸ்வரிதப்ரசயரூபமான நாலுவகைப்பட்ட ஸ்வரத்தையுடையவேதத்தை நாவிலேயுடையவர்கள். நிறம் - மேனி. இததால்—அநுமாநாதிகளாலே தத்வஹிதங்களை நிர்ணயிக்கு மவர்களன்றியே, வைதிகர் ஆஶ்ரயிக்குமவனென்கை.

(நல்லயோகினல்வணங்கு) பக்தியோகத்தாலே ஆஶ்ரயிக்குமவர்களென்னுதல். விலக்ஷணமான ப்ரபத்தியாலே ஆஶ்ரயிக்குமவர்களென்னுதல். யோகு – யோகம் - உபாயம். (பால்நிறக் கடல் கிடந்த பற்பநாபனல்லையே) தேவரீர் திருமேனிக்குப் பரபாக(ம)ரூபமான திருநிறத்தையுடைத்தான கடலிலேஜகத்துக்கு உத்பாதகனென்று தோற்றும் வடிவோடே கண்வளர்ந்தருளுகிறபற்பநாபனல்லையோ. "நல்லயோகினல்" என்கையாலே - வாக்யார்த்த ஜ்ஞாநமென்ன, கர்மஜ்ஞாந ஸமுச்சயமென்ன, இவற்றை மோக்ஷஸாதநமென்கிற குத்ருஷ்டிகளில் வைதிகருக் குண்டான வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. "உலாயசீர்" என்று அதிகாரிவிசேஷணமாகவுமாம். "உலாயசீர் - பற்பநாபன்" என்று அந்வயிக்கவுமாம். அப்போது, (க) "விஶ்ருதঃ - விதித?" என்கிறபடியே கல்யாணகுண யுக்தனை ஜநகனென்கிறது. (உரு)

இருபத்து நாலாம்பாட்டு. (கங்கையித்யாதி).

| | |
|---|---|
| கங்கைநீர் | கங்காதீர்த்தத்தை |
| பயந்த | உண்டாக்கின |
| பாதபங்கயத்து | பங்கஜம்போலே போக்யமான திருவடிகளையுடைய |
| எம் அண்ணலே | நம்முடைய நாயனே; |

(க) ரா-ஸு-உக-உ0.

| | |
|---|---|
| அம் | அழகிதான |
| கை | திருக்கைகளிலே |
| ஆழி | திருவாழியாழ்வானென்ன, |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யமென்ன, |
| தண்டு | கௌமோதகியென்ன, |
| வில்லும் | ஸ்ரீஸார்ங்கமென்ன, |
| வாளும் | நந்தகமென்ன, (இவற்றை) |
| ஏந்தினாய் | தரித்தவனே! |
| சிங்கமாய | நாஸிம்ஹஸஜாதீயனாயவதரித்த |
| தேவதேவ | நித்யஸூரிநிர்வாஹகனே! |
| தேன் | ப்ரமரங்கள் |
| உலாவு | ஸஞ்சரியாநின்றுள்ள |
| மெல் | ஸூகுமாரமான |
| மலர் | தாமரைப்பூவை ஜந்மபூமியாகவுடைய |
| மங்கை | பெரியபிராட்டியார் |
| மன்னி | நித்யவாஸம்பண்ணி |
| வாழும் | அநுபவிக்கும் |
| மார்ப | திருமார்பையுடையவனே ! |
| ஆழி | ஸமுத்ரம்போலே ஸ்ரமஹரமான |
| மேனி | திருமேனியையுடைய |
| மாயனே | ஆஸ்சர்யபூதனே !. இங்கே "நித்யஸூரிகள் பெரிய பிராட்டியாரல்லது வேறு உன்னைப்பரிச்சேதிக்கவல்லார்ஆர்" என்றுவாக்ய ஸேஷம். (உச) |

அவ;—இருபத்துநாலாம்பாட்டு. பரமபாவநனுமாய் நிரதிஸயபோக்யனுமாய், போக்தாக்களைக் காத்தூட்டவல்ல பரிகாரத்தையுமுடைய தேவரீர், ஆஸ்ரிதரக்ஷணத்துக்கு அநுகூலமாக திவ்யவிக்ரஹத்தை அழியமாறிவந்து தோற்றின இவ்வேற்றத்தை நித்யஸூரிகளறிதல், பிராட்டியறிதலொழிய வேறறியவல்லாரா ரென்று பின்னையும் அந்த நாஸிம்ஹவ்ருத்தாந்தத்திலே ஈடுபடுகிறார்.

வ்யா,—(கங்கைநீர்பயந்த பாதபங்கயத்தெம்மண்ணலே)குருபாதகனான ருத்ரனுக்கும் ஸூத்தியைப்பிறப்பிக்கும் அக்கங்கைக்

கும் உத்பாதகனாய், ஶூத்தியுக்தர்க்கு நிரதிஶயபோக்யமான திருவடிகளையுடைய வென்னுதனே ! * அபராதாநாமாலயரான ஸம்ஸாரிகளுக்குப் பாவநமாய்அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரதோஷரான நித்யர்க்கும் முக்தர்க்கும் நிரதிஶயபோக்யமான திருவடிகளை யுடையவனென்கை. இப்போது "அண்ணல்" என்று – இவ்வர்த்தத்தைத்தமக்கு நிர்ஹேதுகமாக ப்ரகாசிப்பித்த உபகாரஸ்ம்ருதியாலே என்னுதனே யென்கிறார். (அங்கையாழி சங்குதண்டு வில்லும் வாளுமேந்தினாய்) அத்திருவடிகளை அநுபவிக்க விழிந்தார்க்கு விரோதிகளை யழியச்செய்யும் திவ்யாயுதங்களை "எப்போது ஆர்க்கு என்வருகிறதோ" என்று ஸர்வதா தரித்து நிற்குமவனே. தனக்குத்தானே ஆபரணமான திருக்கையிலே திருவாழி தொடக்கமான ஸ்ரீ பஞ்சாயுதங்களை தரித்தவிதுவும் திருவடிகளோபாதி தமக்கு போக்யமாயிருக்கிறதாய்த்து.

(சிங்கமாய தேவ தேவ) அத்திவ்யாயுதங்கள் அஸத்ஸமமாம்படி வரங்கொண்ட ஹிரண்யனை, நகாயுதமான ஸிம்ஹமாயழியச்செய்த ஆஶ்ரித பக்ஷபாதத்தாலே நித்யஸூரிகளை யெழுதிக்கொண்டவனே. திவ்யமங்கள விக்ரஹத்தின் சுவடறியும் நித்யஸூரிகளுக்கிறே அவ்வடிவையும் அழியமாறிரக்ஷித்த, ஆஶ்ரித பக்ஷபாதத்தின் எல்லைதெரிவது. (தேனுலாவு மென்மலர்மங்கை மன்னிவாழுமார்ப) செவ்வியையும் மென்மையையு முடைத்தான தாமரையில் பிறப்பாலும் பருவத்தாலும் நிரதிஶயபோக்யையான பிராட்டி நித்யவாஸம்பண்ணி யநுபவிக்கும் திருமார்பையுடையவனே. இப்போது,(க) "அகலகில்லேனிறையும்" என்கிறஸாமாந்யமன்றிக்கே ஹிரண்யனையழியச்செய்த வீரத்தாலே,(உ) "ஹஷ்டாஸம் வரிஷஸ்வஜே- பர்த்தாரம்பரிஷஸ்வஜே" என்கிறபடியே இவ்வடிவிலே பிராட்டி அத்யாதரம். பண்ணினபடியைச் சொல்லுகிறது. இத்தால் நித்யஸூரிகளளவுமன்றிக்கே தலைநீர்ப்பாட்டிலே அநுபவிக்கும் பிராட்டியும் இவ்வாஶ்ரித பக்ஷபாதத்துக்குத் தோற்றிருக்கும்படியைச் சொல்லிற்றாய்த்து.(ந) "என்னடியாரது செய்யார்" என்றிறே அவன்படியிருப்பது. (ஆழிமேனிமாயனே) கடல்போலே ஶ்ரமஹரமான திருமேனியையுடைய ஆஶ்சர்யபூதனே, ஹிரண்யனு

(க) தி-வாய்-சு-கo-கo. (உ) ரா-யு கூo-கூசு. (ந) பெரி-தி-ச-கூ-உ.

மூ.—வரத்தினிற்சிரத்தை மிக்க வாளெயிற்றுமற்றவன்
உரத்தினிற்கரத்தை வைத்துகிர்த்தலத்தை யூன்றினாய்
இரத்திநீயிதென்ன பொய்யிரந்த மண்வயிற்றுள்ளே
கரத்தியுன்கருத்தையாவர் காணவல்லர் கண்ணனே. (உ௫)

---

க்கு அநபிபவநீயமான அவ்வடிவுதானே ஆஶ்ரிதர்க்கு ஶ்ரமஹரமானபடியைச் சொல்லுகிறது. ... ... ... (உச)

இருபத்தஞ்சாம்பாட்டு. (வரத்தினியித்யாதி).

| | |
|---|---|
| வரத்தினில் | ப்ரஹ்மா தந்தவரத்திலே |
| சிரத்தை | ஶ்ரத்தையாலே |
| மிக்க | அதிஶயித்திருக்கிற |
| வாள் | அஸிபோலேயிருக்கிற |
| எயிற்று | கோரைப்பற்களையுடைய |
| மற்றவன் | ஆஶ்ரிதவிரோதியான ஹிரண்யனுடைய |
| உரத்தினில் | மார்விலே |
| கரத்தை | திருக்கைகளை |
| வைத்து | வைத்து |
| உகிர் | நகங்களினுடைய |
| தலத்தை | ப்ரதேஶத்தை |
| ஊன்றினாய் | ஊன்றிக்கொன்றாய்; |
| நீ | ஸர்வஶக்தியாய் அவாப்தஸமஸ்தகாமனான நீ, |
| இரத்தி | மஹாபலிபக்கல் பூமியையிரந்தாய்; |
| இது | மஹாபலிபக்கல் பூமியையிரந்தவிது |
| என்னபொய் | ப்ரமாணங்களைப்பார்த்தால் மெய்யாயிருக்கிறது; அர்த்தஸ்த்திதியைப்பார்த்தால் பொய்யாயிருக்கிறது, ஆகையாலே இதென்ன வாஶ்சர்யபூதமான பொய். |
| இரந்த | மஹாபலிபக்கலிலே அர்த்தித்துப்பெற்ற |
| மண் | பூமியை |
| வயிற்றுளே | திருவுதரத்திலே |

கரத்தி — ஒளித்து ரக்ஷித்தாய்.
உன்கருத்தை — அநந்ய ப்ரயோஜந ப்ரயோஜநாந்தரபர விமுகர்களை ரக்ஷித்த உன்நினைவை
யாவர்காண வல்லர் — காணவல்லார்யாவர்,
கண்ணனே — க்ருஷ்ணனாயவதரித்தவனே;
(நீயே அருளிச்செய்யவேணுமென்றுகருத்து), (உரு)

அவ.—இருபத்தஞ்சாம்பாட்டு. அநந்யப்ரயோஜநனான ப்ரஹ்லாதனுடைய விரோதியைப் போக்கினபடியை அநுபாஷித்துக்கொண்டு, அவனுடைய வளவன்றிக்கே, ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனுக்காக அர்த்தியாயும், அவ்வளவும் புதுர நில்லாதே விமுகரான ஸம்ஸாரிகளை ப்ரளயாபத்திலே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த இவ்வாத்ஸல்யத்வத்தை அறியவல்லாரார் என்கிறார்.

வ்யா.—(வரத்தினில் சிரத்தைமிக்க)ப்ரஹ்மா தனக்குத் தந்த வரத்திலே அத்யாதரத்தைப் பண்ணி,வரப்ரதனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகனானவனோடே விரோதித்து அவனாலே உத்பந்நனான ப்ரஹ்மா தனக்குத்தந்த வரத்திலேயிறே மிக்க ஶ்ரத்தையைப்பண்ணிற்று. (க) "கோயம்விஷ்ணு: - கோபம்விஷ்ணு:" என்றானிறே. "தன் வரத்துக்குப்புறம்பான வடிவு கொள்ளவல்லே" என்று உன்னை யறியாதே வரத்தையே விஶ்வஸித்திருந்தவன்.(வாளெயிற்று) வாள்போலேயிருக்கிற எயிற்றையுடையவன். இத்தால் ஹிரண்யனுடைய புஜபலத்தைச்சொல்லிற்று. வரபலத்துக்குப் புறம்பான வடிவுகொண்டாப்போலே புஜபலத்தையழிக்க வல்ல ஸர்வஶக்தியென்றறிந்திலன். உன்னை யறியாதே தன் வரபலபுஜபலங்களை விஶ்வஸித்திருந்த மதிகேடன்,

(மற்றவன்) ஶத்ருவானவன். ஸம்பந்தமொத்திருக்க. "மற்றவன்" என்கிறது-ஆஶ்ரிதஶத்ருவே தனக்கு ஶத்ருவென்னும் நினைவாலே. (உரத்தினில்) தார்மாம்ஸங் கிடந்தவிடத்தைக் குட்ட

அரு;—இருபத்தஞ்சாமபாட்டு.(உ) "த்ரீணிபதாவிசக்ரமே" என்கிற ஶ்ருதி, ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனோடு வாசியறவென்றபடி.

(க)வி-பு-க-கஎ-உக. (உ) விஷ்ணுஸூக்தம்.

மிடுவாரைப்போலே தூர்மானங்கிடந்தமார்விலே. (கரத்தைவைத்து) (க) "அப்யேஷ ப்ருஷ்டே மம ஹஸ்தபத்மம் கரிஷ்யதி - அப்யேஷ ப்ருஷ்ட்டே மமஹஸ்தபத்மம்கரிஷ்யதி" என்று அக்ரூராதிகளுக்கு உஜ்ஜீவநஹேதுவாய், (உ) "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்று—ப்ரணயினிக்கு† போக்யமாயிருக்கும் திருக்கையைதுஷ்ப்ரக்ருதியானவவனுடைய திண்ணியமார்விலே வைத்து. (உகிர்த்தலத்தையூன்றினாய்) வரத்துக்குப் புறம்பான வத(ஸ)ஸாதநமாய் அத்யந்தஸுகுமாரமான வுகிராலே அநாயாஸேந கொன்றாய். தலம் - நிலம், இதழும்.

(இரத்திநீ) ஹிரண்யனிற்காட்டில் தத்ஸந்தாநஜனான மஹாபலி பக்கலிலே ஔதார்ய குணமென்பதொரு குணமுண்டாகையாலே அர்த்தித்வத்திலே யிழிந்தாய். (இரத்திநீ) ஸர்வஶக்தியாய் அவாப்த ஸமஸ்தகாமனான நீ * அலம்புரிந்த நெடுந்தடக்கையாலே யிரப்பதே?; ஹிரண்யனுக்காக உடம்பை அழியமாறினாய், ப்ரயோஜநாந்தர பரனான இந்த்ரனுக்காக உனக்கு நிரூபகமான ஔதார்யத்தை அழியமாறிற்று. (இதென்ன பொய்) உன்னதல்லாத தொன்றை அர்த்தித்தாயாகிலிறே உன்னர்த்தித்வம் மெய்யாவது; தன்னதொன்றைத் தந்தானாகிலிறே மஹாபலி ஔதார்யம் மெய்யாவது. இதுபொய்யென்னாதே "இதென்னபொய்" என்றது, அர்த்தித்வ(ஃ)பலமான த்ரைவிக்ரமாபதாநத்தைஶ்ருதி ஓதாநின்றது, (ங) "யத்ராம்புவிந்யஸ்ய-யத்ராம்புவிந்யஸ்ய" என்று—ஔதார்யத்துக்கு பலமாக மஹாபலிக்கு இந்த்ரபதத்தைச் சொல்லாநின்றது; ஆக, ப்ரமாணங்களாலே பொய்யென்னவொண்ணாது, தன்னத்தை அவனதாக்கிக்கொண்டு இரக்கையாலும், மஹாபலி அவனத்தைத் தன்னதாக்கிக் கொடுக்கையாலும் மெய்யென்னவொண்ணாது, ஆகையாலே "இதென்னபொய்" என்கிறார்.

(இரந்தமண்வயிற்றுளே கரத்தி) அர்த்தித்துப்பெற்ற பூமியென்று ப்ரளயாபத்திலே ஆபத்தே ஹேதுவாகத் திருவயிற்றிலே ஒளித்துவைத்து ரக்ஷித்தி. (உன்கருத்தையாவர் காணவல்லர்) உன்நினைவை யாவர்காணவல்லார். அநந்ய ப்ரயோஜநனான

(க) வி-பு-ரு-கஎ-உஅ. (உ) தி-வாய்-கO-ச. (ங) வி-பு-ரு-கஎ-ஙO.

மூ.—ஆணினோடு பெண்ணுமாகி யல்லவோடுநல்லவாய்
ஊணொடோசையூறுமாகி யொன்றலாதமாயையாய்
பூணிபேணுமாயனாகிப் பொய்யினோடு மெய்யுமாய்
காணிபேணுமாணியாய்க் கரந்துசென்ற கள்வனே, (உகு)

---

ப்ரஹ்லாதனோடு, ப்ரயோஜநாந்தரபரனான இந்த்ரனோடு, விமுகரானஸம்ஸாரிகளோடு வாசியறரக்ஷிக்கிற உன்னினைவை ஜ்ஞாநாதிகரார்தான் அறியவல்லார். (கண்ணனே) க்ருஷ்ணனாய் வந்தவதரித்து இடக்கையும் வலக்கையுமறியாத இடையரையும் பசுக்களையும் ரக்ஷித்து உன்னையொழியச் செல்லாதபடி பண்ணி, அவர்களுக்கு நியாமகனான நீயே யருளிச்செய்யவேணுமென்று கருத்து.

இருபத்தாறும்பாட்டு. (ஆணினோடித்யாதி).

| | |
|---|---|
| ஆணினோடு பெண்ணுமாகி | ஜகத்விஸ்தரணார்த்தமாக ஸ்த்ரீபும்ஸவிபாக(ஸாம) த்தைப்பண்ணி அவர்களுக்குஅந்தராத்மாவாய் நின்று நிர்வாஹகனாய், |
| அல்லவோடு | நபும்ஸகபதார்த்தத்தோடே கூடின |
| நல்லவாய் | இந்தலிங்கத்ரயவிஶிஷ்ட பதார்த்தங்களிலே விலக்ஷணமான பதார்த்தங்களுக்கு நிர்வாஹகனாய், (நிர்வாஹ்யதாயாம் ஸாஹித்யம்) |
| ஊண் | ரஸமென்ன |
| ஓசை | ஶப்தமென்ன, |
| ஊறு | ஸ்பர்ஶமென்ன, (ஏதது பலக்ஷிதங்களான விஷயாதிகளுக்கு கர்மாநுகூலமாக நியாமகனாய்) |
| ஒன்றலாத | இவற்றுக்குள்ளே ஒன்றுக்குமாத்ரம் காரணமின்றிக்கேயிருக்கிற; (ஸர்வகாரணமென்றபடி) |
| மாயையாய் | ப்ரக்ருதிதத்வத்துக்கு நிர்வாஹகனாய், (அன்றிக்கே) |
| மாயையாய் | ஆஶ்சர்யத்தை யுடையவனாயென்றுமாம்; |
| பூணி | பசுக்களை |

| | |
|---|---|
| பேணும் | ஆதரிக்கிற |
| ஆயனாகி | கோ(பௌ)பஸஜாதீயனாய் |
| பொய்யினோடு | துர்யோதநாதிகள் பக்கலிலே பொய் யோடே கூடின, |
| மெய்யுமாய் | பாண்டவர்பக்கலிலே மெய்யையுடைய வனாய், |
| காணி | பூமியை |
| பேணும் | ஆதரிக்கிற |
| மாணியாய் | வாமநப்ரஹ்மசாரியாய், |
| கரந்துசென்ற | மறைந்துசென்ற |
| கள்வனே | க்ருத்ரிமனே! |

"உன்னையார் மதிக்கவல்லார்" என்று மேல் பாட்டோடே அந்வயம். (உசு)

அ.—இருபத்தாறும்பாட்டு. ஸர்வநிர்வாஹகனான நீ ஸுரி போக்யமான வடிவை ஆஸ்ரிதார்த்தமாக தேவஸஜாதீயமாக்கியும் கோ(பௌ) ஸஜாதீயமாக்கியும் அவதரித்துப்பண்ணின ஆஸ்சர்யங் ஆரறிய வல்லாரென்கிறார். வாமநாவதாரத்தோடே க்ருஷ்ணாவதாரத்துக்கு ஒருவகையாலே ஸாம்யம் சொல்லலாயிருக்கையாலே இரண்டவதாரத்தையுஞ் சேர்த்தநுஸந்திக்கிறார்.

வ்யா.—(ஆணினோடு பெண்ணுமாகி) ஜந்யஜநகபாவத்தாலேஜகத்துவிஸ்த்ருதமாக வேணுமென்று ஸ்த்ரீபும் விபாக(ஹாம)த்தாலேஸ்ருஷ்டித்தும், அந்யோந்யம் ஸம்பந்தித்தும்,ஸம்ஸர்க்கிப்பித்தும்,இப்படி அந்தராத்மதயாநின்று நிர்வாஹகனாய்.(அல்லவோடு) ஒன்றுக்குமுடலன்றிக்கே யிருக்கிற நபும்ஸகபதார்த்தத்துக்கு நிர்வாஹகனாய். (நல்லவாய்) இந்த லிங்கத்ரய விஸிஷ்டபதார்த்தங்களிலே விலக்ஷணபதார்த்தங்களுக்கு நிர்வாஹகனாய்; வைலக்ஷண்யமாவது - புருஷார்த்த ருசியுண்டாகை; அவர்களுக்கு நிர்வாஹகனாகையாவது - (க) "ததாமி புத்தியோகந்தம்" என்கிறபடியே புருஷார்த்த ஸாதநபூதனாகை.

---

அரு.—இருபத்தாறும் பாட்டு; கஶ்யபப்ராஜாபதி தேவகோடியிலே அந்தர்ப்பவிக்கையாலே வாமநனையும் தேவனென்கிறது ... (உசு)

---

(க)கீதை-கா

(ஊணொடோசையூறுமாகி) புருஷார்த்த ருசியில்லாதார்க்கு போக்யமான ஶப்தாதிகளுக்கு கர்மாநுகூலமாக நியாமகனாய். ரஸஶப்தஸ்பர்ஶமான இவை மூன்றும்-அஞ்சுக்கும் உபலக்ஷணம். (ஒன்றலாதமாயையாய்) இவற்றினுள்ளே ஒன்றுக்குக்காரணமாமளவன்றிக்கே, உக்தங்களோடு அநுக்தங்களோடு வாசியற ஸர்வமுமாய்க்கொண்டு பரிணமிக்கவல்ல ப்ரக்ருதி தத்வத்துக்கு நிர்வாஹகனாய், (க) "𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 - மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்" என்னக்கடவதிறே. "மாயை" என்று - ஆஶ்சர்யவாசியாய், ஒன்றுக்கு நிர்வாஹகனுமளவன்றிக்கே ஸகல பதார்த்தங்களையும் சேதநனுடைய கர்மாநுகூலமாக நிர்வஹிக்கவல்ல ஆஶ்சர்யத்தையுடையையா யென்னவுமாம்.

(பூணிபேணுமாயனாகி) இப்படி ஸங்கல்பத்தாலே. ஸகலமும் நிர்வஹிக்கிற நீ ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக அஸாதாரண விக்ரஹத்தை கோ(மோ)பஸஜாதீயமாக்கிக்கொண்டவதரித்து உன்னைப் பேணாதே பசுக்களைப்பேணும் இடையனாகி. பூணி-பசு - (பொய்யினோடு மெய்யுமாய்) அவதரித்து ரக்ஷிக்கும்போது அநாஶ்ரிதரான துர்யோதநாதிகள் பக்கலிலே பொய்யையும், ஆஶ்ரிதரான பாண்டவர்கள் பக்கலிலே மெய்யையுமுடையையாய். (காணிபேணுமாணியாய்) மஹாபலியாலே அபஹ்ருதமாய் நோவுபடாதபடி பூமியைப் பேணித்தன்னைப் பேணாதே ப்ரஹ்மசாரியாய். (கரந்துசென்றகள்வனே) மறைத்துக்கொண்டு சென்ற க்ருத்ரிமனே. மறைத்துக்கொண்டு செல்லுகையாவது - ஐஶ்வரமான வைபவம் தோற்றாமே பூமியை மஹாபலியதாக்கி அர்த்தியாய்ச்செல்லுகை. க்ருத்ரிமனாகையாவது - சுக்ரன் வார்த்தை செவிப்படாதபடி அழகாலும் சீலத்தாலும மஹாபலியை வசீகரித்துச் சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே அளந்துகொள்ளுகை. (கரந்துசென்ற கள்வனே) "உன்னையார் மதிக்கவல்லர்" என்று மேல்பாட்டோடே அந்வயம்.

---

(க) ஶ்வேதாஶ்வதரே-௪-௧௦

மூ;—விண்கடந்தசோதியாய் விளங்குஞானமூர்த்தியாய்
பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே
எண்கடந்தயோகினேடிரந்து சென்றுமாணியாய்
மண்கடந்தவண்ண நின்னையார்மதிக்கவல்லரே. (உஎ)

---

இருபத்தேழாம்பாட்டு. (விண்ணித்யாதி).

விண் — விபுவான மூலப்ரக்ருதியை
கடந்த — அதிக்ரமித்த
சோதியாய் — ஸ்வயம்ப்ரகாஶ வஸ்துவான ஸ்வரூபத்தையுடையவனாய்,

உபநிஷத்திலே பூதாகாஶப்ராஸித்தமான ஆகாஶஶப்தத்தை "ஆகாஶெதஶொதஜஶெபாதஜ - ஆகாஶோத தோதஞ்சப்ரோதஞ்ச" என்று மூலப்ரக்ருதியிலே ப்ரயோகிக்கையாலே இங்கே பூதாகாஶ ப்ரஸித்தமான "விண்" என்கிறவித்தை மூலப்ரக்ருதியிலே ப்ரயோகிக்கிறது.

விளங்கு — ஸ்வயம்ப்ரகாஶமான
ஞான — ஜ்ஞாநகுணகத்வாத் ஜ்ஞாநஶப்தவாச்யனான சேதநனை
மூர்த்தியாய் — ஶரீரமாகவுடையவனாய்
பண் — ஸ்வரப்ரதாநமான வேதத்தை, (ஸ்வரவாசியான "பண்" என்கிறவிது-ததாஶ்ரயவேதத்திலேஔபசாரிகம்)
கடந்த — அதிக்ரமித்த
தேச — தேஜஸ்ஸாலே
மேவு — ஸாந்த்ரமான
பாவநாச — ஹேயப்ரத்யநீகனான
நாதனே — ஸர்வேஶ்வரனே,
எண் — ஸங்க்க்யையை
கடந்த — அதிக்ரமித்த
யோகினேடு — கல்யாணகுண யோகத்தோடேகூட
இரந்து — யாசநாஶீலனாய்

| | |
|---|---|
| சென்று | போந்தவனென்று தோற்றும் |
| மாணியாய் | வாமநப்ரஹ்மசாரியாய் |
| | (அன்றியே) |

"மாணியாய் இரந்து சென்று" என்றுகூட்டி

| | |
|---|---|
| மாணியாய் | வாமநப்ரஹ்மசாரியாய் |
| இரந்துசென்று | அர்த்தியாய்ச்சென்று |
| மண் | பூமியை |
| கடந்த | அளந்துகொண்ட |
| வண்ணம் | ப்ரகாரத்தை |
| நின்னை | வேதாபரிச்சேத்ய ஸ்வரூபனாய் பூமியை அளந்துகொண்ட வுன்னை |

"மதிக்கவல்லார் ஆர்" என்று கூட்டுவது.

| | |
|---|---|
| மதிக்கவல்லா ரார் | பரிச்சேதிக்கவல்லாரார். |
| | (அதவா, விண்ணித்யாதி) |
| விண் | பரமாகாஶமான த்ரிபாத்விபூதியை |
| கடந்த | அதிக்ரமித்த |
| சோதியாய் | திவ்யாத்மஸ்வரூபத்தை யுடையனாய், |
| | (விளங்கு ஞானமூர்த்தியாய்) |

"ஞானம் விளங்குமூர்த்தியாய்" என்று கூட்டுவது.

| | |
|---|---|
| ஞானம் | ஜ்ஞாநாதி ஷாட்குண்யத்துக்கு |
| விளங்கு | ப்ரகாஶகமான |
| மூர்த்தியாய் | திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய், |
| பண்கடந்த | வேதாபரிச்சேத்யமான |
| தேச | பரமபதமாகிற அப்ராக்ருத தேசத்திலே |
| மேவு | நித்யவாஸம் பண்ணுமவனாய் |
| பாவநாசநாதனே | ஹேயப்ரத்யநீகனான ஸர்வேஶ்வரனே, |
| எண்கடந்த | ஸங்க்யாதீதமான |
| யோகினோடு | ஆஶ்சர்ய ஶக்தியோகத்தோடே கூடினவனாய்க்கொண்டு |
| மாணியாய் | வாமநப்ரஹ்மசாரியாய் |

அ) திருச்சந்தவிருத்தம் உஎ-பா, விண்கடந்த வ்யாக்யானம்.

இரந்துசென்று — அர்த்தியாய்ச்சென்று
மண்கடந்த வண்ணம் — பூமியையளந்து கொண்ட ப்ரகாரத்தை
நின்னை — பூர்வோக்த விசேஷண யுக்தனான உன்னை
ஆர்மதிக்க வல்லார் — பரிச்சேதிக்க ஸமர்த்தரார். (உஎ)

அவ;—இருபத்தேழாம்பாட்டு. சேதநாசேதந விலக்ஷணமான உன்னுடைய அபரிச்சிந்ந வைபவத்தைப் பரிச்சேதிக்கிலும், குணப்ரேரிதனாய் பூமியை ஆளந்துகொண்ட வடிவைப் பரிச்சேதிக்க வல்லாராரென்கிறார்.

வ்யா;—(விண்கடந்த சோதியாய்) விபுவான மூலப்ரக்ருதி உனக்குள்ளே யாம்படியான ஸ்வரூபவைபவத்தை யுடைய ஸ்வயம்ப்ரகாச வஸ்துவாய் (௧)“சுரரறிவருநிலைவிண்” என்று மூலப்ரக்ருதியை விண்ணென்கிற சப்தத்தாலே சொல்லிற்றிறே. இது தனக்கடி கார்க்கிவித்யையிலே, (௨) “ஏதஸ்மிந்நு கல்வக்ஷரே கார்க்ய- ஆகாச ஓதஞ்சப்ரோதஞ்ச” என்று மூலப்ரக்ருதியை ஆகாச சப்தத்தாலே சொல்லிற்று. (விளங்குஞானமூர்த்தியாய்) ஸ்வயம்ப்ரகாசமாய், ஜ்ஞாநகுணஸாரமாகையாலே ஜ்ஞாந சப்தவாச்யமான ஆத்மஸ்வரூபத்தைச் சரீரமாகவுடையையாய். ஆக இரண்டாலும், (௩) “அணோரணீயாநு மஹதோமஹீயாநு- அணோரணீயாந் மஹதோமஹீயாந்” என்கிறபடியே விபுத்வஸூக்ஷ்மத்வங்களைச் சொல்லிற்று. (பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே) வேதத்தாலே பரிச்சேதிக்கவொண்ணாத தேஜஸ்ஸையே ஸ்வரூபமாகவுடையையாய்-ஹேயப்ரத்யநீகனான ஸர்வேச்வரனே; வேதம் ஸ்வரப்ரதாநமாகையாலே தத்வாசிசப்தத்தாலே வேதத்தைச்சொல்லுகிறது. சேதநாசேதநங்களை வ்யாபித்து நிற்கச்செய்தேயும் தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாகையாலும் அசித்ஸம்ஸர்க்கத்தாலே சேதநனுக்கு வந்ததோஷத்தைப் போக்கவல்லனாகையாலும் ஹேயப்ரத்யநீகனென்கிறது.

(௧) திருவாய் ௧-௧-௭. (௨) ப்ருஹ ரு-அ-எ. (௩) கடவல்லி-௧-௨-௨௦.

(எண்கடந்தயோகினோடு) அஸங்க்யாதமான கல்யாணகுணங்களோடே கூட (போகு) யோகம்.—அதாகிறது - கல்யாணகுணயோகம். (௧) "வஶ்யெஓயாமஒெஶ்வரூ-பஶ்யமேயோகமைஶ்வரம்" என்று - யோகஶப்தத்தாலே குணயோகத்தைச் சொல்லிற்றிறே. (இரந்து சென்றுமாணியாய்) இரப்பிலே தகணேறினவனென்று தோற்ற வாமநவேஷத்தைத்கொண்டு அர்த்தியாய்ச்சென்று (மண்கடந்தவண்ணம்) பூமியையளந்துகொண்ட ப்ரகாரத்தை அதாகிறது—"இந்த்ரனுக்கு மஹாபலியாலே அபஹ்ருதமான ராஜ்யத்தை வாங்கிக்கொடுக்க" என்கிற வ்யாஜத்தாலே வஸிஷ்ட்ட சண்டாள விபாக(ஹம)மற சதுர்த்தஶ புவநாந்தர்க்கதமான ஸகலசேதநர்தலைகளிலும் திருவடிகளைவைக்கை. (நின்னை) சேதநாசேதந விலக்ஷணமாய், வேதத்தாலும் பரிச்சேதிக்கவொண்ணாத ஸ்வரூபவைபவத்தை யுடையையாய், அதுக்கு மேலே குணப்ரேரிதனாய்க்கொண்டு பூமியையளந்துகொண்ட வுன்னை. (ஆர்மதிக்கவல்லரே) பரிச்சேதிக்க வல்லாரார். வேதங்களாலே பரிச்சேதிக்கலாமோ, ஜ்ஞாநாதிகரான வைதிகரால் தான் பரிச்சேதிக்கலாமோ, அம்மேன்மையைப் பரிச்சேதிக்கவோ, அந்நீர்மையைப் பரிச்சேதிக்கவோ, எத்தையார் பரிச்சேதிக்கவல்லார்.

அதவா; (விண்கடந்த சோதியாய்) பரமபதத்துக் கவ்வருகாய் ஸ்வயம்ப்ரகாஶமான திவ்யாத்மஸ்வரூபத்தை யுடையையாய். இத்தால்—த்ரிபாத்விபூதியும் தனக்குள்ளே யாம்படியான ஸ்வரூபவைபவத்தைச் சொல்லுகிறது. (விளங்குஞானமூர்த்தியாய்) ஜ்ஞாநம் விளங்குகிற மூர்த்தியையுடையையாய். திவ்யாத்மஸ்வரூபத்தை ஆஶ்ரயமாகவுடைய ஜ்ஞாநத்துக்கு ப்ரகாசகமான திவ்யவிக்ரஹத்தை யுடையையாய். இந்த ஜ்ஞாநம் ஷட்குணங்களுக்குமுபலக்ஷணம். (௨) "ஷாஜ்ஞுண்யவிக்ரஹம்செவழ - ஷாட்குண்ய விக்ரஹம்தேவம்" என்னக்கடவதிறே. (பண்கடந்த தேசமேவு பாவநாசநாதனே) ஶ்ருதியால் பரிச்சேதிக்கவொண்ணாத பரமபதத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாய், ஸம்ஸாரிகளுடைய தோஷத்தைப் போக்கவல்ல ஹேயப்ரத்யநீகத்வத்தை யுடைய ஸர்வேஶ்வரனே.

(௧) கீ ௧௧-௮. (௨) அஹி-ஸம்-௬-௨௫.

மூ—படைத்தபாரிடந்தளந்ததுண்டுமிழ்ந்துபௌவநீர்
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்தபெற்றியோய் !
மிடைத்தமாலிமாலிமான் விலங்குகாலனூர்புகப்
படைக்கலம்விடுத்த பல்படைத்தடக்கையாயனே. (உஅ)

(எண்கடந்தயோகினோடு)(க)"பராஸ்யஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே - பராஸ்யஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே" என்கிறபடியே அபரிச்சிந்நமாய் அஸங்க்யாதமான ஆஶ்சர்ய ஶக்தியோகத்தையுடையையாய்க்கொண்டு. (மாணியாய் - இரந்துசென்று) அதீந்த்ரியமாய் அபரிச்சிந்நமான திவ்யமங்கள விக்ரஹத்தைப் பரிச்சிந்நமாக்கி, மஹாபலியுடையசக்ஷுர்விஷயமாக்கி அர்த்தியாய்ச்சென்று. (மண்கடந்தவண்ணம்) மூன்றடியை அர்த்தித்து இரண்டடியாலே ஸகலலோகங்களையும் அளந்து கொள்ளுகையும், சிறுகாலைக் காட்டிப்பெரியகாலாலே அளந்து கொள்ளுகையுமாகிறஇப்ப்ரகாரத்தையுடைய, (நின்னை) அபரிச்சிந்நமான ஸ்வரூபவைபவத்தை யுடையையாய், அந்த ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாஶ்ரயமான குணங்களுக்கும் ப்ரகாஶகமான திவ்யவிக்ரஹயுக்தனாய், வேதத்தாலும் பரிச்சேதிக்கவொண்ணாத பரமபதத்தை வாஸஸ்தாநமாக வுடையையாய், உன்னுடைய ஆஶ்சர்யஶக்திப்ரேரிக்க, அத்தாலே ப்ரேரிதனாய்வந்து பூமியையளந்துகொண்ட வுன்னை. (ஆர்மதிக்கவல்லரே) இவற்றிலேயொன்றை ஒருத்தராலேபரிச்சேதிக்கப்போமோ.

இருபத்தெட்டாம்பாட்டு. (படைத்தித்யாதி)
"பௌவநீர்படைத்து, படைத்தபாரிடந்தளந்து, அதுண்டுமிழ்ந்து" என்று கூட்டுவது.

| | |
|---|---|
| பௌவநீர் | அண்டகாரணமான ஏகார்ணவத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| படைத்த | அண்டப்ரஹ்ம ஸ்ருஷ்டிபூர்வம்ஸ்ருஷ்டமான |
| பார் | பூமியை |
| இடந்து | வராஹஸஜாதீயனாயிடந்து |
| அளந்து | மஹாபலிபக்கல் அர்த்தித்து அளந்து கொண்டு |

(க) ஶ்வேதா-சு-அ.

| | |
|---|---|
| அது | அந்த பூமியை |
| உண்டு | ப்ராளயம் வரத்திருவயிற்றிலே வைத்து |
| உமிழ்ந்து | நோவுபடாமலுமிழ்ந்து |

"பௌவநீர்படைத்து" என்று இங்கேயும் கூட்டுவது.

| | |
|---|---|
| பௌவநீர் | ஸமுத்ரஜலத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| அடைத்து | திருவணையிட்டு |
| முன் | முன்னே |
| அதில்கிடந்து | அந்தஸமுத்ரஜலத்திலேகண்வளர்ந்தருளி |
| கடைந்த | அம்ருத மதநம் பண்ணின |
| பெற்றியோய் | மஹாப்ரபாவத்தை யுடையவனே, |
| மிடைத்த | கோபித்த |
| மாலி | தந்நாமக அஸுரனென்ன |
| மாலிமான் விலங்கு | பெருமிடுக்கனை ஸுமாலியான திர்யக்கு, (அன்றிக்கே திர்யக்ப்ரவ்ருத்தனான ஸுமாலியென்ன) இவர்கள் |
| காலன் | யமனுடைய |
| ஊர் | புரத்திலே |
| புக | ப்ரவேசிக்கும்படி |
| படைக்கலம் | ஆயுதங்களான ஸாதநங்களை |
| விடுத்த | ஏவின |
| பல் | அநேகங்களான |
| படை | திவ்யாயுதங்களையுடைய |
| தட | விஸ்த்ருதமான |
| கை | திருக்கைகளையுடைய |
| மாயனே | ஆஸ்சர்யபூதனே. |

இப்பாட்டுக்கு மேலிற்பாட்டில் க்ரியையோடே ஏகவாக்யதாந்வயம். (உஅ)

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. ஸங்கல்பலேஸத்தாலே அண்டகாரணமான ஜலஸ்ருஷ்டி முதலான ஸகல ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவநீ, ஸ்ருஷ்டமான ஜகத்திலே ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக உன்னையழியமாறி அநேகாவதாரங்களைப் பண்ணியும், ஆஃ

ரிதவிரோதிகளான துர்வர்க்கத்தை திவ்யாயுதங்களாலே கைதொட்டு அழிக்கையுமாகிற இவ்வாஸ்சர்யங்களை ஒருவருமறியவல்லாரில்லை யென்கிறார். "ஒருத்தரும் நினாது தன்மையின்னதென்னவல்லரே" என்கிற மேற்பாட்டில் இதுக்கும் க்ரியை.

வ்யா;—(படைத்தபாரிடந்து) "பௌவநீர்படைத்து,பாரிடந்து" என்று அந்வயமாகக்கடவது. (௧) "ஸுஉவைவஹஸஜாதௌ-அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே -அண்டகாரணமான ஏகார்ணவத்தை ஸங்கல்பலேஸத்தாலே ஸ்ருஷ்டித்து, ஜகத்கார்யமான அண்டத்தையும் அண்டாதிபதியான ப்ரஹ்மாவையும் ஸ்ருஷ்டித்து, ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டமான ப்ரளயார்ணவத்திலே அந்தர்ப்பூதையான பூமியை ஸூரிபோக்யமான திவ்யவிக்ரஹத்தை வராஹஸஜாதீயமாக்கி அண்டபித்தியிலேபுக்கு இடந்தெடுத்து. இது ஸங்கல்பத்தாலே செய்ய முடியாததொன்றன்றே. "ஸம்ஸாரப்ரளயாபத்தினின்றும் எடுப்பானிவனே!" என்று, ஆஸ்ரிதர்விஸ்வஸிக்கைக்காகவிறே. (அளந்து) அதுக்குமேலே மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியை, ஸ்ரீவாமநனாய் எல்லைநடந்து மீட்டுக்கொண்டு. இதுவும் தன்னுடைமைபெறுகைக்குத்தானே அர்த்தியாய் வருபவனென்று ஆஸ்ரிதர் விஸ்வஸிக்கைக்காக.

(அதுண்டுமிழ்ந்து) நைமித்திக ப்ரளயம்வர வடதளஸாயியாய் தன்னுடைய சிறியவயிற்றிலே த்ரிலோகத்தையும் வைத்து ரக்ஷித்து, உள்ளேயிருந்து நோவுபடாமல் அவற்றை உமிழ்ந்து. இதுவும்ஸங்கல்பத்தாலேசெய்யலாயிருக்கஅப்படிசெய்ததும்ஸர்வஸக்தியென்றும், உருவழிந்த பதார்த்தங்களை உண்டாக்குமவனென்றும் ஆஸ்ரிதர்விஸ்வஸிக்கைக்காக. "பௌவநீர் படைத்தடைத்து" என்று இங்கேயும் அந்வயிக்கக்கடவது. அண்டகாரணமான ஏகார்ணவத்தை ஸங்கல்பலேசத்தாலே ஸ்ருஷ்டித்த நீ அண்டாந்தர்வர்த்திகளான ஸமுத்ரங்களிலே ஒரு ஸமுத்ரத்தை,வருணனைச்சரணம்புக்கு, படை திரட்டி, அடைத்தவிதுவும் ப்ரணயியுனுடைய விஸ்லேஷத்தில் தேவரீருடைய ஆற்றாமையை ப்ரகாசிப்பித்த வித்தனையிறே.

---

அரு,—இருபத்தெட்டாம்பாட்டு. பௌவநீருக்குக் கீழ் மூலத்திலே அர்த்தமாக்கி மேலுக்கருளிச்செய்கிறார். (அபவேத்யாதி)(முன் அதில்கிடந்து) இடந்தது முதலான வ்யாபாரங்களுக்கு முன்னே திருப்பாற்கடலிலே

---

(௧) மநு-௧-௮. (௨)

மூ.—பரத்திலும்பரத்தையாதி பௌவநீரணைக்கிடந்து
உரத்திலுமொருத்திதன்னை வைத்துகந்ததன்றியும்
நரத்திலும்பிறத்திநாத ஞானமூர்த்தியாயினாய்
ஒருத்தருந்நினாதுதன்மை யின்னதென்னவல்லரே. (உகூ)

(முன் அதில்கிடந்து) ப்ரஹ்மாதிகள் ஆர்த்தரானதசையிலே தூரஸ்தராகவொண்ணாதென்றும், அபிமுகீகரித்தார்க்கு அவதரித்து ஸமாஸ்ரயமாகைக்கும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி. (க) "ஜ்யோதீம்ஷிவிஷ்ணு: - ஜ்யோதீம்ஷி விஷ்ணு:" என்கிறபடியே ஸர்வர்க்கும் ஸந்நிஹிதரான தேவரீர் இப்படி செய்தருளிற்று, ஆஸ்ரிதரக்ஷணத்திலே ஸோத்யுக்தரென்று தோற்றுகைக்காகவிறே. (கடைந்தபெற்றியோய்) தூர்வாஸஸ்ஸாபத்தாலே தேவர்களிழந்த பதார்த்தங்களடங்கக் கடலிலே யுண்டாக்கிக் கொடுக்கைக்காக அக்கடலைக்கடைந்த மஹா ப்ரபாவத்தையுடையவனே. 'பெற்றி" என்று - ஸ்வபாவம். இதுவும் ஆஸ்ரிதருடைய இழவுகளைத்தானே வ்யாபரித்துத்தீர்க்குமென்று தோற்றுகைக்காக.

(மிடைத்தமாலி) கோபித்தமாலி, (மாலிமான்விலங்கு) பெருமிடுக்கனான ஸுமாலியான திர்யக்கு. திர்யக்ப்ரவ்ருத்தனான ஸுமாலியென்னவுமாம். (காலனூர்புகப்படைக்கலம்விடுத்த) அவனை யமபுரத்திலே புகும்படி ஆயுதத்தை யேவினவன். இத்தால் – ஆஸ்ரிதவிரோதிகளை அழியச்செய்யுமிடத்தில் ஸங்கல்பத்தாலன்றிக்கே கைதொட்டு ஆயுதத்தாலே அழிக்குமவனென்கிறது. (பல்படைத்தடக்கை மாயனே) பின்பு விரோதி நிரஸநத்துக்கீடான அநேகாயுதங்களை யுடைத்தாய். அவ்வாயுதங்களுக்கு ஸத்ருஸமான சுற்றுடைத்தான திருக்கையையுடைய ஆஸ்சர்யபூதனே.

இருபத்தொன்பதாம்பாட்டு. (பரத்திலுமித்யாதி).
பரத்திலும் ப்ரக்ருதே: பரமான த்ரிவிதாத்ம வர்க்கத்திலும்

கிடந்தென்றபடி. "ஜ்யோதீம்ஷி விஷ்ணு:" என்று ஸர்வாந்தர்யாமித்வம் சொல்லுகையாலே(ஸர்வர்க்கும்ஸந்நிஹிதர்) என்கிறது. மாலிமானென ராக்ஷஸனைக்ஷுத்ரனாகையாலே விலங்கென்னுதல். பஸுவ்ருத்தியாலேவிலங்கென்னுதல் ... ... ... ... (உஅ)

(க)(க) வி-பு-

| | |
|---|---|
| பரத்தையாதி | விலக்ஷணமான ஸ்வரூபத்தை யுடையவனாய், |
| அநந்தரம் | "உரத்திலும்" என்கிறபாதத்தை அந்வயிக்கக்கடவது. |
| உரத்திலும் | வக்ஷஸ்தலத்திலேயும், (ஸ்வரூபாந்தர்ப்பாவம் ஸமுச்சயத்துக்கர்த்தம்) |
| ஒருத்திதன்னை | அத்விதீயையாய் ப்ரதாந மஹிஷியான பெரிய பிராட்டியாரை |
| வைத்து | நித்யவாஸம் பண்ணும்படி வைத்து |
| உகந்து | ஸம்ஶ்லேஷ ரஸங்களை அநுபவித்துக்கொண்டு |
| பௌவநீர் | ஸமுத்ரஜலமாகிற |
| அணை | படுக்கையிலே |
| கிடந்து | அநிருத்த ரூபியாய்க் கண்வளர்ந்தருளி, (இது ஸங்கர்ஷணாதிகளுக்குமுபலக்ஷணம்). |
| அதன்றியும் | கரணங்களைபரப்ரதாந வ்யூஹாவதாரங்களாலே ரக்ஷித்தவளவன்றியே |
| நரத்திலும் | கர்ஹா விஷயமான நரஜாதியிலே (கர்ஹா ஸமுச்சயேஷு - அபியிறே). |
| பிறந்த | ராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்தாய்; |
| நாத | நிருபாதிக ஸ்வாமியானவனே, |
| ஞானமூர்த்தியாயினாய் | ஜ்ஞாநஸ்வரூபனானவனே |
| ஒருத்தரும் | வேதங்களென்ன, ஜ்ஞாநாதிகரானவைதிகரென்ன, இவர்களிலே ஒருத்தரும். |
| நினதுதன்மை | உன்னுடைய அநுக்ரஹாத்மகமான ஒரு ஸ்வபாவத்தை |
| இன்னதென்ன | ஏவம்விதமென்று பரிச்சேதிக்க |
| வல்லரே | ஸமர்த்தரோ ? (உக) |

அவ,—இருபத்தொன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டில்

(க)"ஐநமெஸவஜஜஸ்ஷிட-மநஸைவஜகத்ஸ்ருஷ்டிம்" என்கிறபடியே-ஸங்கல்பலேஶத்தாலே ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப்பண்ண வல்லவன் ஆஶ்ரிதாநுக்ரஹத்தாலே, எளியகாரியங்களுக்கு அநேகவிக்ரஹபரிக்ரஹங்களைப்பண்ணி ரக்ஷிக்குமென்கிறது, இதில்-இவ்வநுக்ரஹத்துக்கு ஹேது ஸர்வாதிகத்வத்தால் வந்த பூர்த்தியும்' ஶ்ரிய:பதித்வத்தால்வந்த நீர்மையும், அவர்ஜநீயமான ஸம்பந்தமுமென்றும், அநுக்ரஹகார்யம்வ்யூஹவிபவாத்யவதாரங்களென்றும் சொல்லி, இப்படிப்பட்ட வநுக்ரஹம் ஏவம்விதமென்று பரிச்சேதிக்க வொண்ணாதென்கிறார்.

வ்யா.—(பரத்திலும் பரத்தையாதி) (உ) "ஸாரஸாராணாம் ஸாரஃ - பரம்பராணாம்பரமஃ" என்கிறபடியே த்ரிவிதாத்மவர்க்கத்துக்கு மவ்வருகான ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யுடையையாய். அநந்தரம், "உரத்திலும் ஒருத்திதன்னை வைத்துகந்து" என்கிற விது அந்விதமாகக் கடவது. கீழ்ச்சொன்ன ஸ்வரூப வைலக்ஷண்யத்துக்கும் அவ்வருகான உத்கர்ஷத்துக்கும் ஹேதுவாயிறே ஶ்ரிய:பதித்வமிருப்பது.(உரத்திலும்) ச(உ)சப்தத்தாலே-ஸ்வரூபாந்தர்ப்பாவத்தையும் ஸமுச்சயிக்கிறது. அதுக்குமேலே, மஹிஷி வர்க்கத்தையும் வ்யாவர்த்திக்கிறது. (ஒருத்தி) அத்விதீயை.(ந)"வடிவிணையில்லாமலர்மகள்." அதாகிறது-த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் ஸ்வாமிநியாய் ஸர்வேஶ்வரனுக்கு ப்ரதாந மஹிஷியாயிருக்கை.(தன்னை வைத்து)(ச)"அகலகில்லேனிறையும்"என்றுமேல்விழக்கடவ இவள் தன்னை, தான் "இறையுமகலகில்லேன்" என்று திருமார்விலேவைத்து. (உகந்து) * தல்யஶீலவயோ வ்ருத்தையாயிருந்துள்ளவளோடே ஸம்ஶ்லேஷரஸங்களை யநுபவித்திருக்கிற நீ.

---

அரு;—இருபத்தொன்பதாம்பாட்டு. பரத்தையாதி" என்றது - பரத்தையாகி யென்று பாடமாகவேணுமென்று கண்டுகொள்வது. ஶேஷஶாயித்வம் உத்கர்ஷஹேதுவாயிருக்க "உரத்திலும்" என்கிற இப்பதத்தை நடுவே வைக்கவேண்டுவானெனனென்னவருளிச் செய்கிறார் (கீழ்ச்சொன்னஸ்வரூபேத்யாதி). மஹிஷ்யந்தரத்துக்குமார்பிலே அந்வயமில்லாவிட்டவாறே அவர்களையும் வ்யாவர்த்திக்கிறது. ரக்ஷணத்துக்காகக்கிடந்தால் ஸம்ஶ்லேஷத்துக்குக் சொத்தைவாராதோ வென்னவருளிச்செய்கிறார் (ரக்ஷ்யவர்க்கத்தினித்யாதி).விரகறியவேண்டுவானென்னென்ன ருசிபேதத்தாலே யென்கிறார் (ஶாஸ்த்ரப்ரதாநமித்யாதி) (நிறுது) உன்னுடைய. (உ௯)

---

(க) வி-பு-ரு-உஉ-கரு (உ) வி-பு-க-உ-கஉ.
(ந) தி-வாய்-க-உ. (ச) தி-வாய்-க-கo.

(பௌவநீரணைக்கிடந்து) ரக்ஷ்யவர்க்க(மு)த்தினுடைய ரக்ஷணம், பிராட்டிபக்கல் ப்ரீதிக்குப் போக்குவிடாயிறேயிருப்பது. ஆத்மரக்ஷணத்துக்காக அநிருத்தரூபியாய்க் கொண்டு க்ஷீராப்தியிலே நீரே படுக்கையாகக் கண் வளர்ந்தருளி (க) "தாவுர்மே தாஜவுமாயிநூ - தாபார்த்தோ ஜலஶாயிநம்" என்கிறபடியே - தாபார்த்தர்க்குப் புகலாய்க்கொண்டு அபேக்ஷா நிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற நீர்மையைச் சொல்லுகிறது. இது-ஸங்கர்ஷண ப்ரத்யும்ந வ்யூஹங்களுக்கு முபலக்ஷணம். (அதன்றியும்) ஸம்ஹாரத்தில் அசித்கல்பமாய்க்கிடந்த சேதநர்க்குஸ்வரூபநாமங்களைக்கொடுத்துப், ஶாஸ்த்ரப்ரதாநாதிகளைப் பண்ணியும், ப்ரஹ்மாதிகளுடைய ஆர்த்திகளைப் பரிஹரித்தும். இப்படி ரக்ஷித்துப்போந்த வ்யூஹாவதாரங்களாலே தேவரீருடைய அநுக்ரஹம் பர்யவஸியாமையாலே. அதுக்குமேலே. (நரத்திலும் பிறந்து) (உ) "ஸவே மநுஷ்ய -ஸர்வகந்தஃ" என்கிற நீ ப்ரஹ்மாதிகளுக்கும் குத்ஸாவிஷயமான மநுஷ்யயோநிகளிலே தத்ஸஜாதீயனாய்க்கொண்டு ராமக்ருஷ்ணாதி ரூபத்தாலே வந்தவதரித்து இது, தேவயோநியிலும் திர்யக்யோநியிலுமுண்டான அவதாரங்களுக்கு முபலக்ஷணம். (ங) "ஸமாநாதிஸ்ராவதாநு - ஸமாநந திரஸ்சாமவதாரம்" என்னக்கடவதிறே. (நாத) இப்படி விஸத்ருஶமான ஹேயயோநியிலே வந்து அவதரிக்கவேண்டுகிறது இவற்றையுடையனாகையாலேயென்கை.

(ஞானமூர்த்தியாயினாய்) ஜ்ஞாநஸ்வரூபனாயினாய். இப்போது ஜ்ஞாநாதிக்யம் சொல்லுகிறது ரக்ஷிக்கைக்கு விரகறியுமவனென்கைக்காக. ப்ராப்தியுண்டானாலும் விரகறியாதவன்று ரக்ஷிக்கப்போகாதிறே. ஶாஸ்த்ரப்ரதாநமென்ன, ஆசார்யோபதேஶமென்ன, அழகென்ன, சீலமென்ன, ஏவமாதிகளாலே ஆஶ்ரயணாநுகூலமான ருசியைப் பிறப்பிக்க வேண்டும்படியிறே சேதநருடைய ப்ரக்ருதிபேதமிருப்பது. (ஒருத்தரும் நினைதுதன்மை இன்னதென்னவல்லரே) வேதங்களென்ன, ஜ்ஞாநாதிகரான வைதிகரென்ன, இவர்களொருத்தரும் உன்னுடைய அநுக்ரஹத்தினுடையஎல்லையைஏவம்விதமென்று பரிச்சேதிக்கவல்லரோ. தன்னையழியமாறி பகவத்ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளும் ஸம்ஸாரிகளை, தன்னை அழியமாறி ரக்ஷிக்கிற அநுக்ரஹத்தை எவரறியவல்லரே. ... (உகூ)

---

(க) வி-த-சo-ங0, (உ) சாந்-ங-கச-ச, (ங) வர-ஸ்த கஎ.

மூ.—வானகமும்மண்ணகமும் வெற்புமேழ்கடல்களும்
போனகஞ்செய்தாலிலைத் துயின்றபுண்டரீகனே
தேனகஞ்செய்தண்ணறு மலர்த்துழாய் நன்மாலையாய்
கூனகம்புகத்தெறித்த கொற்றவில்லலியல்லையே. (௩௰)

---

முப்பதாம்பாட்டு. (வானகமுமித்யாதி)

| | |
|---|---|
| வானகமும் | ஸ்வர்க்கவாஸிகளான இந்த்ராதிகளும் |
| மண்ணகமும் | பூமியிலுள்ளாரும், (மஞ்சாக்ரோஸந்தி போலே) |
| வெற்பும் | ஸப்தகுலபர்வதங்களும் ("ஏழ்" என்று மத்ய மணிந்யாயத்தாலே வெற்பு கடல்களிலே அந்வயிக்கக்கடவது). |
| ஏழ்கடல்களும் | த்வீபவ்யவஸ்தாபகங்களான ஸப்தார்ணவங்களும் |
| போனகம் செய்து | அமுது செய்து |
| ஆலிலை | வடதளத்திலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளின |
| புண்டரீகனே | புண்டரீக ஸத்ருஸாவயவனே!(இஹ புண்டரீகம் - ரக்தாம்போஜம்) |
| தேன் | வண்டுகளாலே |
| செய் | திடர்ந்திருக்கிற |
| அகம் | அந்தஃப்ரதேஸத்தையுடைய (அன்றிக்கே) |
| தேன் | மதுவாலே |
| செய் | பூர்ணமான |
| அகம் | அந்தஃப்ரதேசத்தையுடைய |
| தண் | ஶ்ரமஹரமான |
| நறு | பரிமளவத்தான |
| மலர் துழாய் | திருத்துழாயினுடைய |
| நல் | ஆகர்ஷகமான |
| மாலையாய் | திருமாலையையுடையவனே |
| கூன் | குப்ஜையுடைய கூன் |

அகம்புக — ஶரீரத்துக்குள்ளே அடங்கும்படி
தெறித்த — உண்டைவில்லைத்தெறித்த
கொற்ற — ஜயஶீலமான
வில்லி — தாநுஷ்கன்
அல்லையே — அன்றோ.
இப்பாட்டுத் தொடங்கி முப்பத்து நாலாம்பாட்டளவும் அப்பாட்டிலிருக்கும் "மாயமென்னமாயமே" என்கிற க்ரியை. (௩௦)

அவ.—முப்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - "நரத்திலும் பிறத்தி" என்று - மநுஷ்யயோநியில் அவதாரங்கள் ப்ரஸ்துதமாகையாலும், அதுக்குக் கீழ்ப்பாட்டிலே, "அதுண்டுமிழ்ந்து" என்று - வடதளசாயியவதாரம் ப்ரஸ்துதமாகையாலும், வடதளசாயியுடைய மௌக்த்யத்திலும் ஶக்தியிலும், சக்ரவர்த்தித்திருமகனுடைய அவதாரத்தின் மெய்ப்பாட்டாலுண்டான மௌக்த்யத்திலும் விஸ்மிதராய் ஈடுபடுகிறார் இப்பாட்டில்.

வ்யா.—(வானகமும் மண்ணகமும்) ஸ்வர்க்கவாஸிகளான இந்த்ராதி தேவர்களும், அவர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தாநமான ஸ்வர்க்கந்தானும், பூமியிலுள்ள மநுஷ்யாதிகளும் அவர்களுக்கு வாஸஸ்தாநமான பூமியும். "உக்ஷோஷ்க்ரோஶந்தி - மஞ்சா꞉க்ரோஶந்தி" என்னுமாபோலே, தேஶவாசிஶப்தத்தாலே - தைஶிகரையும் சொல்லுகிறது; ப்ரளயத்தில் ஆபந்நரானார் தைஶிகராகையாலே. இத்தால்-பூமியிலுள்ளார்க்கு ஆராத்யராய் அவர்களுக்கு அபிமத பலப்ரதருமான இந்த்ராதிகளோடு ஆராதகரான மநுஷ்யாதிகளோடு வாசியற ப்ரளயாபத்தில் வந்தால் எல்லாருமொக்க ஈஶ்வரரக்ஷ்யரென்கிறது. (வெற்பும்) அந்த பூமிக்கு ஆதாரமாயிருந்துள்ள ஸப்தகுலபர்வதங்களும். இத்தால்-ஆதாரமான குலபர்வதங்களோடு ஆதேயமான பூமியோடுவாசியற எல்லாவற்றுக்கும் தத்காலத்திலே ஈஶ்வரனே ஆதாரமென்கை. "வெற்பு" என்று - ஸ்தாவர ஜாதிக்கு உபலக்ஷணம்.

(ஏழ்கடல்களும்) த்வீபங்களுக்குபேதங்களானஸப்தஸமுத்ரங்களும். அத்தாலே-ஜலவாஸிஸத்வங்களையும் சொல்லுகிறது. ஆக

ஆராத்யரான இந்த்ராதிகளோடு, ஆராதகரான மநுஷ்யர்களோடு, தாரகங்களான பர்வதங்களோடு, தார்யையான பூமியோடு ஸமுத்ரங்களோடு, ஜலசரஸத்வங்களோடு வாசியற எல்லாவற்றுக்கும், ஸர்வேச்வரனே ரக்ஷகனென்றதாய்த்து. "போனகஞ்செய்து" என்றது–ரக்ஷகனுக்கு ரக்ஷணதர்மம் பசியர்க்குச் சோறுபோலே அபிமதமாயிருக்குமென்கை. (க) "யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:- யஸ்யப்ரஹ்மச க்ஷத்ரஞ்சோபே பவதஓதநம்" (உ) "சராசரம் க்ருஹணாத் - அந்தாசராசரக்ரஹணாத்". (ஆலிலைத்துயின்ற) அவ்வடிவுக்களவாய் தன்னுடைய ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்த ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின (புண்டரீகனே) புண்டரீகாவயவனே. (௩) "செங்கனிவாய்ச் செங்கமலம்" "கண்பாதங்கைகமலம்" என்கிறபடியே - திவ்யாவயவங்கள் அப்போதலர்ந்த செந்தாமரைகள்போலே யிருக்கையாலே புண்டரீகமுப்தவாச்யனென்கிறது. த்ரைலோக்ய ரக்ஷணத்தால் வந்தப்ரீதி வடிவிலே தோற்றியிருக்கிறபடி.

(தேனகஞ்செய்) உள்ளெல்லாம் வண்டுகளாலே மிடைந்திருக்குமென்னுதல்; மதுவாலே பூர்ணமாயிருக்குமென்னுதல். (தண்ணறுமலர்த்துழாய்) ஸௌரமமாய் பரிமளிதமாய்ச் செவ்வியையுடைத்தான திருத்துழாய், (நன்மாலையாய்) அவயவசோபையிற் காட்டில் ஆகர்ஷகமாயிருக்கும் மாலையென்னுதல். ரக்ஷணத்துக்கிட்ட தனிமாலையாகையாலே விலக்ஷணமென்னுதல், ஆக, ஸந்தாப்ரயுக்தமான ஸௌகுமார்யத்தையும் அவயவசோபையையும், அலங்காரசோபையையும் அநுபவிக்கிறார். (கூன் அகம்புகத்தெறித்த) கூனியுடைய கூன்உள்ளே படும்படியாகச் சுண்டுவில்லைத்தெறித்த. இத்தால்–அவதாரத்தில் மெய்ப்பாட்டால்வந்த மௌக்த்யமும் ரக்ஷகமாயிருக்குமென்கை. ரக்ஷகனானவனாகில் அதிலுள்ளதெல்லாம் ரக்ஷகமாயிறே யிருப்பது.

(கொற்றவில்லியல்லையே) வில்பிடித்தபோது அக்கையையும் வில்லையும் கண்டபோதே ராவணாதிகள் குடல்குழம்பும்படியான

---

அரு.—முப்பதாம்பாட்டு. (தேன்) வண்டாகவுமாம். கூன் நிமிர்த்ததுருபிணியாகையாலே (ரக்ஷகம்) என்கிறது. (௩௰)

---

(க)கட-௧உ-உரு. (உ)ப்ரஹ்மஸூ (௩)தி-வாய்-உ-ரு-க.

மூ.—காலநேமிகாலனே கணக்கிலாத கீர்த்தியாய்
ஞாலமேழுமுண்டு பண்டோர் பாலனாயபண்பனே
வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீரநின்
பாலராயபத்தர்சித்தம் முத்திசெய்யுமூர்த்தியே. (௯க)

---

வீரஸ்ரீயைச் சொல்லுகிறது. கொற்றம் - வெற்றியும், வலியும். "புண்டரீகனே - கொற்றவில்லியல்லையே" என்று - அவதாராந்தரமாயிருக்கச்செய்தேயும் தர்மைக்யத்தாலே பால்யயௌவநாத்யவஸ்த்தா விசேஷங்கள்போலே தோற்றுகிறதாய்த்து இவர்க்கு. இப்பாட்டுத்தொடங்கி, மேல் "மர்யமென்னமாயம்" என்கிறபாட்டளவும் வர அதுவே க்ரியையாகக்கடவது. .... .... (௯௦)

முப்பத்தோராம்பாட்டு (காலநேமியித்யாதி)

| | |
|---|---|
| காலநேமி | தந்நாமகாஸுரனுக்கு |
| காலனே | ம்ருத்யுவாயிருக்குமவனே! |
| கணக்கு | ஸங்க்க்யை |
| இலாத | இல்லாத |
| கீர்த்தியாய் | ஸௌலப்ப்யாதி குணவத்தாப்ரதையையுடையவனே! |
| ஞாலமேழும் | பூப்ரப்ருதி ஸப்தலோகங்களை |
| உண்டு | அமுது செய்து |
| பண்டு | பூர்வகல்பாவஸாநத்திலே |
| ஒருபாலனாய | அத்விதீயஶிஶுவான |
| பண்பனே | பண்பை—ஸ்வபாவத்தையுடையவனே; விசித்ரஶக்தியையுடையவனென்றபடி. |
| வேலை | ஸமுத்ரஜலம் |
| வேவ | தக்த(ஞ)மாம்படி |
| வில் | தநுஸ்ஸை |
| வளைத்த | மண்டலீகரித்த |
| வெல் | ப்ரதிபக்ஷஜயியான |
| சினத்த | க்ரோதத்தையுடைய |
| வீர | நிருபாதிக வீரனானவனே! |
| நின் | உன்னுடைய |
| பாலராய | ப்ரதேஶவர்த்திகளான; உன் பார்ஶ்வவர்த்திகளானவென்றபடி. |

| | |
|---|---|
| பத்தர் | பக்தர்களுடைய |
| சித்தர் | மநஸ்ஸினுடைய |
| முத்தி | ப்ராப்யப்ராபகாந்தர விதிர் போகத்தை |
| செய்யும் | செய்கிற |
| மூர்த்தியே | ப்ரபாவத்தையுடையவனே ! “[illegible] - மூர்ச்சா - மோஹஸமுச்ச்ராயயோ:” என்கிறதா (யா) துவிலே மூர்த்திஶப்தமாய் ஸமுச்ச்ரா வாசியாய், ப்ரபாவத்தைக்காட்டுகிறது. “உன்மாயமென்ன மாயமே” என்று குளகம். (௯க) |

அவ.—முப்பததோராம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - அவதாரங்களிலுண்டான ரக்ஷகத்வத்தை யநுபவித்தார்; இதில் - ஆஶ்ரயணோந்முகரானவர்கள் திறத்தில் அவதாரகார்யமான உபகாரபரம்பரைகளை அநுபவிக்கிறார்.

வ்யா.—( காலநேமிகாலனே ) காலநேமியாகிற அஸுரனுக்கும் ம்ருத்யுவானவனே. இத்தால், முமுக்ஷுக்களாய் தேவரீரை ஆஶ்ரயிக்கையிலே உத்யுக்தரானவர்களுடைய ஆஶ்ரயண விரோதி பாபங்களை, காலநேமியை நஶிப்பித்தாப்போலே நஶிப்பிக்குமவனென்கை. பிராட்டி பொறுப்பிக்க ஈஶ்வரன் பொறுக்குமாயிருக்கச்செய்தேயும், தாம் அதுக்கு அஞ்சினபடியாலே காலநேமியை த்ருஷ்டாந்தீகரிக்கிறாரிறே. (கணக்கிலாத கீர்த்தியாய்) ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமாய், எண்ணிறந்த ஸௌலப்யாதி கல்யாண குணங்களையுடையையென்னும் குணவத்தாப்ரதையை யுடையவனே. (க) “குடந்தையன் கோவலன் குடியடியார்” என்று இந்த ஸௌலப்யாதிகள் பரத்வத்திலும் ப்ரஸித்தமிறே. * அபாரகாருண்யந்தொடங்கி, “ ஸௌந்தர்யமஹோததே ” என்னக்கடவதிறே.

(ஞாலமேழுமுண்டு பண்டோர் பாலனாயபண்பனே) ஆஶ்ரயித்தால் பண்ணுமுபகாரத்தைச் சொல்லுகிறது. ஸப்தத்வீபவதியான பூமியையுண்டு பூர்வகல்பாவஸாநத்திலே அத்விதீயபாலனான ஆஶ்

(க) தி-வாய்-௧௦-௬-எ.

மூ;—குரக்கினப்படைகொடு குரைகடலின்மீதுபோய்
அரக்கரங்கரங்கவெஞ் சரந்துரந்தவாதி நீ
இரக்கமண்கொடுத்தவற் கிரக்கமொன்றுமின்றியே
பரக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனல்லையே. (௩௨)

---

சர்யாக்தியை நிரூபகமாக வுடையவனே. பண்பு—இயல்வு. த்ரைலோக்யத்துக்கு முபலக்ஷணம். இத்தால், ஸ்வாதந்த்ர்யமே நிரூபகமாய்ப்போந்த ஸம்ஸாரிவைய ஶேஷத்வமே நிரூபகமென்னும்படி பண்ணவல்ல ஶக்தியை யுடையனென்கை. அதாகிறது (க) "ஸி்யா ஹிஜ்யபர்வேவம் நநமேயழ - த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயம்" என்றிருக்குமவன் (௨) "ஜீவஹீநதஸ்விஜீவாவ: - முஹூர்த்தமபிஜீவாவ:" என்றும், (௩) "நின்னலாவிலேன்காண்" என்றும் சொல்லும்படி பண்ணுகை.

(வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர) கடல்ஶோஷகத்ருணஸமூஹம்போலேதக்த்தமாம்படி வில்வளைத்தவனாய், ப்ரதிபக்ஷத்தைத வெல்லுஞ் சினத்தையுடைய வீரனே. இத்தால், ஆஶ்ரிதர்க்கு ஸ்வாநுபவ விரோதி வர்க்கத்தைத அநாயாஸேந போக்குமவனென்கை. (நின்பாலராயபத்தர் சிந்த முத்திசெய்யும் மூர்த்தியே) உன்திறத்தில் அநந்யப்ரயோஜநராய், (௪) "மாயாவாஸஶ்ச நநமஹ்யத- சாயாவாஸத்வ மநுகச்சேத்" என்கிறபடியே உன்பார்ஶ்வத்தை விடமாட்டாத பக்தர்களுடைய மநஸ்ஸை உன்னையொழிய வேறு ப்ராப்யப்ராபகங்களுண்டென்னும் நசையறுக்கவல்ல மஹாப்ரபாவத்தையுடையவனே. இதென்ன வாஶ்சர்யமென்று வாக்யஶேஷம். ஆஶ்ரிதவிஷயத்தில் கீழ் உக்தமான படிகளை யநுஸந்தித்தால், அது உன்னையொழிய வேறொன்றையறியாதபடி பண்ணுமவனென்கை. .... ... .... ... (௩௧)

முப்பத்திரண்டாம்பாட்டு. (குரக்கினமித்யாதி)

| | |
|---|---|
| குரக்கு | வாநரங்களுடைய |
| இனம் | ஸமூஹமான |
| படை | ஸேநையை |
| கொடு | கொண்டு |
| குரை | கோஷத்தையுடைய |

---

(க)ரா-யு-௩௯-௧௧. (௨)ரா-ஆ-௫௩-௩௧. (௩)திருவாய்-௨-௩-எ. (௪)பரமஸம்.

| | |
|---|---|
| கடலின் | ஸாகரத்தினுடைய |
| மீது | மேலே |
| போய் | திருவணையிட்டுப்போய் |
| அரக்கர் | ராவணாதிராக்ஷஸர்கள் |
| அங்கு | அங்கே |
| அரங்க | பயப்படும்படி, "அரங்க" என்கிற மெல்லொற்றை வல்லொற்றாக்கி "அரக்க" என்றாய், ஒளியும்படியென்றர்த்தமாகக் கடவது. |
| வெம் | பாவகஸங்காஶமான |
| சரம் | திருச்சரங்களை |
| துரந்த | நடத்தின |
| ஆதி | வீரர்களிலே ப்ரதாநபூதன் |
| நீ | தேவர்; |
| இரக்க | (நீ) அர்த்தியாய்ச்செல்ல |
| மண் | பூமியை |
| கொடுத்தவற்கு | கொடுத்த மஹாபலிக்கு |
| இரக்கம் | ரக்ஷகம் |
| ஒன்றுமின்றியே | ஒருபதந்யாஸமும் ஶேஷியாதபடி யென்றபடி. |
| பரக்க | அதிவிபுலமாக |
| வைத்து | விந்யஸித்து |
| அளந்துகொண்ட | அளந்துகொண்ட |
| பற்ப | பத்மம்போலேயிருக்கிற |
| பாதன் | திருவடிகளையுடையவன் |
| அல்லையே | அன்றோ ? |
| மாயமென்னமாயமே | இதென்னவாஶ்சர்யம்; என்று க்ரியை. |

(௩௨)

அவ.—முப்பத்திரண்டாம்பாட்டு. ஆஶ்ரிதவிரோதி நிரஸநம் பண்ணுமிடத்தில் சக்ரவர்த்தித்திருமகன் செவ்வைப்பூசலாலே ராக்ஷஸரையழியச் செய்தாப்போலே விரோதிவர்க்கத்தைப்போக்கவு,

மாம், மஹாபலிபக்கலிலே வாமநனாய் அர்த்தித்துச்சென்று வந்திக்கறித்தாப்போலே யழிக்கவுமாம், ஆஸ்ரிதவிரோதி நிரஸநத்தில் ஸ்வ ரவஸியதியில்லை யென்கிறார்.

வ்யா;—(குரக்கினப்படைகொடு) வாநர ஸமூஹமான ஸேநையைக்கொண்டு. (குரைகடலின் மீதுபோய்) கடலின் கிளர்த்தியையும் கோஷத்தையுங் கண்டு, "இக்கடலை எங்ஙனே கடக்கக்கடவோம்" என்று அந்தஸேநை பயப்படும்படி கோஷத்தையுடைத்தான கடலைததூர்த்து அதின் மேலேபோய். இத்தால், ப்ரபலபதார்த்தங்களை க்ஷுத்ரபதார்த்தங்களைக் கொண்டு அழிக்கவல்லவனென்கை. (அரக்கரங்கரங்க) அவ்வபதாநத்தைக்கண்டு, "வரபலபுஜபலங்களால் நமக்கெதிரில்லை" என்றிருக்கும் ராக்ஷஸர், போக்கடிதேடி அஞ்சும்படியாக. அரக்கல் - கரத்தல். "அரங்க" என்று மெல்லொற்றாய்க்கிடக்கிறது. (வெஞ்சரந்துரந்த) (க)"பாவகஸஙாஶை: - பாவகஸங்காஶை:"என்கிறபடியே அக்நிஸத்ருஶங்களான திருச்சரங்களை நடத்தின.(ஆதிநீ)லங்கைக்கு அரணானஸமுத்ரத்தைத்தூர்த்து, அரணையழித்து, ராக்ஷஸருடைய ஹ்ருதயங்களையழித்து, திருச்சரங்களாலே உடல்களைத்துணித்தும் செய்த ஆனைத்தொழில்களாலே வீரர்களில் ப்ராதாநனான வீரன் நீயென்கிறார். ஆதிசப்தம்-ப்ராதாந்யத்தைச்சொல்லுகிறது.

(இரக்க மண்கொடுத்தவற்கு) நீ அர்த்தியாய்ச்செல்ல ப்ரத்யாக்யாநம் பண்ணுதல், சுக்ரனுடைய உபதேசங் கேட்டல் செய்யாதே, பூமியைத்தந்த மஹாபலிக்கு. (இரக்கமொன்று மின்றியே) பூமியில் அவனுக்கு ஒரு பதந்யாஸமும் சேஷியாதபடி. (பரக்கவைத்தளந்துகொண்ட) சிறுகாலைக்காட்டி மூன்றடி யிரந்து இரண்டடியாலே பூமிபரப்படைய அளந்துகொண்ட. (பற்பபாதனல்லையே) புஷ்பஹாஸ ஸுகுமாரமான திருவடிகளைக் கொண்டு காடு மோடையுமளந்து கொண்டவனல்லையோ. திருவடிகளின் ஸௌகுமார்யமும் பார்த்திலை, மஹாபலிபக்கல் ஔதார்யமும்பார்த்திலை, அர்த்திக்கிறவன் ப்ரயோஜநாந்தர பரனென்றும் பார்த்திலை, இந்த இந்த்ரனுடைய இரப்பையேபார்த்த சித்தனையிறே. இதென்ன ஆஶ்சர்யமென்று வாக்யசேஷம். (௨௨)

அரு.--முப்பத்திரண்டாம்பாட்டு. (ப்ரத்யாக்யாநம்) இல்லை யென்கை. (ஔதார்யமும்) கொடுத்தவனென்றே வென்று பாராமை. (௩௨)

(க) ரா-யு-கூ-௨௨.

மூ;—மின்னிறத்தெயிற்றரக்கன் வீழவெஞ்சரந்துரந்து
பின்னவற்கருள்புரிந் தரசளித்த பெற்றியோய்
நன்னிறத்தோரின்சொலேழை பின்னைகேள்வ மன்னுசீர்ப்
பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே. (௩௩)

---

முப்பத்து மூன்றும்பாட்டு (மின்னித்யாதி)

| | |
|---|---|
| மின் | மின்னல்போலே |
| நிறத்து | ஒளியையுடைய |
| எயிற்று | தம்ஷ்ட்ரைகளையுடைய |
| அரக்கன் | ராவணனை |
| வீழ | முடியும்படி |
| வெம் | பாவகஸங்காஶமான |
| சரம் | திருச்சரத்தை |
| துரந்து | எவி, |
| பின்னவற்கு | அந்தராவணனுக்கு அநுஜனான விபீஷணாழ்வானுக்கு |
| அருள்புரிந்து | ப்ரஸாதத்தைப்பண்ணி |
| அரசு | ராஜ்யத்தை |
| அளித்த | கொடுத்த |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே ! |
| நல் | நன்றாயிருக்கிற |
| நிறத்து | லாவண்யத்தையுடையளாய் |
| ஓர் | அத்விதீயையாய் |
| இன் | மதுரமான |
| சொல் | சொல்லையுடையளாய் |
| ஏழை | தேவர் பக்கல் அதிசபலையுமான |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டிக்கு |
| கேள்வ | வல்லபனானவனே! |
| மன்னு | நித்யமான |
| சீர் | ஔதார்யாதிகுணங்களையுடைய |
| பொன் | பொன் போலே ஸ்ப்ருஹணீயமான |
| நிறத்த | அவயவ ஶோபை யென்ன, |
| வண்ணனாய | வர்ண ஶோபை யென்ன, இவற்றையுடைய |

புண்டரீகன் புண்டரீகாக்ஷன்
அல்லேயே அன்றோ?.
இதென்னவாஸ்சர்யமென்றுக்ரியை. (௩௩)

அவ;—முப்பத்து மூன்றும்பாட்டு. ஆஸ்ரிதரக்ஷணத்தில் ஸ்வபாவநியதியில்லாதவோபாதி ஆஸ்ரயிப்பார்க்கும் ஜாதிநியதியில்லையென்கிறார்.

வ்யா;—(மின்னிறத்தெயிற்றரக்கன்) மின்போலே ஒளியையுடைத்தான எயிற்றோடே கூடின ராக்ஷஸனான ராவணன். "மின்னிறத்தெயிறு" என்று - புஜபலத்தால்வந்த செருக்குக்கு ஸூசகமாயிருக்கிறது. "அரக்கன்" என்கையாலே, அத்தோள் வலி பரஹிம்ஸைக்கேயாக ஜாதிஸ்வபாவமாயிருக்கை. ஸத்ப்ரக்ருதிகளுடைய தோள்வலியிறே ஸாத்விகர்க்கு ஒதுங்க நிழலாயிருப்பது. (வீழவெஞ்சரம் துரந்து) அவன்முடியும்படியாக * பாவகஸங்காஸங்களான சரங்களையேவி. (பின்னவற்கருள்புரிந் தரசளித்தபெற்றியோய்) அவன் தம்பிக்கு ப்ரஸாதத்தைப்பண்ணி ராஜ்யத்தைக் கொடுத்த சீலவத்தையையுடையவனே! (க) "ராகவம் ஶரணம் கத: - ராகவம் ஶரணங்கத:" என்ற அத்தையேகொண்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை அவன் தம்பி யென்றுபாராதே, (உ) "வத்⁴யதாம் வத்⁴யதாம் - வத்யதாம் வத்யதாம்" என்றமஹாராஜ ப்ரப்ருதிகள் வார்த்தையையுங்கேளாதே, (௩) "ந த்யஜேயம் - நத்யஜேயம்" (ச) "ஏதத்³வ்ரதம் மம - ஏதத்வ்ரதம்மம" என்று - ப்ரஸாதத்தைப் பண்ணி, ராஜ்யஸ்ப்ருஹை அவனுக்கின்றிக்கே யிருக்க, (ரு) "தா³ஸவச்சாவமாநித: - தாஸவச்சாவமாநித:" என்று - புறப்பட விட்டானென்று அந்த லங்காராஜ்யத்தைக் கொடுப்பதே!, இதென்ன ஸ்வபாவ மென்கிறார். பெற்றி—ஸ்வபாவம்.

(நன்னிறத்தோரின்சொ லேழை பின்னைகேள்வ) நல்ல நிறத்தையும், இனியபேச்சையு முடையளாய், தேவரீர்பக்கல் அதிசபலையான நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனே. இத்தால் - நப்பின்னைப்பிராட்டியுடையரூபகுணங்களும் ஆத்மகுணங்களும் தேவரீர்க்குபோக்யமா யிருக்குமாபோலே, ஸ்ரீவிபீஷணாழ்வான் தேவரீர்

(க) ரா-யு-கஎ-௩உ. (உ) ரா-யு-கஎ-உக. (௩) ரா-யு கஅ-௩.
(ச) ரா-யு-கஅ-௩௩. (ரு) ரா-யு-கஎ-கரு.

மூ.—ஆதியாதியாதிநீ யோரண்டமாதியாதலால்
சோதியாதசோதிநீ யதுண்மையில் விளங்கினாய்
வேதமாகிவேள்வியாகி விண்ணினோடு மண்ணுமாய்
ஆதியாகியாயனாய மாயமென்னமாயமே. (௩௪)

---

க்குபோக்யனாயிருக்கும்படியைச்சொல்லுகிறது. (மன்னுசீர்ப்பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே) நித்யமான ஔதார்யாதி குணங்களையும், (க) "ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே - அந்தராதித்யே ஹிரண்மயஃ புருஷோத்ருஶ்யதே" என்றும (உ) 'ருக்மாபம் - ருக்மாபம்' என்றும்சொல்லுகிறப்ருஹ்ணீயவிக்ரஹத்தையுமுடையயாய், (க) "யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ - யதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிறபடியே புண்டரீகாக்ஷனாயிருக்கிறவனல்லையோ; இதென்ன ஆஶ்சர்யமென்று வாக்யசேஷம். நிறம் - வடிவு. வண்ணம் - நிறம். ஆக, அவயவ சோபையையும் வர்ணசோபையையும் சொல்லுகிறது.

இத்தால்—ஆதித்யமண்டல மத்யாவதாரத்தின் ஆத்மகுணங்களும் ரூப குணங்களும் மஹிஷீவர்க்கத்துக்கு போக்யமாயிருக்குமாபோலே, ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு போக்யபூதனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. .... .... .... (௩௩)

முப்பத்து நாலாம்பாட்டு. (ஆதியாதி)

| | |
|---|---|
| ஆதியாதியாதி | த்ரிவிதகாரணமும் |
| நீ | தேவர். (காரணபரமான ஆதிஶப்தத்ரயத்தாலே காரணத்ரயத்தைச்சொல்லுகிறது. |
| ஓர் | ஏகரூபமான |
| அண்டம் | அண்டஜாதமாய், (ஜாத்யேகவசநம்) |
| ஆதி | (ததநந்தரம் ததந்தர்வர்த்தி ப்ரஹ்மாதி பிபீலிகாந்தங்களான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்து) ததந்தர்யாமியாயிருக்குமவனும் |
| நீ | தேவர்; |

---

(க) சாந்தோ-க-௬-௭. (உ) மநு ௧௨-௧௨௨.

| | |
|---|---|
| ஆதலால் | இப்படி ஸகலகாரண பூதனாகையாலே |
| சோதியாத | பரீக்ஷிக்கவேண்டாத |
| சோதி நீ | உபாஸ்யதேஜஸ்தத்வம்நீ; |
| அது | அந்த தேஜஸ்தத்வம் |
| உண்மையில் | ஸத்யத்வத்தாலே; நித்யநிர்த்தோஷப்ரமாணஸித்தமாகையாலேயென்றபடி; |
| விளங்கினாய் | இதரவிஜாதீயனாய்க்கொண்டு ப்ரகாஶியா நிற்கிறவனே! |
| வேதமாகி | வேதநிர்வாஹகனாய், |
| வேள்வியாகி | அந்தவேதார்த்த யாகாராத்யனாய், |
| விண்ணினோடு | பரமபதத்தோடே கூடின |
| மண்ணுமாய் | லீலாவிபூதிக்கு நிர்வாஹகனாய், |

“மண்” என்றது—எல்லாத்துக்கும் உபலக்ஷணம்.

| | |
|---|---|
| ஆதியாகி | ஆஶ்ரயணருசிக்கு நிர்வாஹகனாய், |
| ஆயனாய | கோ(மா)பஸஜாதீயனாயவதரித்த |
| மாயம் | ஆஶ்சர்யம் |
| என்னமாயம் | என்னவாஶ்சர்யம். |

(௩௪)

அவ.—முப்பத்துநான்காம்பாட்டு. கீழ்ப்பாட்டில்-ருசியுடைய விபீஷணாழ்வானை ஜந்மத்தால் தாழ்வுபாராதே விஷயீகரிக்கும் சக்ரவர்த்தித் திருமகனுடைய நீர்மையை யநுபவித்தார்; இதில் கார்ய காரணங்களென்ன, ப்ரமாண ப்ரமேயங்களென்ன, ஸகலமும்ஸ்வாதீநமாம்படி யிருக்கிற நீ புருஷார்த்தருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு கோபஸஜாதீயனாய் வந்தவதரித்த விது என்ன ஆஶ்சர்யமென்கிறார்.

வ்யா.—(ஆதியாதியாதிநீ) (௧) “ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம்-ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம்” என்கிறபடியே த்ரிவிதகாரணமும் நீ. எதுக்குக் காரணமாகிறதென்னில்; மஹதாதி விஶேஷாந்தமான ப்ராக்ருத ஸ்ருஷ்டிக்கு (௨) ‘பஹுஸ்யாம்-பஹுஸ்யாம்’’ என்கிற ஸங்கல்பத்தாலே காரணபூதன். (ஓரண்டமாதி) மஹதாத்யவஸ்தனான நீயே ஏகரூபமான அண்டஜாதியுமாவுதி. (௩) ‘ஹிரண்யகர்ப்பாதயா-

(௧) சாந்தோ-௬-௨-௧. (௨) சாந்தோ-௬-௨-௩. (௩) வி-பு-௨ ௭-௨௮.

ஸத்ருஶாநாந்தா'' என்கிறபடியே அண்டங்கள் ஏகரூபமாயிறேயிருப்பது. ஏகவசநம்-ஜாத்யபிப்ராயத்தாலே. அதாகிறது-அண்டத்தில் உத்பந்நமான ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்து ததநுப்ரவேசத்தாலே ஸகலாந்தர்யாமியாய் நிற்கை.

(ஆதலால் சோதியாத சோதிநீ) இப்படி ஸகலஜகத்காரணபூதனாகையாலே பரீக்ஷிக்கவேண்டாத உபாஸ்யதேஜஸ்தத்வம் நீ. உபாஸ்யமான தேஜஸ்தத்வம்-த்ரிவிதமஹாபூதமோ, தேவதையோ, ஆதித்யனோ, வைச்வாநராக்நியோவென்று சங்கித்து, ஸர்வநிர்வாஹகமான தேஜஸ்தத்வமே உபாஸ்யமென்று நிர்ணயிக்க வேண்டாதிருக்கை. (க) ‘‘அத யதத: பரோ திவோ ஜ்யோதி:-அதயதத:பரோ திவோஜ்யோதி:’’ (௨) ‘‘தமேவ ஜ்யோதிஷாம் ஜ்யோதி: - தமேவஜ்யோதிஷாஞ்ஜ்யோதி:’’ (௩) ‘‘நாராயண பரோ ஜ்யோதி: - நாராயணபரோஜ்யோதி:’’ என்கிற தத்வமல்லையோ நீ. (அதுண்மையில் விளங்கினாய்) அந்த தேஜஸ்தத்வம் நித்யநிர்தோஷ ப்ரமாணஸித்தமாகையாலே, இதரவிஸஜாதீயனாய்க்கொண்டு விளங்கினவனே.

(வேதமாகி) வேதத்தினுடைய நித்ய நிர்தோஷத்வத்துக்கு நிர்வாஹகனாய். அதாவது - ஸம்ஹாரவேளையில் திருவுள்ளத்திலே ஸம்ஸ்காரரக்காலே வைத்து, (௪) ‘‘யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் - யோவைவேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை’’ என்கிறபடியே ஆதியிலே வேதத்துக்கு அத்யாபகனாகை. (வேள்வியாகி) ததர்த்யமான யாகத்துக்கு நிர்வாஹகனானவனே. அதாவது-ஆராத்யனாகை. (விண்ணினோடு மண்ணுமாய்) ஆராதநபலமான போகமோக்ஷ பூமிகளுக்கு நிர்வாஹகனாய். ‘‘விண்’’ என்று-பரமபதம். ‘‘மண்’’ என்று-சதுர்த்தசபுவநத்துக்கு உபலக்ஷணம். யாகம் அந்யோந்யவிருத்தங்களான போகமோக்ஷங்களிரண்டுக்கும் ஸாதநமாமோவென்னில், ஜீவபரயாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமான யாகம் மோக்ஷத்துக்கும், கேவலயாகம் போகத்துக்கும் ஸாதநமாகையாலே அவிருத்தம். (ஆதியாகி) இதெல்லாம் ருசியுடையவனுக்கிறே; அந்த ருசிஜநகனாய்க்கொண்டு. (ஆயனாயமாயமே) அதீந்த்ரியமான திவ்ய விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு வந்தவதரித்த விது என்ன ஆச்சர்யம். (௩௪)

---

அரு.—முப்பத்துநாலாம்பாட்டு. (த்ரிவிதமஹாபூதம்) ஆகாசமும், அக்நியும், வாயுவும். (௩௪)

---

(க) சாந்தோ-௩-௧௩-௭. (௨) (௩) தை-நா-௧௧. (௪) ஶ்வே-௬-௧௮.

மூ.—அம்புலாவுமீனுமாகி யாமையாகியாழியார்
தம்பிரானுமாகிமிக்க தன்புமிக்க தன்றியும்
கொம்பராவுநுண்மருங்கு லாயர்மாதர் பிள்ளையாய்
எம்பிரானுமாயவண்ணமென்கொலோ வெம்மீசனே. ருடு)

---

(முப்பத்தஞ்சாம்பாட்டு (அம்புலாவித்யாதி)

"ஆழியார் தம்பிரானுமாகிஅம்புலாவுமீனுமாகி ஆமையாகி மிக்கது" என்றந்வயித்து,

| | |
|---|---|
| ஆழியார் | ஸர்வேஸ்வரத்வ ஸூசகமான திருவாழியாழ்வானையுடைய |
| தம்பிரானுமாகி | ஸர்வேஸ்வரனாய்வைத்து, |
| அம்பு | ஜலத்திலே, "அப்பு" என்கிறவிது-மெல்லொத்தாய்க் கிடக்கிறது, |
| உலாவு | ஸஞ்சரியாநின்றுள்ள |
| மீனுமாகி | மத்ஸ்ய ஸஜாதீயனாயவதரித்து, |
| ஆமையாகி | கூர்ம ஸஜாதீயனாயவதரித்த |
| மிக்கது | க்ஷுத்ரயோநியென்றுபாராதே அதுவே அதிஶயித்தது |
| அன்புமிக்கு | ஆபந்நர்பக்கல் ஸங்கம் அதிஶயவத்தாயிருக்கிறது; |
| அதன்றியும் | அவ்வளவன்றியே |
| கொம்பு | கொம்புபோலேயும் |
| அராவு | ஸர்ப்பம்போலேயும் |
| நுண் | க்ருஶமான |
| மருங்குல் | இடையையுடைய பிராட்டிக்கு |
| ஆயர்மாதர் | கோ (மா)பாங்கனையான யசோதைப் |
| பிள்ளையாய் | புத்ரனாய், (கட்டவும் அடிக்கவுமாம்படி நியாம்யனாயென்றபடி). |
| எம்பிரானுமாயவண்ணம் | அந்த ஸௌலப்ப்யாதிஶயத்தாலே எங்களை அநந்யார்ஹமாக்கிக்கொண்ட மஹோபகாரனான ப்ரகாரம் |
| என்கொல் | என்செய்தபடி; |
| எம்மீசனே | எங்களுக்கு நிருபாதிக ஸ்வாமியானவனே! |

பஹுவசநம்மற்றை ஆழ்வார்களைக்காட்டுகிறது. (ருடு)

அவ.—முப்பட்டத்தைந்தாம்பாட்டு. அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி, ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க் கொண்டு அவதரித்த ஏற்றத்தை யநுபவித்தார் - கீழிற்பாட்டில்; இதில் - ஒரு கோபஸ்த்ரீக்குக் கட்டவும் அடிக்கவும் விடவுமாம்படி நியாம்யனான குணதிக்யத்தை யநுஸந்தித்து, திரியவும் க்ருஷ்ணாவதாரத்திலே ஈடுபடுகிறார்.

வ்யா.—"ஆழியார் தம்பிரானுமாகி - அம்புலாவுமீனுமாகியாமையாகி-மிக்கது" என்றந்வயமாகக் கடவது. (க) "தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:" என்கிறபடியே ஸர்வேஸ்வரத்வஸூசகமான திருவாழியையுடைய ஸர்வாதிகனுமாய் வைத்து. (அம்புலாவுமீனுமாகி) அம்பிலே வர்த்திக்கிற மத்ஸ்யமாய். அப்பை, "அம்பு" என்று மெலித்துக் கிடக்கிறது. (உ)"முதுகில் மலைகளை மீதுகொண்டு வருமீனை" என்கிறபடியே ப்ரளயார்ணவத்திலே நோவுபட்ட தேவர்களுடைய ஆபத்தைப் போக்குகைக்காகத் தன்னிலமான நீரிலே ஸஞ்சரிக்கக் கடவதான மத்ஸ்யமுமாய். ச(வ)ஸப்தத்தாலே-தேவயோநி மநுஷ்யயோநிகளில் பண்ணின அவதாரங்களால் பர்யவஸியாத அநுக்ரஹாதிஸயத்தைச்சொல்லுகிறது. (ஆமையாகி)அம்ருதமதநவேளையில் மந்தரதாரணார்த்தமாகக் கூர்மமாய். (௩) "கூர்மம் ... ஸர்வந்தம் - கூர்மபூதம் ஸர்வந்தம்" என்கிறபடியே ப்ரளயவேளையில் கூர்ம விக்ரஹத்தைச் சொல்லிற்றாகவுமாம். (மிக்கது) க்ஷுத்ரயோநியென்றும் பாபயோநியென்றும் பாராதே கைகழிய அவதரித்தது. (அன்புமிக்கு) ஆபந்நராய்,அவதாரங்களுக்கு நிமித்தபூதரான சேதநர்பக்கலுண்டான ஸங்காதிஸயத்தாலே அவதரித்தவித்தனையிறே. ஒரு கர்மம் ப்ரேரிக்கவாதல், ஒருகர்த்தா ப்ரேரிக்கவாதலன்றிறே; (ச) "மீனோடேனமுந் தானானானென்னில் தானாய சங்கு" என்னக்கடவதிறே. (அன்றியும்) அதுக்குமேலே "ஸ்ரீ போக்யமான வடிவை ஜலசரஸத்வஸஜாதீயமாக்குவதே!" என்று அதிலே யீடுபட்டாய்த்து இவர்தாமிருப்பது.

அதிற்காட்டிலும் க்ருஷ்ணாவதாரத்தில் குணாதிக்யம் தம்மையீடுபடுத்தினபடியைச் சொல்லுகிறார்மேல்; (கொம்பராவுநுண் மரு

(க) ரா-யு-ககச-கரு, (உ) தி-மொ-கக-ச-க. (௩)(ச) தி-வாய்-க-அ-அ.

மூ.—ஆடகத்தபூண்முலை யசோதையாய்ச்சி பிள்ளையாய்ச்
சாடுதைத்தோர்புள்ள தாவி கள்ளதாயபேய்மகள்
வீடவைத்தவெய்யகொங்கை யையபாலமுதுசெய்து
ஆடகக்கைமாதர்வா யமுதமுண்டதென்கொலோ. (௩௬)

---

ங்குலாயர் மாதர்பிள்ளையாய்) கொம்புபோலேயும் அரவுபோலே யும் நுண்ணிய இடையையுடைய அசோதைப்பிராட்டிக்குப் பிள்ளை யாய். மத்ஸ்யாத்யவதாரங்களில் ரக்ஷணத்திலே தன்ஸ்வாதந்த்ர்யங் கள் குலைந்ததில்லை; இதில் ஒரு கோபஸ்த்ரீக்குக் கட்டவும் அடிக் கவுமாம்படி நியாம்யனாய் வந்தவதரித்த சௌசீல்யமுண்டிறே. (௧) “[illegible] - ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம்” என்கிற ஸ்வரூபமும் அழிந்ததிறே இதில். அவதாரங்களில் ஸ்வரூபத்தையு மழியமாறின வித்தனையிறே. (எம்பிரானுமாபவண்ண மென்கொ லோ) அவர்களுக்குக் கட்டவு மடிக்கவுமாம்படியான நீர்மையைக் காட்டி எங்களை அநந்யார்ஹமாக்கிக் கொண்டதென்செய்தபடி! பஹுவசநத்தாலே - மற்ற ஆழ்வார்களையும் கூட்டிக்கொள்ளு கிறார். (எம் ஈசனே) அறிந்தோம் - எங்களுடைய இழவுபேறு கள் உன்னதென்னும்படியான ஸம்பந்தத்தாலே. (௩௫)

முப்பத்தாறும்பாட்டு (ஆடகத்தித்யாதி)

| | |
|---|---|
| ஆடகத்த | ஹாடகமயமான |
| பூண் | ஹாரத்தையுடைய |
| முலை | ஸ்தநத்தையுடைய |
| அசோதையாய்ச்சிபிள்ளையாய் | யசோதையாகிற கோபஸ்த்ரீயினுடைய பிள்ளையாய், |
| சாடு | ஶகடாஸுரனை |
| உதைத்து | திருவடிகளாலே நிரஸித்து |
| ஓர்புள்ளது | பாலாரிஷ்டஜநகத்திலே அத்விதீயமான தோஷபக்ஷி விசேஷத்தினுடைய |
| ஆவி | கருத்தையுடையவளாய் |
| கள்ளதாய | க்ருத்ரிம மாதாவான |
| பேய்மகள் | பேய்ப்பெண், |

---

(௧) ஸ்ரீகுணரத்நகோ-௨௮.

| | |
|---|---|
| வீட | ஜகஜ்ஜீவநமான உன்விஷயத்திலே தீங்கு செய்வாளாக |
| வைத்த | திருப்பவளத்திலே வைத்த |
| வெய்ய | க்ரூரமான |
| கொங்கை | ஸ்தநத்திலே |
| ஐய | ஸூக்ஷ்மமான |
| பால் | பாலை |
| (அன்றிக்கே) | "ஐய" என்றுஸம்புத்தியாகவுமாம்.) |
| அமுதுசெய்து | அமுதுசெய்தருளி |
| ஆடக | ஹாடகபூஷிதமான |
| கை | கைகளையுடைய |
| மாதர் | கோபிகைகளுடைய |
| வாயமுதம் | வாகம்ருதத்தை |
| உண்டது | அமுதுசெய்த விது |
| என்கொல் | என்னவாஸ்சர்யம். (௩௬) |

அ,— முப்பத்தாறும்பாட்டு. கீழ்ச்சொன்ன பாரதந்த்ர்யத்தை அநுபாஷித்துக்கொண்டு அவ்வவதாரங்களின் ஆஸ்சர்ய சேஷ்டிதங்களிலே யீடுபடுகிறார்.

வ்யா.—(ஆடகத்தபூண்முலை யசோதையாய்ச்சி பிள்ளையாய்) "கொம்பராவுநுண்மருங்கு லாயர் மாதர்பிள்ளையாய்" என்றது தன்னையே முகபேதத்தாலே அநுபவிக்கிறார் (ஆடகத்தபூண்முலை) பொன்னாலே செய்த ஹாரத்தாலே அலங்க்ருதமான முலையையுடையவள். "க்ருஷ்ணன் அமுதுசெய்யக்கடவன்" என்று முலையை ஒப்பித்துக்கொண்டு நிற்கிறாளாய்த்து - அவள்; அந்த ப்ரேமத்தை அநுபவிக்கிறாரிறே இவர். "ஆயர்மாதர் பிள்ளையாய்" என்ற ஸாமாந்யத்தை, "அசோதையாய்ச்சி பிள்ளையாய்" என்று விசேஷிக்கிறார். ஸர்வநியந்தாவானவன், ஓரிடைச்சி "என்மகன்" என்று நியமிக்கலாம்படியிருக்கிற இவ்வாஸ்சர்யத்தில் நின்றும்கால்வாங்க மாட்டுகிறிலர். (சாடுதைத்து) ஸ்தந்யார்த்தியாய்த் திருவடிகளை நிமிர்த்து சகடாஸுரனை நிரஸித்து. (௧) "யந்மூர்த்நி [illegible]

அரு.—முப்பத்தாறும்பாட்டு. "ஆடகம்" என்றது-ஹாடகமாய், அத்தால் பொன்னைச் சொல்லுகிறது.

(௧) ஸ்தோத்ரரத்நம்-௩௦.

ஹ்ஜ்ஜ்-தநம்மதீயம் தவபாதபங்கஜம்'' என்றும், (௧) "கோலமாமென்சென்னிக்கு" என்றும்-அநந்யப்ரயோஜநர்க்குப்ராப்யமான திருவடிகளை துஷ்ப்ரக்ருதிகளுக்கு வத(ய)ஸாதநமாக்குவதேயென்கை.

(ஓர்புள்ளதாவி கள்ளதாய பேய்மகள்) பிள்ளைகள் அனுங்க ஸஞ்சரிக்கும் புள்ளின் கருத்தையுடையளாய், அபூர்வையென்று ஶங்கித்து விலங்கவொண்ணாதபடிக்ருத்ரிமஜநநியான பேய்ப்பெண். "ஓர்புள்'' என்று தப்பவொண்ணாதபடி அனுங்கப்பண்ணும் புள்ளென்றபடி. (வீடவைத்தவெய்யகொங்கை) ஜகஜ்ஜீவநமான உன்திறத்திலே தீங்கை விளைப்பாளாகத் திருப்பவளத்திலேவைத்த க்ரூரமான முலையில். (ஐயபால் அமுதுசெய்து) ஸூக்ஷ்மமான ப்ராணனைப்புக்கு க்ரஹிக்கவல்ல அதிஸூக்ஷ்மமான பாலை அமுது செய்து. அவள் தன்னுடைய க்ரௌர்யத்தையும், ஸ்தநத்தினுடைய க்ரௌர்யத்தையும்‡ விரித்துப்பேசுகிறாய்த்து- இவர்தம்முடைய பயாதிசயத்தாலே. "ஐய'' என்று ஸம்போதநமாகவுமாம். பூதனையைத்தாயென்று மௌக்த்யத்தாலே அவள் முலையை யமுதுசெய்தான். ப்ரகாசஸந்நிதியில் தமஸ்ஸு போலே துஷ்ப்ரக்ருதிகள் நசிக்கும் தர்மிஸ்வபாவத்தாலே அத்தலை இத்தலையான வித்தனை.

(ஆடகக்கைமாதர்வாய் அமுதமுண்டதென்கொலோ) அப்பருவத்திலே (௨) "உன்னையுமொக்கலையில்கொண்டு'' என்னுமாபோலே, அவ்வூரில் கந்நிகைகள் தங்கள் க்ருஹத்திலே கொண்டுபோகயெளவநதசையைப்பரிக்ரஹித்துவிதக்த்தனாய்க்கலந்து அவர்கள் வாகம்ருதத்தையுண்ட விதுஎன்னே! (ஆடகக்கைமாதர்) பொன்னாலே அலங்கரித்தகைவளையையுடைய பெண்கள். "அவன் பிடிக்குங்கை'' என்றும், "அவனணைக்கும்கை'' என்றும் அலங்கரிக்கிறார்களாய்த்து. "என்கொலோ''என்றது - அவ்விஷத்துக்கு இவ்வாகம்ருதம் பரிஹாரமோ, ஸர்வதாரகனாய் வேறுதாரகாந்தரமின்றிக்கே யிருக்கிற உனக்கு ப்ரதிகூலர் ப்ராணனும் அநுகூலர் ப்ரேமமும் தாரகமாயிருந்ததோ? பால்யாவஸ்த்தையிலே யுவாவாயும், யுவாவான நீ பாலனாயுமிருந்த விது என்ன ஆஶ்சர்யமென்கிறார்.

(புள்ளதாவி) ஆவி - மநஸ்ஸு, புள்ளாவது-பறவை, பிள்ளைகளை நலியும் தோஷ பக்ஷி விஶேஷம். (௩௬)

(௧) தி-வாய்-௪-௩-௬. (௨) பெரி-தி-௧-௫-௭. ‡ (பா) பிரித்து

மூ.—காய்த்தநீள் விளங்கனி யுதிர்த்தெதிர்ந்த பூங்குருந்தம்
சாய்த்துமாபிளந்தகைத்தலத்த கண்ணனென்பரால்
ஆய்ச்சிபாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணையுண்டுபின்
பேய்ச்சிபாலையுண்டு பண்டோ ரேனமாய வாமனா. (௩௭)

முப்பத்தேழாம்பாட்டு (காய்த்தவித்யாதி)

| | |
|---|---|
| காய்த்த | பரப்படங்கக்காயையுடைய |
| நீள் | உயர்த்தியை யுடைத்தான |
| விளம் | விளாவினுடைய |
| கனி | பழங்களை |
| உதிர்த்து | விழவிட்டு |
| †எறிந்து | அந்தவஸுரனை முடியச்செய்தெறிந்து, |
| பூம் | ஸ்ப்ருஹணீயமாயாதல், புஷ்பிதமாயாத விருக்கிற |
| குருந்தம் | குருந்தமரத்தை |
| சாய்த்து | வேரறவிழவிட்டு, |
| மா | அஸ்வரூபியான கேஶியை |
| பிளந்த | இருகூறாகப்பண்ணின |
| கைத்தலத்த | ஆயுதநிரபேக்ஷ கரதலமாத்ர ஸாதநனை |
| கண்ணனென்பர் | க்ருஷ்ணனென்று ஜ்ஞாநாதிகாரனவ்யாஸபராஶராதிகள்சொல்லாநிற்பர்கள். |

(ஆய்ச்சி யித்யாதி)

"ஆய்ச்சிபாலையுண்டு வெண்ணெயுண்டு பேய்ச்சிபாலையுண்டு பின் மண்ணையுண்டு" என்றந்வயிக்கக்கடவது)

| | |
|---|---|
| ஆய்ச்சி | கோபஸ்த்ரீயான யசோதையினுடைய |
| பாலை | ஸ்தந்யத்தை |
| உண்டு | அமுதுசெய்து |
| வெண்ணெய் உண்டு | நவநீதத்தை யமுதுசெய்து |
| பேய்ச்சி | பூதனையுடைய |
| பாலை | ஸ்தந்ய ப்ராணன்களை |

† பாடாந்தரம்.

உண்டு அமுதுசெய்து
பின் கல்பாவஸாநத்தில்
மண்ணை பூமியை
உண்டு திருவயிற்றிலேவைத்து
பண்டு கல்பாதியிலே
ஓர் அத்விதீயமான
ஏனமாய் வராஹ ஸஜாதீயனு யவதரித்த
வாமனு மஹாபலிபக்கல் நின்றும் அந்தப்பூமியை வாங்குகைக்கு ஸ்ரீவாமநனாய் அவதரித்தவனே! (௩௭)

அவ;—முப்பத்தேழாம்பாட்டு;-பின்பும் க்ருஷ்ணவதாரத்தின் முக்தசேஷ்டிதங்களையும் விதக்த சேஷ்டிதங்களையு மநுபவிக்கிறவர் மௌக்த்யத்தாலும் ஸௌலப்யத்தாலும் வரையாதே எல்லாரையும் தீண்டினபடியாலும் க்ருஷ்ணவதார ஸத்ருஸமான வடதள ஸாயியையும் ஸ்ரீவராஹ வாமந ப்ராதுர்ப்பாவங்களையும் க்ருஷ்ணவதாரத்தோடொக்க அநுபவிக்கிறார்.

வ்யா.— (காய்த்தநீள் விளங்கனி யுதிர்த்து) க்ருஷ்ணன்மேல் விழுகைக் குறுப்பாகப் பரப்புமாறக்காய்த்து ஓங்கிநின்ற விளாவான வஸுரனுடைய கனிகளைக் கன்றைவிட்டெறிந்துதிர்த்து. (எதிர்ந்தபூங்குருந்தம் சாய்த்து) விளாவான அஸுரனையழியச்செய்து. க்ருஷ்ணன் கிட்டினபின்பும் பேராதே நின்ற பூங்குருந்தை ஊசிவேரோடே பறித்து விழவிட்டு. இதுவும் அவன்மேல்விழுந்து புஷ்பாபசயம் பண்ணுகைக் குறுப்பாகப் பரப்புமாறப் பூத்து நின்ற தாய்த்து இவை யிரண்டாலும் - அநுகூலவேஷராய் நலிய வந்த அசுரர்களை அழியச்செய்தபடி சொல்லிற்று. (மாபிளந்த) ப்ரதிகூலனையே வாய்பாறி ஊரையழிக்கவந்த கேசியை அநாயேஸேந இருகூறுகப்பிளந்து அவ்வாபத்தைப் போக்கினவன். (கைத்தலத்த கண்ணனென்பரால்) ஓராயுதத்தாலன்றிக்கே லீலையாக அழித்த திருக்கையையுடைய க்ருஷ்ணனென்று ஜ்ஞாநாதிகாரன வ்யாஸபராஸராதிகள் சொல்லாநிற்பர்கள்.

(ஆய்ச்சிபாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணெயுண்டு பின் பேய்ச்சி பாலையுண்டு) (ஆய்ச்சிபாலையுண்டு - வெண்ணெயுண்டு)

மூ.—கடங்கலந்தவன்கரி மருப்பொசித்தோர் பொய்கைவாய்
விடங்கலந்த பாம்பின்மேல் நடம்பயின்ற நாதனே
குடங்கலந்தகூத்தனாய் கொண்டல்வண்ண தண்டுழாய்
வடங்கலந்த மாலைமார்ப காலநேமிகாலனே. (௩௮)

யசோதைப்பிராட்டியுடைய பாலையும் வெண்ணெயையும் அமுது செய்து. இத்தால்(க)"விஜிவத்ஸ:-விஜிகத்ஸ:"என்கிற தத்வத்துக்கு ஆஸ்ரிதஸ்பர்ஸமுள்ளதொரு த்ரவ்யத்தாலன்றிக்கே செல்லாதிருக்கிறபடியைச் சொல்லிற்று. (பேய்ச்சிபாலையுண்டு) தாய்வடிவுகொண்டு விநாஸிகையாய் வந்த பூதனையினுடைய முலையை யமுதுசெய்து, அவ்வழியாலே அவளைமுடித்து.யசோதையினுடைய பாலோபாதி பூதனையுடைய ப்ராணனும் தா(யா)ரகமாயிருக்கிறபடி. (பின் மண்ணையுண்டு) க்ருஷ்ணனுடைய மௌக்த்யத்தை யநுபவித்த ஸமநந்தரம் தத்ஸத்ருஸமான வடதளசாயியுடைய மௌக்த்யத்தை யநுபவிக்கிறார். கல்பாவஸாநத்திலே "சிறிய திருவயிற்றிலே ஜகத்தையடைய அமுதுசெய்தால் ஸாத்மியாது"என்றறியாத மௌக்த்யமிறே வடதளஸாயியுடைய மௌக்த்யம். (பண்டொரேனமாய வாமனா) கல்பாதியிலே ஸ்ரீவராஹமாய், ஒருத்தர் அர்த்தியாதிருக்க பூமியையெடுத்து ரக்ஷித்து, அந்தபூமியை மஹாபலி யபஹரிக்க ஸ்ரீவாமநனாயளந்து கொண்டவனே. தன்னை யழியமாறி ரக்ஷித்த ஸௌலப்ப்யத்துக்கும், வரையாதே எல்லாரையுந் தீண்டின ஸீலத்துக்கும் க்ருஷ்ணாவதாரத்தோடு ஸாம்யமுண்டாகையாலே இவ்வவதாரங்களை யநுபவிக்கிறார். .... ... .... ... (௩௭)

முப்பத்தெட்டாம்பாட்டு. (கடங்கலந்த வித்யாதி)

| | |
|---|---|
| கடம் | மதஜலத்தாலே |
| கலந்த | வ்யாப்தமான |
| வன் | பலிஷ்ட்டமான |
| கரி | குவலயாபீடத்தினுடைய |
| மருப்பு | கொம்பை |
| ஒசித்து | முறித்து |
| ஓர் | அத்விதீயமான |
| பொய்கை | யமுநாஹ்ருதத்தினுடைய |
| வாய் | ப்ரதேசத்திலே |

(க) சாந்தோ-அ-எ-க.

| | |
|---|---|
| விடம் | விஷத்தாலே |
| கலந்த | வ்யாப்தமான |
| பாம்பின்மேல் | காளியனுடைய பணங்களிலே |
| நடம் | நாட்யத்தை |
| பயின்ற | பண்ணின |
| நாதனே | விரோதி நிரஸநத்தாலே தன்னுடைய நிருபாதிக நாதத்வத்தை ப்ரகாஶிப்பித்தவனே! |
| குடம் | கும்பத்தோடே |
| கலந்த | பொருந்தின |
| கூத்தனாய் | ஜாத்யுசித ந்ருத்தத்தை யுடையவனான |
| கொண்டல் வண்ண | மேகம்போலே யிருக்கிற அந்த கும்ப ந்ருத்ய ஸௌந்தர்யத்தை அநுபவிப்பிக்கும் ஔதார்யமாகிற ஸ்வபாவத்தையுடையவனென்னுதல்; ப்ரயோஜந நிரபேக்ஷமாக வர்ஷிக்கிற மேக ஸ்வபாவனென்னுதல்; ஶ்யாமதாத்மகமான மேகஸ்வபாவத்தை யுடையவனென்னுதல். |
| தண் | ஶ்ரமஹரமான |
| துழாய் | திருத்துழாயினுடைய |
| வடம் | ஸ்ருக்விஶேஷத்தோடே |
| கலந்த | கூடின |
| மாலை | மாலையையுடைத்தான |
| மார்ப | திருமார்பையுடையவனே. |
| காலநேமி | ஏதந்நாமக அஸுரனுக்கு |
| காலனே | ம்ருத்யுவானவனே! விரோதி நிரஸநஶீலனென்றபடி. (௩அ) |

அவ.—முப்பத்தெட்டாம்பாட்டு. (க) "பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்-பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்" என்கிறபடியே—ப்ரதிகூலரை அழியச்செய்தும் அநுகூலரைஉகப்பித்தும் செய்தருளின க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை அநுபவிக்கிறார்.

(க)-கீ-௪-அ.

வ்யா.— (கடங்கலந்தவன் கரிமருப்பொசித்து) குவலயாபீடத்தை மதிப்பித்தபடியாலே அம்மதஜலம் உடம்பிலே வ்யாப்தமாய் அதிப்ரபலமா யிருந்த அதின் கொம்பை முறித்து. இத்தால்-ஸ்வாபாவிகமான பலத்தாலும் மதத்தால்வந்த பலத்தாலும் துர்ஜயமான குவலயாபீடத்தை அநாயாஸேந அழித்தானென்கை. கடம்-ஆனைமதம். (ஓர் பொய்கைவாய் விடங்கலந்த பாம்பின்மேல் நடம்பயின்றநாதனே). (௧) "வாதாஹதாம்புவிக்ஷேப ஸ்பர்சதக்தவிஹங்கமம் - வாதாஹதாம்புவிக்ஷேப ஸ்பர்ஶதக்த்தவிஹங்கமம்" என்கிறபடியே அதிபீஷணமாகையாலே அத்விதீயமான பொய்கையிலே. முதலைகிடந்த பொய்கையும் இதுக்கு ஶத்ருஶமன்றென்கை. விஷமே இவனுக்கு உபாதாநமென்னும்படி விஷப்ரசுரமான காளியனுடைய பணங்களிலே வல்லாராடினாப்போலே திருவடிகளை மாறியிட்டு, அவ்வழியாலே அவனை த(௨)மித்துப்போகவிட்டு, யமுனையை ஸர்வோபஜீவ்யமாம்படி பண்ணி, உன்னுடைய நாதத்வத்தை ப்ரகாசிப்பித்தவனே. (௨) "துஷ்டுவுர்முதிதாகோபா த்ருஷ்ட்வா (ஶிவ)ஶீத ஜலாம் நதீம் - துஷ்டுவுர்முதிதாகோபா த்ருஷ்ட்வா (சிவ) சீதஜலாம் நதீம்" என்னக்கடவதிறே. இவ்வளவால் துஷ்க்ருத் விநாசஞ்சொல்லி, மேல் ஸாது பரித்ராணஞ் சொல்லுகிறது.

(குடங்கலந்த கூத்தனாய்கொண்டல்வண்ண) கையில் திருவாழிபொருந்தினாப்போலே பொருந்தின குடத்தையுடையனாய், ஜாதிப்ரயுக்தமான கூத்தையாடி, மன்றிலே உன்னுடையவழகை ஸர்வஸ்வதாநம் பண்ணினவனே. அதவா ப்ரயோஜந நிரபேக்ஷமாக ஜலஸ்தலவிபாகமன்றிக்கே வர்ஷிக்கும் மேகஸ்வபாவனே. குடக்கூத்தாடினபோதை காளமேக நிபஶ்யாமமான நிறத்தைச் சொல்லிற்றாகவுமாம். (தண்டுழாய் வடங்கலந்தமாலைமார்ப) இப்படி க்ஷுத்ரரான இடையருடைய சேஷ்டிதத்திலே யிழிந்தவன், ஸர்வ சேஷியாய், (௩) "அவாக்யநாதர:-அவாக்யநாதர:" என்கிறபூர்ணன் கிடீரென்கிறார். ஐஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய் வடத்தோடும் வநமாலையோடும்கூடின திருமார்வையுடையவனே (வடம்) தொடை; (மாலை) வநமாலை. (காலநேமிகாலனே) ஆபந்நராய்த் திருவடிகளிலே விழுந்த தேவர்களுக்கு விரோதியான காலநேமிக்கும்ருத்யுவானவனே. இத்தால்-தான் ஸர்வஸாதாரணனாயிருக்கச் செய்தேயும் தன் திருவடிகளிலே தலைசாய்த்தார்க்கு விரோதிகளானார், தனக்கும் ஶத்ருவென்கை. (௩௮)

---

(௧) வி-பு-ரு-எ-௪. (௨) வி-பு-ரு-எ-அ௨. (௩) சாந்தோ-௩-௧௪-௨.

மூ —வெற்பெடுத்துவேலைநீர் கலக்கினாயதன்றியும்
வெற்பெடுத்துவேலைநீர் வரம்புகட்டிவேலைசூழ்
வெற்பெடுத்தவிஞ்சி சூழிலங்கைகட்டழித்தநீ
வெற்பெடுத்துமாரிகாத்த மேவகண்ணனல்லையே. (௩௯)

---

முப்பத்தொன்பதாம்பாட்டு (வெற்பித்யாதி)

| | |
|---|---|
| வெற்பு | மந்தர பர்வதத்தை |
| எடுத்து | எடுத்து |
| வேலைநீர் | ஸமுத்ரஜலத்தை |
| கலக்கினாய் | மதநம் பண்ணினாய்; |
| அதன்றியும் | அவ்வளவன்றிக்கே |
| வெற்பு | பர்வதங்களை |
| எடுத்து | வாநரங்களைக் கொண்டெடுத்து |
| வேலைநீர் | ஸமுத்ரஜலத்திலே |
| வரம்பு | திருவணையை |
| கட்டி | இட்டு |
| வேலை | ஸமுத்ரமாகிற பரிகை (வ)யினாலே |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| வெற்பு | த்ரிகூடபர்வதத்திலே |
| எடுத்த | விஸ்வகர்மாவாலே சமைக்கப்பட்ட |
| இஞ்சி | மதிளாலே |
| சூழ் | பரிவ்ருதமான |
| இலங்கை | லங்கையினுடைய |
| கட்டு | அரணை |
| | (அன்றிக்கே). |
| கட்டு | அதர்ம ஸ்வபாவத்தை |
| அழித்த | போக்கின |
| நீ | தேவர், |
| வெற்பு | கோவர்த்தந பர்வதத்தை |
| எடுத்து | தரித்து |
| மாரி | வர்ஷத்தில் நின்றும் |
| காத்த | ரக்ஷித்த |

மேகவண்ணனல்லையே } காளமேக நிபஶ்யாமனன்றோ? (அன்றிக்கே) வர்ஷுக வலாஹகம்போலே மஹோதாரனன்றோ?

(வண்ணம்—ஸ்வபாவம். விக்ரஹாத்மக ஸ்வபாவமும் ஔதார்யாத்மக ஸ்வபாவமும்) (௩௧)

அவ.— முப்பத்தொன்பதாம்பாட்டு. ஸாதுபரித்ராணமும் துஷ்க்ருத்விநாசமும் சொல்லிற்று - கீழ்ப்பாட்டில்; இதில் - இவ்வளவு புகுரவில்லாத இந்த்ராதிகளுடைய விரோதிகளான ராக்ஷஸ வர்க்கத்தை அழியச்செய்து அவர்கள் குடியிருப்பைக்கொடுத்த படியையும், அவ்விந்த்ரன்றான் ஆஶ்ரிதரைக்குறித்து ப்ரதிகூலனான போது அவனை அழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆஶ்ரிதரை ரக்ஷிக்கும் நீர்மையையும் அநுபவிக்கிறார்·

வ்யா.—(வெற்பெடுத்துவேலைநீர்கலக்கினாய்) தூர்வாஸஶ்ஶாபத்தாலே இந்த்ராதிகள் ஐஶ்வர்யத்தையிழந்து, (௧) 'ஶரணம் த்வாமநுப்ராப்தா: - ஶரணம்த்வாமநுப்ராப்தா:' என்கிறபடியே-திருவடிகளிலே ஶரணம்புகுர, கடல்கொண்டு முழுகும் மந்தரத்தைப் பரிகரமாகக்கொண்டு ஸமுத்ர ஜலத்திலே அவர்களிழந்தவையடங்கலும் உத்பந்நமாம்படி கலக்கினாய். "ரத்நாகர:, மத்ஸ்யாகர:- ரத்நாகரம், மத்ஸ்யாகரம்" என்று லோகப்ரஸித்தமாயிருந்துள்ள ஸமுத்ரஸ்வபாவத்தைத் தவிர்த்து ஸ்வர்க்கத்திலுள்ள பதார்த்தங்களுக்கு உத்பாதகமாக்கினாய். (௨) "ஏதத்கதம் சதயயந்யதிதஸ்த்வயாஸௌ ஹித்வா ஸ்வபாவநியமம் ப்ரதிதம் த்ரிலோக்யாம் । அப்ஸரோவிஷஸுதாவிது பாரிஜாதலக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர்ப்பபூவ - ஏதத்கதம் சதயயந்யதிதஸ்த்வயாஸௌ ஹித்வா ஸ்வபாவ நியமம் ப்ரதிதம் த்ரிலோக்யாம் । அப்ஸரோவிஷஸுதாவிது பாரிஜாதலக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர்ப்பபூவ" என்னக்கடவதிறே· "ப்ரயோஜநாந்தரபரன்" என்று அவன் சிறுமைபாராதே, மோக்ஷப்ரதனாயிருக்கிற தன் பெருமை பாராதே, "ஈஶ்வரோஹம்" என்றிருக்குமவனென்று அவனுடைய பூர்வவ்ருத்தம்பாராதே, "ஶரணமென்று நின்றான்" என்றத்தையேபார்த்து ரக்ஷித்தருளினாய்.

(௧) வி-பு-௧-௯ சுடு, (௨) அதிமா-ஸ்த-உசு,

(அதன்றியும்) இதுதானேபோருமாய்த்து-ஆஸ்ரிதர் உன்னைத் தஞ்சமென்று விஸ்வஸித்திருக்கைக்கு. அதுக்குமேலே; (வெற்பெடுத்து வேலைநீர் வரம்புகட்டி) கண்டமலைகளைப்பிடுங்கி, ஸமுத்ரஜலத்தின்மேலே, பூமியிலே வரம்புகட்டுமா போலே, ப்லவங்கமங்கள் காலாலே கடந்துபோம்படி அணைகட்டி; இதொரு அதிமாநுஷமான ஆஸ்சர்யம். அகாதமான ஸமுத்ரத்தில் மலையமிழ்ந்ததில்லை, திரைக்கிளர்த்தியில் மண்கரையப்பெற்றதில்லை. (வேலைசூழ் வெற்பெடுத்த இஞ்சி சூழிலங்கை கட்டழித்தநீ) கடலை அகழாகவுடைத்தாய், த்ரிகூடபர்வதத்திலே விஸ்வகர்மாவாலே சமைக்கப்பட்டதாய், கடக்கவரிதான மதிளாலே சூழப்பட்ட லங்கையினரணை "யதாஸைகதமம்பஸி" என்னும்படியே அநாயாஸேந அழித்தநீ. (இஞ்சி) மதிள். (கட்டு)அரணும், இயல்வும். தர்மந்தொங்கக்கடவதன்றிக்கே யிருக்கிற லங்கா ஸ்வபாவத்தை அழித்து,(க) 'விபீஷணஸ்து தர்மாத்மா" என்கிறபடியே தார்மிகனை நிர்வாஹகனாக்கி, தர்மமே ஸஞ்சரிக்கும்படியைச் சொல்லிற்று.

இனி இந்த்ரன்றான் ஆஸ்ரிதர்க்கு துஷ்க்ருதனானால் அவனையழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆஸ்ரிதரைரக்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. (வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே) "இடையர் க்ருஷ்ணனையண்டைகொண்டு நம்முடைய ம(மு)சபங்கம் பண்ணினார்கள்" என்று ஸம்வர்த்தகணத்தையேவி வர்ஷிப்பிக்க,அவனை அழியச்செய்கை ப்ராப்தமாயிருக்க ப்ராதிகூல்யத்தில் நியதனல்லாமையாலும்,(உ)"ந நமேயம்"என்கிறபடியே திருவடிகளில் தலைசாயேனென்கிற நியதியில்லாமையாலும், கோவர்த்தநகிரியை யெடுத்து வர்ஷத்தால் வந்த அநர்த்தத்தைப் பரிஹரித்த மஹோதாரனல்லையோ. காளமேகநிபஸ்யாமமாய் ஸ்ரமஹரமான விக்ரஹத்தைச்சொல்லவுமாம். ஒருமேகஸமூஹம்பாத(வாய) ககோடியிலேயாய் நிற்க ஒருமேகம் அத்தாலே வந்த ஆபத்தைப்பரிஹரித்தாப்போலே யிருந்ததென்கை. (ருகூ)

(க) ரா-ஆ-கஎ-உச. (உ) ரா-யு-ருகூ-கக.

மூ.—ஆனைகாத்தோரானைகொன் றதன்றியாயர்பிள்ளையாய்
ஆனைமேய்த்தியாநெயுண்டி யன்றுகுன்றமொன்றினால்
ஆனைகாத்துமையரிக்கண் மாதரார்திறத்துமுன்
ஆனையன்றுசென்றடர்த்த மாயமென்னமாயமே. (௪௦)

நாற்பதாம்பாட்டு (ஆனைகாத்தித்யாதி)

| | |
|---|---|
| ஆனை | ஸ்ரீ கஜேந்த்ராழ்வானை |
| காத்து | ரக்ஷித்து, |

"அதன்றி யாயர்பிள்ளையாய், ஓரானை கொன்று" என்றந்வயம்.

| | |
|---|---|
| அதன்றி | அவ்வளவன்றிக்கே |
| ஆயர் | இடைஜாதிக்கு (ஜாத்யாக்யாயாம் பஹுவசநம்) |
| பிள்ளையாய் | நியாம்யனாய் |
| ஓர் | அத்விதீயமான |
| ஆனை | குவலயாபீடத்தை |
| கொன்று | நிரஸித்து |
| ஆனை | பசுக்களை |
| மேய்த்தி | ஜாத்யுசித வ்ருத்தியினாலே ரக்ஷித்தி; |
| ஆநெய் | ஆஸ்ரித ஸ்பர்ஶமுள்ள கோக்ருதத்தை |
| உண்டி | அமுதுசெய்யாநின்றி; |
| அன்று | இந்த்ரன் ஶிலாவர்ஷம் வர்ஷிப்பிக்கிற தசையிலே |
| குன்றமொன்றினால் | ஒரு ஸமீபஸ்த்தித பர்வதத்தினாலே |
| ஆனைகாத்து | பசுக்களை ரக்ஷித்து |
| மை | அஞ்ஜநாலங்க்ருதமாய் |
| அரி | செவ்வரிகளை யுடைத்தான |
| கண் | திருக்கண்களை யுடைத்தான |
| மாதரார் | நப்பின்னைப்பிராட்டியினுடைய |
| திறத்து | விஷயத்திலே |

"அன்று முன்சென்று ஆனையடர்த்த" என்றந்வயம்.

| | |
|---|---|
| அன்று | அலங்க்ருதையாய் ஸ்ம்ஶ்லேஷார்த்தமாக நிற்கிறவன்று |

முன்சென்று நப்பின்னைப்பிராட்டியினுடைய ஸந்நிதியிலே நின்று
ஆனையடர்த்த எருதுகளேழையும் கொன்ற
மாயம் ஆஸ்சர்யம்
என்னமாயம் என்னவாஸ்சர்யம். (௪௦)

அ.—நாற்பதாம்பாட்டு. ஈஸ்வராபிமாநிகளான தேவதைகளுடைய ரக்ஷணப்ரகாரம் சொல்லிற்று - கீழ்; இப்பாட்டில் – அநந்யப்ரயோஜநரை ரக்ஷிக்குமிடத்தில் நித்யஸூரிகளுக்கு மேலெல்லையான பிராட்டிமாரோடு ஸம்ஸாரிகளுக்குக் கீழான திர்யக்குகளோடு வாசியறத் தன்னையொழியச் செல்லாமை யொன்றுமே ஹேதுவாக விரோதிநிரஸந பூர்வகமாகரக்ஷிக்கும் ஆஸ்சர்யங்களையநுபவிக்கிறார்.

வ்யா.—(ஆனைகாத்து) அநந்யப்ரயோஜநவத்வமொழிய இவ்வருகு ஜந்மாதிகளாலே ஒரு யோக்யதையில்லாத ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்து. இன்னவானையென்றதே, "ஆனைகாத்து" என்கிறாய்த்து அவனுடைய ஆபத்ப்ரஸித்தியாலும் அவனை ரக்ஷித்த†(ரக்ஷண) ப்ரகாரத்தின் ப்ரஸித்தியாலும். (க) "ஶஜகுகஷ்டதேவீரெ - கஜ ஆகர்ஷதேதீரே" (க) "வாரணவாரணவஷ் - பரமாபதமாபந்ந:" என்னும்படியிறே அவனுடைய ஆபத்து. (௩)"ஸுதர்ஶநவதிவுஹிதஹஸ்தம் – அதந்த்ரித சமூபதி ப்ரஹித ஹஸ்தம்" (க) "தவஞ்செய்தார் வெள்கிநிற்ப விண்ணுளார்வியப்ப" என்னக்கடவதிறே. "அதன்றியாயர் பிள்ளை-ஓரானைக்கொன்று" என்றந்வயம். (அதன்றியாயர் பிள்ளையாய்) தேவரீரைத் தஞ்சமென்றிருக்கைக்கு ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய ரக்ஷணப்ரகாரமே அமையும். அதுக்குமேலே, இடைஜாதிக்கு நியாம்யனாயவதரித்து. கீழ் "அசோதையாய்ச்சி பிள்ளையாய்" என்றதை வ்யாவர்த்திக்கிறது. (ஓரானைகொன்று) ஸ்ரீ வஸுதேவர் தேவகிப் பிராட்டி, (௪) "நவஸம்வயஸௌ ஜாதௌ - நஸமப்யுத்தமித்யாஹ" என்கிற ஸ்ரீ மதுரையில் பெண்களாக இவ்வநுகூல வர்க்கமுடைய

அ.—நாற்பதாம்பாட்டு. "ஆனையன்று சென்றடர்த்த" என்று ருஷபத்வேதக் கொல்லுகைக்கு அவதரித்தபடி சொல்லிற்றென்று ஶங்காபிப்ராயம்.

(க) வி-த-௬௯-௪௭. (உ) ர-ஸ்த-உ (௩) திருமாலை-௪௪.
(௪) ரா-யு-௧௦௩-௫. † குண்டலிதமதிகம்.

மூ.—ஆயனாகியாயர்மங்கை வேயதோள்விரும்பினாய்
ஆயநின்னையாவர்வல்ல ரம்பரத்தொடிம்பராய்
மாயமாயமாயைகொல் அதன்றிநீவகுத்தலும்
மாயமாயமாக்கினாயுன் மாயமுற்றுமாயமே. (௪௧)

---

பயப்படும்படி மதிப்பித்து கம்ஸன் நிறுத்தின அத்விதீயமான குவலயாபீடத்தை அநாயாஸேந கொன்று ஸ்வாபாவிகமான பலமும் மதபலமுமாய் அத்விதீயமாயிறே யிருப்பது. "கடங்கலந்தவன் கரி" என்றாரிறே.

(அதன்றியானைமேய்த்தி) அதுக்குமேலே, அந்தஜாதிக்கு உசிதமாகப்பசுக்களை ரக்ஷியாநிற்றி. (௧) "விளையாடு குழலைச்சூழவே நின்று காலிமேய்க்கவல்லாய்" என்கிறபடியே தன்னழகாலே வயிறு நிரம்பும்படியிறே பசுக்களை ரக்ஷிக்கிறது. (ஆநெயுண்டி) பசுக்களின்நெய்யை அமுதுசெய்யாநிற்றி. ஸத்யகாமனாய் விஜி(வ)கத்ஸனாயிருக்கிற நீ ஆஸ்ரிதஸ்பர்ஸமுடையதொரு த்ரவ்யத்தை யொழியச் செல்லாமையாலேயிறே அத்தைவிரும்பி அமுதுசெய்தது. (அன்றுகுன்றமொன்றினாலானை காத்து) அதுக்குமேலே இந்த்ரன், "ஸம்வர்த்தகணம்" என்கிற மேகஸமூஹத்தைக்கொண்டு ஊரையழியச்செய்கிற தசையிலே கைக்கெட்டிற்றொருமலையையெடுத்து பசுக்களை ரக்ஷித்து. (ஆன்) பசு. கீழ்ப்பாட்டிலும் இவ்வபதாநம் சொல்லிற்று. அதுக்கும் இதுக்கும் வாசியென்னென்னில்; ப்ராதிகூல்யத்தில் நியதனல்லாமையாலே இந்த்ரனை யழியச்செய்யமாட்டாத நீர்மையைச் சொல்லிற்று - அங்கு; இங்கு -தன்னையொழியச் செல்லாத†(பசுக்களை ரக்ஷித்த)படியைச் சொல்லுகிறது. (மையரிக்கண் மாதரார்திறத்து) அஞ்ஜநத்தாலே அலங்க்ருதமாய், செவ்வரிகளோடேகூடின திருக்கண்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. (முன்னானையன்று சென்றடர்த்தமாயம்) ஸம்ச்லேஷார்த்தமாக ஒப்பித்து நிற்கிற தசையிலே அவன் ஸந்நிதியிலேசென்று வ்ருஷபங்களேழையு மடர்த்த ஆஸ்சர்யம் (என்னமாயமே)முன்புசெய்த செயல்களுக்கும் அவ்வருகே யொன்றாயிருந்ததி! (௪௦)

நாற்பத்தோராம்பாட்டு. (ஆயனாகியித்யாதி).

ஆயனாகி கோபஸஜாதீயனாயவதரித்து

---

† குண்டலிதமதிகம். (௧) தி-வாய்-௯-௨.

ஆயர் மங்கை நப்பின்னைப் பிராட்டியினுடைய
வேய வ்ருத்தஸ்நிக்தருஜ்ஜுக்களாலே மூங்கில் போலிருக்கும்
தோள் தோளை
விரும்பினய் அத்யாதரித்தாய்;
"அம்பரத்தொடிம்பராய் யாவரர் ஆய நின்னைக்காணவல்லர்" என்றந்வயம். "காண" என்று அநுஷங்கம்.
அம்பரத் தொடு } உபரிதநலோகவர்த்தி ப்ரஹ்மாதிகளோடு கூடின
இம்பராய் பூமிவர்த்தி ஜ்ஞாநாதிகமநுஷ்யர்களிலே
யாவர் ஆர்
ஆயநின்னை ஸர்வஶக்தியுக்தனனவுன்னை
காணவல்லர் பரிச்சேதிக்கஶக்தர்;
மாய ஆஸ்சர்யஶக்தியுக்தனே!
மாய "துரத்யயா" என்கிறமாயையினுடைய ஸம்பந்தத்தாலுண்டான
மாயைகொல் அஜ்ஞாநத்தாலேயோ? ("மாயாவயுநம்-ஜ்ஞாநம்" என்று மாயாஶப்தம் ஜ்ஞாநஸாமாந்யவாசியாய், தத்விஶேஷமான அஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. "கிம்" க்ஷேபேயாய், "கொல்" என்கிறவிதுவும் க்ஷேபவாசியாயிருக்கிறது)
அதன்றி அவதாராபரிச்சேத்யமாத்ரமன்றிக்கேதயமாநமநாவான தேவர்
நீ
வகுத்தலும் மஹதாதி ஶரீராந்தங்களான வகுப்புக்களை வகுத்தலும்
மாய அந்தகரணகளே பரங்களைக் கொண்டு நல்வழிபோகமாட்டாதே அந்யபரராய் நஶிக்க,
மாயமாக்கினய் ஸம்ஹாரமேக்ஷேமமென்று காரணவஸ்துமாக்கினய்;

உன் தேவருடைய
மாயமுற்றும் ஸங்கல்பாத்மக ஜ்ஞாநங்க ளடங்கலும்
(மாயாவயுநம் ஜ்ஞாநம்)
மாயமே ஆஸ்சர்யாவஹமே. (சக)

அவ.—நாற்பத்தோராம்பாட்டு. நீ உகந்தாரை, தத்ஸஜாதீயனாய் வந்தவதரித்து ஸ்வரூபாநுரூபமாக ரக்ஷிக்கும்படியையும், விமுகரான ஸம்ஸாரிகளை ஸங்கல்பத்தாலே கர்மாநுகூலமாக ரக்ஷிக்கும்படியையும், அநுஸந்திக்கப்புக்கால் பரிச்சேதிக்க முடியாதாயிருந்ததீ! என்கிறார்.

வ்யா,—(ஆயனாகி ஆயர்மங்கை வேயதோள் விரும்பினாய்) இடைஜந்மத்திலே அவதரித்து நவயௌவநஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டியுடைய, சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும் வேய்போலே ஸ்ப்ருஹணீயமான திருத்தோளோடே†ஸம்ஶ்லேஷித்த திவ்யமங்கள விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கிக்கொண்டவதரித்து அத்யாதரத்தைப் பண்ணினாய். "ஆனையன்று சென்றடர்த்த" என்று கீழ்ப்பாட்டிலும் இவ்வபதாநத்தைச் சொல்லிற்று, இதுக்கு மதுக்கும் வாசியென்னென்னில்; விரோதிநிரஸநத்திலே நோக்கு - அது; ஸர்வபோக்யமான விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கிவந்தவதரித்தபடியைச்சொல்லுகிறது-இது. இது அநந்யப்ரயோஜநரான ஆஸ்ரிதர்களுடைய ரக்ஷணத்துக்கு முபலக்ஷணம். (ஆயநின்னையாவர்வல்ல ரம்பரத்தொடிம்பராய்) உபரிதநலோகங்களிலுண்டான ப்ரஹ்மாதிகளிலும், பூமியில் விசேஷஜ்ஞரான மநுஷ்யாதிகளிலும் ஸர்வஶக்தியுக்தனான உன்னையார் ஆராயவல்லார். அப்ராக்ருத விக்ரஹத்தை ப்ராக்ருத ஸஜாதீயமாக்கின இத்தை எவர் பரிச்சேதிக்கவல்லார்; ஒருவருமில்லையென்கை.

(மாய) ஆஸ்சர்யசக்தியுக்தனே. (மாயமாயைகொல்)(க) 'ஜ்ஜா யாஃ...ஷா - மமமாயாதுரத்யயா'என்கிறபடியே ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்பிறந்த அஜ்ஞாநத்தாலேயோ, அன்றிறே. "கிம் - க்ஷேபே" (உ) "மாயாவயுநஂஜ்ஞாநஂ - மாயாவயுநம் ஜ்ஞாநம்" என்கிறபடியே மாயாஶப்தம்ஜ்ஞாநவாசியாகிறது. அஜ்ஞாநமும்ஜ்ஞாநவிசேஷமிறே.அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார(மாய)கந்தரால்தான்,அப்ராக்

(க) கீ-எ-கச. † (பா) ஸம்ஶ்லேஷித்தாய்.

மூ.—வேறிசைந்தசெக்கர்மேனி நீறணிந்தபுன்சடைக்
கீறுதிங்கள்வைத்தவன்கை வைத்தவன்கபால்மிசை
ஊறுசெங்குருதியால் நிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடர்த்தவீச பேசுகூசமின்றியே. (சஉ)

ருதமாய் அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தைப் ப்ராக்ருதஸஜாதீயமாய் சக்ஷுர்விஷயமாக்கின இத்தைத் தவிர பரனோ. (க) ''ஸர்வக: - அவாக்யநாதர:'' என்கிறபடியே ஸ்வயம் பூர்ணனானவன் ஒரு கோபஸ்த்ரீயுடைய வடிவழகிலே அத்யாதரத்தைப் பண்ணின வித்தைத்தான் எவர்பரிச்சேதிக்க.

(அதன்றி) அந்த அவதார வைபவத்தையொழிய ஸகலஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளால் பண்ணின உபகாரங்களைப் பரிச்சேதிக்கவொண்ணுமோ தென்கிறது மேல்; (நீ வகுத்தலும்) ஸம்ஸாரிகளுடைய இழவிலே * தயமாநமநாவா யிருந்துள்ளநீ, உன்னை லபிக்கைக்கு ஹேதுவான ஜ்ஞாநமுண்டாய் நல்வழிபோகைக்குக் கரணகளேபரங்களைக் கொடுக்கச்செய்தேயும், மஹதாதி விசேஷாந்தமான வகுப்பு, தத்கார்யமான அண்டங்களாகிற வகுப்பு, அண்டாந்தர்க்கதமான சதுர்த்தச புவநாத்மகமான வகுப்பு, ததந்தர்க்கத தேவாதிகளாகிற வகுப்பு.† ((மாய) நசிக்க) அந்தசரீரங்களைக்கொண்டு தந்தாம் ஹிதம் பார்க்கமாட்டாதே விஷயாந்தரப்ரவணராய் நசிப்பார்கள். (மாயமாக்கினாய்) அவ்வளவிலும் முபேக்ஷியாதே இவற்றுக்கு இனி ஸம்ஹாரமே ஹிதமென்றுபார்த்து ஸ்வசரீரமான ப்ரக்ருத்யவஸ்ந்தமாக்கினாய். (உன்மாயமுற்றுமாயமே) உன்னுடைய மாநஸ வ்யாபாரரூபமான ஸங்கல்பஜ்ஞாந மடங்கலும் ஆஸ்சர்யாவஹமாயிராநின்றதீ! .... ... .... .... (சக)

நாற்பத்திரண்டாம்பாட்டு (வேறித்யர்தி)

| | |
|---|---|
| வேறு | விலக்ஷணமாக, |
| இசைந்த | ஸம்ஹார்த்த்ருத்வத்துக்குச் சேர்ந்த |
| செக்கர் | சிவந்த, க்ருத்தமான வென்றபடி; |
| மேனி | சரீரத்தையுடைய |
| நீறு | பஸ்மத்தாலே |

(க) சாந்தோ-ஙு-கச-உ. † குண்டலிதமதிக்ம.

| | |
|---|---|
| அணிந்த | பூஷிதமான் |
| புன் | புன்மையை-பொல்லாமையையுடைய |
| சடை | ஜடையையுடைய |
| கீறு | ரேகாமாத்ரமான |
| திங்கள் | சந்த்ரனை |
| வைத்தவன் | அந்தஜடையிலே தரித்தருத்ரனுடைய |
| கை | கையிலே |
| வைத்த | லக்நமான |
| வன் | துர்மோசமானவென்றபடி; |
| கபால்மிசை | கபாலத்திலே |
| ஊறு | திருமேனியிலே ஊறுநின்றுள்ள |
| செம் | சிவந்த |
| குருதியால் | ரக்த ஜலத்தாலே |
| நிறைத்த | பூரித்த |
| காரணந்தனை | ஹேதுவை |
| கூசமின்றியே | கூசமில்லாமலே |
| சென்று | மேல்விழுந்து |
| ஏறு | எருதுகளை |
| அடர்த்த | கொன்ற |
| ஈச | நிருபாதிக நியமநசீலனே! |
| பேசு | அருளிச்செய்யவேணும். |

("கூசமின்றியே பேசு" என்னவுமாம். அவதீர கோப நத்தைப் பாராதே அருளிச்செய்யவேணும்).(சஉ)

அவ.—நாற்பத்திரண்டாம்பாட்டு. "நீவகுத்தலும் மாயமாய மாக்கினாய்" என்று - ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள் சேர ப்ரஸ்துதமாகையாலே, (க) "ஷகஷவாஉஜூ:""ஷவெடீாவெஹஷாஉஜூ:-எக ஏவருத்ர:""ஸர்வோஹ்யேஷருத்ர:"என்று ஸ்ருதிப்ரஸித்தராயிருப்பாரு முண்டாயிருக்க,நம்மையே அபரிச்சிந்ந ஸ்வபாவராகச்சொல்லக்கடவீரோவென்று பகவதபிப்ராயமாக, அந்தருத்ரனுக்குவந்த ஆபத்தை, அவதரித்துத் தாழநின்று அந்நிலையிலே போக்கின தேவரீர்க்கு எது பரிஹரிக்கை பரமென்கிறார்.

---

(க)

வ்யா.—(வேறிசைந்த செக்கர்மேனி) வேறாகத்தன்னுடைய ஸம்ஹார்த்ருத்வத்துக்குச்சேர்ந்த க்ருத்தமான வேஷத்தை யுடையனாய். (செக்கர்) சிவப்பு. சிவத்தல் - கோபித்தல். ஸ்ருஷ்ட்யாதித்யத்துக்கும் தேவரீர்க்கு தயையேயிறே ஸ்வபாவம். (நீறணிந்த புன்சடை) பஸ்மோத்தூளித ஸர்வாங்கனாய் க்ருபணமான ஜடையையுடையனாய். புன்மை- பொல்லாமை. இத்தால்-ப்ராயஶ்சித்தத்துக்கும் ஸாதகத்வத்துக்கும் ஏகாந்தமான லிங்கத்தையுடையவனென்கை. (கீழ்திங்கள் வைத்தவன்) அந்த ஜடையிலே கலாமாத்ரமான சந்த்ரனை வைத்தவன். ஆக, ஸம்ஹார்த்ருத்வமே தொழிலென்றும், ஶாஸ்த்ரவஶ்யதையை ஸூசிப்பிக்கிறஜடாதிகளையுடையவனென்றும், சந்த்ரதாரணத்தாலே-போக (ஹோம) ப்ரதானனென்றும் சொல்லிற்றாய்த்து. (கைவைத்தவன் கபால்மிசை) கையில்வைத்த வலியகபாலத்திலே. பாதகித்வப்ரகாஶகமானகபாலதாரணமும், பாதகம் போனாலல்லது போகாத ப்ராபல்யத்தை யுடைத்தான கபாலித்வமுமென்று சொல்லிற்றாய்த்து. ஶாஸ்த்ரவஶ்யனுக்கிறே † இப்பாதகித்வமுண்டாவது.

(ஊறுசெங்குருதியால் நிறைத்த காரணந்தனை) உன் திருமேனியிலே ஊறுகின்றுள்ள ரக்தஜலத்தாலே நிறைத்தஹேதுவை. (பேசு) உன்னுடையஈஶ்வரத்வமும் அவனுடைய ஈஶிதவ்யத்வமுமொழிய வேறுஹேதுவுண்டாகில் அருளிச் செய்யவேணும். உன்னுடைய ரக்ஷகத்வமும் அவனுடைய ரக்ஷ்யத்வமுமொழிய ஹேதுவுண்டோ. இங்கே, "செங்குருதி" என்றும், மேலே, "அலங்கல் மார்வில் வாசநீர் கொடுத்தவன்" என்று மருளிச்செய்யாநின்றார்; இரண்டுக்கும் பேதமென்னென்னில்; அப்ராக்ருத ஸம்ஸ்த்தாநத்தைஇதரஸஜாதீயமாக்கின மெய்ப்பாட்டைச் சொல்லுகிறது—இங்கு. (க) "ஸர்வகந்த:" என்கிற அப்ராக்ருத ஸமஸ்த்தாநத்தையேஇதரஸஜாதீயமாக்கிற்றென்றுதோற்றுகைக்காகவந்த வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது - அங்கு. (கூசமின்றியே-ஏழு சென்றடர்த்தவீச பேசு) ரிஷபங்களினுடைய க்ரௌர்யத்தையும் தன்ஸௌகுமார்யத்தையும் பார்த்துக்கூசாதே, மேல்விழுந்தடர்த்த உன்னீஶ்வரத்வம் நம்பெறும்படி நின்றவனே! எனக்கருளிச் செய்யவேணும்.

---

அரு.—நாற்பத்திரண்டாம்பாட்டு. (பாதகித்வமுண்டாவது-பாதகபீதியுண்டாவதென்றபடி).

---

(க) சாந்தோ-ங-கச-க. † (பா) இப்பாதகம்.

மூ.—வெஞ்சினத்தவேழவெண் மருப்பொசித்துருத்தமா
கஞ்சனைக்கடிந்து மண் ணளந்துகொண்டகாலனே
வஞ்சனத்துவந்தபேய்ச்சி யாவிபாலுள் வாங்கினாய்
அஞ்சனத்தவண்ணனாய வாதிதேவனல்லையே. (சங)

---

ஸாஸ்த்ரவஶ்ய ஜந்யத்திலேபிறந்து ஏழுகோஹத்யை பண்ணச் செய்தேயும் ஈஶ்வரத்வம் நிறம்பெறநின்றாய்நீ; ருத்ரன்தன்ஈஶ்வரத்வத்தால்வந்த மேன்மை குலையாதே நிற்கிறவளவிலேபாதகியானான்; அப்பாதகத்தை, அவதரித்துத் தாழ நின்றநிலையிலேபோக்கியருளினாய். இந்நெடுவாசியை தேவர்களே எதிரிகளாயழிக்கப் புக்கால் தான் அழியுமோ?. "கூசமின்றியே - பேசு" என்னவுமாம். (க) "ஸஹம்வொ ஷா-நூவொ ஜாதஃ – அஹம்வோ பாந்தவோஜாதஃ" என்று-தேவரீருடையமேன்மையை மறைத்துப் பரிமாறுகிறபடியை நினைத்துக்கூசாதே, (உ) "ஜந்மகர்மசமேதிவ்யம் - ஜந்மகர்மசமேதிவ்யம்" என்கிறபடியேஅவதாரத்திலுடைய அப்ராக்ருதத்வத்தையுள்ளபடி அறிகிறவெனக்கு அருளிச்செய்யவேணும். (சஉ)

நாற்பத்துமூன்றும்பாட்டு. (வெஞ்சினத்தித்யாதி).

| | |
|---|---|
| வெம் | உக்ரமான |
| சினத்த | கோபத்தையுடைய |
| வேழம் | குவலயா பீடத்திலுடைய ("வழுவைவாரணம் வேழம்" என்னக்கடவதிறே) |
| வெண் | வெளுத்த |
| மருப்பு | கொம்பை ("கோடுமருப்பும் முலைவையும்கொம்பு" என்னக்கடவதிறே. |
| ஒசித்து | ஒடித்து |
| உருத்த | க்ருத்தனை,(சினமென்று தொடங்கிஉருத்தல்கோபம்" என்னக்கடவதிறே) |
| மா | ப்ரக்ருத்யாமஹாபலனை |
| கஞ்சனை | கம்ஸனை |
| கடிந்து | போக்கி |

---

(இந்நெடுவாசியை) அவனாலும் இல்லை செய்யப்போகாமையாலே அழிக்கப்போகாதென்கிறது. (சஉ)

---

(க) வி-பு-ரு-கூ-கூ. (உ) கீ-ச-கூ.

"வஞ்சனத்துவந்த பேய்ச்சியாவிபாலுள் வாங்கினாய்மண்
ணளந்துகொண்ட காலனே" என்றந்வயம்.

| | |
|---|---|
| வஞ்சனத்து | வஞ்சனையாலே |
| வந்தபேய்ச்சி | வந்த பூதனையுடைய |
| ஆவி | ப்ராணனை |
| பாலுள் | பாலிலே |
| வாங்கினாய் | அபஹரித்தவனாய், |
| மண் | பூமியை |
| அளந்து கொண்ட | விக்ரமத்தாலேவாங்கிக்கொண்ட |
| காலனே | திருவடிகளையுடையவனே! ("காலனே" என்று ம்ருத்யுவாசியாய், பூபாராவதரணம் பண்ணினவனே யென்னுமாம்) |
| அஞ்சனத்த | ஸ்யாமமான |
| வண்ணனாய | காந்தியையுடைய |
| ஆதி | காரணபூதனான |
| தேவன் | உஜ்ஜ்வலன் [டவதிறே). (சங) |
| இல்லையே | அன்றோ? ("காளம் அஞ்சநம்" என்னக்க |

அவ.—நாற்பத்துமூன்றும்பாட்டு. ருத்ரனுடையபாதகத்தைப் போக்கின வளவேயன்றிக்கே, க்ருஷ்ணனாய் வந்தவதரித்து பூபாரமான கம்ஸனை ஸபரிகரமாக நிரஸிக்கையாலும், அந்த ருத்ராதிகளோடு க்ரிமிகீடாதிகளோடு வாசியற ஸ்ரீ வாமநனாய் எல்லார்தலைகளிலும் திருவடிகளைவைத்து உன் ஸர்வஶேஷித்வத்தை ப்ரகாசிப்பித்தபடியாலும் ஜகத்காரண பூதன்நீயேயென்கிறார். (க) "காலநேமிர்ஹதோயோஸௌ-காலநேமிர்ஹதோயோஸௌ" என்று-பூமி, கம்ஸனை பூபாரமாகச் சொன்னாளிறே.

வ்யா.—(வெஞ்சினத்த வேழவெண் மருப்பொசித்து) வெவ்விய சினத்தையுடைய குவலயாபீடத்தினுடைய வெளுத்தகொம்

அரு.—நாற்பத்துமூன்றும்பாட்டு. (கம்ஸன் பூபாரமோவென்ன வருளிச்செய்கிறார் காலநேமிரித்யாதி). விஷ்ணுவாலே கொல்லப்பட்ட காலநேமியென்கிற வஸுரன் கம்ஸனாய்வந்து பிறக்கையாலே தனக்கு பாரமென்றுபூமி சொன்னாளென்றபடி.

(க) வி-பு-ரு-க-உங.

பை அநாயாஸேநமுறித்து. வெவ்வியசினம் - அதிகோபம். அதினுடைய சினமும், ஹிம்ஸாபரிகரமானகொம்பும் பயஹேதுவானவோபாதி, கொம்பினுடையவர்ணமும் பயஹேதுவாயிருக்கிறதாய்த்து இவர்க்கு.(உருத்தமாகஞ்சனைக்கடிந்து) அதுகேட்டு க்ருத்த(உரு)னாய் ப்ரக்ருத்யா(வை)பரீத்தரான கம்ஸனுடையநினைவைக்†சடிந்து-அவன் நினைத்த நினைவையவன்றன்னோடேபோக்கி. (௧) "கிம்சேந்த்ரேணால்பவீர்யேண - கிமிந்த்ரேணால்ப வீர்யேண"

"வஞ்சனத்துவந்த பேய்ச்சியாவி பாலுள்வாங்கினாய் - மண்ணளந்துகொண்டகாலனே" என்றந்வயம். குவலயாபீடத்தைப் போலேயும் கம்ஸனைப்போலேயும் எதிரியாய்த் தோற்றுகையன்றிக்கே, தாய்வடிவுகொண்டு வஞ்சனையால்வந்த பூதனையினுடைய ப்ராணனைப் பாலோடேகூட வாங்கினாய். அவளும் தாயாய் முலை கொடுக்கவந்தாள்;இவனும் பிள்ளையாய் ஆதரத்தோடே அம்முலைப் பாலை யமுதுசெய்தான். துஷ்ப்ரக்ருதிகளுக்கு நாஶகமான தர்மிஸ்வபாவத்தாலே அவள்நினைவு அவள்தன்னோடேபோனவித்தனை. முலைவழிபாலே ப்ராணனைவாங்கின ஆஶ்சர்யத்தாலும்,துர்வர்க்கத்துக்கு ஜ்ஞாததயாவன்றிக்கே ஸத்தயா நாஶகரானகையாலும், ஸர்வாதிகன் நீயேயென்கை. (௨) "ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ: - ஸ்தந்யம் தத்விஷஸம் மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:" என்னக்கடவதிறே. "உருத்து" என்று பாடமானபோது-குவலயாபீடநிரஸநத்தாலும் திருவுள்ளத்திலே சினம்மாறாமையைச்சொல்லிற்றாகக்கடவது.

(மண்ணளந்துகொண்டகாலனே) பூபாரமான§ கம்ஸநிரஸநமேயன்றிக்கே, தன்சேஷித்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகப்ரஹ்மாதி ஸகலஜந்துக்கள் தலையிலும் வைத்த திருவடிகளை யுடையவனே. "காலனே"என்று ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவானவனே யென்றுமாம்.

---

(உரு) மிடுக்கு. ‡(தமன்) மிடுக்கிலே அதிகனென்றபடி. மிடுக்கனென்ன வருளிச்செய்கிறார் (கிமிந்த்ரேணேத்யாதி). மிடுக்கனாகையாலேயன்றோ "அல்பவீர்யேண இந்த்ரேணகிம்" என்று கம்ஸன்சொன்னானென்றபடி. (௨௩)

---

(௧)வி பு-ரு-௪-௪. (௨) ஹரிவம்-விஷ்ணு-௬-௩௮. † (பா) கடந்து
§ (பா) கண்டக ‡ "உருத்தமன்" என்று அரும்பதபாடம்.

மூ.—பாலினீர்மைசெம்பொனீர்மை பாசியின்பசும்புறம்
போலுநீர்மைபொற்புடைத் தடத்துவண்டுவிண்டுலா
நீலநீர்மையென்றிவை நிறைந்தகாலநான்குமாய்
மாலினீர்மைவையகம் மறைத்ததென்னநீர்மையே. (சச)

(அஞ்சனத்தவண்ணனாய ஆதிதேவனல்லையே) (க) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா-நீலதோயதமத்யஸ்த்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" என்கிறபடியே-விலக்ஷண விக்ரஹயுக்தனாய்ஜகத்துக்கு உத்பாதகனாய், அத்தாலே உஜ்ஜ்வலனானவனல்லையோ; ஜகத்காரணத்வத்தோபாதி அப்ராக்ருத திவ்ய விக்ரஹயோகமும் ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமென்கை. (சரு)

நாற்பத்துநாலாம்பாட்டு. (பாலித்யாதி)

| | |
|---|---|
| பாலினீர்மை | க்ஷீரத்தினுடையபோலவிருக்கும் வெளுத்த ஸ்வபாவம், |
| செம் | சிவந்த |
| பொன் | காஞ்சநத்தினுடைய போலவிருக்கிற |
| நீர்மை | ரக்தவர்ணமாகிற ஸ்வபாவம் |
| பாசியின் | ஶைவாலத்தினுடைய |
| புறம் | ப்ரதேஶத்தினுடைய |
| பசும் | பசுமையோடு |
| போலும் நீர்மை | ஸத்ருஶமானஹரிதவர்ணமாகிற ஸ்வபாவம் |
| பொற்புடை | அழகியதான |
| தடத்து | தடாகத்திலே யிருக்கிற |
| வண்டு | ப்ரமரங்கள் |
| விண்டு | சிறகுவிரித்து |
| உலா | பறவாநின்றுள்ள |
| நீல | கருநெய்தல் பூவினுடைய போலிருக்கிற |
| நீர்மை | நைல்யமாகிற ஸ்வபாவம் |
| என்றிவை | என்கிறவிவைகள் |
| நிறைந்த | பூர்ணமான |
| காலநான்குமாய் | க்ருதாதியுகசதுஷ்டய நிர்வாஹகனாய் |

(க) தை நா-கக.

மாலின்நீர்மை } எம்பெருமானுடைய ஸௌலப்ப்யத்தை
வையகம் பூலோகத்திலுள்ளவர்கள் (மஞ்சா:க்ரோசந்திவத்)
மறைத்தது திரஸ்கரித்தது
என்னநீர்மையே } என்ன துர்வாஸநா ஸ்வபாவம்.

("க்ருதே ஶுக்லஶ் சதுர்பாஹு:" "த்ரேதாயாம் ரக்தவர்ணோஸௌ" "த்வாபரே பகவாந் ஶ்யாம:" "கலௌ க்ருஷ்ணம் த்விஷாக்ருஷ்ணம்" இத்யாதி த்ரஷ்டவ்யம். "பொற்பு மஞ்சுபொற்பு கட்டழகும்" என்னக் கடவது, "நீலம் பானல் காவிகருங்குவளை" என்னக்கடவது). (சச)

அ.—நாற்பத்து நாலாம்பாட்டு. "மண்ணளந்துகொண்டகாலனே" என்று முறையறிவித்தபடியும், "அஞ்சனத்தவண்ண" என்று முறையறிந்தவர்கள் ஆஶ்ரயிக்கைக்கு ஶுபாஶ்ரயமானவடிவும்ப்ரஸ்துதமாய்நின்றது-கீழ்;"க்ருதாதியுகங்களில் சேதநர்ஸத்வாதிகுணாநுகூலமாக ஶ்வேதாதிவர்ணங்களை விரும்புகையாலே அந்த காளமேகநிபஶ்யாமமான நிறத்தையழியமாறிஅவர்களுக்கும்வர்ணங்களைக்கொண்டு அவ்வவகாலங்களிலே முகங்காட்டச்செய்தேயும் ஸம்ஸாரிகள் காற்கடைகொள்ளுவதே!, இதென்ன துர்வாஸநா(ப)பலம்" என்கிறார்.

வ்யா.—(பாலின்நீர்மை)க்ருதயுகத்திலுள்ளார்ஸத்வப்ரசுரராய் வெளுப்பு உகக்குமவர்களாகையாலே அவர்களுக்குப் பால் போன்ற நிறத்தைக்கொள்ளும்;நீர்மை-ஸ்வபாவம். அதாகிறது—நிறம்.(க) "வளையுருவாய்த்திகழ்ந்தான்" என்றும், (உ) "சங்கவண்ணமன்ன மேனி"என்னும்சொல்லுகிறஸ்தாநத்தில்"பாலின்நீர்மை"என்றது. இவ்வெளுப்புக்கு ஆஶ்ரயம்(ங) "ஶுக்ல: ஸர்வரஸ:" என்கிற விஷயமென்று தோற்றுகைக்காக. (செம்பொன்நீர்மை) த்ரேதாயுகத்தில்வந்தால் (ச)"ருக்மாபம்" என்னும்(ரு)"'சுட்டு

(க) திருநெ-ங. (உ) கடு, (ங) சாந்தோ-ங-கச-க.

ரைத்த நன்பொன் உன் திருமேனியொளி யொவ்வாது'' என்றும்சொல்லுகிறபடியே சிவந்ததிருநிறத்தைக்கொள்ளும்.(க)''சேயனென்றுந்திரேதைக்கண்'' என்கிற ஸ்தாநத்திலே ''செம்பொனீர்மை'' என்றது; அந்நிறத்துக்கு ஆஸ்ரயமான விக்ரஹம் மஹார்க்கமென்று தோற்றுகைக்காக.

(பாசியின் பசும்புறம்போலும் நீர்மை) த்வாபரயுகத்திலே வந்தால் பாசியினுடைய புறத்தில் பசுமைபோலே ஸ்ரமஹரமான திருநிறத்தையுடையனாய். (பொற்புடைத் தடத்து வண்டுவிண்டுலாநீலநீர்மை) கலியுகத்திலேவந்தால் எல்லாவடிவுங் கொண்டாலும் அபிமுகீகரிப்பாரில்லாமையாலே ஸ்வாபாவிகமான நீலநிறமாயிருக்கும். (உ) ''நீலநின்ற பின்னைவண்ணங்கொண்டல் வண்ணம்'' என்னக்கடவதிறே. (ங) ''கலௌஜகத்பதிம்'' - கலௌஜகத்பதிம்'' அழகிய தடாகத்திலே வண்டுகள் நெருங்கப்படிந்து மதுபாநத்தைப் பண்ணி, அத்தால்வந்த ஹர்ஷத்தாலே சிறகுவிரித்து உலாவாநின்றுள்ள நீலப்பூவின் நிறம்போலேயிருக்கிற நிறத்தையுடையனாய். இத்தால் ஸ்ரமஹரமாய் செவ்வியையுடைத்தான நீலப்பூவென்கை. பொற்பு—அழகு. விண்டல்—அலர்தல்.

(என்றிவை நிறைந்தகாலநான்குமாய்) ஆஸ்ரிதார்த்தமாகக் கொள்ளும் அந்நிறங்கள குறைவற்றிருந்துள்ள சதுர்யுகமாய். இந்நிறங்கள் நாலுயுகத்திலும் குறைவற்றிருக்கை.(மாலின்நீர்மை) இப்படியிருக்கிற ஸர்வேஸ்வரனுடைய நீர்மையை—இஸ்ஸௌலப்யத்தை. (வையகம் மறைத்ததென்னநீர்மையே) பூமியிலுள்ளார் ஆஸ்ரயியாதே காற்கடைக்கொண்டது என்ன துர்வாஸனையினாலேதான். ''மஞ்சாக்ரோஶந்தி - மஞ்சாக்ரோஶந்தி'' என்னுமாபோலே ததந்தர்ப்பூதரைச் சொல்லுகிறது. ''மறைத்தது'' என்கிறது. (ச) ''குணமாயாஸமாவ்ருத: - குணமாயாஸமாவ்ருத:'' என்னுமாபோலே பகவதநுக்ரஹத்தையும் அதிஶயித்திருப்பதே! அநாதிகால துர்வாஸனை யென்கை. .... .... .... .... (சச)

(க) திருநெ-ங. (உ) தி-மொ-ச-கூ-அ.
(ங) வி-பு-கூ-க-சக. (ச) ஸ்ரீத-க-

மூ,—
மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொல் மண்ணுளே மயங்கிநின்று
எண்ணுமெண்ணகப்படாய்கொ லென்னமாயைநின்றமர்
கண்ணுளாய்கொல் சேயைகொ லனந்தன்மேற்கிடந்தவெம்
புண்ணியா புனந்துழா யலங்கலம்புனிதனே. (சுரு)

---

நாற்பத்தைந்தாம்பாட்டு. (மண்ணுளாய்கொலித்யாதி).

| | |
|---|---|
| மண்ணுளாய் | லீலாவிபூதியிலே ப்ராக்ருத ஸஜாதீயனு யவதரித்தாய். |
| கொல் | இதென்னயிருக்கிறது. |
| விண்ணுளாய் | பரமபதவர்த்திகளான நித்யஸூரிகளுக்கு |
| ஆய் | நிர்வாஹகனு யிராநின்றவனே |
| கொல் | இதென்னயிருக்கிறது; |
| மண்ணுள் | லீலாவிபூதியிலே [ற |
| மயங்கி நின்று | விபரீதஜ்ஞாநங்களையுடையராய் வர்த்திக்கி |
| எண்ணும் | ப்ரயோஜநாந்தரங்களையே சிந்தித்துக் கொண்டிருக்கிற ஸம்ஸாரிகளுடைய |
| எண் | மநோரதத்துக்கு |
| அகப்படாய் | விஷயமன்றியிலே யிருக்கிறவனே |
| கொல் | இதென்னயிருக்கிறது. |
| நின்தமர் | உன் திருவடிகளிலே அநந்யப்ரயோஜநரா யிருப்பார்க்கு |
| கண்ணுளாய் | சக்ஷுர்விஷயனுய்; |
| கொல் | இதென்னயிருக்கிறது. |
| சேயை | ஆச்ரிதவிரோதிகளுக்கு தூரஸ்தனுய் |
| கொல் | இதென்னயிருக்கிறது. ("சேய்" என்று தூரத்துக்குப்பெயர்). |
| அனந்தன்மேல் கிடந்த | திருவனந்தாழ்வான்மேலே சாய்ந்தருளின, |
| எம் | என்னுடைய |
| புண்ணியா | அநந்யார்ஹ சேஷத்வத்தைஎனக்குஉணர்த்தினவனே; |

(வாஸோவஸபநயத்தி-வாணு): - வாஙஸஹஸ்ராவது

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

புனந்துழாய } மாலாரூபேண விந்யஸ்தமான திருத்து
லங்கலம் } ழா யிதழ்களை யுடைய
புனிதனே பரமபாவநனே!
என்னமாயை என்னவாஸ்சர்யம். (சரு)

அவ.—நாற்பத்தைந்தாம்பாட்டு. பகவத் ஸௌலப்யத்தையும் அதிஸயித்திருந்துள்ள ஸம்ஸாரிகளுடைய துர்வாஸநையால் வந்த இழவைச்சொன்னார் கீழ்; இதில்-அவர்களிலே அந்யதமனான வெனக்கு தேவரீருடைய பரத்வஸௌலப்யங்களையும், ஆஸ்ரிதர்க்கெளியனாய் அநாஸ்ரிதர்க்கு அரியனா யிருக்கிறபடியையுங்காட்டி என்னை அநந்யார்ஹமாக்குவதே! இதென்ன ஆஸ்சர்யமென்கிறார்.

வ்யா.—(மண்ணுளாய்சொல்) (க) "அவாப்தஸமஸ்தகாம:-அவாக்யநாதர:" என்கிறபடியே பூர்ணரானதேவரீர்ஸர்வஸமாஸ்ரயணீயராகைக்காக ஸாபேக்ஷராய், அப்ராக்ருதமாய் அதீந்த்ரியமான விக்ரஹத்தை ப்ராக்ருதஸஜாதியமாக்கிக்கொண்டு அவதரித்து சக்ஷுர்விஷயமானாய். "கொல்" என்று - ஏகாஸ்ரயத்திலே விருத்ததர்மங்கள் சேர்கையாலே, இதென்னாயிருக்கிறதென்கிறார். அதாகிறது-ஸீதாவியோகத்தில் கலக்கமும், ஒருதிர்யக்குக்கு மோக்ஷப்ரதாநமும். (உ) "ப்ரஹ்மாதிதேவ-ப்ருச்சாமிஞ்சந" (விண்ணுளாய்சொல்) அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்த(மு)ரானநித்யஸூரிகளுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாத பெருமையையுடையையாய். (கொல்) நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருக்கையும் குஹ ஸபரீ ஸுக்ரீவாதிகளுக்கு நிர்வாஹ்யனாயிருக்கையுமாகிறவிது என்னாயிருக்கிற

அரு.—நாற்பத்தஞ்சாம்பாட்டு. இரண்டும் ஏகாஸ்ரயத்திலே யுண்டென்று சொன்னவிடமுணர்வோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ருச்சாமிஞ்சந) என்று. (சரு)

(க) சாந்தோ-௩-கச-உ. (உ) அதிமாநுஷஸ்த-கஎ.

தோ! என்கிறார். (மண்ணுளே மயங்கிநின்றெண்ணுமெண்ணகப்படாய்கொல்) இப்பரத்வமெல்லாமுண்டாயிருக்கச்செய்தே இப்ரக்ருதி ஸம்பந்தத்தாலே வந்த விபரீதஜ்ஞாநத்தை யுடையராய் ப்ரயோஜநாந்தரபரரான ஸம்ஸாரிகள் மநோரதிக்கும் மநோரதத்துக்கும் அவிஷயனாய் நிற்கிறது. (என்னமாயை) என்கிற விது - இப்பாட்டின் முடிவிலே க்ரியையாகக் கடவது.

(நின்தமர் கண்ணுளாய்கொல்) உன் திருவடிகளிலே அநந்ய ப்ரயோஜநராயிருப்பார்க்கு, (க) "பரித்ராணாய ஸாதூநாம்" என்கிறபடியே உள்ளபடியை ஸாக்ஷாத்கரிப்பியாநிற்புதி. (சேயைகொல்) ஆஶ்ரித விரோதிகளுக்கு உன்னையறியவொண்ணாதே எதிரிட்டுமுடிந்துபோம்படி தூரஸ்தனாயிருப்புதி. (க) "விநாஶாய ச து³ஷ்க்ருதாம்-விநாஶாய ச துஷ்க்ருதாம்" என்னக்கடவதிறே. (கொல்) ஸம்பந்தம் ஸமாநமாயிருக்க அநந்யப்ரயோஜநர் பக்கலிலும் தத்விரோதிகள்பக்கலிலுமுண்டான இஸ்வபாவங்கள் என்னாயிருக்கிறதோ. இவ்விருத்த தர்மாஶ்ரயத்வமாகிற தேவரீருடைய ப்ரபாவம் ப்ரமாணப்ரஸித்தமாகையாலே பொய் யென்னவொண்ணாது. விருத்தஸ்வபாவங்களாகையாலே மெய் யென்னவொண்ணாது. (அணந்தன் மேல் கிடந்த எம்புண்ணியா) அதெல்லாங்கிடக்க, திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தருளினவடிவைக்காட்டி தேவரீருடைய ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும் என்னுடைய அநந்யார்ஹ ஶேஷத்வத்தையும் எனக்கு உணர்த்தினவனே. "ஸ்த்ரீத்வம் நயதி-ஸ்த்ரீணாம் - பும்ஸ்த்வம் நயதி புண்யம்" என்கிறபடியே இருவருடைய ஸ்வரூபத்தையும்ப்ரகாஶிப்பிக்கைக்கு உபாயமானவனே.

(புனந்துழாயலங்கலம்புனிதனே) தோளும்தோள்மாலையுமான அழகைக்காட்டி, விஷயாந்தரருசியென்ன, (உ) "சோரேணாத்மாபஹாரிணா - சோரேணாத்மாபஹாரிணா" என்கிற ஆத்மாபஹாரமென்ன, இவ்வஶக்திகளைத் தவிர்த்த பரமபாவநனே, (என்னமாயை) இதென்ன ஆஶ்சர்யம். என்திறத்தில் நீசெய்தருளின இவை என்றால் பரிச்சேதிக்கலாயிருந்ததில்லை யென்கிறார். (௬௫)

---

(க) கீ-௪-௮. (உ) பார-உத்-௭௧-௯௪.

மூ.—தோடுபெற்றதண்டுழா யலங்கலாடுசென்னியாய்
கோடுபற்றியாழியேந்தி யஞ்சிறைப்புள்ளூர்தியால்
நாடுபெற்றநன்மைநண்ண மில்லையேனுநாயினேன்
வீடுபெற்றிறப்பொடும் பிறப்பறுக்குமாசொலே. (சசு)

---

நாற்பத்தாறும்பாட்டு. (தோடித்யாதி).

| | |
|---|---|
| தோடு | கேஸரங்களை (ஏடும்தோடும் பூவினிதழென்னக்கடவது) |
| பெற்ற | உடைய |
| தண் | ஸ்ரமஹரமான |
| துழாய் | திருத்துழாயினுடைய |
| அலங்கல் | திருமாலையை யுடையவனே! (படலை யலங்கல மென்னக்கடவது) |
| ஆடு | ப்ரணதர்பக்கல் மூகப்ரதாநத்தாலே அசைந்துவருகிற |
| சென்னியாய் | திருமுடியை யுடையவனே! |
| கோடு | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை (கம்புகோடு சங்கெனப்படும்) |
| பற்றி | தரித்து |
| ஆழி | திருவாழியாழ்வானை |
| ஏந்தி | தரித்து |
| அம் | அழகிதான |
| சிறை | திருச்சிறகையுடைய |
| புள் | பெரியதிருவடியை |
| ஊர்தி | நடத்தாநின்றாய்; |
| ஆல் | ஹந்த;(துக்காதிஶய த்யோதகம்) |
| நாடு | அக்காலத்திலிருக்கும் லோகங்கள் |
| பெற்ற | லபித்த |
| நன்மை | பெரியதிருவடியை மேல்கொண்டு ஸஞ்சரித்த விந்த நன்மையை |
| நண்ணமில்லையேனும் | கிட்டப்பெற்றிலேனாகிலும் |

| | |
|---|---|
| நாயினேன் | திறந்த வாசல்கள்தோறும் திரியும் பதார்த்தம் போலே அத்யந்தாஉஸாஷத்தியுடையனான நான் |
| வீடு | மோக்ஷத்தை |
| பெற்று | லபித்து |
| இறப்பொடும் | இந்த ஶரீர விமோசநத்தோடே |
| பிறப்பு | இனியொரு ஶரீரபரிக்ரஹத்தை |
| அறுக்கும் | போக்கும் |
| மாறு | உபாயம் |
| சொல் | அருளிச்செய்யவேணும். (ருசு) |

அவ.—நாற்பத்தாறும்பாட்டு. "அனந்தன்மேல்கிடந்தஎம்புண்ணியா" என்று - ஸ்வரூபத்தை அறிவிக்கையாலே ஸம்ஸாரத்திலே வந்து ஆவிர்ப்பவித்தும் அவதரித்தும் பெரிய திருவடிதோளிலேயேறி ஆஶ்ரித ஸந்நிதானத்திலே சென்று ரக்ஷித்த காலமெல்லாம் இழந்தேன், இனி இழவாதபடி விரோதி நிவ்ருத்தி பூர்வகமாகநான் உன்னைப்பெறும் விரகு அருளிச்செய்ய வேணுமென்கிறார்.

வ்யா. — (தோடுபெற்ற தண்டுழாயலங்கலாடு சென்னியாய்) உன் திருமேனியின் ஸ்பர்ஶத்தால் தழைத்துக்குளிர்ந்திருந்துள்ள திருத்துழாய் மாலையை புஷ்டையயாய், ப்ரணதஜநங்கள் பக்கல் முகப்ரதாநத்தாலே அசைந்துவருகிற திருமுடியையுடையையாய். ஸர்வேஶ்வர ஸ்பர்ஶமிறே-சேதநர்க்கு அஸங்கோசத்துக்கும் தாபஶாந்திக்கும்ஹேது. இத்தால் - கண்டபோதே ருசிபிறக்கும்படியான ஒப்பனையழகையும், ஆபிமுக்ய்யம் பண்ணினார்பக்கல் முகப்ரதாநம்பண்ணும் நீர்மையையும் சொல்லிற்று. (தோடு) பூவிதழ்.

(கோடுபற்றியாழியேந்தி) ஆஶ்ரித விரோதிகளை த்வநியாலே மண்ணுண்ணும்படி பண்ணுகைக்கு ஸ்ரீ பாஞ்சஜந்யத்தைப்பற்றி, (க)"கருதுமிடம் பொருது" என்கிறபடியே எதிரிகளைச் சென்றழிக்கைக்குத் திருவாழியை ஏந்தி. ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்குமளவன்றியே அவர்கள் விரோதிகளையும் அழியச்செய்யும் பரிகரங்களை

அரு.—நாற்பத்தாறும்பாட்டு. ஸ்பர்ஶத்தாலே திருத்துழாய் தழைக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரஸ்பர்ஶமித்யாதி). (கோடு) ஸ்ரீபாஞ்சஜந்யம். (சகூ)

(க) தி-வாய்-க0-சு.

மூ.—காரொடொத்தமேனி நங்கள் கண்ண விண்ணிணாதனே
நீரிடத்தராவணைக்கிடத்தி யென்பரன்றியும்
ஓரிடத்தையல்லை யெல்லையில்லை யென்பராதலால்
சேர்விடத்தைநாயினேன் தெரிந்திறைஞ்சுமாசொலே. (சஎ)

---

யுடையவனென்கை. (அஞ்சிறைப்புள்ளூர்தியால்) ஸ்வஸ்பர்ஶத்தாலே அழகுபெற்ற திருச்சிறகையுடைய பெரியதிருவடியை நடத்தாநிற்றி. அவனை மேற்கொண்டால் ஈஶ்வரனுக்கு அலங்காரமாயிருக்கும்படியான அழகைச் சொல்லிற்றாகவுமாம். இத்தால் - ஆஶ்ரிதரிருந்த ஸம்ஸாரத்திலே ஆபத்தஶைகளிலே சென்று முகங்காட்டி ரக்ஷிக்கும் நீர்மையைச் சொல்லிற்று. இப்படி தன்னை தூளி(ஷ)தாநம் பண்ணின காலமெல்லா மிழந்தேனென்கிறார். "ஆல்" என்று - விஷாதாதிசயஸூசகம்.

(நாடுபெற்ற நன்மை நண்ணமில்லையேனும்) இருந்ததே குடியாகக் காணலாம்படி பெரியதிருவடியை மேற்கொண்டு ஸஞ்சரித்த இந்த நன்மையை நான் கிட்டப்பெற்றிலேனாகிலும். நான் விமுகனான காலமெல்லா மிழந்தாலும் எனக்கு அருசிபிறந்தவின்றும் தேவரீருள்ளீராயிருக்க இழக்கவேணுமோவென்கை. (நாயினேன் வீடுபெற்று) அநந்யகதியான நான் பகவத்ப்ராப்திரூபமான யோக்ஷத்தைப்பெற்று. (நாயினேன்) அநாதிகாலம் இறந்து கிடந்தவாசமெல்லாம் நுழைந்து ஸர்வராலும் பரிபூ(ஹ)தனான நான். உகந்து தொட்டாலும் எதிர்த்தலைக்கு அஶுத்தியை விளைப்பிக்கும்நிஹீநதையையுடையநான்.

(வீடுபெற்று) இப்படிப்பட்டிருந்துள்ள நான் உனக்கு ஸத்ருஶரான நித்யஸூரிகள் பேற்றைப்பெற்று. அகிஞ்சநனானநான், பூர்ணனுடைய பேற்றைப்பெற்று. (இறப்பொடும்பிறப்பறுக்குமாசொலே) இஶ்ஶரீரத்தினுடைய விமோசநத்தோடே இனியொரு ஶரீரபரிக்ரஹம் பண்ணாதபடி ஸம்ஸாரத்தை யறுக்கும் விரகு அருளிச்செய்யவேணும். சிறைக்கூடத்திலிருந்த ராஜகுமாரன் தலையிலே அபிஷேகத்தைவைத்து, பின்பு சிறையை வெட்டிவிட்டாப்போலே, ப்ராப்தி முன்பாக விரோதியைப்போக்கும் விரகு அருளிச்செய்யவேணும். (சகூ)

நாற்பத்தேழாம்பாட்டு. (காரித்யாதி)

காரொடு காளமேகத்தோடு

ஒத்த ஸத்ருஶமான
மேனி திருமேனியுடைய
நங்கள் அப்போதே ஆஶ்ரிதர்க்கு அநுபாவ்யமாக்கின
கண்ண க்ருஷ்ணனே !
விண்ணின் நாதனே } நித்யஸூரிகளுக் கநுபாவ்யனே
நீர் க்ஷீராப்தியினுடைய
இடத்து ப்ரதேஶத்திலே
அராவணை திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே
கிடத்தி ஶ்வேதத்வீப வாஸிகளுக்கு அநுபாவ்யனும்படி கண்வளர்ந்தருளுகிறாய்;
என்பர் வேதவைதிகர்கள் சொல்லுவர்கள்.
அன்றியும் அதொழியவும்
ஓரிடத்தையல்லை } ஒருவிடத்திலே வர்த்திக்கிறாயில்லை; (ஸர்வகதனென்கை)
எல்லையில்லை தஹராதி வித்யைகளிலே சொல்லுகிற ஆஶ்ரணீயஸ்தலங்களுக்குப் பரிச்சேதமில்லை;
ஆதலால் தேஶகால விப்ரகர்ஷ அதிக்ருதாதிகாரத்வ ப்ரதிபத்த்ய விஷயத்வங்களாலே கீழ்ச்சொன்ன வினை ஆஶ்ரயணீய ஸ்த்தலமல்லாமையாலே
நாயினேன் அதி நிஹீநனான நான்
சேர்விடத்தை ஆஶ்ரயணீயஸ்த்தலத்தை
தெரிந்து இதமென்று புத்திபண்ணி
இறைஞ்சுமாறு } ஆஶ்ரயிக்கலாம்படி
சொல் அருளிச்செய்யவேணும். (சஎ)

அவ.—நாற்பத்தேழாம்பாட்டு. பரவ்யூஹவிபவங்களடங்க ஆஶ்ரயணீயஸ்தலமன்றோ, அதிலே ஓரிடத்தைப்பற்றி ஆஶ்ரயித்து நம்மைப்பெறமாட்டீரோவென்ன; அவ்விடங்களெனக்கு நிலமல்ல,

இனிஎனக்கு ப்ரதிபத்திபண்ணி ஆஸ்ரயிக்கலாவதோரிடத்தை அருளிச்செய்யவேணுமென்கிறார்.

வ்யா'—(காரொடொத்த மேனிநங்கள்கண்ண) காளமேகத்தோடு ஸத்ருஸமாய் ஆகர்ஷகமான வடிவையுடையையாய், அத்தை ஆஸ்ரிதர்க்கு ஸ்வம்மாக்கிவைத்த க்ருஷ்ணனே. இத்தால்-காலவிப்ரகர்ஷத்தால் எனக்கு ஆஸ்ரயிக்க விரகில்லையென்கிறார். அந்தக்காலவிப்ரகர்ஷமாகிற குற்றமின்றிக்கே நித்யமாயிருக்கிற பரமபதத்தில் வடிவைப்பற்றி ஆஸ்ரயிக்கமாட்டீரோவென்ன; (விண்ணின்நாதனே) அவ்வடிவை நித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணுமத்தனையொழிய தேஸ விப்ரகர்ஷத்தாலே எனக்காஸ்ரயிக்க விரகில்லையென்கை.

(நீரிடத்தராவணைக்கிடத்தி) தேசகால விப்ரகர்ஷங்களாகிற குறையின்றிக்கே க்ஷீராப்தியிலே நித்ய ஸந்நிஹிதரல்லோமோ வென்ன; அவ்விடமும் ஸ்வேதத்வீபவாஸிகளுக்குக் காதாசித்கமாகக் காணலாமித்தனையல்லது அஸ்மதாதிகளுக்கு வரவொண்ணாது. (என்பர்) இவ்வர்த்தம் வேதங்களும் ஜ்ஞாநாதிகரான வைதிகர்களும் சொல்லக்கேட்டேபோமித்தனை. (௧) "அஜாயமாநோ பஹுதா விஜாயதே-அஜாயமாநோ பஹுதாவிஜாயதே" (௨) "யத்ராவதீர்ண: க்ருஷ்ணாக்ய: பரம் ப்ரஹ்ம நராக்ருதி - யத்ராவதீர்ண:க்ருஷ்ணாக்ய: பரம் ப்ரஹ்ம நராக்ருதி" என்று க்ருஷ்ணாவதாரமும் கேட்டே போருமித்தனை. (௩) "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஸ்யந்தி ஸூரய:--தத்விஷ்ணோ: பரமம்பதம் ஸதாபஸ்யந்தி ஸூரய:" என்றுபரமபதத்திலிருப்பும் ஸ்ருதிகள் சொல்லக்கேட்டவித்தனை, (௪) "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: - ஏஷநாராயணஸ் ஸ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதந:" என்று - க்ஷீராப்தியில் வாஸமும் ஜ்ஞாநாதிகர் சொல்லக்கேட்டவித்தனை. (நீரிடத்து) கடலிடத்து. (அராவணை) அரவணை.

(அன்றியும்) அதொழியவும். (ஓரிடத்தையல்லை) ஓரிடத்திலே வர்த்திக்கிறாயல்லை; ஸர்வகதனென்கை. இதுவும், (௫) "மாமேவ யே ப்ரபத்யந்தே-மாமுபாஸ்வ" (௫) "மாமேவவிஜாநீஹி-மாமேவவிஜாநீஹி" என்றித்யாதிகளிலே ஸர்வாஸ்ரயமாக உபாஸநாத்ரைவித்யத்திலே சொல்

(௧) யஜு-ஆர-௩. (௨) வி-பு. (௩) ஸாம-உத்தா- (௪) ஹரிவம்ஸ. (௫) கௌஷீ-௩-௧.

மூ.—குன்றினின்றுவானிருந்து நீள்கடற்கிடந்துமண்
ஒன்றுசென்றதொன்றையுண் டதொன்றிடந்துபன்றியாய்
நன்றுசென்றநாளவற்றுள் நல்லுயிர்படைத்தவர்க்கு
அன்றுதேவமைத்தளித்தவாதிதேவனல்லையே. (சஅ)

லப்பட்டதிறே. (எல்லையில்லை என்பர்) தஹராஸ்ாண்டில்ய வைஸ்வாநரோபகோஸலாதி வித்யைகளிலே சொல்லுகிற ஆஸ்ரயணீய ஸ்தலங்களுக்குளெல்லையில்லையிறே; அவையும்,(ச)''யோ ஹ்ரா நவேஷ யமாத்மாநவேத'' என்று-ப்ரதிபத்தி விஷயமல்லாமையாலும் த்ரைவர்ணிகாதிகாரமாகையாலும் நிலமல்ல.

(ஆகலால்) பரமபதம்தேசத்தால் விப்ரக்ருஷ்டமாகையாலும், அவதாரம் காலத்தால் விப்ரக்ருஷ்டமாகையாலும், க்ஷீராப்தி அதிக்ருதாதிகாரமாகையாலும், அந்தர்யாமித்வம்-ப்ரதிபத்திக்கு அபூமியாகையாலும், த்ரைவர்ணிகாதிகாரமாகையாலும் நிலமல்ல, (சேர்விடத்தை நாயினேன்தெரிந்திறைஞ்சுமா சொலே) அயோக்யனான் ''(ஐசு) இதம்'' என்று புத்திபண்ணி ஆஸ்ரயிக்கலாம்படி ஆஸ்ரயணீய ஸ்த்தலத்தை யருளிச்செய்யவேணும். (சஎ)

நாற்பத்தெட்டாம்பாட்டு. (குன்றித்யாதி).

| | |
|---|---|
| குன்றில்நின்று | திருமலையிலே நின்று |
| வானிருந்து | பரமபதத்திலே யிருந்து |
| நீள் | அஸங்குசிதமாக |
| கடல் | க்ஷீராப்தியிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளி |
| மண்ணொன்று | ஓர்மண்ணை, ப்ரதாநமான பூமியை |
| சென்று | நடந்து - அளந்து, (அன்றிக்கே), |
| மண் | பூமியிலே |
| ஒன்று | ஓரிடத்திலே |
| சென்று | அவதரித்து, என்றுமாம்; |
| அதொன்றை | ப்ரதாநமான அந்தபூமியை |
| உண்டு | வயிற்றிலேவைத்து |
| பன்றியாய் | மஹாவராஹமாய் |

(ச) ப்ருஹ-ரு-எ-உஉ.

| | |
|---|---|
| அதொன்றி டந்து. | ப்ரதாநமான அந்தபூமியை உத்த(ஐ)ரித்து |
| நன்று | மஹாவராஹ ஸாந்நித்யத்தாலே நன்றாக |
| சென்றநாள வற்றுள் | சென்றநாளிலே, வராஹ கல்பத்திலே யென்றபடி; |
| நல் | ஶாஸ்த்ராதிகாரத்தாலே ஶ்ரேஷ்ட்டரான |
| உயிர் | மநுஷ்யர்களை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| அவர்க்கு | அந்தமநுஷ்யர்களுக்கு |
| அன்று | ரஜஸ்தம꞉ ப்ராசுர்யகாலத்திலே |
| தேவு | ஆஶ்ரயணீய தேவஜாதியை |
| அமைத்து | ஸ்ருஷ்டித்து |
| அளித்த | இப்படி பரஹிதங்களையே ப்ரவர்த்திப்பிக்கிற |
| ஆதி | காரணபூதரான் |
| தேவன் | நிருபாதிகதேவன் |
| அல்லயே | அன்றோ? (சஅ) |

அவ,—நாற்பத்தெட்டாம்பாட்டு. ஆஶ்ரயணீயஸ்த்தலங்களை ஸாமாந்யேந பரித்துவைத்தோமாகில் அவற்றிலே ஒன்றைப் பற்றி ஆஶ்ரயிக்கும் ஆஶ்ரிதர்க்கு ஆஶ்ரயணாநுகூலமாக பலப்ரதனாயிருக்குமதொழிய, உமக்கு ஆஶ்ரயணீயஸ்த்தலத்தை விஶேஷித்துச் சொல்லுகை நமக்கு ப(ஞ)ரமோவென்ன; ஆஶ்ரிதாநாஶ்ரித விபாக(ஸா ம)மன்றிக்கே நின்றநின்ற நிலைகளிலே பரஹிதமே செய்யும் ஸ்வபாவனானபின்பு என்னபேக்ஷிதம் செய்கையும் உனக்குபரமன்றோ'வென்கிறார்.

வ்யா —(குன்றில் நின்று)(க)"கானமும் வானரமும் வேடுமுடைவேங்கடம்" என்கிறபடியே தாழ்ந்தார்க்குமுகங்கொடுக்கைக்காகச் சிலரபேக்ஷியாதிருக்கத் திருமலையிலே நின்றநிலை. (வான்இருந்து) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(ஞ)ரான நித்யஸூரிகளுக்குநித்யாநுபவம் பண்ணுகைக்குப் பரமபதத்திலேயிருக்கிற பெரியமேன்மையையுடையயாயிருக்கச்செய்தேயன்றோதிருமலையிலே வந்து நின்றது. (நீள்கடல் கிடந்து) வாநரங்களையும் வேடரையும்போ

(க)ச-திருவ-சஎ;

லன்றிக்கே "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கு ஆபத்துவந்தபோது கூக்குரல் கேட்கைக்காகவன்றே (௧) "தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்கிறபடியே - அஸங்குசிதமாகக்கண்வளர்ந்தருளுகைக் கீடாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளிற்று.

(மண்ணொன்று சென்று) இந்த்ரன் இழந்ததும் மஹாபலி அபஹரித்ததும் த்ரைலோக்யத்தளவாயிருக்க, ப்ரஹ்மலோகபர்யந்தமாக, ஒருத்தரபேக்ஷியாதிருக்க, எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்திலையோ; ப்ரதாநமான பூமியையளந்து. "சென்று" என்று-பதவிக்ஷேபமாய், அளந்தென்றபடி. பூமியிலே ஒரோவிடங்களிலே சென்று-அவதரித்தென்னவுமாம். (அதொன்றையுண்டு) அந்தப்ரதாநமான பூமியை ப்ரளயங்கொள்ளப்புக, அர்த்தித்வ நிரபேக்ஷமாகத்திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்திலையோ. (அதொன்றிடந்து பன்றியாய்)மஹாவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியைஉத்த(ஸ) தரிப்பித்து.

(நன்றுசென்ற நாளவற்றுள் நல்லுயிர்படைத்து) நன்றாகச் சென்ற நாள்களிலே மநுஷ்யர்களை ஸ்ருஷ்டித்து. "நன்றுசென்ற நாள்" என்று - மஹாவராஹ வேஷத்தைக் காணலாங் காலமென்னுமத்தாலே வராஹகல்பத்தைக் கொண்டாடுகிறார். "நல்லுயிர்" என்று-ஶாஸ்த்ராதிகாரத்தாலே ஶ்ரேஷ்டரான மநுஷ்யர்களைச் சொல்லுகிறது. (௨) "[illegible] - துர்லபோமாநுஷோதேஹ:" என்னக்கடவதிறே. (அவர்க்கன்று தேவமைத்து) அம்மநுஷ்யர்களுக்கு, ரஜஸ்தமஸ்ஸுக்கள் மேலிட்டு பகவத்விமுகரானவன்று ஆஶ்ரயணீயராக தேவஜாதியை ஸ்ருஷ்டித்து. (அளித்த ஆதிதேவனல்லையே) இப்படி நின்ற நின்ற நிலைகளிலே பரஹிதங்களை ப்ரவர்த்திப்பிக்கிற ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரனல்லையோ. ஆராதகரான மநுஷ்யர்களையும் ஆராத்யரான தேவர்களையும் ஸ்ருஷ்டிக்கையாலே ஜகத்காரணபூதனை நிருபாதிகதேவனாகையாலே ஸர்வஸமாஶ்ரயணீயனல்லையோ. (௩) "[illegible] - ஸஹஸ்ரஶீர்ஷம் தேவம்" என்றும், (௪) "[illegible] - ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ" என்றும் சொல்லக்கடவதிறே. (௪௮)

(௧) தி-வாய்-அ-௧0-அ.     (௨) பாக-௧௧-௨-௨௧.
(௩) தை-நா-௧௧.     (௪)

மூ'—கொண்டைகொண்டகோதைமீது தேனுலாவுகூனிகூன்
உண்டைகொண்டரங்கவோட்டி யுள்மகிழ்ந்தநாதனூர்
நண்டையுண்டுநாரைபேர வாளைபாயநீலமே
அண்டைகொண்டு கெண்டைமேயு மந்தணீரரங்கமே. (௪௯)

---

நாற்பத்தொன்பதாம்பாட்டு. (கொண்டையித்யாதி)

| | |
|---|---|
| கொண்டை | மயிர்முடியிலே |
| கொண்ட | வைத்திருக்கிற |
| கோதை | மாலையினுடைய |
| மீது | மேலே |
| தேன் | வண்டுகள் |
| உலாவு | ஸஞ்சரியாநின்றுள்ள |
| கூனி | மந்தரையினுடைய |
| கூன் | முதுகில் கூனை |
| உண்டை கொண்டு | வில்லிலே உண்டையைவைத்து |
| அரங்க | உள்ளேபுகும்படி |
| ஓட்டி | தெறித்து |
| உள்மகிழ்ந்த | ஹ்ருஷ்டனான |
| நாதனூர் | சக்ரவர்த்தித் திருமகன் வர்த்திக்கிற தேசம். |
| நண்டை | குளீரத்தை |
| உண்டு | தின்று |
| நாரை | நாரையானது |
| பேர | நடக்க, |
| வாளை | மத்ஸ்யவிஶேஷமானது |
| பாய | நாரையைக்கண்டு துள்ள, |
| நீலமே | கருநெய்தல்களை |
| அண்டைகொண்டு | அரணாகக்கொண்டு |
| கெண்டை | மத்ஸ்யவிஶேஷங்கள் |
| மேயும் | நிர்ப்பயமாக மேயாநின்றுள்ள |
| அம் | அழகிய |

| | |
|---|---|
| தண் | ஶ்ரமஹரமான |
| நீர் | ஜலஸம்ருத்தியையுடைய |
| அரங்கமே | கோயில். (ஏ - இது அநுபவத்தினுடைய ஆகாரம்) |

இப்பாட்டில் ப்ரபந்நவிஷயம் ஸ்வாபதேசம். (௪௯)

அவ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு. "சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமா சொலே" என்றவிவர்க்கு இவரிருந்த பூமியிலே சக்ஷுர்விஷயமாய், அவதாரங்களிலுண்டான நீர்மைகளும் இழக்கவேண்டாதபடி குணபூர்த்தியோடே கோயிலிலேகண்வளர்ந்தருளுகிற ஸம்ருத்தியைக்காட்டக் கண்டநுபவிக்கிறார்.

வ்யா.—(கொண்டை கொண்டகோதைமீது தேனுலாவு கூனி) மயிர்முடியிலேயுண்டான மாலையின்மேலே வண்டுகள் ஸஞ்சரிக்கும்படியான ஒப்பனையாலே ஸ்ப்ருஹணீய வேஷையான கூனி, இத்தால் - சேதநனுடைய நிஷ்க்ருஷ்டஸ்வரூபம் ஸ்ரீகௌஸ்துபம்போலே ஈஶ்வரனுக்கு ஸ்ப்ருஹணீயமென்று கருத்து. (கூனிகூன்) கீழ்ச்சொன்னவடிவுக்கும் ஒப்பனைக்கும் சேராதே அவளுக்கு நிரூபகமாய்ப்போந்த கூனை. இத்தால்-ஸ்வரூபவிரோதியாய், "தேவோஹம், மநுஷ்யோஹம்" என்று நிரூபகமுமாய் ஸ்வரூபத்துக்கு அவத்யமுமாயிருந்துள்ள அஹங்காரத்தை நினைக்கிறார். (உண்டைகொண்டரங்கவோட்டி) லீலார்த்தமான வில்லிலே உண்டையைவைத்துக் கூனை உள்ளே புகும்படியோட்டித் தெறித்து. அவத்யமான அஹங்காரத்தை அநாயாஸேநப்போக்க வல்லசக்தியை நினைக்கிறார். (உள்மகிழ்ந்த நாதனூர்) ஆஶ்ரிதர்க்கு அவத்யமான அஹங்காரத்தை அநாயாஸேநப் போக்குகையாலே ஹ்ருஷ்டனாய், அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்ட சக்ரவர்த்தித்திருமகன் வர்த்திக்கிறதேசம். இத்தால்—ஆஶ்ரிதருடைய அவத்யங்களைப்போக்கி உகப்பானுந்தானேயென்கை. ஆக, சக்ரவர்த்தித்திருமகனுடைய நீர்மையும் நம்பெருமாள் பக்கலிலேகாணலாமென்கிறார்.

---

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு. (கொண்டைகொண்ட கோதை) கொண்டையிலே உண்டாயிருக்கிற கோதை. (கொள்கை) உடைத்தாகை. (கோதை) மாலை, (அரங்க) மறைய.

கசஉ திருச்சந்தவிருத்தம்சகூபாகொண்டைகொண்டவ்யாக்யாநம்.

(நண்டையுண்டு நாரைபேர) நண்டைவிழுங்கினநாரையானது விழுங்கினதின்கனத்தாலே மலைபேர்ந்தாப்போலே பேர. இத்தால்-பாத(வாய)கபதார்த்தத்தினுடைய கனம்சொல்லிற்று. (வாளைபாய). அந்நாரைக்குத் தன்மேலே நோக்கென்று நினைத்து பயப்பட்டு வாளையானதுதுள்ள. (நீலமே அண்டைகொண்டு கெண்டைமேயும்) அதின் மிருதியைக்கண்டு, கெண்டையானது பயத்தாலே பரப்புமாறப்பூத்த நீலத்தினிருட்சியை அண்டைகொண்டு, அரணுக்குள்ளே வர்த்திப்பாரைப்போலே, பயங்கெட்டு மேய்ந்துவர்த்திக்கிறதேசம். இத்தால்-ஸம்ஸாரிகளை நலிகிற அஹங்காரத்தைக் கண்டு பீதராய், முமுக்ஷுக்களாய் உபாஸநத்திலே இழிந்த ஸாதகரைக்கண்டு இவையிரண்டும் பயஸ்தாநமென்று ஸர்வேஸ்வரனையே உபாயமாகப்பற்றி நிர்ப்பரராய், ஸ்வரூபாநுரூபமான பகவத்குணாநுபவமே யாத்ரையாய் வர்த்திக்கும் ப்ரபந்நர்க்கு ஸ்மாரகமாயிருக்கிறதாய்த்து-கெண்டைகளினுடைய யாத்ரையென்கை. (அந்தண் நீரரங்கமே) அழகிதாய் ஶ்ரமஹரமான ஜலஸம்ருத்தியை யுடைத்தானகோயில். தாபத்ரயாதுரர்க்கு தாபஹரமான தேசமென்கை. "நீலமேயண்டைகொண்டு" என்று-ஶ்யாமமாய்ஸுகுமாரமான நீலத்தைஅண்டைகொண்டு என்கையாலே - பெருமாளுடைய ஸௌந்தர்யமே அபாஶ்ரயமும், அத்தை ஆஶ்ரயித்திருப்பார்க்கு போக்யமுமதுவே யென்று கருத்து, இப்பாட்டில் சொன்ன ஸ்வாபதேசங்கள் இவர்க்கு நிலமல்லாதபோது தேசத்தை ஆஶ்ரயித்தநுபவிக்கஇழிந்தவர்க்கு இப்பாட்டால் ஒருப்ரயோஜநமில்லை. (சகூ)

---

(நீலம்) கருநெய்தல். (அதின் மிருதி) நாரை, வாளை, இவற்றின் திரள்.

ஶப்தத்துக்கு அர்த்தம்வேறுயிருக்க, இப்படி ஸ்வாபதேஶத்திலேஒதுக்குவானென்னென்ன வருளிச்செய்கிறர் (இப்பாட்டிலித்யாதி). (நிலமல்லாதபோது) விவக்ஷையில்லாதபோது. (சகூ)

மூ.—வெண்டிரைக்கருங்கடல் சிவந்துவேவமுன்னொருநாள்
திண்டிறற்சிலைக்கைவாளி விட்டவீரர்சேருமூர்
எண்டிசைக்கணங்களு மிறைஞ்சியாடுதீர்த்தநீர்
வண்டிரைத்தசோலைவேலி மன்னுசீரரங்கமே. (ருo)

ஐம்பதாம்பாட்டு. (வெண்டிரை யித்யாதி).

| | |
|---|---|
| வெண் | வீ(சிவி)விக்ஷேபத்தாலே வெளுத்திருக் |
| திரை | கிற அலைகளையுடைய |
| கரு | கறுத்த |
| கடல் | ஸமுத்ரமானது |
| சிவந்து | ஶராக்நி தேஜஸ்ஸாலே சிவந்து |
| வேவ | மறுகும்படி |
| முன்னொருநாள் | இருபத்தெட்டாம் சதுர்யுகத்திலே |
| திண்டிறல் | மிக்க வலியையுடைய (வீப்ஸை பாலே மிகுதியைக் காட்டுகிறது) |
| சிலை | ஶ்ரீஶார்ங்கத்தினின்றும் |
| கை | திருக்கைகளாலே |
| வாளி | சரத்தை |
| விட்ட | ஏவின |
| வீரர் | ஆண்பிள்ளையானசக்ரவர்த்தித்திருமகன் |
| சேரும் | வர்த்திக்கிற |
| ஊர் | தேசம்; |
| எண்டிசை | எட்டுத்திக்குக்களிலுமுள்ள |
| கணங்களும் | ஐஶ்வர்யார்த்யாதி ஸமூஹங்களும் |
| இறைஞ்சி | திருவடிதொழுது |
| ஆடும் | தீர்த்தமாடுகிற |
| தீர்த்த | பரிஶுத்தியையுடைய |
| நீர் | ஜலத்தையுடைய, |
| வண்டு | ப்ரமரங்கள் |
| இரைத்த | ப்ரீதப்ரஶயத்தாலே ஶப்திக்கிற |
| சோலை | உத்யாநங்களை |
| வேலி | சூழவுடைத்தான |

(மன்னுசீர்) "சீர்மன்னு" என்றந்வயம்

சீர் — பாவநத்வ போக்யத்வங்களாகிற குணங்கள்
மன்னு — நித்யமாகச்செல்லா நிற்கிற
அரங்கமே — கோயில். (ருo)

அவ.— ஐம்பதாம்பாட்டு. ஆந்தரவிரோதத்தைப் போக்கவல்ல அவதார வைபவத்தையும், பாத(வா)சபதார்த்த லகாஶத்திலேயிருப்பபராய் வர்த்திக்கலாம்படி அபாஶ்ரயமான தேஶவைபவத்தையும் சொன்னார்-கீழ்ப்பாட்டில்; இதில்-பாஹ்யவிரோதத்தைப் போக்கவல்ல அவதார வைபவத்தையும்ஸர்வஸமாஶ்ரயணீயமான தேஶவைபவத்தையும் அருளிச்செய்கிறார்.

வ்யா.—(வெண்டிரைக் கருங்கடல்) வெளுத்த திரைகளையுடைத்தான கருங்கடல். திரைக்கிளர்த்தியின் மிகுதிசொல்லிற்று. (சிவந்துவேவ) கறுத்தகடலோடு வெளுத்த திரைகளோடுவாசியற ஶராக்நியின்நிறமான சிவப்பே நிறமாய்மறுகும்படி தக்த(ஜ)மானபடி. இத்தால் ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு வருணன் விரோதியாக அவனுக்கு இருப்பிடமான கடலை அழியச்செய்தபடி. (முன்னொருநாள் திண்டிறல் சிலைக்கைவாளிவிட்டவீரர்சேருமூர்) இருபத்தெட்டாம் சதுர்யுகத்திலே மிக்கவலியையுடைய ஶ்ரீஶார்ங்கத்தை, (க) "வாவஓநய - சாபமாநய" என்கிறபடியேவாங்கி அம்புகளையேவின ஆண்பிள்ளை சேருமூர். "உள்மகிழ்ந்தநாதனூர்" என்று ஆஶ்ரிதரக்ஷணம் ஸ்வயம்ப்ரயோஜநமாகப் பண்ணும் நீர்மையைச் சொல்லிற்று-கீழ்ப்பாட்டில்; இதில் - விரோதிநிரஸநஶக்தியைச்சொல்லுகிறது. இத்தால்-அவதாரத்துக்குப் பிற்பாடரான ஆஶ்ரிதர்க்கு ஸ்வாநுபவவிரோதியான ஶப்தாதிகளில் ப்ராவண்யத்தைப் போக்குகைக்குக்கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிறபடியென்கை. திண்மையென்றும், திறலென்றும், வலியைச்சொல்லுகையாலே மிக்கவலியென்றபடி.

(எண்டிசைக்கணங்களு மிறைஞ்சியாடுதீர்த்தநீர்) எட்டுதிக்கிலுமுள்ள ஸமூஹங்கள் வந்து பெருமாளைத் திருவடிதொழுது தீர்த்தமாடி, தங்களபிமத விரோதியான ஸர்வபாபங்களையும்போக்கும்ஶக்தியையுடைய நீரையுடைத்தாய். (உ)"ஸவர்ஶகுயாயா"

(க) ரா-யு-உக-உஉ, (உ)

மூ.—சரங்களைத்துரந்து வில்வளைத்திலங்கைமன்னவன்
சிரங்கள்பத்தறுத்துதிர்த்த செல்வர்மன்னுபொன்னிடம்
பரந்துபொன்னிரந்துநுந்தி வந்தலைக்கும்வார்புனல்
அரங்கமென்பர்நான்முகத் தயன்பணிந்தகோயிலே. (ருக)

---

ஸர்வதீர்த்தமயம்ஸர:। ஸர்வபுண்யமயோதேஶ: ஸர்வதேவமயோ ஹரி: - ஸர்வஶக்திமயந்தாம ஸர்வதீர்த்தமயம்ஸர:। ஸர்வ புண்யமயோதேஶ: ஸர்வதேவமயோஹரி:'' என்னக்கடவதிறே. ஸமூஹங்களாவன – ஐஶ்வர்யார்த்திகள், முமுக்ஷுக்கள், ஜந்ம வ்ருத்தங்களால் யோக்யாயோக்யர் இவர்கள். (வண்டிரைத்த சோலைவேலி) மதுபாந மத்தமானவண்டுகள், ப்ரீதிஉள்ளடங்கா மேஶப்திக்கிற சோலையைச் சூழவுடைத்தாய். (மன்னுசீரரங்கமே) இப்பாவநத்வ போக்யத்வங்களாகிற நன்மைகள் நித்யமாய்ச் செல் லும்கோயில். அநாத்மகுணோபேதர்க்கு பாவநமுமாய், ஆத்ம குணோபேதர்க்கு போக்யமுமான தேசமென்கை. (ருo)

ஐம்பத்தோராம்பாட்டு. (சரங்களையித்யாதி)

| | |
|---|---|
| வில் | ஶ்ரீ ஶார்ங்கத்தை |
| வளைத்து | மண்டலீகரித்து |
| சரங்களை | பாணங்களை |
| துரந்து | நடத்தி, ஏவியென்றபடி. |
| இலங்கை | லங்கைக்கு |
| மன்னவன் | அத்யக்ஷனை ராவணனுடைய |
| சிரங்கள்பத்து | பத்துத்தலைகளை |
| அறுத்து | சே(செ)தித்து |
| உதிர்த்த | விழப்பண்ணின |
| செல்வர் | வீரஶ்ரீமான் |
| மன்னு | நித்யவாஸம்பண்ணுகிற |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| இடம் | ப்ரதேஶம், |
| நிரந்து | விச்சேதமில்லாமல் அத்யபிநிவேஶத்தை |
| பரந்துவந்து | விஸ்த்ருதையாய் வந்து [ப்பண்ணி |

பொன் — ஸ்வர்ணத்தை
நுந்தி — கோயிலிலே தள்ளி
அலைக்கும் — அலையா நின்றுள்ள
வார்புனல் — ப்ரவாஹரூபமான ஜலத்தையுடைய,திருக்காவேரியையுடைய வென்றபடி.
நான்முகத்து — சதுர்முகனை
அயன் — ப்ரஹ்மாவானவன்
பணிந்த — ஆர்ரயிக்கும்
கோயிலே — கோயிலை,
அரங்கமென்பர் — "ஸம்ஹித்ருஷியயதே - ரங்கமித்யபிதீயதே" என்று சொல்லுவர்கள். ("புராணவித்துக்கள்"என்றுசேஷம்). (ருக)

அவ.—ஐம்பத்தோராம்பாட்டு. சடலைநியமித்து அக்கரையிலேயேறி ராவணனை யழியச்செய்தவீரன் நித்யவாஸம் பண்ணுகிறதேசமாய் சதுர்த்தஶபுவநஸ்ரஷ்டாவான சதுர்முகன்தன்,அதிகாரஸித்திக்காக ஆஶ்ரயித்ததேசம் கோயிலென்கிறார்.

வ்யா.—(சரங்களைத்துரந்து வில்வளைத்து) ஸ்ரீ ஶார்ங்கத்தை வளைத்து, அம்புகளையேவி. துரத்தல் - போக்கல். ஐஶ்வரமான ஸங்கல்பத்தாலன்றிக்கே ஆஶ்ரிதவிரோதியான ராவணனை அம்பாலே, † பெறுப்பேறுபெற்றானாகக் கைதொட்டுக்கொன்றபடி. (இலங்கை மன்னவன்) லங்கையையண்டை கொண்டால் ஸ்த்ரீகளுக்கும் எதிரிகளை ஜபிக்கலாம், வெளிநிலத்திலும் எதிரிகளை ஜயிக்கவல்ல ஆண்பிள்ளை ராவணன். அத்யக்ஷனவன். (க) "ஜ்ஞாம்ஶாவண வாஷிதாழ- ங்காம்ர ணபாஷிதாம்". (சிரங்கள் பத்தறுத்துதிர்த்த செல்வர்) அவன் தலைகள் பத்தையும் அறுத்தபின்பும் வரபலத்தாலே ஶதஶாகமாக முளைக்க முளைக்க,பனங்கனியுதிர்த்தாப்போலே உதிர்த்த வீரஸ்ரீயால் பூர்ணரானவர்;( மன்னுபொன்னிடம் ) அவன் நித்யவாஸம்பண்ணுகிற ஸ்ப்ருஹணீயமானஸ்த்தாநம்.ரக்ஷகாபேக்ஷயுடைய சேஷபூதனுக்கும் ரக்ஷ்யாபேக்ஷயுடைய ஶே

(க)ரா-ஸு-க-ருக † (பா) போரப்பெற்றனக,

ஷிக்கும்ஸ்ப்ருஹணீயமான விடம். இத்தால் அவதாரத்துக்குப்பிற்பாடரான அநந்ய ப்ரயோஜநர்க்கு ப்ரபலப்ரதிபந்தகமாய், விஷயாந்தர ப்ரவணமானமநஸ்ஸோ பரிகரமான இந்த்ரியங்களோடே யழியச்செய்கைக்கு வர்த்திக்கிற தேசமென்கை. (க) "ஜ்ஞாநேந்த்ரியாணி ஹயாநாஹு: கர்மேந்த்ரியாணி ஸாரதிம் விவேகஸாரஜிநாநேவ ஸம் நயதி யோ ஜிதாத்மேந்த்ரியாநநம் கோரம் யோ மநோரஜநீசரம் விவேகஸாரஜாலேந ஸம்நயதி யோ கிநாம்" என்னக்கடவதிறே. (உ) "ஸுமேருவாதீநாம் ஆத்மைவரிபுராத்மந:".

(பரந்துபொன் நிரந்து நுந்திவந்தலைக்கும்வார்புனல்) தன்னுடைய நிவேசமெல்லாம்கொண்டு எங்குமொக்கப்பரந்து மாறுதேவந்து பொன்களைக் கோயிலிலேதள்ளி அலையெறியாநின்றுள்ள காவேரி. (வார்புனல்) ப்ரவாஹ ரூபமான ஜலம். அதாகிறது - காவேரி. (அரங்கமென்பர் நான்முகத்தயன்பணிந்த கோயிலே) உபயபாவநாநிஷ்டனான ப்ரஹ்மாவானவன் தன் அதிகாரத்துக்குவரும்விரோதிகளைப் பரிஹரிக்கைக்கு, ப்ரஹ்மபாவனைக்கும் பலமான மோக்ஷத்துக்குமாக சதுர்த்தஸ புவநஸ்ரஷ்டாவென்றும், நாலுவேதங்களை ஒருக்காலே உச்சரிக்கைக்கீடான நான்கு முகத்தையுடையவனென்றும், அஜனென்றும், தன்னை ஸர்வாதிகனாக அபிமாநித்திருக்கிறவன் (ஸ) பக்நாபிமாநனாய் வந்தாஸ்ரயிக்கும் கோயிலை "ஸ்ரீரங்கம்" என்று நின்றார்கள் புராணவித்துக்கள். (ங) "ஸதிஜா தஜதிஜாஜ்ஞு - ரதிங்கத இதி-ரங்கம்" (ச) "க்ஷீராப்தேர் மண்டலாத்பாநோர் யோகிநாம் ஹ்ருதயாதபி ரதிங்கதோ ஹரிர்யத்ர ரங்கமித்யபிதீயதே". (ருக)

---

அரு.—ஐம்பத்தோராய்பாட்டு. மநஸ்ஸாமூத்ருவோவென்ன வருளிச்செய்கிறார் (ஆத்மைவரிபுராத்மந:) என்று, "நிரந்து"—நிறைந்தாய், (மாறுதே) என்கிறது. (ருக)

---

(க) (உ) கீ-ஞா-ஞ.

(ங) (ச)

மூ.—பொற்றையுற்றமுற்றல்யானை போரெதிர்ந்துவந்ததைப்
பற்றியுற்றுமற்றதன் மருப்பொசித்தபாகனூர்
சிற்றெயிற்றுமுற்றல்மூங்கில் மூன்றுதண்டரொன்றினர்
அற்றபத்தர்சுற்றிவாழு மந்தணீரரங்கமே. (ருஉ)

---

ஐம்பத்திரண்டாம்பாட்டு. (பொற்றை யித்யாதி).

| | |
|---|---|
| பொற்றை | கற்பாறையிலே யென்னுதல், கடுங்காட்டிலே யென்னுதல், ("பிறங்கல்பொற்றை" என்னக்கடவது. "பொற்றைகடறுகாந்தாரம்" என்னக்கடவது). |
| உற்ற | வர்த்திக்கிற |
| முற்றல் | த்ருடமான |
| யானை | குவல்யாபீடமானது |
| போரெதிர்ந்து | யுத்தத்திலே யெதிர்த்து |
| வந்ததை | வந்தத்தை |
| பற்றி | சென்று |
| உற்று | பாதவிவரங்களிலே நுழைந்து |
| மற்று | அதுக்குமேலே |
| அதன் | அந்தக்குவலயாபீடத்தினுடைய |
| மருப்பு | கொம்பை |
| ஒசித்த | முறித்த |
| பாகன் ஊர் | ஹஸ்திபகன்போலிருக்கிற க்ருஷ்ணன் வர்த்திக்கிற தேசம். (ஹஸ்திபகதுல்யத்வம் இஹதத்வத் லாகவிகத்வம்) |
| சிற்று | சிறுகின |
| எயிற்று | தம்ஷ்ட்ரைகள்போன்ற கணுக்களையுடைய |
| முற்றல் | திண்ணிதான |
| மூங்கில் | வேணுவினுடைய |
| மூன்றுதண்டர் | தண்டத்ரயத்தையுடைய ஸந்யாஸிகள் |

| | |
|---|---|
| ஒன்றினர் | பகவத்விஷயத்திலே ஏகாந்தஹ்ருதயரான வர்கள் |
| அற்றபத்தர் | புருஷார்த்தாந்தர ஸாதநாந்தரங்களின் றிக்கேயிருக்குமவர்கள், (கர்மதா(யா) ரயனாய் ஏகவாக்யமாகவுமாம்). |
| சுற்றி | ஸர்வாவஸ்த்தையிலும் கோயில் வாஸமே வாழ்வாக நினைத்து. (சுற்றல்-நினைத் தல்). |
| வாழும் | ஹ்ருஷ்டராய்நித்யவாஸம்பண்ணுகிற்கிற |
| அம் | அழகிதான |
| தண் | குளிர்த்தியையுடைய, |
| நீர் | ஜலஸம்ருத்தியையுடைய |
| அரங்கம் | கோயில். (ருஉ) |

அவ.—ஐம்பத்திரண்டாம்பாட்டு. ராமாவதாரத்துக்குப் பிற்பாடர்க்குக் கோயிலிலே வந்து உதவினபடி சொல்லிற்று - கீழ் மூன்று பாட்டாலே; இனியிரண்டுபாட்டாலே - க்ருஷ்ணாவதாரத்துக்குப் பிற்பாடர்க்கு உதவும்படி சொல்லுகிறது. அநந்தரம் கீழிற் பாட்டோடு ஸங்கதியென்னென்னில்; சதுர்த்தஸபுவநாத்யக்ஷனாய் ஜ்ஞாநாதிகனான ப்ரஹ்மாவுக்கு ஆஸ்ரயணீயமானவளவே யன்றிக்கே, அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநரா யிருந்துள்ளவர்களுக்கு அநுபவஸ்த்தாநம் கோயிலென்கிறார்.

வ்யா.—(பொற்றையுற்ற முற்றல்யானை) கற்பாறையிலே வர்த்திக்கையாலே திண்ணிதான ஆனை. மநுஷ்யஸஞ்சார மின்றிக்கே மரங்களாலே நெருங்கின காட்டிலேவர்த்திக்கையாலே † மநுஷ்யரைக்கண்டு கண்கலங்கிவர்த்தித்த ஆனையென்றுமாம். (பொற்றை) கற்பாறையும், கரிகாடும். (போரெதிர்ந்து வந்ததை) ரஜகனைப்போலன்றியே யுத்தத்திலே எதிர்த்து வந்ததை. (பற்றியுற்று). மதியாதே சென்று பற்றி, நாலுகாலுக்குமுள்ளான அதினுடலிலே புக்குநுழைந்து. (மற்றதன் மருப்பொசி

† (பா) மநுஷ்யரோடு கண்கலத்துவர்த்தித்ததன்று.

ந்த பாகனார்) அதுக்குமேலே, அதினுடைய ஹிம்ஸா பரிகரமான கொம்பை அநாயாஸேந முறித்தபாகன் வர்த்திக்கிறதேசம. "பாகன்" என்று - அதுக்கு ரக்ஷகனானவன், அதினளவறிந்து இடம்வலம் கொள்ளுமாபோலே இடங்கொண்டு அத்தை அழித்தபடியாலே சொல்லுகிறது.

இத்தால் - க்ருஷ்ணாவதாரத்தில் பிற்பாடரானார்க்குப் பெருமாள் ஸ்வரூபவ விரோதிவர்க்கத்தைக் குவலயாபீடத்தையழித்தாப்போலே அழியச்செய்யுமவனென்கை. ஸ்ரீவஸுதேவரும் தேவகிப் பிராட்டியும் ஸ்ரீமதுரையில் பெண்களும் ரங்கமத்யத்திலே க்ருஷ்ணனைக்காண ஆசைப்பட்டிருக்க, வாசலிலே இடைச்சுவராயிறே குவலயாபீடம் நின்றது. (க) "ஸவ்யாஂஸமஂ ஸஞ்சக்ஷுஸ் ப்ருதக்" (உ) "யாமேவ வவஹாமிந்தேவஸிங்கஞ் தேவகீ வஸுதேவோ ஜூந்"

(சிற்றெயிற்றுமுற்றல் மூங்கில் மூன்று தண்டர்) சிறுகினகண்களையுடைத்தாய்த் திண்ணிதான மூங்கில் தண்டு மூன்றுதரித்தஸந்ந்யாஸிகள். "மூங்கில் மூன்றுதண்டர்" என்கிறவித்தால் - கீழுள்ள ஆஶ்ரமத்வயத்தையும் வ்யாவர்த்திக்கிறது. "சிற்றெயிற்று முற்றல்" என்கிறவித்தால், (௩) "ஸகேந ப்ரஹ்மதண்டேந ஸர்வாஸ்த்ராணி ஹதாநி மே - ஏகேநப்ரஹ்மதண்டேந ஸர்வாஸ்த்ராணிஹதாநி

அரு.—ஐம்பத்திரண்டாம்பாட்டு. குவலயாபீடம் அநுபவ விரோதியாயிருந்ததோவென்ன வருளிச்செய்கிறார் (ஶ்ரீவஸுதேவரித்யாதி). "மூங்கில்" என்கையாலே - பலாஶதண்டத்தையுடைய ப்ரஹ்மசாரியையும், "மூன்றுதண்டர்" என்கையாலே ஒரு தண்டுடைய க்ருஹஸ்தாஶ்ரமத்தையும் வ்யாவர்த்திக்கிறது, வஸிஷ்டனுடைய ஏகதண்டத்தாலே விஶ்வாமித்ரனுடைய அஸ்த்ரங்கள் நஶிக்கையாலே (ஸர்வாஸ்த்ராணிஹதாநி) என்கிறது. "ஒன்றினார் அற்றபத்தர்" என்று - தனித்தனியேயாதல், ஸந்யாஸிகளுக்கு விஶேஷணமாதல். பற்றுகை - த்ருணமாக விசாரிக்கை, (௫௨)

(க) வி-பு-௫-௨௦ ச. (உ) வி-பு ௫-௨௦-௫௨. (௩) ரா-௫௪-௨௩.

மூ.—மோடியோடிலச்சையாய சாபமெய்திமுக்கண்ணன்
கூடுசேனைமக்களோடு கொண்டு மண்டிவெஞ்சமத்
தோட வாணனாயிரம் கரங்கழித்தவாதிமால்
பீடுகோயில்கூடுநீ ரரங்கமென்ற பேரதே. (௫௩)

பே.” என்கிறந்யாயக்காலே எதிர்த்த விரோதவர்க்கத்தைதகர்யை வழியச் செய்யவற்றாய், தனக்குழிவின்றிச்சேர் யிருக்கிறபெருமைக்கை நினைக்கிறார். (ஒன்றினர்) பகவத்விஷயத்திலே † ஏகாந்த ஹ்ருதயர்களென்னுதல்; தேசாந்தரங்களைவிட்டு இத்தேசமேப்ராப்யமென்று வந்து சேர்ந்தவர்களென்னுதல்.

(அற்றபத்தர்) புருஷார்த்தாந்தரங்களிலும் ஸாதநாந்தரங்களிலும் பற்றற்றுப் பெரியபெருமாளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்று இருக்குமவர்கள், த்ரிதண்டதாரிகளாய் பகவத்விஷயத்திலே ஏகாந்தஹ்ருதயராய் பகவத் வ்யதிரிக்தங்களை த்ருணமாகபுத்தி பண்ணுபஸந்யாஸிகளென்றுமாம் (சுற்றிவாழும்) ஸர்வாவஸ்தையிலும் விடாதே கோயிலில்வாஸமே வாழ்வாக இருக்குமவர்களென்னுதல்; தேசஸம்ருத்தியை மநோரதித்து அதுவே போக்யமாயிருக்குமவர்களென்னுதல். சுற்றல்-எண்ணல். (அந்தணீரரங்கமே) தர்ஶநீயமாய்ஶ்ரமஹரமானஜலஸம்ருத்தியையுடையகோயில் (௫௨)

ஐம்பத்துமூன்றும்பாட்டு. (மோடியித்யாதி).

"இலச்சையாய சாபமெய்திமோடியோடு" என்றந்வயம்.

இலச்சையாய — ஸாத்விகர்க்கு தர்சநமே தொடங்கிலஜ்ஜையாம்படி
சாபம் — ஸாத்விகாபரிக்ராஹ்யதையாகிற ஶாபத்தை
எய்தி — ப்ராபித்த
மோடியோடு — க்ஷுத்ரதேவதா விஶேஷத்தோடு கூட "மோடி காளிதாய் கொற்றிமாரி சூரி" என்னக்கடவது,

(அன்றிக்கே "இலச்சையாய சாபமெய்தி முக்கண்ணன் மோடியோட" என்றந்வயம்)

இலச்சையாய — லஜ்ஜாவஹமான
சாபம் — ப்ரஹ்ம ஶாபத்தை
எய்தி — ப்ராபித்த
முக்கண்ணன் — ஈஶ்வராபிமாநித்வ ஸூசகமான நேத்ரத்ரயத்தையுடைய ருத்ரன்

† (பா) ஏகாந்தரானவர்கள்.

மோடியோடு க்ஷுத்ரதேவதா விஶேஷத்தோடு
"மக்களோடுகூடு சேனைகொண்டு வெஞ்சமத்து
மண்டியோட" என்றந்வயம்.

| | |
|---|---|
| மக்களோடு | ஸ்வஜநங்களோடு |
| கூடு | திரண்ட |
| சேனை | ஸேநையை |
| கொண்டு | அழைத்துக்கொண்டு |
| வெஞ்சமத்து | யுத்தத்திலே "சினவுதல் சமரம்வெஞ்சமம்" என்னக்கடவது, |
| மண்டி | ஓடுகையிலே அத்யாஸக்தியைப்பண்ணி |
| ஓட | பராஜிதனாய் பலாயநம்பண்ண |
| வாணன் | பாணாஸுரனுடைய |
| ஆயிரம்கரம் | புஜஸஹஸ்ரத்தை |
| கழித்த | சே(ஜே)தித்த |
| ஆதி | காரணபூதனை |
| மால் | ஸ்ரீக்ருஷ்ணன் நித்யவாஸம்பண்ணுகிற |

"கூடுநீர் அரங்கமென்றபேரதே பீடுகோயில்"
என்றந்வயம்.

| | |
|---|---|
| கூடுநீர் | திருக்காவேரியும் வர்ஷஜலமும் கூடின நீரை யுடைத்தான |
| அரங்கமென்றபேரது | திருவரங்கமென்னும் திருநாமத்தை யுடைய |
| பீடுகோயில் | பெரியகோயில், (முடலையகனுள் பீடு" என்னக்கடவது) (ருங) |

அவ;—ஐம்பத்துமூன்றும்பாட்டு. அநிருத்தாழ்வானுடைய அபிமதவிரோதியாய் ப்ரபலமானபா(வா)ணப்ரமுகவர்க்கத்தைப் போக்கினப்போலே, இன்று ஆஶ்ரிதருடைய போக(ஹோம)விரோதியைப் போக்குகைக்கு அந்தக்ருஷ்ணன் நித்யவாஸம்பண்ணும் தேசம்கோயிலென்கிறார்.

வ்யா;—(மோடியோடிலச்சையாய சாபமெய்தி) ஸாத்விகர்க்கு தர்ஶநமே தொடங்கி லஜ்ஜைபாம்படி, அவர்களால் அபரிக்ராஹ்யதையான ஶாபத்தைப்ராபித்துகாளியோடே; தமோ ப்ரசுரையாகையாலும், † துராசாரை யாகையாலும், ஸாத்விகரால் உபேக்ஷணீயையாயிறே அவளிருப்பது. (சாபமெய்தி — இலச்சையாய - முக்கணன்) (க) "க்ஷுர்ப்போக்ஷம் ஹவிஷ்யஸி - கபாலீத்வம் பவிஷ்யஸி" என்று ப்ரஹ்மர ஶபிக்கையாலே லஜ்ஜாவிஷ்டனான லலாடநேத்ரனென்றுமாம். ஆக(ம)மாதிமுகத்தாலே தன்னை ஸர்வேஶ்வரனாக உபதேசித்து, லலாடநேத்ரத்வ கங்காதரத்வாதிகளாலே தன்னுடைய ஶக்திகளையு மாவிஷ்கரித்து, லோகத்தையடங்கக்கும்பீடுகொள்ளுகிறவனுக்கு ப்ரஹ்மஶாபத்தாலே க்ஷேத்ரஜ்ஞத்வமும் ஶாஸ்த்ரவஶ்யதையும் ப்ரகாசித்தால் லஜ்ஜாவிஷ்டனாகச் சொல்லவேணுமோ. (கூடு சேனைமக்களோடுகொண்டுமண்டி வெஞ்சமத்தோட) மக்களோடே திரண்ட ஸேனையையுங்கொண்டு அரைகுலையத்தலைகுலைய யுத்தத்திலேயோட. நம்பி மூத்தபிரானும் க்ருஷ்ணனும் விஜயத்திலேமண்டினவாறே ருத்ரனும் பரிகரமும் ஓடுகையிலேமண்டினபடி.

(வாணனாயிரங்கரங்கழித்த) பாணனுடைய ஆயிரந் தோள்களையும் கழித்த; பாணனுடைய ரக்ஷணத்திலே ப்ரதிஜ்ஞைபண்ணினருத்ரனுடைய அபிமாநத்தைக் கழித்தான்; தோள்வலி கொண்டாடின பாணனுடைய தோள்களையும் கழித்தான். (ஆதிமால்) ஜகத்காரணபூதனான ஸர்வேஶ்வரன். (உ) "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யயஃ - க்ருஷ்ணஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபிசாப்யயஃ" என்னக்கடவதிறே. (பீடுகோயில்) பெரியகோயில். பீடு—பெருமை. (கூடுநீரரங்கமென்றபேரதே) ஸஹ்யத்தினின்றும் வந்ததும் இப்பாலுண்டான வர்ஷத்தாலுமாகக்கூடின நீரையுடைத்தானதிருவரங்கமென்னும் திருநாமத்தையுடைத்து.

---

(க) மாத்ஸ்ய:  (உ) பார—ஸபா அ-உரு.  †(பா) துராசாரத்வம்

மூ.—இலைத்தலைச் சரந்துரந் திலங்கைகட்டழித்தவன்
மலைத்தலைப்பிறந்திழிந்து வந்துநுந்துசந்தனம்
குலைத்தலைத் திறுத்தெறிந்த குங்குமக்குழம்பினோடு
அலைத்தொழுகுகாவிரி யரங்கமேயவண்ணலே. (௫௪)

---

"சாபமெய்தி - இலச்சையாய - முக்கணன் - மோடியோடு மக்களோடு - கூடுசேனை - கொண்டு - வெஞ்சமத்து —மண்டி-ஓட வாணனாயிரங்கரங்கழித்த வாதிமால் - கூடுநீர் - அரங்கமென்றபேரதான - பீடுகோயில்" என்றந்வயம். ஆக இரண்டுபாட்டாலும் செய்ததாய்த்து—ஆஶ்ரிதர்க்கு விரோதிகளாயித்தனையேவேண்டுவது, எதிர்த்தலை திர்யக்காகவுமாம், ஸர்வாதிகனாகவுமாம், அழியச்செய்கைக்கு. குவலயாபீடம்*கொலையானையாய்த்தோற்றுகையாலேகொன்றருளினான்;க்ருஷ்ணனைத் தோற்பித்துபாணனை ரக்ஷிக்கக்கடவோமென்று வந்தருத்ரன் தோற்றுப்போம்படி பண்ணினான். (க) "ஹாராய[illegible]கிம் ஸ[illegible]ஜை: - பாராயமமகிம்புஜை:" என்று தோள்வலிகொண்டு வந்த பாணனுடைய தோள்களைக் கழித்தான். ஆக அவர்களுடைய நினைவு அவர்கள் தலையிலே பாக்குமவனென்கை. (௫௩)

ஐம்பத்துநாலாம்பாட்டு. (இலையித்யாதி)

| | |
|---|---|
| இலை | இலைபோலிருக்கிற |
| தலை | நுனியையுடைய |
| சரம் | திருச்சரங்களை |
| துரந்து | ஏவி |
| இலங்கை | லங்கையினுடைய |
| கட்டு | அரணை |
| அழித்தவன் | அழியச்செய்த தஶரதாத்மஜன், |
| மலை | ஸஹ்யபர்வதத்தினுடைய |
| தலை | கொடுமுடியிலே, தாழ்வரையிலென்றுமாம்; |

---

(க) வி பு-௫௩-௩,-௨

| | |
|---|---|
| பிறந்து | உத்பந்நமாய் |
| இழிந்து | வர்ஷத்திலேபறியுண்டு அந்நீரோடே இழிந்து |
| வந்து | திருக்காவேரியிலேவந்து |
| நுந்து | தள்ளா நின்றுள்ள |
| சந்தனம் | சந்தநவ்ருக்ஷங்களையுடையதாய் |
| குலேத்து | விஷமவிந்யாஸமாக்கி |
| அலேத்து | விதூ (யு-தி) தமாக்கி |
| இறுத்து | ஒடித்து, (ஒடித்தலைசித்தலிறுத்தலெ ன்னக்கடவது,) |
| எறிந்த | விடப்பட்ட, (விலங்குதலெறிதலென் னக்கடவது) |
| குங்கும் | குங்குமலதாவிதாநத்தினுடைய |
| குழம்பினேடு | பராக(ம)பங்கத்தோடுகூட |
| அலேத்தொழுகு | அலேத்துக்கொண்டு வாராநின்றுள்ள |
| காவிரி | திருக்காவேரியையுடைய |
| அரங்கமேய | கோயிலிலே நித்யவாஸம் பண்ணுநிற்கிற |
| அண்ணல் | ஸ்வாமி - தஶரதாத்மஜன். |

("அரங்கமேயவண்ணல்" என்று உத்தேஶ்யவிதேயபாவேந யோஜிக்கக்கடவது. கோயிலுக்கு ஆர்த்தப்ராதாந்யம் விவக்ஷிதம்). (ருச)

அவ;—ஐம்பத்து நான்காம்பாட்டு. ஸாத்விகர்க்கு துஷ்ப்ரஸபமாம்படியான அரணையுடைய லங்கையை அம்பாலே அழித்த தசரதாத்மஜன், பிற்பாடர்க்கு ஸ்வபோக(ஹாம)விரோதியானஸ்வாதந்த்ர்யமாகிறஅரணையழிக்கைக்கும், லங்கையிலேபண்ணின ஆயாஸத்தாலே வந்தஶ்ரமந்திரக்காவேரிஸிஸிரோபசாரம் பண்ணுகைக்காகவும் வந்து கண்வளர்ந்தருளுகிற தேசம் கோயிலென்கிறார். கீழிரண்டுபாட்டால் - பாஹ்யமான ஸ்வ

போக(ஸோம)விரோதிகளை யழியச்செய்தபடி சொல்லிற்று; இதில் ஸ்வபோகத்தில் "ஶேஷி - மமேதம்" என்று வரும் ஆந்தரமான ஸ்வாதந்த்ர்யத்தை லங்கையிலரணை அழித்தாபோலே அழிக்கு மென்கிறது.

வ்யா;—(இலைத்தலைச்சரந் துரந் திலங்கைகட்டழித்தவன்) இலைபோலேயிருக்கிற தலையையுடைத்தான திருச்சரங்களாலேயவி லங்கையி லரணையழித்த தஶரதாத்மஜன். (இலைத்தலைச்சரம்)வா யம்பு. (கட்டு) அரண். இவ்வபதாநத்தால் - ராமாவதாரத் தைச் சொல்லிற்று - ஸ்வபோகத்தை "ஶேஷி - மமேதம்" என்ற சூர்ப்பணகியை அழியச்செய்தவனே அழியச்செய்யவேணு மென்று நினைத்து. (மலைத்தலைப் பிறந்திழிந்து வந்து நுந்து சந்த னம்) ஸஹ்யத்திலேபிறந்து வர்ஷத்தாலேவேரோடே பறியுண்டு அந்நீரோடேயிழிந்துவந்து தள்ளாநின்றுள்ள சந்தநம்.

(குலைத்தலைத்திறுத் தெறிந்த குங்குமக்குழம்பினோடலைத்து ஒழுகுகாவிரி) குங்குமப்படர்கொடியை நீர்வந்து குலைத்துச் சுற் றுமலைத்து முறித்தெறிந்த குங்குமரஜஸ்ஸுக்களைக் குழம்பா க்கி அத்தோடேகூட அலைத்துக்கொண்டு வாராநின்ற காவேரி. (க)"ஸ்நாத்வா ஸ்வைஜாநகோஜநகஸ்ஸஹஶ்ரீவைவஸ்வதஸ்ஸூர் யஶேஷவதாஹ்நஸஹஸ்ஸாயந்திவாகரஸ்ஸமா | வந்த்வா பஶ்யஹஸஹஸ்ஸிக்ஸந்தாநகாவேரீஸஹீக வேதீஶயதீயதிஸவஸதாம் - துக்த்தாப்திர்ஜநசோ ஜநங்யஹமிஹஶ்ரீரேவபுத்ரீவரஶ்ஶ்ரீ ரங்கேஶ்வர ஏததர்ஹணம ஹம் ஸூர்யரமிதீவாகுலா | சஞ்சச்சாமரசந்த்ரசந்தநமஹாமாணிக் யமுக்தோத்கராங்காவேரீலஹரீகரைர்விதததீபர்யேதிஸாஸேவ்

அரு.—ஐம்பத்துநாலாம்பாட்டு.—ஸ்வபோக்த்ருத்வ விரோதிபோக்கு கைக்கு வேறொரு அவதாரமாகாதோ, ராமாவதாரமாகவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவ்வபதாநத்தாலித்யாதி). (குங்குமரஜஸ்ஸு) குங்கு மத்துகளென்றபடி. (ருச)

(க) ர-ஸ்த-க-உக.

மூ.—மன்னுமாமலர்க்கிழத்தி வையமங்கைமைந்தனாய்ப்
பின்னுமாயர்பின்னைதோள் மணம்புணர்ந்ததன்றியும்
உன்னபாதமென்னசிந்தை மன்னவைத்துநல்கினாய்
பொன்னிசூழரங்கமேய புண்டரீகனல்லையே.                    (ருரு)

---

தாம்" என்கிறபடியே. இத்தால்-லங்கையையழித்த ஸ்ரமந்திரவும் உன் திருமேனியில்ஸௌகுமார்யத்துக்குஸதருமாகவும், சந்தநகுங்குமங்களாலேப்ரீதிப்ரேர்தையாய்க்கொண்டு காவேரி அடிமைசெய்யும்படியைச் சொல்லிற்று. (அரங்கமேயவண்ணலே, கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமீ. திருக்காவேரிஸஹ்யத்தில் நின்றும்அடிமைசெய்கைக்குவந்ததூரத்தோபாதி போருமாய்த்து-க்ஷீராப்தியில்நின்று மடிமைகொள்ளுகைக்கு வந்ததூரம். (அண்ணல்) - ஸ்வாமி. ஸம்ஸாரத்தில் தன்பக்கலில்ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாகைக்கும், ருசி பிறந்தார்க்கு ஆஸ்ரயணீயனாகைக்கும், ஆஸ்ரிதரை அஹங்காரரஹிதமாக அடிமைகொள்ளுகைக்கு முரியவனென்கை. ... ... (ருச)

ஐம்பத்தைந்தாம்பாட்டு. (மன்னித்யாதி)

"மாமலர்மன்னுகிழத்தி" என்றந்வயம்.

| | |
|---|---|
| மா | ஸௌந்தர்ய ஸௌகந்த்யஸௌகுமார்யங்களாலே மஹத்தான |
| மலர் | தாமரைப்பூவிலே |
| மன்னு | பிறப்பையுடையளாய் |
| கிழத்தி | ஜகத்ரக்ஷணத்துக்குரியாளான பெரியபிராட்டியாரென்ன, (கிழவருரியோர் மூதுவரென்னக்கடவது. பெண்ணைச் சொல்லும்போது கிழத்தியுரியாளென்று கிடக்கிறது) |
| வையமங்கை | ஸ்ரீ பூமிப்பிராட்டியென்ன, |

(அன்றிக்கே, "மங்கை" என்று பருவத்தைச் சொல்லிற்றாய், த்வந்த்வ (௨०௨) ரந்தேஸ்ருயமாணத்

யோக்யையாய் பெரிய பிராட்டியாராகிற வாத்ப்ரத் நித்யயுவதியென்ன, பூமியாகிற நித்யயுவதியென்ன, இவர்களுக்கென்னவுமாம்)

| | |
|---|---|
| மைந்தனாய் | நித்யயுவாவானகாந்தனாய், ("ஆடவர் மைந்தர்காளை குமரர்" என்னக்கடவது). |
| பின்னும் | அதுக்குமேலே |
| ஆயர் | கோபஸஜாதியையாயவதரித்த |
| பின்னை | நீளாதேவியான நப்பின்னைப்பிராட்டியுடைய |
| தோள் | புஜங்களை |
| மணம் புணர்ந்து | கலந்து, |
| அதன்றியும் | அதுக்குமேலே |
| உன்னபாதம் | உன்னுடைய திருவடிகளை |
| என்னசிந்தை | என்னுடைய ஹ்ருதயத்திலே |
| மன்னவைத்து | விஶ்லேஷமில்லாமல் வைத்து |
| நல்கினாய் | மஹோபகாரத்தைப் பண்ணினாய்.(ந ருதல்வழங்குதல் வீசல் நல்குதலென்னக்கடவது) |
| பொன்னி | திருக்காவேரியாலே |
| சூழ | சூழப்பட்ட |
| அரங்கமேய | கோயிலிலே நித்யவாஸம்பண்ணுகிற |
| புண்டரீகனல்லையே | புண்டரீகாக்ஷயவனல்லையோ? (புண்டரீக ஸத்ருஶாவயவ ப்ராசுர்யத்தாலே புண்டரீகனென்று சொல்லிற்று). (ருரு) |

அவ!—ஐம்பத்தைந்தாம்பாட்டு. இப்படி ஆஶ்ரிதார்த்தமாகக்கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறபடியைக்காட்டி, லக்ஷ்மீ

பூமி நீளாநாயகனுயிருந்துவைத்தெனக்குமறக்கவொண்ணாதபடி என்னை அங்கீகரித்தருளினையென்கிறார்.

வ்யா.—(மன்னுமாமலர்கிழத்தி) மென்மை குளிர்த்தி நாற்றமென்கிற இவற்றால் ஶ்லாக்யமான தாமரைப்பூவில் பிறப்பையுடையளான பெரியபிராட்டியாகிற மஹிஷி. (க) "𑌕𑍃𑌤𑌾𑌭𑌿𑌷𑍇𑌕𑌾 𑌮𑌹𑌿𑌷𑍀 - க்ருதாபிஷேகா மஹிஷீ" என்கிறபடியே ஜகத்ரக்ஷணத்துக்கு முரியவளென்கை. (கிழத்தி) உரியவள். (வையமங்கைமைந்தனாய்) ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு அபிமதனாய். (உ) "𑌯𑍁𑌵𑌤𑌿𑌶𑍍𑌚 𑌕𑍁𑌮𑌾𑌰𑌿𑌣𑍀 - யுவதிஶ்ச குமாரிணீ" என்கிறவிவள் பருவத்தோடே சேர, (ங) "𑌯𑍁𑌵𑌾 𑌕𑍁𑌮𑌾𑌰𑌃 - யுவாகுமாரः" என்கிற பருவத்தையுடையகாந்தனாய். (மைந்தன்) இளையோன். (பின்னும்) அதுக்குமேலே. ஸார்வாதிகத்வத்துக்கும் போக (ஸௌ)ஸௌஷ்கல்யத்துக்கும் இவர்களிருவருமேயமைந்திருக்க, அதுக்குமேலே (ச) "𑌅𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌾 𑌜𑌗𑌤𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌤𑍍𑌨𑍀 - அஸ்யேஶாநாஜகதோ விஷ்ணுபத்நீ" (ரு) "𑌹𑍍𑌰𑍀𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌶𑍍𑌚 𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑍌 - ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" (சு) "ஸீதவிமாரவார் திருமகள் பூமி" (ஆயர்பின்னை தோள்மணம்புணர்ந்து) அபிஜாதையான நப்பின்னைப் பிராட்டியோடே கலந்துபோரும் போகஸௌஷ்கல்யத்தையுடையையாய். (அதன்றியும்) உனக்கபிமதவிஷயங்கள் குறைவற்றிருக்கச் செய்தே அதுக்குமேலேயும்.

(உன்னபாதமென்னசிந்தைமன்னவைத்துநல்கினாய்) (எ) "அமரர் சென்னிப்பூ" என்கிறபடியே ஸர்வரிபோக்யமான உன் திருவடிகளை நித்யஸம்ஸாரியாயிருக்கிற என்னுடைய ஹ்ருதயத்திலே க்ஷணகாலமும் விஶ்லேஷமில்லாதபடி வைத்து என்

அரு.—ஐம்பத்தஞ்சாம்பாட்டு. (மன்னுமா மலர்க்கிழத்தி) மாமலரிலேமன்னுகிற கிழத்தி. இவர்களிருவரும் ஆதிக்யத்துக்கும் போகத்துக்கும் அமைந்திருப்பார்களென்றதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (அஸ்யேஶாநேத்யாதி)

(க) அமர-(உ) (ங) ருக்வே-அஷ்-௨-அ. (ச) ஸ்ரீஸூக்தம்
(ரு) யஜுஷ-அ-ங. (சு) தி-வாய்-அ-க-க. (எ) திருக்குறு-எ.

மூ:—இலங்கைமன்னனைந்தொடைந்து பைந்தலைநிலத்துகக்
கலங்கவன்றுசென்றுகொன்று வென்றிகொண்டவீரனே
விலங்குநூலர்வேதநாவர் நீதியானகேள்வியார்
வலங்கொளக்குடந்தையுட் கிடந்தமாலுமல்லையே. (ருசு)

---

பக்கலிலே பக்ஷபதித்தாய்.வாத்ஸல்யம் தந்தாமுடைய வைலக்ஷண்யத்தையும் எதிர்த்தலையில் தண்மையையும் பார்க்கவொட்டாதாவதே. (பொன்னிசூழரங்கமேய புண்டரீகனல்லையே) ஸ்ரமஹரமான காவேரியாலே சூழப்பட்டகோயிலிலே நித்யவாஸம் பண்ணின புண்டரீகாவயவனல்லையோ. புண்டரீகாவயவப்ராசுர்யத்தாலே புண்டரீகவ்யபதேசம்; (க) ஆநந்தோ ப்ரஹ்ம - ஆநந்தோ ப்ரஹ்ம'' (உ) "விஜ்ஞாநம் ப்ரஹ்ம - விஜ்ஞாநம் ப்ரஹ்ம'' இதிவத். திவ்யாவயவங்களுக்குஸ்ரமஹரமானதேசவாஸத்தால் பிறந்தசெவ்விக்குமேலே என்னோட்டை ஸம்ஸ்லேஷத்தாலேயும் புதுக்கணித்த தென்கை. .... .... .... (ருரு)

ஐம்பத்தாறும்பாட்டு. (இலங்கையித்யாதி)

இலங்கை — லங்கைக்கு
மன்னன் — அத்யக்ஷனனராவணனுடைய
ஐந்தொடைந்து — பத்தான
பைந்தலை — பலிஷ்டமானதலைகளை (பிடலேபைம்மையாற்றல் வீரமென்னக்கடவது)
நிலத்து — பூமியிலே
உக — விழ (உகுதல்விழுதலென்னக்கடவது)
கலங்க — க்ஷேப்தனும்படி
அன்று — அவனுக்குவரப்ரதாநம் பண்ணினதேவதைகளைஅவன் நலியும்போது
சென்று — ஜநஸ்தாநத்தையு மழித்துத்திருவணையுமிட்டுலங்காஸமீபத்திலேபோய்

---

(க) தை-ப்ரு-சு-க. (உ) தை-ப்ரு-ரு.

| | |
|---|---|
| கொன்று | அவனை வதி(யி)த்து |
| வென்றி | விஜயத்தை |
| கொண்ட | லபித்த |
| வீரனே | ஆண்புலியானவனே, |
| விலங்கு | ஶரீரத்திலே |
| நூலர் | யஜ்ஞோபவீதத்தையுடையராய் |
| வேத | வேதங்களை |
| நாவர் | நாக்கிலேயுடையவர்களாய் |
| நீதியான | ந்யாயமான |
| கேள்வியார் | உபதேஶத்தையுடையரானப்ராஹ்மணருடைய |
| வலம் | அநுகூல வ்ருத்தியை |
| கொள | ஸ்வீகரிக்கைக்காக |
| குடந்தையுள்கிடந்த | திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற |
| மாலும் | ஸர்வேஶ்வரன் |
| அல்லையே | அன்றோ? (ருசு) |

அவ.—ஐம்பத்தாறும்பாட்டு. இனிமேலாறுபாட்டாலே— திருக்குடந்தையிலே கண் வளர்ந்தருளுகிறபடியை அநுபவிக்கிறார். இதில் முதற்பாட்டால்—ஆஶ்ரிதவிரோதியான ராவணனை யழியச்செய்த சக்ரவர்த்தித்திருமகன்,பின்புள்ளாரான ஆஶ்ரயப்ரயோஜனர்க்கு ஸ்வப்ராப்தி விரோதிகளைப்போக்கி அநுகூலவ்ருத்தி கொள்ளுகைக்கு த்திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

வ்யா.— (இலங்கைமன்னன்) குளவிக்கூடு சேர்த்தாப்போலே ஹிம்ஸகர் சேர வர்த்திக்கும் லங்கைக்கு நிர்வாஹகனான ராவணன். (க) "ராவணோ - ராக்ஷஸேஶ்வர: - ராவணோ ராக்ஷஸேஶ்வர:" என்கிறபடியே அந்ததுர்வர்க்கத்துக்கடைய நிழலாயிருக்குமவனிறே. (ஐந்தொடைந்து பைந்தலைநிலத்துக) அறு

(க) ரா-யு-கஎ-கo.

க்கவரிதான பத்துத்தலையையும் பூமியிலேயுதிர்த்து உருமாய்ந்து போம்படி. (பைந்தலை) வலியதலை. “ஐந்தொடைந்து” என்று க) “ஏகாதஶேந்த்ரியாநநு - தஶேந்த்ரியாநம்” என்கிறபடியே அநந்யப்ரயோஜநர்க்கு பாதகமான சிலவஞ்சகங்களை நினைக்கிறாராய்த்து. (கலங்கவன்று சென்றுகொன்று வென்றிகொண்ட வீரனே) பயமிருக்கும்படி அறியாதவன் பயத்தாலே போக்கற்றுக் கலங்கும்படி. இவனுக்கு வரங்கொடுத்த தேவதைகளும் குடியிருப்பிழக்கும்படியான தஶையிலே ஜநஸ்தாநவதத்தையும் ஸேதுபந்தநத்தையும் பண்ணிச்சென்று அவனைக்கொன்று விஜயத்தை லபித்த ஆண்புலியானவனே.

(விலங்குநூலர்) ஸர்வகாலமும் வைதிக கர்மாநுஷ்டாநதாக்கமென்று தோற்றும்படியான யஜ்ஞோபவீதத்தை ‡தரித்து, நிரூபகமாக வுடையராய். (விலங்கு) உடம்பு. (வேதநாவர்) ஸர்வகாலமும் வேதபாராயணம் பண்ணுகையாலே வேதோச்சாரணத்தை நிரூபகமாக வுடையவராய். (நீதியானகேள்வியார்) ஸர்வகர்மஸமாராத்யன் ஸர்வேஶ்வரனென்று ஸதாசார்யோபதேசமுடைய ப்ராஹ்மணர். (வலங்கொளக்குடந்தையுள் கிடந்த மாலுமல்லையே) அவர்களுடைய அநுகூலவ்ருத்தியை ஸ்வீகரிக்கைக்காகத்திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகனல்லையோ. (வலம்) அநுகூலம். சக்ரவர்த்தித்திருமகனுடைய ஆண்பிள்ளைத் தனத்தை ஆராவமுதாழ்வார் பக்கலிலே அநுபவித்தபடி சொல்லிற்றாய்விட்டது. .... .... (௫௬)

---

அரு.—ஐம்பத்தாறும்பாட்டு. (சில வஞ்சகங்கள்) மநஸ்ஸு முதலான தஶேந்த்ரியங்களை நினைக்கிறா ரென்றுஸ்வாபதேஶம். வலம் - ப்ரதக்ஷிணமாகையாலே, அநுகூலமென்கிறது. (௫௬)

---

(௲)

(யா) ‡ சரீரத்துக்கு.

மூ.—சங்குதங்குமுன்கைநங்கை கொங்கைதங்கலுற்றவன்
அங்கமங்கவன்றுசென் றடர்த்தெறிந்தவாழியான்
கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்குடைந்தநீர்
பொங்குதண்குடந்தையுட் கிடந்தபுண்டரீகனே. (௫௭)

---

ஐம்பத்தேழாம்பாட்டு. (சங்கித்யாதி)

| | |
|---|---|
| சங்கு | கைவளை (சங்கும் தொடியும் சூடகமும் சரியும் கன்றும் குருகும் வண்டும் கைவளை யென்னக்கடவது) |
| தங்கு | நிற்கிற |
| முன்கை | முன்கையையுடைய |
| நங்கை | ரூபாத்மகுணங்களாலே பூர்ணையான பிராட்டிபக்கலிலே |
| கொங்கை | திருமுலைத்தடத்திலே (கொங்கைகுயமென்னக்கடவது) |
| தங்கல் | தொங்கலை |
| உற்றவன் | நினைத்தராவணனுடைய |
| அங்கம் | ஶரீரம் |
| மங்க | மங்குகைக்காக |
| அன்று | வேண்யுத்க்ரதநதஶையிலே |
| சென்று | கடல்கரையிலே சென்று |
| அடர்த்து | அடைமதிள்படுத்தி |
| எறிந்த | அவன் தலையை யறுத்த |
| ஆழியான் | கடல்போலே ஶ்ரமஹரமான திருமேனியையுடையவன், |
| கொங்கு | மலர்தாதுகள் (மகரந்தம் கேசரம் கொங்குமலர்தாதென்னக்கடவது) |
| தங்கு | நிற்கிற |
| வார் | நீண்டிருக்கிற (வார்தல்போதல்சேண்வசமென்னக்கடவது) |
| குழல் | மயிரையுடைய, (கேசமளகம்குழலெ ன்னக்கடவது, |

| | |
|---|---|
| மடந்தைமார் | ஸ்த்ரீகள் (மடந்தைகாரிகையென்னக் கடவது) |
| குடைந்த | அந்தே அவகாஹித்த |
| நீர் | ஜலமானது |
| பொங்கு | பொங்குகையாலே |
| தண் | ஶ்ரம ஹரமான |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| புண்டரீகன் | புண்டரீகஸத்ருஶமானவதநநயநகர பீகரசரணத்தையுடையவன் (த்தப்ர சுரத்வாத் தத்வ்யபதேஶ:) |
| அல்லையே | அன்றோ? (௫ள) |

அவ.—ஐம்பத்தேழாம் பாட்டு. ப்ராப்தி விரோதியைப் போக்கி அநுகூலவ்ருத்தி கொள்ளுமளவன்றியே, நித்யாநபாயிநியான பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு இடைச்சுவரான ராவணனை அழியச்செய்தாப்போலே, பிற்பாடரான ஆஶ்ரிதர்க்கு அநுபவ விரோதிகளைப்போக்குகைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

வ்யா.—(சங்குதங்குமுன்கை) வளை கழலாதேயிருந்துள்ள முன்கையையுடையவள். அவன் கொண்டாடும்வளை முன்கை வளையாகையாலே வ்யதிரேகத்தில் கழலுவதும் அதுவேயிறே. இத்தால் - நித்யாநபாயிநியென்கை. (நங்கை) ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையானவள். (க) "துல்யஶீலவயோ வ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் - துல்யஶீலவயோவ்ருத்தாம்துல்யாபிஜநலக்ஷணம்" என்கிற பிராட்டிபக்கலிலே. (கொங்கை தங்கலுற்றவனங்கம் மங்க) திருவடிகளிலே தங்கப்ராப்தமாயிருக்க, மாத்ருவிஷயமென்று பாராதே அதிக்ரமத்தை நினைத்த

அரு.—ஐம்பத்தேழாம்பாட்டு. தங்கென்றுவிஶேஷிப்பானென்னென்னவருளிச் செய்கிறார் (அவன் கொண்டாடுமித்யாதி). (௫ள)

(க) ரா-ஸு-கரு-டு.

மூ.—மரங்கெடநடந்தடர்த்து மத்தயானைமத்தகத்
துரங்கெடப்புடைத்தோர்கொம் பொசித்துகந்தவுத்தமா
துரங்கம்வாய்பிளந்து மண்ணளந்தபாத வேதியர்
வரங்கொளக்குடந்தையுட் கிடந்தமாலுமல்லையே. (ருஅ)

ராவணனுடைய ஶரீரமழிகைக்காக. தங்கல்-தொங்கல். இந்த துர்ப்புத்திக்கடி தேஹாத்மாபிமாநமாகையாலே அதுக் கடியான ஶரீரத்தை யாய்த்து அழிக்கநினைத்தது. (அன்று) உடலையு மூயிரையும் பிரித்தாப்போலே, இருவரையும் கடலுக்கு அக்கரையும் இக்கரையுமாம்படி பண்ணின வன்றென்னுதல்;வேண்யுத்க்ரதந தஶையிலென்னுதல். (சென்று) (க) "ஸஹியாதா வ்யூஹத-லாவ - அபியாதாப்ரஹர்த்தாச" என்கிறபடியே அவனிருந்தவிடத்தே சென்று. (அடர்த்தெறிந்த ஆழியான்) அடைமதிள்படுத்தி அவன்தலையையறுத்து அந்த ஹர்ஷத்தாலேகடல் போலேஶ்ரமஹரமான வடிவையுடையவன்.எறிதல்-அறுத்தல்.

(கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்) பரிமளம்மாறுத நீண்ட குழலையுடைய ஸ்த்ரீகள். (குடைந்தநீர்பொங்கு தண்குடந்தையுள்) அவகாஹித்தநீரானது இவர்களுடைய நெருக்கத்தாலே ப்ரவ்ருத்தமாய், அத்தாலே ஶ்ரமஹரமான திருக்குடந்தையிலே. இத்தால் - ஆராவமுதாழ்வாரை அநுபவிக்கச் செல்லுமவர்களை, (உ)"ஶதம்மாலாஹஸ்தா - ஶதம்மாலாஹஸ்தா:" என்கிறபடியே எதிரேற்றுக் கொள்ளுமவர்களாயும் அங்குத்தைக்குப்பரிசாரிகைகளாயும் நிற்குமவர்களென்கை. (கிடந்தபுண்டரீகனே) தாமரைக்காடு பரப்புமாறப் பூத்தாப்போலே யிருக்கிற| திவ்யாவயவங்களோடே தன்னை அநுபவிப்பிக்கைக்காகக் கண்வளர்ந்ருகஂகிறவன். ஆக இரண்டுபாட்டா - லேசக்ரவர்த்தித்திருமகனுடைய ஆண்பிள்ளைத்தனத்தையும் அழகையு மநுபவித்து, மேலிரண்டு பாட்டாலே - க்ருஷ்ணனுடைய வீரசரிதத்தையும் அழகையும் ஆராவமுதாழ்வார்பக்கலிலே யநுபவிக்கிறார். (ருஎ)

ஐம்பத்தெட்டாம்பாட்டு (மரம்கெடவித்யாதி).

மரம் யமளார்ஜுநங்கள்

(க) ரா-அ-க-உக. (உ) கௌஷீ-க-ச.

| | |
|---|---|
| கெட | நசிக்கும்படி |
| நடந்து | தவழ்ந்து, |
| மத்த | மதித்த |
| யானை | குவலயாபீடத்தை |
| அடர்த்து | மதம் போம்படி நெருக்கி, |
| மத்தகத்து | அதின் மஸ்தகத்திலே |
| உரம் | வலி |
| கெட | நசிக்கும்படி |
| புடைத்து | குதித்து |
| ஓர் | அத்விதீயமான |
| கொம்பு | தந்தங்களை |
| ஒசித்து | முறித்து |
| உகந்த | ஹ்ருஷ்டனான |
| உத்தமா | புருஷோத்தமனே! |
| துரங்கம் | கேசியினுடைய |
| வாய் | முகத்தை |
| பிளந்து | கிழித்து, |
| மண்ணளந்த | மஹாபலிபக்கல் நின்றும் பூமியை ஸ்ரீ வாமனனாயவதரித்து அளந்து கொண்ட |
| பாத | திருவடிகளை யுடையவனே! "நீ" என்று சேஷம். |
| வேதியர் | வேதார்த்த தாத்பர்யம் கைப்பட்டவர்கள் |
| வரங்கொள்ள | தந்தாமபேக்ஷிதங்களை உன்பக்கலிலே அபேக்ஷிக்கலாம்படி |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மால் | வ்யாமுக்த்தன் |
| அல்லையே | அன்றோ? (திருக்குடந்தைக்கு அர்த்த ப்ராதாந்யம்.) (௫௮) |

அவ.—ஐம்பத்தெட்டாம் பாட்டு. ஆஸ்ரிதார்த்தமாக யமளார்ஜுநங்கள் தொடக்கமான ப்ரதிகூலவர்க்கத்தைப் போக்கின நீ, அக்காலத்துக்குப் பிற்பாடர்க்கு உதவுகைக்காக ஆஸ்ரிதவாத்ஸல்யத்தாலே வந்து கண்வளர்ந் தருளினையல்லையோ என்கிறார்.

வ்யா.—(மரங்கெடநடந்து) மருதுகள் முறிய நடைகற்று. நடக்கையாவது - தவழுகையும், தளர்நடையிடுகையும். (அடர்த்து மத்தயானை) மதிக்கப்பண்ணிக் கொண்டுவந்தகுவலயாபீடத்தைச் செருக்குப்போம்படி நெருக்கி. (மத்தகத்துரங் கெடப்புடைத்தோர் கொம்பொசித்து) ஆனைவீழக் ‡ குத்துமிடத்தில் அத்விதீயமான கொம்பைமுறித்து, அதினுடைய மிடுக்கழியும்படி மஸ்தகத்திலே புடைத்து. மதத்தாலே வந்த செருக்கை அதினுடைய நாலுகாலுக்கு முள்ளே புக்கு நின்று உழப்பிக்கெடுத்து, அதினுடைய ஹிம்ஸாபரிகரமான கொம்பைமுறித்து;† (கொன்றருளினனென்றதாய்த்து.) (உகந்தவுத்தமா) ஆஸ்ரிதவிரோதிபோகப் பெற்றதென்று உகந்த புருஷோத்தமனே. இங்குப்புருஷோத்தமனென்கிறது-ஸ்வரூபத்தால் வந்த உத்கர்ஷத் தளவன்றியே ஆஸ்ரிதபக்ஷபாதத்தால் வந்தஉத்கர்ஷத்தைநினைத்து. குணாதிக்யமிறே வஸ்துவுக்கு உத்கர்ஷஹேது.

(துரங்கம் வாய்பிளந்து) ஸந்த்யாகாலத்திலே திருவாய்ப்பாடியை அழிக்கவந்த கேசியுடைய வாயைக்கிழித்து. (மண்ணளந்தபாத) ஸ்ரீவாமநனாய் எல்லார் தலையிலும் வைத்த திருவடிகளையுடையவனே. த்ரைவிக்ரமாபதாநம், கேசிவதஸமநந்தரத்திலே க்ருஷ்ணனுடைய சேஷ்டிதமாகப் பேசலாம்படியிறே இரண்டவதாரத்துக்கு முண்டான ஸௌப்ராத்ர(ஹ்ராத்ரு)ம். அதாகிறது-எல்லாரையும் வரையாதே தீண்டுகையும், எதிரிகளை அழகாலே அழிக்கையும். (வேதியர்வரங்கொளக் குடந்தையுட்-

---

ஐம்பத்தெட்டாம்பாட்டு. நடைதருகையாவதென் னென்னவருளிச்செய்கிறார் (தவழுகையுமித்யாதி). (உழப்பி) தடுமாறப்பண்ணி. (ருஅ)

---

‡ குதிக்குமிடத்தில். † குண்டலிதமதிகம்.

மூ.—சாலிவேலிதண்வயல் தடங்கிடங்குபூம்பொழில்
கோலமாடநீடுதண் குடந்தைமேயகோவலா
காலநேமிவக்கரன் கரன்முரன்சிரமவை
காலனோடுகூடவிற் குனித்தவிற்கைவீரனே. (ருகூ)

கிடந்த மாலுமல்லையே) வேதார்த்ததாத்பர்யம் கைப்பட்டவர்கள் தந்தாமபேக்ஷிதங்களை உன்பக்கலிலே அபேக்ஷிக்கலாம்படி திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற வ்யாமுக்த(ஜ)னல்லையோ. வஞ்சகராய் வந்த யமளார்ஜுநங்களைத் தன்மௌக்த்யத்தாலே அழித்து, எதிரிகளாகக் கண்முகப்பேதோற்றவந்த குவலயாபீடத்தையும் கேசியையும் அநாயாஸேந அழியச்செய்து, தான் வஞ்சகனுப் எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்து முறையுணர்த்தின புருஷோத்தமன் - தன்வாத்ஸல்யத்தாலே பிற்பாடர்க்கு உதவவந்துகிடக்கிறதேசம்திருக்குடந்தையென்றதாய்த்து. (ருஅ)

ஐம்பத்தொன்பதாம்பாட்டு. (சாலியித்யாதி)

| | |
|---|---|
| சாலி | செந்நெலை |
| வேலி | சுற்றுமுடைய |
| தண் | ஸ்ரமஹரமான |
| வயல் | கேதா(ர)ரங்களென்ன; |
| தடம் | அதுக்குள்ளே விஸ்தீர்ணமான |
| கிடங்கு | அகிழென்ன "அகிழ்கிடங்கு பரிகம்" என்னக்கடவது. |
| பூம் | அதுக்குள்ளே புஷ்பிதங்களான |
| பொழில் | உத்யாநங்களென்ன, இவைகளையுடைத்தாய் |
| கோல | தர்ஸநீயமாய் |

(மாடநீடு) "நீடுமாட" என்றுகூட்டி

| | |
|---|---|
| நீடு | உந்நதமான |
| மாடம் | க்ருஹங்களையுடைத்தாய் |
| தண் | ஸ்ரமஹரமான |

| | |
|---|---|
| குடந்தைமேய | திருக்குடந்தையிலே நித்யவாஸம்பண்ணுகிற |
| கோவலா | க்ருஷ்ணனே! |
| காலநேமி | காலநேமியென்ன |
| வக்கரன் | தந்த்வக்த்ரனென்ன, |
| கரன் | க்ரூரனை |
| முரன் | முரனென்ன, இவர்களுடைய |
| சிரமவை | ஶிரஸ்ஸுக்களை "அறுத்து" என்றத்த்யாஹாரம் |
| காலனோடு | ம்ருத்யுவோடே |
| கூட | கூடும்படி |
| வில் | ஸ்ரீ ஶார்ங்கத்தை |
| குனித்த | வளைத்த |
| வில் | ஶ்ரீஶார்ங்கத்தை |
| கை | திருக்கைகளிலே யுடைய |
| வீரனே | ஆண் புலியே. (ருகூ) |

அவ.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு. பண்டு ஆஶ்ரிதவிரோதிகளைப்போகின மிடுக்கனைவைத்து, அழகாலும் ஶீலத்தாலும் ஆஶ்ரிதரை யெழுதிக்கொள்ளுகைக்காக அவதரித்தக்ருஷ்ணன், பிற்பாடருடைய இழவுதீர ஸர்வப்ரகாரத்தாலும் புஷ்கலமான திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறபடியை யநுபவிக்கிறார்.

வ்யா.—(சாலிவேலி தண்வயல் தடங்கிடங்கு பூம்பொழில்) செந்நெலைச்சுற்று முடைத்தாய், ஶ்ரமஹரமானவயலையும் அதுக்குள்ளாகப்பெரிய அகழையும் அதுக்குள்ளாகப்பூத்த பொழிலையுமுடைத்தாய். இத்தால் - ஆராவமுதாழ்வாருடைய ஸௌகுமார்யத்துக்கு அநுரூபமாக ஸர்வப்ரகார போக்யதையையுடைய தேசமென்கை. (கோலமாடநீடு தண்குடந்தைமேய கோ

மூ.—செழுங்கொழும்பெரும்பனி பொழிந்திடவுயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்துவிண் புடைக்கும்வேங்கடத்துள்நின்று
எழுந்திருந்துதேன்பொருந்து பூம்பொழிற்றழைக்கொழும்
செழுந்தடங்குடந்தையுட் கிடந்தமாலுமல்லையே. (௬௰)

---

வலா) தர்ஶநீயமுமாய், ஓக்கத்தையுமுடையமாடங்களை யுடைத்தாய், ஶ்ரமஹரமான திருக்குடந்தையிலே நித்யவாஸம்பண்ணுகிற க்ருஷ்ணனே. இத்தால்-ஆராவமுதாழ்வாருடையரஸிகத்வத்துக்குஏகாந்தமான போக(ஹேம)ஸ்தாநமென்கை. "கோவலா" என்கிறது-க்ருஷ்ணனுடைய அழகும் ஸௌலப்யமும்ஶீலமும்ஆராவமுதாழ்வார் பக்கலிலே காணலாம்படி யிருக்கையாலே. அவதாராந்தரங்களென்னவொண்ணாது - ஸர்வஸாத்ருஶ்யத்தாலே. (௧) "குடந்தையன் கோவலன் குடியடியார்" என்று ஒருதேசவிஶேஷத்திலும் ப்ரஸித்தமிறே.

(காலநேமி வக்கரன் கரன்முரன் சிரமவை)காலநேமி, தந்தவக்ரன், க்ரூரனானமுரன் இவர்களுடைய தலைகளையறுத்து. (காலனோடுகூட வில்குனித்த) இவர்கள்பேர் கேட்க அஞ்சுங்காலன் இவர்களுக்கு நிர்வாஹகனாய், இவர்களஞ்சிச் சென்று கூப்பிடும்படியாக, ஸங்கல்பத்தாலன்றியே, வில்லாலே அழியச்செய்தவனே. (விற்கைவீரனே) ஆஶ்ரிதவிரோதிகளை அழியச்செய்கைக்கு வில்வளைக்கவும் வேண்டாதே, (௨) "ஸக்ருதேவநி ஹேலாவேஹ்ருஹீகாஸ்த்ரநாஸநே-ஸக்ரசாபநிபே சாபே க்ருஹீத்வாஶத்ருநாசநே" என்னும்படியேவில்பிடித்தபிடியிலே அவர்கள்முடியும்படியான ஆண்பிள்ளைத்தனத்தையுடையவனே.

அறுபதாம்பாட்டு. (செழுமித்யாதி)

செழும்கொழு ஸ்த்தூலதா(யா)ரைகளாய் விழுகிறம் (செழும் கொழும் பப்தங்கள்-ஸப்தி

---

அரு.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு. அழகுமுதலானவைமற்றை அவதாரங்களுக்கு இல்லையோவென்ன வருளிச்செய்கிறார் (அவதாராந்தர மித்யாதி). க்ருஷ்ணனே யென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (குடந்தையன்கோவலனித்யாதி). (௫௯)

---

(௧) திவாய் ௫௦௯-௭. (௨) ஸ்ரீ-விஷ்-௫-௯.

பீ(ஷீ)த வாசி(ஷி)களாய், வீப்ஸை யாலே அதிஶயத்தைக்காட்டிற்று).

| | |
|---|---|
| பெரும்பனி | மூடுபனி |
| பொழிந்திட | சொரிய |
| உயர்ந்தவேய் | உந்நதமான மூங்கில்கள் |
| விழுந்து | அந்தப்பனியின் கனத்தாலே தரையிலே சாய்ந்து |
| உலர்ந்து | அநந்தரம் ஸூர்ய கிரணங்களாலே உலர்ந்து |
| எழுந்து | கிளம்பி |
| விண் | ஆகாசத்திலே |
| புடைக்கும் | கிட்டும் |

(அன்றிக்கே, "செழுங்கொழு முயர்ந்தவேய் பெரும் பனி பொழிந்திட விழுந்துலர்ந்து எழுந்துவிண்புடைக்கும் வேங்கடம்" என்றந்வயித்து)

| | |
|---|---|
| செழும் | பீநங்களாய் |
| கொழும் | ஸ்ப்பீதங்களாய் |
| உயர்ந்த | உந்நதங்களான (தது பரிபூர்வவத்) |
| வேங்கடத்துள் | திருமலையிலே |
| நின்று | நின்றுகொண்டு |
| தேன் | வண்டுகளானவை |
| எழுந்து | கிளர்ந்து |
| இருந்து | திரும்பவும் படிந்து |
| பொருந்து | வர்த்திக்கிற |

"தழை கொழும் பூம்பொழில்" என்றந்வயம்;

| | |
|---|---|
| தழை | ஶாகோபஶாகங்களாய் |
| கொழு | ஶ்ரத்தையை யுடைத்தாய் |
| பூம் | புஷ்பிதங்களான |

| | |
|---|---|
| பொழில் | உத்யாநங்களையுடைய |
| செழும் | ஸௌந்தர்யத்தாலே ஸ்பீதங்களான |
| தடம் | தடாகங்களையுடைய |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| மால் | ஆஸ்ரிதர் பக்கல் வ்யாமுக்தன் |
| அல்லையே | அன்றோ ? (சுo) |

அ.—அறுபதாம்பாட்டு. உகந்தருளின நிலங்கள் ஆஸ்ரயணீயஸ்தலம், போகஸ்தாநம் ஒருதேசவிசேஷமென்றிராதே, (௧)"நிலையார நின்றான்" என்று - நிலையழகிலே துவக்குண்பார்க்குத்திருமலையில் நின்றருளியும், (௨)"கிடந்ததோர்கிடக்கை" என்னும்படி கிடையழகிலே துவக்குண்பார்க்குத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளியும், இப்படிச்செய்தருளிற்று - போக்தாக்களான ஆஸ்ரிதர்பக்கலுள்ள வ்யாமோஹமிறே யென்கிறார்.

வ்யா —(செழுங்கொழும் பெரும்பனிபொழிந்திட) பருத்துதா(யா)ரைகளாய்விழுகிற மூடுபனிசொரிய. செழுமை -பெருகொழுப்பு - கொழுமை; இடைவிடாதே தாரைகளாய் விழுகை. செழுமை - வண்மை. பெரும்பனி - மூடுபனி. இப்படி பனியை வர்ணிக்கிறது - ஏதேனுமாகத் திருமலையிலே ஸம்பந்தித்தவை தமக்கு மநோஹரமாயிருக்கையாலே. (உயர்ந்தவேய்விழுந்து.) ஓங்கினமூங்கில்கள் பனியால்வந்த கனத்தாலே தரையளவும் சாய்ந்து. "செழுங்கொழும் - உயர்ந்தவேய் - பெரும்பனிபொழிந்திட - விழுந்து" என்றுமாம். அப்போது - பெருத்து ஸாரத்தையை யுடைத்தாய் உயர்ந்த மூங்கில்களென்றாகக் கடவது. திருவேங்கடமுடையானுடைய விசேஷகடாக்ஷமேவினை நீராக வளருகிறவை யென்கை. (உலர்ந்தெழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள் நின்று) ஆதித்யகிரணங்களாலே பனியுலருகையாலே, பனியுலர்ந்தவாறே தலையெடுத்து ஆகாசத்தினெல்லையிலே முட்டுந்திருமலையிலே நின்றருளி. இத்தால் - திருவேங்கட

(௧) தி-மொ-சு-கூ-அ. (௨) திருமா-௨௩.

மூ.—நடந்தகால்கள் நொந்தவோ நடுங்கஞாலமேனமாய்
இடந்தமெய்குலுங்கவோ விலங்குமால்வரைச்சுரம்
கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுள்
கிடந்தவாறெழுந்திருந்து பேசுவாழி கேசனே. (௬௧)

---

முடையானுடைய விசேஷகடாக்ஷத்திலே தலையெடுக்கையும் வ்யதிரேகத்தில் தரைப்படுகையும் அத்தைமிகமான பதார்த்தங்களுக்கு ஸ்வபாவமென்னுமிடத்துக்கு த்யோதகமென்கை.

(எழுந்திருந்து தேன்பொருந்து பூம்பொழில் தழைக்கொழும்) வண்டுகள் கிளர்ந்து பரவா, திரியவும்படிந்து வர்த்திக்குமதாய், தழைத்து ஸம்ருத்தையையுடைத்தாய், பரப்புமாறப்பூத்த பொழிலையுடைய தேசம். இத்தால்—வண்டுகள் பொழிலின் மதுவெள்ளத்தாலே அவகாஹிக்கமாட்டாதே விடவும்மாட்டாதே அலமாக்குமென்கை (செழும்தடங்குடந்தையுள்) அப்பொழிலுக்குள்வாயில் அழகிய தடாகத்தையுடைத்தான திருக்குடந்தையிலே. இத்தால் - அத்தேசத்தில் திர்யக்குக்களும் போக்யத்தாலேவந்துகளித்து வர்த்திக்குப்படியாயும் தாபத்ரயாதுரர்க்குக் கண்டபோதே ஸ்ரமஹரமாயுமிருக்கும் தேசமென்கிறது. (கிடந்தமாலுமல்லையே) "கிடையழகிலே துவக்குண்டு அநுபவிப்பாரரோ" என்று அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிற வ்யாமுக்தனல்லையோ. .... .... (௬௦)

அநுபத்தோராம்பாட்டு. (நடந்தவித்யாதி).

| | |
|---|---|
| நடந்த | உலகளந்த |
| கால்கள் | திருவடிகள் |
| நொந்தவோ | நோவுபட்டது பொறுமேபோ? (அன்றிக்கே) |
| நடந்த | சக்ரவர்த்தித் திருமகனாய் காட்டிலும் மலையிலும் நடந்த |
| கால்கள் | திருவடிகள் |

| | |
|---|---|
| சொந்கவோ | சோவுபட்டது பொறுமேயோ? என்றுமாம். (அன்றிக்கே) |
| கடுங்கு | காவல் சோர்வாலே நீங்குகிற |
| ஞாலம் | பூமியை |
| ஏனமாய் | மஹாவராஹமாய் |
| இடந்த | அண்டபித்தியிலே புக்கு இடந்த |
| மெய் | திருமேனியில் |
| குலுங்கவோ | ஆடோபத்தாலே வந்த வாலஸ்யத்தாலேயோ? |
| விலங்கு | நீர்வரவொண்ணுதபடி இருவிலங்கான |
| மால்வரை | பெரியமலைகளென்ன, |
| சுரம் | அருநெறிகளென்ன, இவைகளை |
| கடந்த | லங்கி (ஜ்ஹ)த்த |
| கால்பரந்த | பரிந்த ஸாரிணிலயயுடைத்தான |
| காவிரி | திருக்காவேரியினுடைய |
| கரை | கரையில் |
| குடந்தையுள் | திருக்குடந்தையிலே |
| கிடந்தவாறு | கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரத்தை |
| எழுந்திருந்து | உத்தி(ஷ்டி)தனாய்க்கொண்டு |
| பேசு | அருளிச்செய்யவேணும்; |
| வாழி | (அப்படி அருளிச்செய்யாமையாலே) "ஆயுஷ்மந்" என்றுப்போலே மங்களாஸாஸநம் பண்ணுகிறார். |
| கேசனே | கேசவனே ; (வகாரமில்லாமையாலே இடைக்குறைத்தலாய்க்கிடக்கிறது; அன்றிக்கே, "கேசனே - கெஸா வஸ்ராஷீத் கெஸஃ-ஸுஸ-ந்ர ஜீக்ஷா ஈவ |

ஸோவிவ்ருஸம்ஸாயாழு” என்று
ய்க்கிடக்கிறதென்னவுமாய், கேசவ
என்னும்து “சேச” என்றுகிட
க்கிறபோது “கெஸாவொந்தாஊ
ஸ்யாழு” இதி வ்ருஸம்ஸாயாம் ஃகூ
யீஷ்ய வ்ருத்யாஞம்யக் கிடக்கி
றது. இரண்டுக்கும் ஸ்ரீமுகூட்டிஷ
கூஞஜனென்றர்த்தமென றருளிச்
செய்வர்). (சுக)

அவ;—அறுபத்தோராம்பாட்டு. இப்படி போகஸ்த்தாநமா கையாலே ஆராவமுதாழ்வார் திருவடிகளிலே தாமநுபவிக்க இழிந்தவிடத்தில், வாய்திறத்தல் அணைத்தல் செய்யாதே ஒருபடியே கண்வளர்ந்தருளக் காண்கையாலே ஸௌகுமாரமான இவ்வடிவைக்கொண்டு திருமேனிநொந்து த்ரிவிக்ரமாதி சேஷ்டிதங்களைப்பண்ணுகையாலே கண்வளர்ந்தருளுகிறராகத் தம்முடையபரிவாலே, அதிசங்கித்து எல்பயம்கெடும்படி ஒன்றை நிர்ணயித்து எனக்கருளிச் செய்யவேணுமென்கிறார். இதொழிய, ப்ராக்ந்யாயத்தாலே அர்ச்சாவதார ஸங்கல்பமென்ன வொண்ணாதிறே இவர்க்கு.

வ்யா.—(நடந்தகால்கள் நொந்தவோ) (க) “வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள் பிடிக்கும் மெல்லடி” என்கிறபடியே ஸௌகுமாரமான திருவடிகளைக்கொண்டு திருவுலகளந்தருளின விதுபொறுமே நொந்துகண்வளர்ந்தருளுகிறதோ. சக்ரவர்த்தித் திருமகனாய், காட்டிலும் மலையிலும் ஸௌகுமாரமான திருவடிகளைக்கொண்டு திரிந்தவது பொறாமையெநொந்து கண்வளர்ந்தருளுகிறதோ. (உ) “எவ்வாறு நடந்தனை யெம்பிராமாவோ!” என்று ஸௌகுமார்யத்தை அறியுமவர்கள் கூப்பிடும்படியாயிறே யிரு

அரு.—அறுபத்தோராம்பாட்டு. (ப்ராக்ந்யாயம்) திருவெஃகாவிலும் அர்ச்சாவதார ஸமாதி குலைந்து கார்யம் செய்கை. ப்ரமத்தாலேகண்

(க) தி-வாய்-கூ-உ-கo, (உ) பெரு-தி-கூ-உ,

ப்பது. நடந்ததுபோருமே கண்வளர்ந்தருளுகிறதாகில் நான் திருவடிகளைப்பிடிக்க.(நடுங்க ஞாலமேனமாயிடந்தமெய் குலுங்கவோ) அதன்றிக்கே, பூமிக்கபிமாநிநியானபிராட்டி, பாதாளகதையாய்த் தன்னுடைய உத்த(உ)ரணத்துக்கு ஒரு†வழிகாணுதே நின்றுநடுங்குகிற தசையிலே, பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியைமஹாவராஹமாய் அண்டபித்தியிலேபுக்கிடந்தவதுபோருமே திருமேனி‡யில் ஆயாஸத்தாலே கண்வளர்ந்தருளுகிறதோ; அதுவாகில் நான் திருமேனியைப்பிடிக்க.

(விலங்குமால்வரைச்சுரம் கடந்தகால்பரந்த காவிரிக்கரை) நீர்வரவொண்ணுதபடி இருவிலங்கான பெரியமலைகளையும் சுரங்களையும் கடந்த நீரோடு கால்பரந்துவருகிற காவேரிக்கரையிலே. சுரம்-காடும்; அருநெறியும். இத்தால் - ஆராவமுதாழ்வாருடைய ஸௌகுமார்யத்துக்கநுகூலமாக ஶிஶிரோபசாரம் பண்ணுகைக்குக்காவேரி, மலையென்ன அருநெறியென்ன இவற்றைக்கடந்து தன் அபிநிவேஶம் தோற்றப்பரந்து வந்தபடியைச் சொல்லிற்றென்கை.

(குடந்தையுள் கிடந்தவாறு)காவேரிஅடிமைசெய்யத் திருக்குடந்தையிலே ஶ்ரமம்தோற்றக் கண்வளர்ந்தருளுகிறபடியை. காவேரி ஶிஶிரோபசாரம்பண்ணக் காண்கையாலும், திருவெஃகாவில் கிடையில், (க) "ஹாயாவாஸ... - சாயாவாஸத்வமநுகச்சேத்" என்கிறபடியே தொடர்ந்துபோரக்காண்கையாலும், கோயிலிலும்(உ)"உன்னபாதமென்ன சிந்தைமன்ன

---

வளர்ந்தருளுகிறுனென்பானென்? அர்ச்சாவதார ஸமாதியாலே கண்வளர்ந்தருளுகிறுனென்னவொண்ணுதோ வென்ன வருளிச்செய்கிருர் (காவேரிஶிஶிரோபசாரம் பண்ணவித்யாதி). (௬௧)

---

(க)பரமஸம்ஹிதை. (உ) ௫௫.

† (பா)அடி, ‡ (பா) அலசி அத்தாலே.

மூ.—

கரண்ட மாடுபொய்கையுட் கரும்பனைப்பெரும்பழம்
புரண்டுவீழவாளைபாய் குறுங்குடிநெடுந்தகாய்
திரண்டதோளிரணியன் சினங்கொளாகமொன்றையும்
இரண்டுகூறுசெய்துகந்த சிங்கமென்பதுன்னையே. (சுஉ)

---

வைத்து நல்கிறுப்" என்று தம்மபிமதம் பெறுகையாலும் திருக்குடந்தையிலும் முகம் தாராதே கண்வளர்ந்தருளுகைக்கு ஹேது ஸ்ரமமேயென்று திருக்கிறார். ஆராவமுதாழ்வாரும் இவருடைய பரிவினையெல்லாம் அநுபவிக்கைக்காகவும் படுக்கைவாய்ப் பாலும் கண்வளர்ந்தருளுகிறார். (எழுந்திருந்துபேசு) இதுக்கு ஹேதுவை, கண்வளர்ந்தருளாநிற்க அருளிச்செய்யவொண்ணாது, என்பயங்கெட எழுந்திருந்து அருளிச்செய்யவேணும்; எழுந்திருக்கும்போதை சேஷ்டிதத்தாலும், அருளிச்செய்யும்போதை ஸ்வரத்தாலும் எனக்கு பயங்கெடவேணும். (வாழி) அப்படியருளிச்செய்யாமையாலே, "ஸுபாஷநீ - ஆயுஷ்மந்" என்னுமாபோலே ஒரு நீங்கின்றிக்கே கண்வளர்ந்தருளுகிற இவ்வழகு நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். (கேசனே) கேஸவசப்தமாய், இடைக்குறைத்தலாய்க்கிடக்கிறதென்னுதல்; கேசத்தையுடையவனென்னுதல். இரண்டுக்கும் ஸ்நிக்த நீலகுடிலகுந்தளனென்றர்த்தம். இத்தால் - (க) "கேஸவக்லேஸநாஸந:-கேஸவ:க்லேஸநாஸந:" என்கிறபடியே-திருக்குழலைப்பேணி என்னுடைய க்லேசத்தைத் தீர்த்தருளவேணுமென்கை. .... (சுக)

அறுபத்திரண்டாம்பாட்டு (கரண்டமாடித்யாதி).

கரண்டம் நீர்க்காக்கைகளானவை

ஆடு நடையாடாநிற்கிற

(அன்றிக்கே)

---

(க)

| | |
|---|---|
| ஆடு | நீராடாநிற்கிற; முழுகாநிற்கிறவென்றபடி. |
| பொய்கையுள் | ஸரஸ்ஸிலே |
| கரும் | கறுத்திருக்கிற |
| பனை | தாளவ்ருக்ஷங்களுடைய |
| பெரு | பெருத்திருக்கிற |
| பழம் | பழங்களானவை |
| புரண்டு வீழ | நீரிலே உருண்டு விழ |
| வாளை . | மத்ஸ்யங்களானவை |
| பாய் | (பனம் பழத்தை நீர்க்காக்கையாகக் கருதி) அஞ்சிப்பாயாநின்றுள்ள |
| குறுங்குடி | திருக்குறுங்குடியிலெழுந்தருளியிருக்கிற |
| நெடும் | தீர்க்கமான |
| தகாய் | இயல்பையுடையவனே ; ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளாகிற மஹாஸ்வபாவத்தையுடையவனென்றபடி |
| திரண்ட | திரட்சியையுடைத்தான, ஸ்ப்பீதங்களானவென்றபடி |
| தோள் | புஜங்களையுடைய |
| இரணியன் | ஹிரண்யனுடைய |
| சினம் | க்ரோதத்தை |
| கொள் | கொள்ளாநின்றுள்ள-ஆந்தரக்ரோத ஸூசகமானவென்றபடி |
| ஆகமொன்றையும் | ஒரு சரீரத்தையும் |
| இரண்டு | இரண்டு |
| கூறுசெய்து | பாக(ஸம)மாகப்பண்ணி |
| உகந்த | சிறுக்கனுடைய விரோதி போகப்பெற்றோமென்று ப்ரீதனான |

சிங்கமென்பது நரஸிம்ஹமாக ப்ரமாணங்கள்சொல்லுவது

உன்னையே உன்னைத்தானோ? ("ஏ" என்று வியப்பில் ஏகாரம்; அதாவது விஸ்மயவாசி ஏவகாரமென்றபடி. (௬௨)

அவ.— அறுபத்திரண்டாம்பாட்டு. திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளினவிதுக்குமேற நிஸ்சயிக்கமாட்டாதேபீ (ஸ்ரீ) தரானவர்க்கு, ஹிரண்யனை அழியச்செய்த வீரத்தோடே திருக்குறுங்குடியிலே நின்றருளினபடியைக் காட்டக்கண்டு தரித்து, நம்பியுடைய ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்து "முரட்டுஹிரண்யனை அழியச்செய்தாயென்பது உன்னையே" என்று விஸ்மிதராகிறார்.

வ்யா.— (கரண்டமித்யாதி). நீர்க்காக்கை ஸஞ்சரிக்கும் பொய்கையிலே, பனையினுடைய கறுத்தபெரும் பழம் அதினின்றும் விழுந்து புரண்டு நீரிலேவிழ, அவற்றை நீர்க்காக்கையாகக் கருதி வாளைகள் அஞ்சிப்பயாநின்ற திருக்குறுங்குடியிலே, அழகும் ஸௌகுமார்யமும் சீலமும்மேன்மையுமாகிற இஸ்ஸ்வபாவங்கள் குறைவற்றிருக்கிற மஹாப்ரபாவனை. கரண்டம் - நீர்க்காக்கை. (ஆடுகை) நடையாடுதலென்னுதல்; முழுகுதலென்னுதல். தகை - இயல்வு. போலியைக்கண்டு வாளையானது அதிஶங்கைபண்ணுகிறவிது, அத்தேசத்தின் பதார்த்தங்கள் நம்பிபக்கல் அஸ்தாநேபயஶங்கை பண்ணுகிறபடிக்கு ஸூசகமாயிருக்கிறது.

(திரண்டதோளிரணியன்) திரட்சிபெற்ற தோளையுடைய ஹிரண்யன். அவன் வலியைக்கோட்சொல்லித்தருகிற தோளென்கை. அதவா, தேவர்களுடைய வலியடங்கத் திரண்டதோ,

மூ.—நன்றிருந்துயோகநீதி நண்ணுவார்கள்சிந்தையுள்
சென்றிருந்துதீவினைகள் தீர்த்ததேவதேவனே
குன்றிருந்தமாடநீடு பாடகத்துமூரகத்தும்
நின்றிருந்துவெஃகணைக் கிடந்ததென்னநீர்மையே. (௬௩)

---

ளென்னுமாம். (௧) "[illegible] - இந்த்ரத்வமகரோத்தைத்ய:" இத்யாதி. (சினங்கொளாகம்) நெஞ்சில் க்ரோதம் வடிவிலே தோற்றியிருக்கிறபடி. சினம்மிக்கவடிவு. (ஒன்றையுமிரண்டு கூறுசெய்து) இஸ்ஸுகுமாரமான வடிவைக்கொண்டு அத்விதீயமான ஹிரண்யன் சரீரத்தையும் இரண்டு கூறாகப் பிளந்து (உகந்தசிங்கமென்பதுன்னையே) சிறுக்கனுடைய விரோதிபோகப் பெற்றோமென்று உகந்தநரஸிம்ஹமாக ப்ரமாணங்கள் சொல்லுவது அத்யந்த ஸுகுமாரனான உன்னையே. (௨) "[illegible] - உக்ரம்வீரம் ம்ருத்யும்ருத்யும்" என்றுசொல்லுவது உன்னையே. (௩) "[illegible] - க்வயௌவநோந்முகீபூதஸுகுமாரதநுர்ஹரி: । க்வவஜ்ரகடிநாபோக சரீரோயம் மஹாஸுர:" என்கிறபடியே உன்ஸௌகுமார்யங்கண்டபடிக்கு அவ்வவதாரம் அநுபபந்நமென்று கருத்து. ஸர்வாதிகனாய் அத்யந்த ஸுகுமாரனான விவன், விமுகரான ஸம்ஸாரிகள்நடுவே திருக்குறுங்குடியிலே வந்துதாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கநிற்கிறநிலையாய்த்து, அவ்வூரில் பதார்த்தங்களுக்கு அதிரங்கை மாறாதே செல்லுகைக்கும், இவ்வாழ்வார்க்கு நம்பியுடைய ஸௌகுமார்யத்தையே அநுஸந்திக்கைக்கும் ஹேது. (௬௨)

அறுபத்து மூன்றாம்பாட்டு. (நன்றிருந்தித்யாதி)

நன்று நன்றாக

---

அரு.—அறுபத்திரண்டாம்பாட்டு. (இந்த்ரத்வம்) அஸுரர்களெல்லாரும்கூடி ஹிரண்யனை இந்த்ரனாக ப்ரதிபத்தி பண்ணினார்கள். (அவ்வவதாரம்) நரஸிம்ஹாவதாரம். (௬௨)

---

(௧) (௨) (௩)

| | |
|---|---|
| இருந்து | யோகாப்யாஸோசிதமான ஆஸநத்திலே யிருந்து |
| யோக | த்யா(ஞ்யா)நயோகமாகிற |
| நீதி | உபாயத்தாலே(நீயதே அநயேதி-நீதிஃ ணீஞ் ப்ராபணே) |
| நண்ணுவார்கள் | கிட்டவேணு மென்றிருக்கு மவர்களுடைய; உன்னை லபிக்கவேணு மென்றிருக்கு மவர்களுடையவென்றபடி, |
| சிந்தையுள் | ஹ்ருதயத்திலே |
| சென்று | அடைந்து |
| இருந்து | அவர்களுடைய ஹ்ருதயம் அநாதிகாலம் விஷயாந்தர ப்ரவணமென்று குத்ஸியாதே யிருந்து |
| தீவினைகள் தீர்த்த | க்ரூரங்களான - அநுபவ விரோதிகளான பாபங்களைப் போக்கும் |
| தேவதேவனே | நித்யஸூரி நிர்வாஹகனே |
| குன்று | மலைகள் போலே |
| இருந்த | இராநின்றுள்ள; ஓங்கியிருந்துள்ளவென்றபடி |
| மாடம் | க்ருஹங்களையுடைத்தான |
| நீடு | இடமுடைத்தான |
| பாடகத்தும் | திருப்பாடகத்திலும் |
| ஊரகத்தும் | (கீழ்ச்சொன்ன விசேஷணம் இங்கும் வரும்.) அப்படியிருந்துள்ள ஊரகத்திலும் |

| | |
|---|---|
| நின்றிருந்து | நின்றிருந்து. (இங்குயதாக்ரம மன்றிக்கே புத்திஸ்த்தக்ரமத்தாலேதிருப்பாடகத்திலிருந்தும், திருவூரகத்தில்நின்றும்) |
| வெஃகணை | திருவெஃகாவிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளினவிது |
| என்ன நீர்மை | என்ன ஸௌசீல்யம். (சூஈ) |

அவ.—அறுபத்துமூன்றாம்பாட்டு. தேவரீர் ஸௌகுமார்யத்தைப்பாராதே, ஸ்ரீப்ரஹ்லாதன்பக்கல் வாத்ஸல்யத்தாலே ப்ரேரிதராய், ஹிரண்யனை அழியச்செய்தபலாம்; விமுகரான ஸம்ஸாரிகளுடைய ஆபிமுக்க்யத்தை அபேக்ஷித்து உன்மேன்மையைப் பாராதே கோயில்களிலே நிற்பது, இருப்பது, கிடப்பதாகிறவிது என்ன நீர்மையென்று தாம் ஈடுபடுகிறார்.

வ்யா.—(நன்றிருந்து) (க) "ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந: நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ஸ்த்திரமாஸநம் ஶுசௌதேசே ப்ரதிஷ்ட்டாப்ய" என்கிறபடியே சுத்தமானதேசத்திலேகுசாஜிநசேலோத்தரமான ஆஸநத்தையிட்டு அதிலே ஏகாக்ரசித்தனாயிருந்து. (உ) "ஆஸீநஸ்ஸம்பவாத்"—ஆஸீநஸ்ஸம்பவாத்" இத்யாதி. (யோகநீதிநண்ணுவார்கள்) யோகமாகிற உபாயத்தாலேயுன்னை லபிக்கவிருக்கிறவர்கள். நீதி - வழி; (சிந்தையுட் சென்றிருந்துதீவினைகள்தீர்த்த தேவதேவனே.)*அயர்வறுமமரர்களதிபதியான உன்மேன்மைபாராதே அவர்களுடைய ஹ்ருதயத்திலேசென்று ஸ்வாபாஶ்ரயமாய்க்கொண்டு, அநாதிகாலம் விஷயாந்தர ப்ரவணமாய்ப்போந்த ஹ்ருதயமென்றுகுத்ஸியாதே ஆஸநபலத்தாலே ஜயிப்பாரைப்போலே ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாகவிருந்து,ஆந்தரமாயும் பாஹ்யமாயுமிருந்துள்ள அநுபவவிரோதிகளான துக்கங்

(க) (உ)

களைப்போக்கும் ஸ்வபாவத்தை யுடையவனே. அநந்யப்ரயோஜனரானவர்கள் ஸாதநாந்தரநிஷ்டரேயாகிலும் அவர்கள் ஹ்ருதயத்திலே செல்லுகையும், நெடுநாள் விஷயாந்தரப்ரவணமான ஹ்ருதயமென்று குத்ஸியாதே அதிலே நற்றரிக்கவிருக்கையும், ஸ்வப்ராப்தி விரோதிகளான அவித்யாகர்ம வாஸநாதிகளைப் போக்குகையும் தேவரீர்க்கே பரமிறே. (க) ‘யெ,மொமொயாம விஜ்ஞாதா - யோகோ யோகவிதாந்நேதா” என்னக்கடவதிறே. ஸாதநாந்தர நிஷ்டரென்று பாராதே அநந்யப்ரயோஜநரென்கிற இவ்வளவேபார்த்து அவர்களுடைய ஹ்ருதயத்திலே சென்று, உன்னைப்பெறுகைக்கு நஷிபண்ணின இவ்வௌதார்யம் பொறுமே உன்பக்கல் த்வேஷம் பண்ணியிருக்கிற ஸம்ஸாரிகள் திறத்திலே பண்ணினவிவை என்னநீர்மை யென்கிறார்மேல்;

(குன்றிருந்தவித்யாதி) மலைகள் சேரவிருந்தாப்போலே ஓங்கின மாடங்களையுடைய திருப்பாடகத்திலும், அப்படியேயிருந்துள்ள திருவூரகத்திலும்; “முகங்காட்டுவாருண்டோ” என்று திருவூரகத்திலே நின்றருளியும், “ஒருத்தரையும் கண்டிலோம்” என்று சோம்பாதே திருப்பாடகத்திலே யிருந்தருளியும், அவ்விடத்திலும் ஆதரிப்பா ரில்லாமையாலே “ருசிபிறந்தவன்று நம்மிடையழகைக்கண்டு ஆதரிக்கிறார்கள்” என்று திருவெஃகாவிலேகண்வளர்ந்தருளியும், இப்படிசெய்தருளின விதுஎன்னநீர்மையென்கிறார். உன்னைப் பிரியமாட்டாதநித்யஸூரிகளுக்கும் நித்யாநுபவவிஷயமாகலாம், உன்வாசியறிந்தார் பக்கலி

அரு;—அறுபத்துமூன்றும்பாட்டு. ஸாதநாந்தரநிஷ்டர் தங்கள் ஸத்கர்மத்தாலே விரோதியைப் போக்கிக்கொள்ளுகையொழிய அவர்களுக்கு நாம் வேணுமோவென்ன வருளிச்செய்கிறார். (அநந்யப்ரயோஜநரித்யாதி). ஸாதநாந்தரநிஷ்டர்க்கும் அவன் வேணுமென்பதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (யோகோயோகயித்யாதி). (௬௩)

(க) ஸஹஸ்ரநாமம்

மூ.—நின்றதெந்தையூரகத் திருந்ததெந்தைபாடகத்
அன்றுவெஃகணைக்கிடந்த தென்னிலாதமுன்னெலாம்
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன்
நின்றதுமிருந்ததுங் கிடந்ததுமென்னெஞ்சுளே. (சுச)

---

லே மேல்விழுந்து அவர்களைத் திருத்தி யநுபவிப்பிக்கக்கவு மாம், "உன்னைநோக்கோம்" என்றிருந்த ஸம்ஸாரிகளுடைய உகப்பை பாசைப்பட்டு இவ்வளப்புக்கிடக்கிறவிது என்னநீர்மை யென்கிறார். ... .... .... ... (சுரு)

அறுபத்துநாலாம் பாட்டு. (நின்றித்யாதி)

| | |
|---|---|
| எந்தை | எனக்கு ஸ்வாமியானவன் |
| ஊரகத்து | திருவூரகத்திலே |
| நின்றது | நின்றருளினதும், |
| எந்தை | எனக்கு ஸ்வாமியானவன் |
| பாடகத்து | திருப்பாடகத்திலே |
| இருந்து | எழுந்தருளியிருந்ததும், |
| அன்று | கீழ்ச்சொன்ன விரண்டு திருப்பதிகளி லும் எனக்கு ருசி பிறவாதவன்று |
| வெஃகணை | திருவெஃகாவிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளினதும், |
| என்னிலாத | நான் அபிமுகனாகாத |
| முன்னெலாம் | முற்காலமெல்லாம்; |
| அன்று | அக்காலத்திலே |
| நான் | நான் |
| பிறந்திலேன் | ஜ்ஞாந லாபத்தால் பிறக்கப் பெற்றி லேன்" |
| பிறந்தபின் | ஜ்ஞாநலாபத்தால் பிறந்தபின் |
| மறந்திலேன் | விஸ்ம்ருதியுடையேனல்லேன், |

(நின்றது மித்யாதி) இங்கே "எந்தை" என்றநுஷங்கம்.

எந்தை   என்னுடைய ஸ்வாமியானவன்
நின்றதுமிருந் கீழ்ச்சொன்ன மூன்று திருப்பதிகளி
ததும் கிடந்   ல் செய்த செயல்களெல்லாம்
ததும்
என்னெஞ்சுளே என்னுடைய ஹ்ருதயத்திலென்றபடி. (௬௪)

அவ;—அறுபத்துநான்காம்பாட்டு. கீழ்ச்சொன்ன நீர்மையை யுடையவன், எனக்கு ருசிஜநகனாகைக்காகத் திருவூரகந்தொடக்கமான திருப்பதிகளிலேவர்த்தித்து ருசிபிறந்தபின்பு என்பக்கல் அதிவ்யாமோஹத்தைப் பண்ணுகையாலே † கீழ்ச்சொன்ன நீர்மை பலித்தது என்பக்கலில் என்கிறார்.

வ்யா.—(நின்றதெந்தையூரகத்து) த்ரைவிக்ரமம் பண்ணின தூளிதாநந் தோற்றத் திருவூரகத்திலே நின்றருளிற்று, என் ஸ்வாமியென்று நானிசைகைக்காக. நிலை யழகைக்காட்டி ருசியைப் பிறப்பித்து, த்ரைவிக்ரமாபதாநத்தை ப்ரகாசிப்பித்தது - முறையை யுணர்த்துகைக்காக வென்கை. அதவா, எனக்கு இசைவின்றிக்கே யிருக்கச்செய்தேயும் வந்து நின்றருளுகிறது உடையவன் உடைமையை யிழக்கமாட்டாமையாலே நின்றருளுகிறானென்றுமாம். (இருந்த தெந்தைபாடகத்து) அந்தநிலையழகிலும் எனக்கு ஆபிமுக்யம் பிறக்கக்காணாமையாலே இருப்பழகைக்காட்டி, (க)"அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:" என்கிறபடியே - "நீ எனக்கு ஸ்வாமி, நான் அடியேன்" என்னும் முறையுணருகைக்காகத் திருப்பாடகத்திலே யிருந்தருளினான். (அன்று வெஃகணைக்கிடந்தது) கீழ்ச்சொன்ன விரண்டு திருப்பதிகளிலும் எனக்கு ருசிபிறவாதவன்றாகத் திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளிற்றும். அத்திருப்பதிகளை ஆஸ்ரயித்த காலத்துக் கவதியென்னென்னில்; (என்னிலாத முன்னெலாம்) நானில்லாத முற்காலமெல்லாம். நான்

(க) ரா-அ.   † (பா) அது

அபிமுகீபவிப்பதற்கு முன்பெல்லாம். "என்னுகி - நானுகி" என்னக்கடவதிறே. உபயவிபூதிநாதனான தான் ஸம்ஸாரியானவெனக்கு ருசிபிறவாத காலமெல்லாம் ருசிபிறக்கைக்காகநிற்பது இருப்பது கிடப்பதாவதே! என்னுடைய ஸத்தை தன்னுடைய கடாக்ஷாதீநமாயிருக்க, இத்தசையில் கடாக்ஷம் தனக்குத் தேட்டமாவதே!. அக்காலத்தில் நீர்செய்த தென்னென்னில்; (அன்று நான்பிறந்திலேன்) தன் திருவடிகளிலே தலைசாய்க்கைக்காக ஸ்ருஷ்டிகாலத்திலே நாமரூபங்களைத் தந்தருள, விஷயாந்தர ப்ராவண்யத்தாலே அநுபவிக்கப் பெற்றிலேன். (நான்பிறந்திலேன்) ஆத்மாவுக்கு ஜன்மமாகிறது ஜ்ஞாநலாபமாகையாலே அஜ்ஞனாய்ப் போனேன். (க) "அஸந்நேவ ஸ பவதி - அஸத்ப்ரஹ்மேதி வேதசேத் - ஸந்தமேநம் ததோ விது:" என்னக்கடவதிறே. (உ) "ஸ்ரீயாஹூ ... பிதா - கரியாந்ப்ரஹ்மதப்பிதா". (பிறந்தபின் மறந்திலேன்) ... ன் க்ருஷியாக வெனக்கு அறிவுபிறந்தபின்புமறந்தறியேன். (௩) "மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச" அவனடியாகப் பிறந்தஜ்ஞாநம் (ச) "மதிநலம்" என்கிறபடியே - பக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே விஸ்ம்ருதிப்ரஸங்கமில்லை ஆக, தன்னுடைய ஸத்பாவாஸத்பாவங்களாகிறன - பகவத்விஷயத்திலேருசிபிறக்கையும், அதின்றிக்கே யொழிகையும்.

(நின்றது மிருந்த துங்கிடந்ததுமென்னெஞ்சுளே)எனக்கும் மறக்கவொண்ணுதபடி ருசிபிறந்த பின்பு, அவன், திருப்பதிகளில் பண்ணின செயல்களெல்லாவற்றையும், திருப்பதிகளைக்

---

அரு;— அறுபத்துநாலாம்பாட்டு. (நின்றதுமித்யாதி) "என்னிலாத" என்றதற்கு "நானிலாத" என்றவிடமுண்டோவென்ன வருளிச்செய்கிறார்(என்னுகிநானுகி)என்று. (க்ருஷியாக) க்ருஷிப்படியாக. (கூச)

(க) புருஷஸூ. (உ) (௩) கீ. (ச) தி-வாய்-க-க க

௬௫.—நிற்பதுமோர்வெற்பகத் திருப்புவிண்கிடப்பதும்
நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம்
அற்புதனநந்தசயனு ஞதிபூதன்மாதவன்
நிற்பதுமிருப்பதுங் கிடப்பதுமென்னெஞ்சுளே. (௬௫)

காற்கடைக்கொண்டு என்னுடையஹ்ருதயத்திலே பண்ணியரு ளாநின்றான். முதலிலே தான் என்பக்கலிலே அபிநிவிஷ்டனாய் அஸத்ஸமனாயிருந்துள்ள வென்னையும் உளனாம்படிபண்ணி, தன்னை மறக்கவொண்ணாதபடியான ப்ரேமத்தைவிளைத்து, அதுக்கு விஷயபூதனைத் தன்னுடைய விடாயுத்தீர்த்தானென்றதாய்த்து "சிந்தையுட் சென்றிருந்து தீவினைகள் தீர்த்த" என்றார் - கீழ். "நின்றது மிருந்ததும் கிடந்ததுமென்னெஞ்சுளே" என்று அநுபவத்தைச் சொன்னார் இங்கு; இவையிரண்டாலும் - ஸாதநாந்தர நிஷ்டரிற்காட்டில் தம்முடைய அதிகாரத்துக் குண்டான † ஏற்றத்தை அருளிச்செய்து விட்டாராய்த்து. ... (௬௪)

அறுபத்தஞ்சாம் பாட்டு. (நிற்பது மித்யாதி).

| | |
|---|---|
| ஓர் | அத்விதீயமான |
| வெற்பகத்து | மலையிடத்து (அதாவது திருமலையிலே யென்றபடி). |
| நிற்பதும் | நின்றருளுகிறதும் |
| விண் | பரமபதமாகிற வாகாசத்திலே |
| இருப்பு | இருந்தருளுகிறதும் |
| நல் | நன்றாய் |
| பெரு | பெருத்திருக்கிற |
| திரை | அலைகளையுடைய |
| கடலுள் | திருப்பாற்கடலிலே |
| கிடப்பதும் | கண்வளர்ந்தருளுகிறதும் |
| நானிலாதமுன்னெலாம் | நான் முறையறியாதே அஸத்கல்பனாய்க் கிடந்த முற்காலமெல்லாம் |

† (பா)பேதம்.

அற்புதன் ஜ்ஞாந ஶக்த்யாதிகளால் ஆஸ்சர்யபூதனாய்,
அநந்தசயனன் அநந்த ஶாயியாய்
ஆதிபூதன் ஜகத்காரணபூதனான
மாதவன் ஸ்ரியஃபதியானவன்
நிற்பது மிருப்பதும்கிடப்பதும் } கீழ்ச்சொன்ன திருமலை, பரமபதம், திருப்பாற்கடல், இவற்றிலே செய்தருளின செயலைச் செய்வது,
என்னெஞ்சுளே என்னுடைஹ்ருதயத்திலே யென்றபடி (சூடு)

அவ.-அறுபத்தைந்தாம்பாட்டு. தம்திறத்தில் ஈஸ்வரன்பண்ணின உபகாரமானது தம்திருவுள்ளத்தில் நின்றும் பேராமையாலே பின்னும்அதிலே கால்தாழ்ந்து, திருமலையில் நிலையும், பரமபதத்திலிருப்பும், க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளின விதுவும், எனக்குத் தன் திருவடிகளிலே ருசிபிறவாத காலமிறேயென்கிறுர்.

வ்யா,—(நிற்பதுமோர்வெற்பகத்து) அத்விதீயமான திருமலையிலே நிற்பதுவும். திருமலைக்கு அத்விதீயத்வம் (க) "கானமும் வாநரமும் வேடுமுடை வேங்கடம்" என்கிறபடியே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கும் நீர்மைக்கு எல்லைநிலமாயிருக்கை. ஸ்த்தாவரங்களுக்கும்திர்யக்குக்களுக்கும்தத்ப்ராயரான வேடர்க்கும் திருவடிகளிலே ருசியைப்பிறப்பிக்கைக்கு நிற்கிறநிலையிறே. (இருப்பும்விண்)ருசிபிறந்தாரை அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(மாய)ரானநித்யஸூரிகளோபாதி முகங்கொடுத்து அநுபவிப்பிக்கைக்காக எழுந்தருளியிருக்கிற பரமபதத்திலிருப்பும். (கிடப்பதும் நற்பெருந்திரைக் கடலுள்) தெளிந்து குளிர்ந்திருக்கிற திரைகளையுடைத்தாய்,(உ)"தாளும்தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்கிறபடியே விஸ்த்ருதமாகக் கண்வளர்ந்த

(க)ச-திருவ. (உ) தி-வாய்-அ-கய-அ.

ருளுகைக்கு வேண்டும் பரப்பையுடைத்தாய், திரையாகிற கைகளாலே திருவடிகளைவருட க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுவதும். (நான் இலாத முன்னெலாம்) தன்னோடுண்டான முறையை யறியாதே நான் அஸத்ஸமனாயிருந்த காலமெல்லாம். இப்படி என்பக்கலிலே அத்யபிநிவேசத்தைப் பண்ணுகிறவன் ஸர்வப்ரகார பரிபூர்ணன் கிடீரென்கிறது மேல்;

(அற்புதன னந்தசயநனாதி பூதன்மாதவன்) ஆஸ்சர்யமான ஜ்ஞாந ஶக்த்யாதிகுணபரிபூர்ணனாய், அநந்தஶாயியாகையாலே ஸர்வேஸ்வரனாய், ஜகத்காரணபூதனாய், உபயவிபூதி நாதத்வத்துக்கும் அவ்வருகானஸ்ரிய:பதித்வத்தையு முடையவன் கிடீரென்னுதல். எனவனைப்பெற்றபின்பு அவனுக்கு இவையெல்லாம் நிறம்பெற்றதென்னுதல். (நிற்பதுமிருப்பதுங் கிடப்பது மென்னெஞ்சுளே) (க) "கல்லும்கனை கடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்" என்கிறபடியே அத்திருப்பதிகளைக்காற்கடைக்கொண்டுஅவ்விடங்களில் நின்றும்இருந்தும் கிடந்தும் செய் தருளின நன்மை யெல்லாம் யென் னெஞ்சிலேயாய்த்து. நிஹீநாக்ரேஸரனானவென்னை விஷயீகரித்தவாறே திருமலையில் நிலையும்மாறி என்னெஞ்சிலே நின்றருளினான்; தன் திருவடிகளில் போக்யதையை எனக்கறிவித்தபின்பு பரமபதத்திலிருப்பைமாறி என்னெஞ்சே போகஸ்த்தாநமாயிருந்தான்; (உ) "தாவர்ஜோஜலஶாயிநழ - தாபர்த்தோஜலஶாயிநம்" என்கிறபடியே திருப்பாற்கடலிலேகண்வளர்ந்தருளினபடியைக் காட்டி என்னுடைய ஸாம்ஸாரிகமான தாபத்தைத் தீர்த்தபின்பு திருப்பாற்கடலில் கிடையைமாறி என்னெஞ்சிலே கண்வளர்ந்தருளித் தன்விடாய்தீர்ந்தான். இப்படி என்பக்கல் பண்ணின வ்யாமோஹம் என்னால் மறக்கலாயிருக்கிறதில்லை யென்கிறார். (சுரு)

(க) பெரி-திருவ (உ)

மூ.—இன்றுசாதனின்றுசாத லன்றியாரும் வையகத்
தொன்றிநின்றுவாழ்தலின்மை கண்டுநீசரென்கொலோ
அன்றுபாரளந்தபாத போதையொன்றிவானின்மேல்
சென்றுசென்றுதேவரா யிருக்கிலாதவண்ணமே. (சுசு)

---

அறுபத்தாறும்பாட்டு. (இன்றித்யாதி)

| | |
|---|---|
| இன்றுசாதல் | கர்ப்பவாஸத்திலே முடிதல் |
| நின்றுசாதல் | ஶதாயுஸ் ஸம்பூர்ணனாய் முடிதல் |
| அன்றி | இவை யிரண்டிடத்திலொன்றல்லாமல் |
| யாரும் | எத்தனையேனு மதிஶயத்தையுடைய ப்ரஹ்மாதிகளும், |
| வையகத்து | இந்த பூம்யுபலக்ஷித சதுர்த்தஶபுவநத்திலும் |
| ஒன்றிநின்று | ஒருப்படிப் படநின்று |
| வாழ்தல் | ஜீவிக்குமது |
| இன்மைகண்டும் | இல்லாமையை ஸாக்ஷாத்கரித்துவைத்தும் |
| நீசர் | அஜ்ஞராயிருக்குமவர்கள், பாபப்ரசுரரென்றுமாம், |
| அன்று | மஹாபலி அபஹரித்தவன்று |
| பார் | பூம்யுபலக்ஷித ஸகலலோகங்களையும் |
| அளந்த | அளந்துகொண்ட |
| பாதபோதை | திருவடியாகிற தாமரைப்பூவை |
| உன்னி | சிந்தித்து. |
| சென்றுசென்று | அர்ச்சிராதி மார்க்கத்தாலே தத்தேஶத்திலே சென்று |
| வானின்மேல் | பரமபதத்திலே |
| தேவராய் | நித்யஸூரிகளோடொத்தவராய் |

இருக்கிலாத வண்ணம் } இராதே ஒழிகிறஹேது

என்கொலோ என்னேவென்றபடி. (௬௬)

அவ.—அறுபத்தாறும்பாட்டு "பகவதவிஷயம் ஸுலபமாயிருக்க, ஸம்ஸாரம் அல்பாஸ்த்திரத்வாதி தூஷிதமென்னுமிடம் ப்ரத்யக்ஷ ஸித்தமாயிருக்க, பகவத்ஸமாஶ்ரயணம் அபுநராவ்ருத்திலக்ஷணமான மோக்ஷப்ரதமாயிருக்க, ஸம்ஸாரிகள் பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணாதிருக்கிற ஹேது என்னே!" என்று விஸ்மிதராகிறார்.

வ்யா.—(இன்றுசாதல்) யோஷித்புருஷ ஸம்யோகஸமநந்தரம் முடிதல்; பிறந்து தன்னை இன்னானென்று ப்ரதிபத்திபண்ணின ஸமநந்தரத்திலே முடிதல். (௧) "மஹார்ஷு(ம்ஷே–கர்ப்பாஷ்டமேஷு" என்கையாலே கர்ப்பாதாநஸமயம் உத்பத்தி காலமாய், கர்ப்பவாஸகாலமும் ஆயுஸ்ஸுக்குடலாகக்கடவது. (நின்றுசாதல்) ஶதாயுஸ்ஸம்பூர்ணனாய்முடிதல்; கல்பாதியிலே தோற்றி கல்பாந்தத்திலே முடியும் தேவர்களைப்போலேயாதல். (௨) "நாயம் ஹந்தா ஹவிதாவா நஹந்யஃ - நாயம்பூத்வாபவிதாவாநபூயஃ" என்னக்கடவதிறே. (அன்றி) இந்த அஸ்தைர்யத்திலும் உள்மானம்புறமானமொழிய நித்யராயிருப்பாரொருவருமில்லை. (௩) "மஹேவிஷீயதே ஹஹயோ ஜாயதேநா ஷுதேதிவ|ஜாதகோதேருவிர்யதே வாஹஹாவெஹயெளவநே.

அரு;—அருபத்தாறும்பாட்டு. கர்ப்பத்திலிருப்பதையும் ஆயுஸ்ஸாகச் சொல்லலாமோவென்ன வருளுகிறார் (கர்ப்பாஷ்டமேஷ்வித்யாதி). கல்பாதியிலேதோற்றி, கல்பாந்தத்திலே முடியுமென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (நாயம்பூத்வாஇத்யாதி). மநுஷ்யஜந்மத்தையும் தேவஜந்மத்தையும் வ்யாவர்த்தித்து அத்மநித்யத்வம் சொல்லிற்றேயாகிலும்தீர்க்க ஜீவிகளாயிருக்கிற தேவதேஹத்தையும் வ்யாவர்த்திக்கையாலே ப்ரமாணமாகக்குறையில்லை. (உள்) "பாதாளலோகம்"

(௧) (௨) கீ-௨- (௩)

கர்ப்பேபிலீயதே பூயோஜாயமாநோஸ்தமேதிச । ஜாதமாத்ரே சம் ரியதேபாலபாவேச யௌவநே''இத்யாதி. (ஆரும்) எத்தனை யேனும் அதிஶயித ஜ்ஞாநராய்சதுர்த்தஶ புவநத்துக்கும் நிர்வாஹகரான ப்ரஹ்மாதிகளும். (வையகத்தொன்றி நின்றுவாழ்தலின்மை கண்டும்) சதுர்த்தஶபுவநத்திலும் ஒருபடிப்பட நின்று ஜீவிக்குமதில்லாமையைக் கண்டிவைத்தும். "வையகம்" என்று-சதுர்த்தஶ புவநத்துக்கும் உபலக்ஷணம். "வாழ்தல்" என்று-க்ஷேபிக்கிறாராதல். ஸம்ஸாரிகள் கருத்தாலேயாதல். (நீசர்) தங்களநுபவத்துக்கு உபதேஶம் வெண்டும்படி அஜ்ஞராயிருக்குமவர்கள். ப்ராக்ருதி ப்ராக்ருதங்களின் தண்மை ப்ரத்யக்ஷத்தாலும்உபதேஶத்தாலும்ப்ரகாசியா நிற்கச்செய்தேவிடமாட்டாதேயிருக்கிறபாப ப்ரசுரரென்னுமாம். "நீசர்" என்று - அறிவிலோரும், பறையரும். (அன்று) பூமி மஹாபலியாலே அபஹ்ருதமாய், அத்தாலே தன்னுடைய சேஷித்வமும் சேதநருடையசேஷத்வமுமழிந்துகிடந்தவன்று.(பாரளந்தபாதபோதை)குணகுண நிரூபணம்பண்ணுதேபூமிமுதலானஸகலலோகங்களிலுமுண்டான ஸகல சேதநர்தலையிலும் வைத்து முறையையுணர்த்தின ஸர்வஸுலபமான திருவடித்தாமரைகளை. "பார்" என்று - ஊர்த்த்வலோகங்களுக்கு முபலக்ஷணம். "தாமரை" என்றது-துர்லபமானாலும் விடவொண்ணுத போக்யதையாலே (ஒன்றி)ஆஶ்ரயணம் அநாயாஸமென்கிறது. (க)"சிந்திப்பேயமையும்" என்னக்கடவதிறே. ஆஶ்ரயணத்தில் ஆயாஸமின்றிக்கேயொழிந்தால் பலமும் க்ஷுத்ரமாயிருக்குமோவென்னில், (வானின்மேல்சென்று சென்று) அர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய், அபுநராவ்ருத்தி லக்ஷணமான பரமபதத்திலேசென்று. அதவா, (சென்று சென்று) தேசப்ராப்தியிற் காட்டில் வழிப்போக்குதானே இனிதாயிருக்கிறபடியைச் சொல்லிற்றுகவுமாம். (தேவராயிருக்கிலாதவண்ணம்-என்கொலோ) நித்யஸூரிகளோடே ஒரு

---

(க) தி-வாய்.

மூ.—சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்றுமேல்
கண்டுவீடிலாதகாத லின்பநாளுமெய்துவீர்
புண்டரீகபாதபுண்ணிய கீர்த்திநுஞ்செவிமடுத்
துண்டுநும்முறுவினைத் துயருள்நீங்கியுய்ம்மினோ. (௬௭)

கோவையாயிராமத ஒழிகிற ஹேதுவென்னோ.நித்யஸூரிகளாயி ருக்கையாவது-ஸர்வதாஸத்ருஸராயிருக்கை. அதாகிறது-ஜ்ஞா நாஸங்கோசத்தாலும்,ரூபத்தாலும், போக(ஸாம)த்தாலும்,அ வர்களோடுஸமராயிருக்கை.(என்கொலோ) ப்ரத்யக்ஷஸித்தமான ஸம்ஸார தோஷத்துக்குக் கண்ணழிவுண்டாயோ?;ஶாஸ்த்ரஸித் தமான பகவத்ப்ராப்தியில் நன்மைக்குக் கண்ணழிவுண்டாயோ, ஆஸ்ரயண வஸ்துவினுடைய ஸௌலப்யத்துக்குக் கண்ணழி வுண்டாயோ;ஆஸ்ரயணத்திலாயாஸமுண்டாயோ,வழிப்போக்கி லருமையுண்டாயோ,ப்ராக்ருதிப்ராக்ருதங்களில்ப்ராவண்யஹேது வானபாபமும் பகவத்வைமுக்யஹேதுவானபாபமுமொழிய இப் புருஷார்த்தத்தை இழக்கைக்கு ஒரு ஹேதுவுங் கண்டிலோ மென்கை. (௬௬)

அறுபத்தேழாம் பாட்டு. (சண்டமண்டலத்தித்யாதி)

| | |
|---|---|
| சண்ட | முமுக்ஷுக்களல்லாதார்க்கு துஷ்ப்ரா |
| மண்டலத்தின் | பமான ஸூர்யமண்டலத்தினு டைய |
| ஊடுசென்று | நடுவேபோய் |
| வீடுபெற்று | பரமபதத்தை லபித்து |
| மேல் | உத்தரகாலத்திலே வரக்கடவதாய் |
| வீடிலாத | விச்சேதமின்றிக்கே |
| காதலின்பம் | அநுபவத்தாலேஉண்டாயிருக்கிற கைங்கர்யஸுகத்தை, |
| கண்டு | ஸாக்ஷாத்கரித்து |

(அஸங்கோசம்) ப்ரஜ்ஞாஸங்கோசமில்லாமை, (௬௬)

| | |
|---|---|
| நாளுமெய்துவீர் | யாவதாத்மபாவி லபிக்கவேண்டியிருப்பீர்! |
| புண்டரீகபாத | தாமரைப்பூப்போலே யிருக்கிற திருவடிகளினுடைய |
| புண்ணியகீர்த்தி | புண்யத்வ கீர்த்தியிலே, பாவநத்வப்ரதை(யெ)யிலே யென்றபடி; |
| நும் | உங்களுடைய |
| செவி | காதுகளை |
| மடுத்து | ப்ரவணமாக்கி |
| உண்டு | அநுபவித்து, |
| உறு | உற்றிருக்கிற, நீங்கள் சூழ்த்துக்கொடிருக்கிறவென்றபடி. |
| வினைத்துயருள் | பாபபலமான துஃக்கத்தினுள்ளேவர்த்திக்கிற |
| நும் | "உங்களை |
| நீங்கி | அதில் நின்றும், நீங்கி, அந்த துஃகத்தில் நின்றும் நீங்கியென்றபடி. |

(யஆ)

| | |
|---|---|
| நும் | உங்களாலே |
| உறு | சூழ்த்துக் கொள்ளப்பட்டிருக்கிற |
| வினைத்துயருள் | பாபபலமான துக்கத்தினுள்ளே வர்த்திக்கிற |
| நீங்கள் | நீங்கள் |
| நீங்கி | அதில்நின்றும் நீங்கி என்று; நீங்களென்கிற வித்தனையும் அத்யாஹரித்துக்கொண்டு யோஜிக்கவுமாம். |
| உய்ம்மினோ | முன்சொன்ன கைங்கர்யத்தைலபித்து உஜ்ஜீவியுங்கோள். (௬௭) |

அவ.—அறுபத்தேழாம்பாட்டு. ஸம்ஸாரிகள் தங்களுக்கு ஹிதமறிந்திலர்களேயாகிலும், இதில் ருசிபிறந்தவன்று இத்தை

யிழக்க வொண்ணுதென்றுபார்த்து,இவர்கள் துர்க்கதியைக்கண்டு பரோபதேஶத்திலேப்ரவ்ருத்தராகிறுர்-மேலேழுபாட்டாலே. இதில் முதற்பாட்டு அர்ச்சிராதிகதியிலே போய், நிலைநின்ற புருஷார்த்தத்தை லபிக்கவேண்டியிருப்பீர்! ப்ராப்யமும் ப்ராபகமுமான பகவத்விஷயத்தை ஆஶ்ரயித்து உங்கள் விரோதியைப் போக்கி உஜ்ஜீவியுங்கோளென்கிறுர்.

வ்யா,—(சண்டமண்டலத்தினூடுசென்று) கடிதான ஆதித்யமண்டலத்தின் நடுவேபோய்.(க) "மன்னுங்கடுங்கதிரோன்மண்டலத்தினன்னடுவுள்" என்கிறபடியே முமுக்ஷுக்களல்லாதார்க்கு துஷ்ப்ராபமான ஆதித்யமண்டலமத்யத்தாலே ராஜபுத்ரர்கள் ராஜகுலத்தாலேஅப்ரதிஹதகதிகளாய்ப் போமாபோலே போய் (வீடுபெற்று) பரமபதத்தைலபித்து. (மேல்கண்டு வீடிலாதகாதலின்பம்நாளுமெய்துவீர்) [மேல்வீடிலாதகாதலின்பம்-கண்டு-நாளுமெய்துவீர்]ப்ராப்திபலமாய்,யாவதாத்மபாவி விச்சேதாதிஶங்கையின்றியே ஸ்வரூபாநுபந்தியாய்,பகவதநுபவஜநித†பக்திகாரிதமானகைங்கர்ய ஸுகத்தை ஸாக்ஷாத்கரித்து யாவதாத்மபாவி லபிக்கவேண்டியிருபபீர்.

(புண்டரீகபாத புண்ணியகீர்த்தி) செவ்வித் தாமரைப்பூப் போலே நிரதிஶய போக்யமான திருவடிகளில் பாவநத்வப்ராபகத்வ ப்ரதை(வூ)பெயெயிலே. (உ)"பாவநஸ்ஸர்வலோகாநாம்" ... பாவநஸ்ஸர்வலோகாநாம்" (௩)"பவித்ராணாம் ஹிகோவிந்தஃ" ... பவித்ராணும் ஹிகோவிந்தஃ" (ச) "லோகாநாம்த்வம்பரோதர்மஃ" ... லோகாநாம்த்வம்பரோதர்மஃ" (ரு) "க்ருஷ்ணம் தர்மம்ஸநாதநம்" ... க்ருஷ்ணம் தர்மம்ஸநாதநம்'' என்று ப்ரஸித்தமிறே. (நும் செவிமடுத்து) பகவத்விஷயத்தைக் கணுக்காணுதே போந்த உங்

(க) பெரி-திருமட-கசு. (உ) ரா-உத்தர-அஉ-கூ.
(௩) பார-ஆர-அஅ-உஎ. (ச) (ரு) பார-ஆர-அஅ † (பா)ப்ரீதி.

௬௮,—முத்திறத்துவாணியத் திரண்டிலொன்றுநீசர்கள்
மத்தராய்மயங்குகின்ற திட்டதிலிறந்துபோந்து
எத்திறத்துமுய்வதோ ருபாயமில்லையுய்குறில்
தொத்திறுத்ததண்டுழாய் நன்மாலைவாழ்த்திவாழ்மினே.

---

கள் செவியை, ஆசார்யோபதேஶத்துக்குப் பாத்ரமாக்கி, ஆப்த வாக்ய ஶ்ரவணமே பகவத்விஷயீகாரத்துக்கு வேண்டுவதென்கை. (உண்டு). ஸ்மர்த்தவ்யதஶையே தொடங்கி யினிதாகையாலும், நிரபேக்ஷாபாயமாகையாலும், பகவத்குணங்களையே அநுபவித்து. ( நம்முறுவினைத்துயருள் நீங்கியுய்ம்மினோ ) நீங்கள் சூழ்த்துக்கொண்டதாய், *ஸ்வஹ்ருதேநாஹோதவ்ய-அவஶ்யமநுபோக்தவ்யமான பாபபலமான து:கத்தினுள்ளே வர்த்திக்கிறநீங்கள், இதில் நின்றும் நீங்கிமுன்சொன்ன கைங்கர்ய ஸுகத்தை லபித்து, (க)'தொழுதெழு' என்கிறபடியேஉஜ்ஜீவியுங்கோள். (௬௭)

அறுபத்தெட்டாம்பாட்டு. (முத்திறத்தித்யாதி).

| | |
|---|---|
| முத்திறத்து | ஸத்வ ரஜஸ் தமோரூப குணபேதத்தாலே மூன்றுவகைப்பட்ட (திறம்-ப்ரகாரம்). |
| வாணியத்து | பலத்தில் வைத்துக்கொண்டு |
| இரண்டில் | ஸத்வாநுகுண பலத்தையொழிந்தரஜஸ்தமோரூப குணத்வயாநு குண பலத்வயத்திலே |
| ஒன்றும் | ருசியுடையரான |
| நீசர்கள் | ஹேயரானவர்கள் |
| இட்டு-அதில் | அதிலிட்டு, அந்த லோகத்திலே அந்தப்பலத்தை வைத்து, அதாவது-அந்தக்கர்ம்பலத்தை விட்டென்றபடி. |

---

அரு;—அறுபத்தேழாம்பாட்டு. உபதேசம்வேணுமோ, ஶாஸ்த்ரஜ்ஞாநமாகாதோ வென்னவருளிச்செய்கிறார் (ஆப்தவாக்யேத்யாதி). (௬௭)

---

(க) தி-வாய்-க-க-க.

| | |
|---|---|
| இறந்து | அந்த (ஹேய)போகஶரீரத்தை முடித்து |
| போந்து | ஆகாஶ மேகாதிக்ரமத்திலே இந்தபூமியிலே கர்ப்பவாஸத்திலே வந்துபிறந்து |
| மத்தராய் | தேஹாத்மாபிமாநத்தாலே ப்ராக்ருத பதார்த்தங்களில் களித்து |
| மயங்குகின்றது | ஆத்மபரமாத்ம ஜ்ஞாநஹீநமாய் மோஹிக்கிறார்களிறே; (ஆகையால்) |
| எத்திறத்தும் | எந்த ப்ரகாரத்தாலும் |
| உய்குறில் | உஜ்ஜீவநத்தை யெண்ணில் |
| உய்வதோருபாயமில்லை | வேறொரு உஜ்ஜீவநோபாயமில்லை |
| தொத்திறுத்த | தொடைசெறிந்த |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாயை யுடைய |
| நல் | ஸௌலப்யாதிகுணயுக்தனான |
| மாலை | ஸர்வாதிகனை |
| வாழ்த்தி | ஸ்துதித்து |
| வாழ்மினோ | ஆநந்தநிர்ப்பரராகுங்கோள். (௬௮) |

அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு. ஸம்ஸாரிகள்குணத்ரயப்ரசுரராயிருக்கையாலே குணாநுகூலமாக ராஜஸ தாமஸ தேவதைகளை ஆஶ்ரயித்து உபஜீவிக்கப் பார்க்கிறவர்களை நிஷேதியாநின்றுகொண்டு, ஆத்மோஜ்ஜீவநத்திலே ருசியையுடையராய் ஸாத்விகரானவர்கள் ஸர்வாதிகனை யாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்கிறார்.

வ்யா.—(முத்திறத்து வாணியத்து) ஸாத்விக ராஜஸதாமஸதேவதைகளைத் தாந்தாமுடைய குணாநுகூலமாகப்பற்றி ஆராதித்துப்பெறும் மூன்றுவகைப்பட்ட பலங்களிலும், (திறம்) - ப்ரகாரம். பலங்களை "வாணியம்" என்கிறது - வ்யாபாரம்.

அல்பமாய், பலம்விஞ்சியிருக்கை. (௧) "அக்நௌப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக் - அக்நௌப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக்" (௨) "பத்ரம் புஷ்பம்பலம்தோயம் - பத்ரம் புஷ்பம்பலம்தோயம்" (௩) "த்ரைகுண்யவிஷயாவேதா: - த்ரைகுண்யவிஷயாவேதா:" என்கிறபடியே - வேதங்களும் குணத்ரய வஶ்யரான சேதநர்க்கு குணாநுகூலமாக ஆராத்ய தேவதைகளையும் ததாராதந ப்ரகாரங்களையும் ஆராதநபலங்களையும் சொல்லி வைத்தது. (இரண்டிலொன்றும் நீசர்கள்). ஸ்வகுணங்களுக்கு அநுகூலமாயிருக்கையாலும் ஶாஸ்த்ராநுமதியாலும் நித்யஸத்வத்தையும் ததாராத்யனான ஈஶ்வரனையும் ஆராதநபலமான மோக்ஷத்தையுமொழிந்து, ராஜஸ தாமஸபலங்களிலே ருசியைப் பண்ணும் நீசர். நீசராகிறார் - ஸம்ஸாரத்தைவர்த்தி(ஜி)ப்பித்துக்கொள்ளும் ஹேயர்.

(மத்தராய் மயங்குகின்ற திட்டத்திலிறந்துபோந்து) (இட்டதில்) கர்மாவஸாநத்திலே அந்த பலத்தை விட்டு. (இறந்து) அவ்வவதேசங்களில் போக(ஹோம)சரீரங்களை முடித்து. (போந்து) அந்தபோக பூமியில் நின்றும் ஆகாச மேக ஸஸ்யாதிகளிலேகிடந்துகர்ப்ப (மஹ-) வாஸார்த்தமாகப்போந்து. (௪) "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி - க்ஷீணே புண்யேமர்த்யலோகம் விஶந்தி" என்கிறபடியேபூமியிலேபிறந்து. (மத்தராய்) தேஹாத்மாபிமாநத்தாலேப்ராக்ருதபதார்த்தலாபத்தாலேகளித்து. (மயங்குகின்றது) ஆத்மாவையாதல்ஈஶ்வரனையாதல்உள்ளபடிஅறியாமையாலே மோஹங்கதரைப்போலே யிருக்கிறதிறே. ஸ்வர்க்காதிபலாநுபவங்களை, புண்யம் க்ஷயித்தவளவிலே மத்யேவிட்டு, அந்த போக(ஹோம)ஶரீரங்களையும்முடித்து, கர்ப்பவாஸார்த்தமாகஅதி

அரு;—அறுபத்தெட்டாம்பாட்டு. வ்யாபாரம் அல்பமாய் பலம்பெருத்திருக்குமோவென்ன வருளிச்செய்கிறார் (அக்நௌப்ராஸ்தேத்யாதி). (இட்டதில்) அதிலிட்டு. அத்தைவிட்டென்றபடி. (அகூ)

(௧) (௨) கீ-௯-௨௬.

(௩) கீ-௨-௪௫. (௪) கீதை-௯-௨௧.

மூ.—காணிலுமுருப்பொலார் செவிக்கினாதகீர்த்தியார்
பேணிலும்வரந்தர மிடுக்கிலாததேவரை
ஆணமென்றடைந்துவாழு மாதர்காளெம்மாதிபால்
பேணிநும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே. (சுகூ)

க்லேஶத்தோடே போந்தபடியை அநுஸந்தியாமையாலேயிறே சேதநர்ப்ராக்ருதபோகங்களிலே களித்துவர்த்திக்கிறதென்கை.

(எத்திறத்துமுய்வதோருபாயமில்லை) ஆகையாலே ஸ்வ பௌருஷத்தாலும் இதரதேவதைகளை ஆஶ்ரயணீயராகப்பற்றினாலும், ஈஶ்வரன் தன்னையே ஐஶ்வர்யார்த்தமாகப் பற்றினாலும் உஜ்ஜீவிக்கைக்கு வழியில்லை. (உய்குறில்) உஜ்ஜீவிக்கவேண்டியிருந்திகோளாகில். (தொத்திறுத்த தண்டுழாய்நன்மாலைவாழ்த்திவாழ்மினோ) ஸர்வேஶ்வரத்வஸூசகமாய், தொடைசெறிந்து ஶ்ரமஹரமாயிருந்துள்ள திருத்துழாயாலே அலங்க்ருதனாய், ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரனை யாஶ்ரயித்து வாழுங்கோள். (க) "நிகரில் புகழாயுலகமூன்றுடையா" இத்யாதிகளைச் சொல்லிப் புகழ்ந்து யாவதாத்மபாவி ஆநந்த நிர்ப்பரராயிருங்கோள். (உ) "ஏஷஹ்யேவாநந்தயாதி-ஏஷஹ்யேவாநந்தயாதி" என்னக்கடவதிறே. .... ...., (சுஅ)

அறுபத்தொன்பதாம்பாட்டு. (காணிலுமித்யாதி).

| | |
|---|---|
| காணிலும் | கண்டாலும் |
| உரு | ஶரீரத்திலே |
| பொலார் | பொல்லாங்கையுடையவராய், |
| செவிக்கு | காதுக்கு |
| இனாத | அமதுரமான, கடுவர்ன வென்றபடி, |
| கீர்த்தியார் | ப்ரஸித்தியை யுடையராய், |
| பேணிலும் | ஆஶ்ரயித்தாலும், |
| வரம் | ப்ரார்த்திதார்த்தத்தை |
| தர | தருகைக்கு |
| மிடுக்கிலாத | ஶக்தியில்லாத |

(க) தி-வா-சு-கO-கO, (உ) தை-ஆ.

| | |
|---|---|
| தேவரை | ருத்ராதி தாமஸதேவதைகளை |
| ஆணமென்று | அரணென்று, அபாஶ்ரயமென்றென்ற படி. |
| அடைந்து | ஆஶ்ரயித்து |
| வாழும் | வாழ்வென்றுப்ரமிக்கும் |
| ஆதர்காள் | அறிவுகேடர்காள்! |
| எம் | முமுக்ஷுக்களான வெங்களுக்கு |
| ஆதிபால் | காரணபூதனான எம்பெருமான் விஷயத்தில் |
| பேணி | ஆதரத்தைப்பண்ணி |
| நும் | உங்களுடைய |
| பிறப்பெனும் | ஜந்மமென்றுசொல்லத்தக்கதான |
| பிணக்கு | தூற்றை |
| அறுக்க | (வே) சேதித்துக்கொள்ள |
| கிற்றிரே | வல்லிகோள். (கூகூ) |

அவ,—அறுபத்தொன்பதாம்பாட்டு. "எத்திறத்து முய்வதோருபாயமில்லை" என்கிறதென், தேவதாந்தரங்களை ஆஶ்ரயித்தால் உஜ்ஜீவிக்கவொண்ணாமை யென்னென்ன; அந்த தேவதாந்தர ஸமாஶ்ரயணம்துஷ்கரம், அத்தைப்†பெற்றாலும் அபிமதப்ரதாநத்தில் அவர்கள் அஶக்தர்; ஆனபின்பு ஜகத்காரணபூதனையாஶ்ரயித்து ஸம்ஸாரதுரிதத்தை அறுத்துக்கொள்ளவல்லிகோளென்கிறார்.

வ்யா.—(காணிலுமுருப்பொலார்) தாமஸதேவதைகளாகையாலே முமுக்ஷுக்களுக்கு அவர்கள் த்ரஷ்டவ்யரல்லர். (க) "[illegible] ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா: ப்ரதிஷித்தாஸ் துபூஜநே" (உ) "[illegible]-அநாத்தாஸ் தேஸமஸ்தாஸ்துதேவாத்யா: கர்மயோநய:" என்னக்கடவதிறே. (ந) "[illegible] - ஆத்மாவாரே த்ரஷ்டவ்ய:"

---

(க) (உ) வி-பு-கூ-எ-௱எ. (ந) ப்ருஹ-ச ச-டு. † (பா) பொறுத்தாலும்.

என்னுமவனல்லனிறே. இங்ஙனே யிருக்கச்செய்தே உங்கள் குணாநுரூபமான ருசியாலே கண்டாலும் விரூபாக்ஷத்வாதிகளாலே வடிவு பொல்லாதாயிருப்பர்; திருவுள்ளத்தில் தண்ணளியைக் கோட்சொல்லித்தாராநின்ற புண்டரீகாக்ஷனைப்போலே வடிவு ஆகர்ஷகமாயிருக்கிறதன்றே; அவர்களுடைய ஹ்ருதயத்தில் க்ரௌர்யமே அவர்கள் வடிவிலே ப்ரகாஶிப்பது. (செவிக்கின்னாத கீர்த்தியார்) த்ரஷ்டவ்யரல்லாதவோபாதி ஶ்ரோதவ்யருமல்லர். கேட்கவேண்டியிருந்தீகோளேயாகிலும், பித்ருவத(ய)ப்ரஸித்தியென்ன, தத்பலமான பிக்ஷாடநசாரித்ரப்ரதையென்ன, அத்வரத்வம்ஸ (அயுரயுஸ) கதையென்ன, ஶ்வஶுரவதகதையென்ன, இத்யாதிஶ்ரவணகடுகமான கீர்த்தியை யுடையராயிருப்பர்; "ம்ருதனான புத்ரனை ஸாந்தீபிநிக்கு மீட்டுக்கொடுத்தான்; புநராவ்ருத்தியில்லாத தேசத்தில் நின்றும் வைதிகன் புத்ரர்களை மீட்டுக்கொடுத்தான்" என்றித்யாதிகளாலே * ஸம்ஶ்ரவே மதுரமான கீர்த்தியனிறே.

(பேணிலும்) ஆஶ்ரயணீயருமல்லர், ஆஶ்ரயித்தார் திறத்திலே "உன்பயலையறுத்திடு" என்றும், "ஊட்டியிலே தட்டிற்றில்லை காண்" என்றும் சொல்லுகையாலே, உங்கள் ருசியாலே அவற்றையும் பொறுத்து ஶ்ரவணகடுகரமான கீர்த்தியையும் வைரூப்யத்தையும் பொறுத்து ஆஶ்ரயித்தாலும், (௧) "வெதுஶ்ரூம்வைஷ்ணவம் ஸம்ஷிதாயஷ - பத்ரம்புஷ்பம் பலம்தோயம்" என்றும், (௨) "ஸாஸாவங்கருத்தாஷ - ஸாஸாகம்கர்த்தும்" என்றும் ஆஶ்ரயணம் ஸுகரமுமாய் ஸுகரூபமுமாயிருக்கிறதன்றே. (வரந்தரமிடுக்கிலாத தேவரை) பாஹிம்ஸையிலே வந்தால் ஜகதுபஸம்ஹாரக்ஷமராய், அப்ரமதபலந்தருகைக்கு ஶக்தியில்லாத தேவதைகளை. ஒரு பிரயாசத்துக்கு மோக்ஷத்தைக்கொடுப்பது, ஒரு பக்ஷிக்கு

அரு;—அறுபத்தொன்பதாம்பாட்டு. (அத்வரத்வம்ஸம்) மாமனாராயிருக்கிற தக்ஷப்ரஜாபதியின் யாகத்தையும் கெடுத்து அவனையும் கொன்றது.

(௧) கீ-௯-௨௬. (௨) கீ-௯-௨.

மோக்ஷத்தைக்கொடுப்பது, (க) "உதாரா ஸர்வ ஏவைதே - உதாராஸ்ஸர்வ ஏவைதே" என்று-தானும், பிறரும் (உ) "ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு: - ஸகல பலப்ரதோஹிவிஷ்ணு:" என்னும் விஷயமன்றிறே. "நீதந்த நித்யத்வம்எனக்குக் கழுத்துக் கட்டியாய்த்து" என்று மார்க்கண்டேயன் அவனைவளைக்க, மோக்ஷப்ரதன்கையிலே காட்டிக்கொடுத்து நழுவும் ஸீலமிறே பிறரது.

(ஆணமென்றடைந்து) இப்படி இவர்கள் ஆஸ்ரயணீயருமன்றிக்கே யிருக்கச்செய்தே தங்கள் ப்ரமத்தாலே ஆஸ்ரயித்து. (ஆணம்) அரண். (ங) "நத்யஜேயம் - நத்யஜேயம்" என்னும்விஷயமன்றே. (ச) "ஜாஸ்யஸ்யாமி - " என்னமாட்டான் - ஏறுண்டவனுகையாலே. (வாழும் ஆதர்காள்) க்ருதார்த்தராயிருக்கும் அறிவுகேடர்காள். (ஆதர்) குருடரும், அறிவுகேடரும். (ரு) "நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ஸ்ரிதா - நாஹாரயதி ஸந்த்ராஸம்பாஹூராமஸ்யஸம்ஸ்ரிதா" என்றும், (சு) "பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மந: - பாஹுச்சாயாமவஷ்டப்தோயஸ்யலோகேமஹாத்மந:" என்றும், (எ) "அதஸோऽபயங்கதோ பவதி - அதஸோऽபயங்கதோபவதி" என்றுமிருக்கிறார்களன்றே.

(எம்மாதிபால்பேணி) எங்களுக்குக்காரணபூதனானவன் பக்கலிலே ஆதரத்தைப்பண்ணி. ஜகத்காரணவஸ்துவாயிருக்கிறவனை, "எம்மாதி" என்பானென்னென்னில்; ஈஸ்வரன்ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணுகிறது முமுக்ஷுஸிஸ்ருக்ஷையாலேயாகையாலே அந்தஸ்ருஷ்டிபலித்தது அநந்யப்ரயோஜநர் பக்கலிலேயென்று "எம்மாதி" என்று விசேஷிக்கிறார். (நும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரே) ஒருத்தராலுமறுக்கப்போகாத உங்களுடையபிறப்பென்

(ஏறுண்டது) பாணாஸுரயுத்தத்திலே. (சுசு)

(க) கீ-எ-கஅ. (உ) விஷ்ணுதர்-சாங. (ங) ரா-யு-கஅ-ங. (ச) கீ-கஅ-சுசு. (ரு) ரா-அ-சு0-உ0. (சு) ரா-ஸு-ஙச-ஙக. (எ) தை-ஆ-எ.

மூ.—குந்தமோடுசூலம்வேல்கள் தோமரங்கள்தண்டுவாள்
பந்தமான்தேவர்கள் பரந்துவானகமுற
வந்தவாணனீரைஞ்ஞுறு தோள்களைத்துணித்தநாள்
அந்தவந்தவாகுல மமரரேயறிவரே. (எ0)

---

கிற நூற்றையறுத்துக்கொள்ள வல்லிகோளே: (பிணக்கறுக்க) ஜந்மத்தை "நூறு" என்கிறது - அகப்பட்டவனுக்குப்புறப்படப் போகாதொழிகையும், தன்னில் தரிக்கவொண்ணாதொழிகையும் முதலும் முடிவும்காண முடியாதிருக்கையும். .... (௬௯)

எழுபதாம்பாட்டு. (குந்தமித்யாதி)

| | |
|---|---|
| குந்தமோடு | சவளமென்கிற வாயுத விஶேஷத்தோடே கூட |
| சூலம் | சூலமென்ன, |
| வேல்கள் | பஹுவிதமான வேல்களென்ன, |
| தோமரங்கள் | பஹுவிதமான தோமரங்களென்ன, |
| தண்டு | கதை (முஸலம்) யென்ன, |
| வாள் | கத்தியென்ன, இவைகளோடேகூட |
| பந்தமான தேவர்கள் | ருத்ரனோடே பந்தத்வத்தை யுடைத்தான தேவர்கள், அன்றிக்கே இவ்வாயுதங்களை பலஹாநிதமையிலே பந்தகங்களாக வுடைய தேவதைகளென்றுமாம்; |
| பரந்து | நாநாதிக்குகளிலும் சிதறி |
| வானகம் | ஆகாஶகதங்களான தங்கள் தங்கள் க்ருஹங்களை |
| உற | அடைகிறபோது |
| வந்த | தன் புஜபலத்தாலே யுத்தார்த்தம் ஸங்கிஹிதனை |
| வாணன் | பாணனுடைய |
| ஈரைஞ்ஞூறு | த்விபஞ்சஶதியான, ஆயிரமான வென்றபடி; |

| | |
|---|---|
| தோள்களை | புஜங்களை |
| துணித்தநாள் | கழித்தவன்று |
| அந்தவந்த | அந்த அந்த வென்றபடி |
| ஆகுலம் | பாரவஶ்யத்தை, தத்தத்பாரவஶ்யத்தை யென்றபடி |
| அமரரே | அப்போது ருத்ரனுடேகூட வோடின தேவதைகளே |
| அறிவர் | ப்ரத்யக்ஷமாகக் கண்டிருப்பர். (ஏவகாரத்தாலே இவ்வர்த்தத்தில் என்உபதேஶம் வேண்டா வென்னுமிடம் தோற்றுகிறது). (எ0) |

அவ,—எழுபதாம்பாட்டு. "வரந்தரமிடுக்கிலாததேவர்' 'என்று - அவர்களுக்கு ஶக்திவைகல்யம் சொல்லுவானென்? அவர்களை ஆஶ்ரயித்துத்தங்களபிமதம் பெற்றாரில்லையோவென்ன; ருத்ரனையாஶ்ரயித்து அவனுக்கந்தரங்களாய்ப் போந்தபாணன் பட்டபாடும்,ருத்ரன் தான் கண்கலங்கினபடியும்,அன்றுஸஹகரித்ததேவர்களேயறியுமத்தனையிறே யென்கிறார்.

வ்யா;—(குந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டு வாள் பந்தமான தேவர்கள்) குந்தம் முதலான ஆயுதங்களைக் கொண்டு ருத்ரனுக்கு பந்துக்களா யுதவிசெய்யவந்த தேவதைகள், (குந்தம்) சவளம். (தோமரம்) எறியீட்டி. (பந்தம்) பாஶம். இவ்வாயுத வர்க்கத்தைக்கொண்டு வந்து அவைதானே கர்றகட்டாய்ப் பொகட்டுப்போன தேவர்களென்றுமாம். அப்போது "பந்தம்" என்று - பந்தகமென்றபடி. (க) 'விநாஶாயசது்ஷ்க்ருதாம் - விநாஶாயச துஷ்க்ருதாம்" என்கிறபடியே க்ருஷ்ணனை,

அரு;—எழுபதாம்பாட்டு. (குந்தம்) சவளம். (தோமரம) வேல்விஶேஷம்,

(க) கீ-ச-அ.

தங்களுக்கு விரோதிகளான அஸுரராக்ஷஸர்களை அழியச்செய்து குடியிருப்புத்தர வந்து பிறந்தவனென்று பாராதே, அந்த துர்வர்க்கத்தோபாதி எதிரம்பு கோத்துவருகையாலே க்ருதக்நருமாய் துர்மாநிகளுமா யிருக்குமவர்களொழுகை. ஸாயுதராய் வந்த தேவர்களென்று சுருங்கச்சொல்லாதே, பரக்க ஆயுதங்களைப் பேசிற்று - "உபகாரகனானவன் பக்கலிலே இத்தனை அபகாரத்தைநினைப்பதே"! என்னும்நெஞ்செரிவாலேயருளிச்செய்கிறார். (பரந்துவானகமுற) க்ருஷ்ணன் ஸந்நிதியிலே நேர்நிற்கமாட்டாதே ஒருவர்போனவழி யொருவர் போகாதே சிதறித் தங்கள் குடியிருப்பிலே புக.

(வந்தவாணன்) தேவதைகள் ஆயுதங்களைப் பொகட்டுப் போனவிடத்திலும், தனக்கு நியாமகனான ருத்ரன் ஜ்ரும்பிதனானவிடத்திலும், தன்தோள்வலியைவிஶ்வஸித்துவந்தபாணனுடைய. (ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணிந்தநாள்) ஆயிரந் தோள்களையும் கழித்தவன்று. தோள்வலியைக்கொண்டு வந்தவனுடைய தோள்வலியைக் கழித்தான், ஆயுதங்களை பலமாகக் கொண்டுவந்த தேவர்களை ஆயுதங்களைப் பொகட்டுப் பிற்காலித்துப் போம்படி பண்ணினான், ஸர்வாத்யக்ஷனாய் வந்த ருத்ரனை நிஶ்சேஷ்டனாம்படி பண்ணினான். (அந்தவந்தவாகுலம்) ருத்ரன் கொன்றையும் தும்பையும் ஜடையும் குலையக்கெட்டுப்போன பாரவஶ்யமும், போக்கற்றவாறே கலங்கி க்ருஷ்ணனுடைய முகம் பெறுகைக்கு ஸ்தோத்ரம்பண்ணின பாரவச்யமும். (௧) "வாணஸ்ய ஸாயகை ஸ்தீர்ணம் ஜ்ரும்பிதம் தேஜஸா । வாஸுதேவஸ்ய வோஷண ஶார்ங்க விஷ்ணோ நச - பாரவஶ்யம்ஸமாயாதஸ்ய ஶ்ரீஜ்ரும்பிதகேஜஸா பாஞ்சஜந்யஸ்யகோஷேண ஶார்ங்கவிஷ்ப்பூர்ஜிதேநச" என்றும், (௨) "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம் । பரேஶம் பரமாத்மாநம் அநாதிநிதநம் ஹரிம் - க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம் - பரேஶம்பரமாத்மாந மநாதிநிதநம்ஹரிம்" என்னக்கடவதிறே. (அமரரேயறிவரே) ஆக இப்படி யிரண்டுவகைப்பட்ட ஆகுலத்துக்கும் கெட்டுப்போன தேவர்களேஸாக்ஷி, நான் இன்று சொல்லவேண்டியிருந்ததோ? ... ... (௭௦)

(ஜ்ரும்பிதன்) முறிந்துபோனவன். (௭௦)

(௧) (௨) வி-பு-ரு-௩௩-௪௯.

மூ.—வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினால்வெகுண்டு
இண்டைவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்தநாள்
முண்டனீறன்மக்கள் வெப்புமோடியங்கியோடிடக்
கண்டுநாணிவாணனுக்கிரங்கினானெம்மாயனே. (எக)

---

எழுத்தோசைப்பாட்டு. (வண்டித்யாதி).

| | |
|---|---|
| வண்டு | வண்டுகளானவை |
| உலாவு | மாறிமாறி ஸஞ்சரியாநிற்கிற |
| கோதை | மாலையையுடைத்தான |
| மாதர்காரணத்தினால் | தன்பெண்ணான உஷையாகிற ஸ்த்ரீயின் நிமித்தம் |
| வெகுண்டு | கோபித்து |
| இண்டை | நெருங்கிவந்த |
| வாணன் | பாணாஸுரனுடைய |
| ஈரைஞ்ஞூறு தோள்களை | ஆயிரந்தோள்களை |
| துணித்தநாள் | கழித்தவன்று |
| முண்டன் நீறன் | முண்டிதஶிரஸ்கனாய், பஸ்மச்சந்நனான ருத்ரனானவன் |
| மக்கள் | ஸ்கந்தாதிபுத்ரர்களென்ன, |
| வெப்பு | ஜ்வரரோகமென்ன, |
| மோடி | காளியாதல், மாரியாதலென்ன, |
| அங்கி | நாற்பத்தொன்பது அக்நிக்கு நிர்வாஹகனான அக்நியென்ன, இவர்களோடேகூட |
| ஓடிட | ஓடிப்போம்போது |
| கண்டு | பார்த்து |
| நாணி | "ஒருவன் ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணும்படி இதுவே" என்று லஜ்ஜித்து |
| வாணனுக்கு | பாணாஸுரன் விஷயத்திலே |

இரங்கினேன் அவன் துர்க்கதியே பற்றாசாக க்ருபை
பண்ணி இரண்டுதோள்களையும்
கொடுத்து ரக்ஷித்தவன்

எம் ஆயனே நம்முடைய க்ருஷ்ணனே; (எக)

அவ;—எழுபத்தோராம்பாட்டு. பாணனை ரக்ஷிக்கக்கட வேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி ஸபரிகரனாய்க்கொண்டு ரக்ஷணத்திலே உத்யோகித்து, எதிர்த்தலைமிலே அவனைக்காட்டிக் கொடுத்துத் தப்பிப்போனபடியாலும் "ஒருவன் ஆஸ்ரிதனுக்கு உதவினபடியென்" என்று லஜ்ஜித்து க்ருஷ்ணன் க்ருபைபண்ணி அவன் ஸத்தையை நோக்கினபடியாலும், அவன் ரக்ஷகனல்லனென்னுமிடமும், க்ருஷ்ணனே ரக்ஷகனென்னுமிடமும்ப்ரத்யக்ஷமன்றோ, இவ்வர்த்தம் ஒருவர் சொல்லவேண்டியிருந்ததோ வென்கிறார்.

வ்யா.—(வண்டுலாவு கோதைமாதர் காரணத்தினல்)வண்டுமொய்த்த மாலையாலே அலங்க்ருதையான உஷைநிமித்தமாக. "ஸ்வப்நத்ருஷ்டனை அநிருத்தனை சித்ரலேகை கொண்டுவரக்கூடும்" என்று அவள்வரவுபார்த்துச்செவ்விப்பூவாலே ஒப்பித்திருந்தபடியைச்சொல்லுகிறது. (வெகுண்டிண்டவாணன்) எதிர்த்தலை ஸர்வேஶ்வரனென்று பாராதே யுத்தக்ருத்தனாய் மேல்விழுந்த பாணன். (வெகுளி) கோபம். இண்டல் - நெருங்குதல். (க) "வீதராகபயக்ரோதா: - விதரம்மாதரம்தாராந்" என்று-ரக்தஸ்பர்ஶங்களைவிட்டுப் பற்றவேண்டும் விஷயத்திலே ஸங்கநிமித்தமாகப் பகைக்கிறார்களிறே. துஷ்ப்ரக்ருதியாகையாலே, காந்தர்வட்க்ஷத்தாலே ஸம்ஶ்லேஷம் பிறந்தபின்புக்ருஷ்ணனோடே ஸம்பந்தியாய்க்கொண்டு ப்ரீதனாக ப்ராப்தமாயிருக்க, தன் பாஹுபலத்தாலே வந்த துர்மாநத்தாலே சீறி அந்தப்பட்டானென்கை. (ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்) இவன் எதிரிடுகைக்குஹேது பாஹுபலமாகையாலே பாஹுவநத்தைச் சேதித்தவன்று. (முண்டன் நீறன் மக்கள் வெப்பு

---

(க) ஶ்ரீகீதை.

மோடி யங்கியோடிடக்கண்டு நாணி). "ரக்ஷிக்கிறேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணினவன் செய்ததென்னென்னில்; பாணனை க்ருஷ்ணன் கையிலே காட்டிக்கொடுத்து ப்ரதானனான தன்னோடுபரிகரத்தோடேவாசியற முதுகுகாட்டியோடின வித்தனை. (முண்டன் நீறன்) முண்டிதனாய் பஸ்மச்ச(ஆ)ந்நசரீரனான ருத்ரன். இத்தால் க்ருஷ்ணனைக் குறித்துத் தன்†னபிமத ஸித்தியைக்குறித்து, ஸாதகனை அவன் தன்னளவும்பாராதே எதிர்த்தலையையும் பாராதே ஸாதகவேஷத்தோடே அபிமானங் கொண்டாடினபடி. தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன் முதலான புத்ரர்கள், ஜ்வரம், மோடிபிடாரி, நாற்பத்தொன்பதுஅக்நிக்கும்கூடஸ்தனானஅக்நி இவர்களோடு, தன்னோடு வாசியற முதுகிட்டுப் போகக்கண்டு லஜ்ஜித்து. (மோடி) காளிகளென்றுமாம். லஜ்ஜிக்கையாவது - யுத்தோந்முக‡னாய்த் தான்படுதல், எதிர்த்தலையை ஜயித்தல் செய்ய ப்ராப்தமாயிருக்க, முதுகிடுகையாலே "தரம் போராத இவற்றின் மேலேயாகாதே நாம்சீறிற்று" என்று லஜ்ஜித்து. அதவா, (க) "அஸிெவ்ராணாநு வஸிதஞ் ரக்ஷிதவ்யஃ - அபிப்ராணாந்பரித்யஜ்யரக்ஷிதவ்யஃ" என்கிறபடியே - ஆஸ்ரிதனை ப்ராணவதியாக ரக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, "ஒருவன் ஆஸ்ரிதனுக்கு உதவினபடியென்!" என்றுலஜ்ஜித்தென்னவுமாம். (வாணனுக்கிரங்கினனெம்மாயனே) இப்படிப்பட்ட ருத்ரனைத் தனக்குத் தஞ்சமாக நினைத்திருக்கையாலே தயநீயனானபாணனுக்கு ஆபத்தேஹேதுவாக க்ருபைபண்ணி, இரண்டு தோள்களைக்கொடுத்து ரக்ஷித்தான் என்னுடையனான க்ருஷ்ணனல்லனோ. இத்தால் - தேவதாந்தரங்கள் ரக்ஷகரானாலும் ஆபத்துக்கு உதவார்கள்; ஈச்வரன் முனிந்த தசையிலும் ஆபத்ஸகனென்றதாய்த்து, (உ) "க்ருபயாபர்யபாலயத் - க்ருபயாபர்யபாலயத்". .... ... (எக)

(க) ரா-யு-௬அ-உ௯. (உ) ரா-ஸு-௩அ-௩௪. †(பா) தன்னபிஸந்தியை.
‡ (பா) மானல்.

மூ —போதின்மங்கைபூதலக் கிழத்திதேவியன்றியும்
போதுதங்குநான்முகன் மகனவன்மகன் சொலில்
மாதுதங்குகூறனேற தூர்தியென்றுவேதநூல்
ஓதுகின்றதுண்மையல்ல தில்லைமற்றுரைக்கிலே. (எஉ)

---

எழுபத்திரண்டாம்பாட்டு (போதிலித்யாதி)

| | |
|---|---|
| போது | பத்மமாகிற புஷ்பத்தை |
| இல் | வாஸஸ்த்தாநமாகவுடைய |
| மங்கை | நித்யயுவதியானபெரியபிராட்டியாரும் (அன்றிக்கே, போதில்-புஷ்பத்திலிருக்கிற மங்கையென்றுமாம்) |
| பூதலம் | பூமண்டலத்துக்கு அபிமாநிநியான |
| கிழத்தி | நாயகியானபூமிப்பிராட்டியும், |
| தேவி | மஹிஷிகள்; |
| அன்றியும் | அதுக்குமேலே |
| போது | திருநாபீகமலமாகிற புஷ்பத்திலே |
| தங்கு | நித்யவாஸம் பண்ணுகிற்கிற |
| நான்முகன் | சதுர்முகனான ப்ரஹ்மாவானவன் |
| மகன் | புத்ரன்; |
| சொலில் | ருத்ரன்ஸ்வரூபத்தை உள்ளபடியேநிர்த்தோஷஸ்ருதியாலேசொல்லப்பார்க்கில், |
| அவன்மகன் | "அந்த நான்முகனுக்குப் புத்ரன், |
| மாது | பார்வதியானஸ்த்ரீயானவள் |
| தங்கு | நித்யவாஸம் பண்ணுகிற்கிற |
| கூறன் | வாமமானஶரீரைகபாகத்தையுடையவன்; |
| ஏறதூர்தி | வ்ருஷபத்தை வாஹநமாகவுடையவன்;" என்றும் |
| என்று | இந்தப்ரகாரம் |

| | |
|---|---|
| வேத | நிர்த்தோஷஸ்ருதியாகிற |
| நூல் | ஸாஸ்த்ரமானது |
| ஓதுகின்றதே | ப்ரதிபாதிக்கிறவர்த்தமே(ஏகாரத்தை இங்கே கூட்டுவது) |
| உண்மை | ஸத்யம். |
| மற்று | கீழ்ச்சொன்னவர்த்தத்துக்குப் புறம்பாக |
| உரைக்கில் | ஆகமாதிகளைக்கொண்டு சொல்லப்பார்க்கில் |
| அல்லது | ஸர்வாதிகத்வநியதமான ஸ்ரீ பூமிபதித்வ சதுர்முகபுத்ரகத்வ ருத்ரபௌத்ரகத்வமாகிற கீழ்ச்சொன்ன வர்த்தமல்லாதவர்த்தம் |
| இல்லை | அஸத்யம். (எஉ) |

அவ:—எழுபத்திரண்டாம்பாட்டு. ருத்ரனை லோகத்திலே "மோக்ஷப்ரதன்"என்று ஆஸ்ரயிப்பாரும் ஆகமாதிகளிலேபரத்வத்தை ப்ரதிபாதித்துமன்றோ போருகிறதென்னில்; நிர்த்தோஷஸ்ருதியில் அவனைக்ஷேத்ரஜ்ஞனாகச் சொல்லுகையாலே லோகப்ரஸித்தி வடயக்ஷப்ரஸித்திபோலே அயதார்த்தம், ஆகமாதிகள் விப்ரலம்பகவாக்யவத் அயதார்த்தமென்கிறார்.

வ்யா.—(போதில் மங்கைபூதலக்கிழத்திதேவி) தாமரையிலே பிறப்பையுடைய பிராட்டியும், ஸ்ரீ பூமிப்பிராட்டியும் மஹிஷிகள், (க) "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" - ஹ்ரீஸ்சதேலக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ" என்றும், (உ) "பத்மே ஸ்திதாம் பத்மவர்ணாம்" - பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்" என்றும் சொல்லக்கடவதிறே. (அன்றியும்) ஸ்ரியஃபதித்வமேபோரும் ஸர்வாதிகன் ஸர்வ ஸமாஸ்ரயணீயனென்கைக்கு, ஸ்ரியஃபதித்வத்துக்கு மேலில்லையிறே. (அன்றியும்) அதுக்குமேலே.

---

அரு;—எழுபத்திரண்டாம்பாட்டு. இங்கேபிராட்டிஸம்பந்த மேதுக்கென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வாதிகனித்யாதி). (எஉ.)

---

(க) யஜுஃ-ஆர. (உ) ஸ்ரீஸூக்தம்.

(போதுதங்குநான்முகன்) மகன் திருநாபீகமலத்திலே பிறக்கையாலே கமலாஸநனை சதுர்முகன் புத்ரன் (௧) [illegible] - அஜஸ்யநாபாவத்யேகமர்ப்பிதம் யஸ்மிந்நிதம் விஸ்வம்புவநமதிஸ்ரிதம் ஸப்ரஜாபதிரேகஃபுஷ்கரபர்ணேஸமபவத்'' என்னக்கடவதிறே. (அவன்மகன் சொலில் மாது தங்குகூறனேறதூர்தி) (௨) "[illegible] - ஏகஏவருத்ரஃ ஸர்வோஹ்யேஷருத்ரஃ'' என்கிற ப்ரஸம்ஸாவாக்யங்களையும் ஆகமாதிதந்த்ரங்களையுமொழிய அவன் ஸ்வரூபத்தையுள்ளபடியே (௩) "[illegible] - ப்ரஹ்மணஃபுத்ராய ஜ்யேஷ்டாய'' இத்யாதி நிர்த்தோஷ ஸ்ருதிப்ரக்ரியையாலே சொல்லப்பார்க்கில், அவன் ப்ரஹ்மபுத்ரன். "மாதுதங்குகூறன்'' என்கிறது - ப்ரஹ்மாவினுடைய மாநஸஸ்ருஷ்டியொழிய யோஷித்புருஷஸம்யோகத்தாலே† (பிறக்கும்) ஸ்ருஷ்டிக்கு ப்ரதமகண்யனென்று இவனுடைய க்ஷேத்ரஜ்ஞத்வம் தோற்றுகைக்காக. (௪) "[illegible] - [illegible] ப்ருகுடீகுடிலாதஸ்யலலாடாத்க்ரோததீபிதாத் । ஸமுத்பந்நஸ்ததாருத்ரோ மத்யாஹ்நார்க்கஸமப்ரபஃ । அர்த்தநாரீநரவபுஃ ப்ரசண்டோதிஸரீரவாந்'' என்று ப்ரஹ்மாவினுடைய ஸ்ருஷ்டிப்ரகரணத்திலே சொல்லக்கடவதிறே. "ஏறதூர்தி'' என்று - வேதமயனனபெரியதிருவடிக்கெதிராக வ்ருஷபத்தைவாஹநமாகக்கொண்டிருக்கிற தார்மாநம் தோற்றுகைக்காக. (என்று வேதநூலோதுகின்ற துண்மை.) ஸ்ரீ பூமிஸஹிதன் ப்ரஹ்மாவுக்கு உத்பாதகன், ப்ரஹ்மோத்பந்நன் ருத்ரனென்று வேதாக்யஸாஸ்த்ரமோதுகிற அர்த்தமே ஸத்யம். (அல்லதில்லை மற்றுரைக்கி

---

(௧ ... (௨) அதர்வஸிரஸ்ஸு. (௩) ...

(௪) வி-பு-௧-எ-௧௨.

மூ.—மரம்பொதச்சரந்துரந்து வாலிவீழமுன்னோர்நாள்
உரம்பொதச்சரந்துரந்த வும்பராளியெம்பிரான்
வரங்குறிப்பில்வைத்தவர்க் கலாதுவானமாளிலும்
நிரம்புநீடுபோகமெத் திறத்துமியார்க்குமில்லையே, (எங)

---

லே). அதுக்குப்புறம்பாக ஓரர்த்தம் சொல்லில் அது அஸத்யம். ஸுபர்ணவைகுண்ட ஸம்வாதே, (க) "யத்ர த்வஷ்டா ஸுதோ தேவ: ஸர்வம் யத்ர ப்ரஹ்மா வ்யஜாயத । ப்ரஹ்மணஸ்சாபி ஸம்பூத: ஶிவ இத்யவதார்யதாம் । ஶிவாத் ஸ்கந்த: ஸம்பபூவ ... ஷ்டயம் - யத்தத்பத்மமபூத்பூர்வம்யத்ரப்ரஹ்மாவ்யஜாயத।ப்ரஹ்மணஸ்சாபிஸம்பூதஶ்ஶிவ இத்யவதார்யதாம்।ஶிவாத்ஸ்கந்தஸ்ஸம்பபூவ ஏதத்ஸ்ருஷ்டி சதுஷ்டயம்" இத்யாதி. .... .... (எஉ)

எழுபத்து மூன்றும்பாட்டு. (மரமித்யாதி).

முன்னொருநாள் முன்புபோன சதுர்யுகங்களில் ஒரு த்ரேதாயுகத்திலே .

| | |
|---|---|
| மரம் | ஏழுமராமரங்களானவை |
| பொத | பொத்தும்படியாக, மறுபாடுருவும்படியாகவென்றபடி. |
| சரம் | பாணத்தை |
| துரந்து | ஏவி, |
| வாலி | வாலியானவன் |
| வீழ | விழும்படியாக |
| உரம் | அவனுடையமார்வு |
| பொத | உருவும்படியாக |
| சரம் | பாணத்தை |
| துரந்த | ஏவின |
| உம்பர் | உபரிவர்த்திகளான நித்யஸூரிகளை |
| ஆளி | ஆளுமவனுய் |

(அன்றிக்கே)

---

(க)

உம்பர் ஸ்வர்க்காத்யுபரிலோக வர்த்திகளான இந்த்ராதிகளை
ஆளி ஆளுமவனாய்
எம்பிரான் நமக்குஸ்வாமியான சக்ரவர்த்தித்திருமகனுடைய
வரம் ஶ்ரேஷ்டமான
குறிப்பில் திருவுள்ளத்திலே
வைத்தவர்க்கலாது } வைக்கப்பட்டவர்க்கல்லது. அவன்திருவுள்ளத்தாலே விஷயீக்ருதர்க்கல்லது வென்றபடி.
வானமாளிலும் ஸத்யலோகாதிகளாகிற உபரிதநலோகங்களை யாளும் ப்ரஹ்மாதிகளாயிருந்தாலும்,
யார்க்கும் எப்பேர்ப்பட்டவர்க்கும்
நிரம்பு குறைவற்ற
நீடு தீர்க்கமான
போகம் கைங்கர்யஸுகமானது
எத்திறத்தும் எவ்வழியாலும்
இல்லையே இல்லை. (எங)

அவ.—எழுபத்துமூன்றும்பாட்டு. ஶ்ரியঃபதியே ஆஶ்ரயணீயன், ப்ரஹ்மருத்ரர்கள் க்ஷேத்ரஜ்ஞராகையாலே அநாஶ்ரயணீயரென்றதாய்நின்றது-கீழ்; இதில் அந்த ஶ்ரியঃபதிதான் தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக மநுஷ்ய ஸஜாதீயனாய்த்தன்னைத்தாழவிட்டுக்கொண்டு நின்றநிலையிலே ப்ரஹ்மருத்ரர்களுடைய அதிகாரத்திலே நின்றார்க்கு மோக்ஷப்ரதனென்றுகொண்டு தேவதாந்தரங்களுக்கும் ஸர்வேஸ்வரனுக்குமுண்டான நெடுவாசியை அருளிச்செய்கிறார்.

வ்யா. (மரம்பொதச்சரந்துரந்து.) மஹாராஜருடைய விஶ

---

அரு;—எழுபத்துமூன்றும்பாட்டு. (அதிகாரத்திலே) அவரவர்களுடைய

வ,லார்த்தமாக மராமரங்களை மறுபாடுருவத்திருச்சரத்தை யேவி. இத்தால் - தன்னுடைய ரக்ஷணத்திலே அதிஶங்கைபண்ணினார்க்கும் அவ்வதிஶங்கையைத்தீர்த்துத்தன்பக்கலிலே விஸ்வாஸத்தைப்பிறப்பித்து ரக்ஷிக்கும் சீலவானென்கை. (வாலி வீழ முன்னோர்நாள் உரம்பொதச் சரந்துரந்த) ராவணனை வாலிலே கட்டிக்கொண்டுதிரியும் பெருமிடுக்கனானவாலியை. முன்பு போன சதுர்யுகங்களில் ஒருத்ரேதாயுகத்திலே இவன் தரைப்படும்படியாக மராமரங்களிலும் திண்ணிய அவன்மார்வுமறுபாடுருவும்படி அம்பைவிட்டு. அதிகாரிகளுமாய் நிவ்ருத்தவிரோதருமா யிருக்குமவர்களுக்கு ஸ்வாநுபவரூபமான அபிமதத்தைக் கொடுக்கையேயன்றிக்கே, தத்விரோதியான அவித்யாதி ப்ரபல விரோதிகளையும்போக்கி அதுக்கடியான அதிகாரத்தையும் கொடுக்கும் ஶீலவானென்கைக்கும் உதாஹரணமிதுவென்கை. “வரந்தரமிடுக்கிலாததேவர்” என்று அபிமதப்ரதாநத்திலும் அஶக்தரென்றதிறே ப்ரஹ்மாதிகளை. (உம்பராளி.) நித்யஸூரிகளை அடிமைகொள்ளுகிறவன்கிடீர் தாழ்ந்தார்க்குஇப்படி உபகரிக்கிறானென்கை. ரக்ஷணத்திலே அதிசங்கை பண்ணினவனுடைய அதிஶங்கையைத் தீர்த்து அவன் விரோதியைப்போக்கின அந்தஶீலம்அறியவுரியார் நித்யஸூரிகளிறே. (எம்பிரான்) அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவன். அதவா, “உம்பராளியெம்பிரான்” என்று - அச்செயலாலே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களையும். அநந்ய ப்ரயோஜநரான அஸ்மதாதிகளையுமொக்க எழுதிக்கொண்டவனென்றுமாம். “உரம்பொ

---

அதிஷ்டாநத்திலே நிர்வாஹகராயிருக்குமவர்களுக்கும் (ஸ்வாநுபவரூபமா) தன்னை அநுபவிக்கையாகிற புருஷார்த்தத்திலே அபிமாநத்தை யுண்டாக்குகை. ப்ரஹ்மாதிகள் இவன்விரோதியைப் போக்கமாட்டார்களோ வென்னவருளுகிறார் ( வரந்தரமிடுக்கிலாதவித்யாதி ). ''உம்பராளி'' என்றதுக்குத் தாத்பர்யத்வயமருளுகிறார் (நித்யஸூரிகளையித்யாதி வாக்யத்வயத்தாலே). அன்றிக்கே ப்ரஹ்மாதிகளாகவுமாம், இத்தை யருளிச்செய்கிறார் (அதவேத்யாதி). ப்ரயோஜநாந்தரபரர்-உபாஸகர் ப்ரஹ்மாதிகளோடொக்க அஸ்மதாதிகளையுமென்றபடி. (௭௬)

மூ.—அறிந்தறிந்து வாமன னடியிணை வணங்கினால்
செறிந்தெழுந்த ஞானமோடு செல்வமுஞ் சிறந்திடும்
மறிந்தெழுந்த தெண்டிரையுள் மன்னுமாலை வாழ்த்தினால்
பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல் பான்மையே. (எச)

---

தச்சரந் துரந்த - எம்பிரான்'' என்று — முன்பு மஹாராஜர்க்கு உதவினதும் தமக்கு உதவிற்றாக நினைத்திருக்கிறார்.

(வரங்குறிப்பில் வைத்தவர்க்கலாது.) இப்படிப்பட்ட தஶரதாத்மஜனுடைய ஶ்ரேஷ்ட்டமான திருவுள்ளத்தாலே விஷயீகரிக்கப்பட்டவர்களுக் கல்லது. ஶ்ரேஷ்ட்டமாகையாவது-பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநமா யிருக்கை. (வானமாளிலும்.) ஜ்ஞாநாதிகராய் சதுர்த்தஶபுவநங்களுக்கும் நிர்வாஹகரான ப்ரஹ்மாதிகளாயிருந்தாலும். (நிரம்பு நீடுபோகம்.) குறைவற்று நித்யமான போகம். அதாவது=பரமபக்திக்ருதமாய் பரிபூர்ணமாய்விஶததமமான நித்யாநுபவம். (எத்திறத்தும் யார்க்கு மில்லையே,) அநந்யப்ரயோஜநர்க்குமில்லை. கர்மாத்யுபாயங்களை அநுஷ்ட்டிக்கவுமாம், ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணவுமாம், அவன் ப்ரஸாதமொழிய மோக்ஷஸித்தியில்லை. ஜ்ஞாநாதிகராய் அநந்ய ப்ரயோஜநராகவுமாம்; அகிஞ்சநராய் அநந்யப்ரயோஜந ராகவுமாம்; அவன் ப்ரஸாதமே மோக்ஷஸாதநமென்கை. விரோதிநிரஸநஶீலனான தஶரதாத்மஜன் ப்ரஸந்நனானார்க்கல்லது ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரத்திலே நின்றார்க்கும் நித்யமான மோக்ஷத்தைப்ராபிக்க விரகில்லையென்றதாய்த்து. ... .... (எங)

எழுபத்து நாலாம்பாட்டு. (அறிந்தறிந்தித்யாதி)

| | |
|---|---|
| வாமநன் | ஸர்வஸுலபமான வாமநனாய் அவதீர்ணனான வெம்பெருமானுடைய |
| அடியிணை | ஶ்ரீபாதயுக்மத்தை |
| அறிந்தறிந்து | உபாயத்வேந உபேயத்வேந இரண்டு விதமாகவறிந்து. ஶாஸ்த்ரமுகத்தாலும் ஆசார்யோபதேஶத்தாலு மறிந்தென்றுமாம். |

வணங்கினால் "நம:" என்று அத்திருவடிகளிலே ஸ்ரய ஸ்தபரானால்
செறிந்து ஸ்ப்பீதமாய்,
எழுந்த ஸாக்ஷாத்காரத்வபர்யந்தமாரூடமான
ஞானமோடு ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்தோடே கூட
செல்வமும் பரபக்தியாகிறவைஸ்வர்யம்
செறிந்திடும் அபி(வி)வ்ருத்தமாம்.
மறிந்து விரிந்து
எழுந்த கிளருகிற
தெள் தெளிந்திருக்கிற
திரை அலைகளையுடைத்தான
உள் க்ஷீராப்தியினுடையவுள்ளே
மன்னு நித்யவாஸம் பண்ணுகிற
மாலை ஆஸ்ரிதர்பக்கல்வ்யாமுக்தனானவெம் பெருமானை
வாழ்த்தினால் வாயாலே சொன்னால்
எழுந்த தீவினைகள் } ஆத்மஸ்வரூபத்திலே அபிவ்ருத்தமாய்க்கிடக்கிறக்ரூரமானபாபங்கள்
பறிந்து ஆத்மஸ்வரூபத்தில் நின்றும் விபக்தமாய்
பற்றறுதல் வாஸனையாகிற ஸூக்ஷ்மாம்ஸத்தோடே (வி) சின்னமாகை
யான்மையே ஸ்வபாவமே. (எ௪)

அ.—எழுபத்துநான்காம்பாட்டு. ஆஸ்ரயணீயனுடைய ப்ரஸாதமே மோக்ஷஸாதநமாகில், முமுக்ஷுவான இவ்வதிகாரிக்கு ப்ரஸாதகமான கர்த்தவ்யமேதென்னில்; ஸ்ரீவாமநனுடையதிருவடிகளிலே தலைசாய்த்தல், க்ஷீராப்திநாதனுடைய ஸீலத்துக்கு

திருச்சந்தவிருத்தம்-எச-பா, அறிந்தறிந்து, வ்யாக்யானம். உகள வாசகமான திருநாமத்தை வாயாலே சொல்லுதல் செய்யவே, புருஷார்த்த ஸித்தியுண்டென்கிறார்.

வ்யா.—(அறிந்தறிந்து வாமனனடியிணை வணங்கினல்,) தன்னுடைமையை லபிக்கைக்குத் தான் அர்த்தியாய்வந்தவன் திருவடிகளை, "ப்ராப்யமும் ப்ராபகமும் அதுவே" என்று அத்யவஸித்து, அத்திருவடிகளிலே ந்யஸ்தபரனானல். "வாமனனடியிணை" என்று—வரையாலே யெல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையாலே ஸர்வஸுலபனானவன் திருவடிகளை யென்றுமாம். "அறிந்தறிந்து" என்றது-ஶாஸ்த்ரஶ்ரவணத்தாலும், ஆசார்யோபதேசத்தாலு மென்றுமாம். இது "அன்று பாரளந்த பாதபோதையொன்றி" என்று கீழ்ச்சொன்னதினுடைய விவரணம்.

(செறிந்தெழுந்தஞானமோடு செல்வமும் சிறந்திடும்) ப்ரத்யக்ப்ரவணமாய் ஸாக்ஷாத்காரபர்யந்தமான ஸர்வேஶ்வரனுக்கே அநந்யார்ஹஶேஷபூதன் இவ்வாத்மாவென்கிற ஜ்ஞானமும், அதடியாக கைங்கர்யோபகரணமான பக்தியும் குறைவறவுண்டாம். சிறப்பு-மிகுதி. அதுகைங்கர்யத்துக்கும் விரோதிநிவ்ருத்திக்குமுபலக்ஷணம். நிர்த்தோஷனுக்கிறே கைங்கர்யோபகரணமான பக்தியுண்டாவது. ப்ரீதிகாரிதமிறே கைங்கர்யம். (க)"தனமாயதானே கைகூடும்" என்று வைஷ்ணவனுக்கு ஐஶ்வர்யம் பக்தியாகையாலே, அந்தபக்தியை இங்கு "செல்வம்" என்கிறது. † அங்ஙனன்றியே.

(மறிந்தெழுந்த தெண்டிரையுள் மன்னுமாலைவாழ்த்தினல்) பரம்பிக்கிளர்ந்து தெளிந்ததிரைகளையுடைய க்ஷீராப்தியிலே நித்யவாஸம்பண்ணுகிற ஆஶ்ரிதவத்ஸலனுடைய திருநாமத்தை வாயாலே சொன்னல். மறிதல் - விரிதல்.

---

அரு;—எழுபத்துநாலாம்பாட்டு. (ப்ரத்யக்ப்ரவணம்) ப்ரத்யக்ஷஸமானாகாரம். (நிர்தோஷனுக்கித்யாதி).

---

(க) † குண்டலிதம் க்லாசித்தம்.

மூ.—ஒன்றிநின் றுநற்றவஞ்செய் தூழியூழிதோறெலாம்
நின்றுநின்றவன்குணங்க ளுள்ளியுள்ளந்தூயராய்ச்
சென்றுசென் றுதேவதேவ ரும்பரும்பரும்பராய்
அன்றியெங்கள்செங்கண்மாலையாவர்காணவல்லரே. (எரு)

---

(பறிந்தெழுந்த தீவினைகள் பற்றறுதல்.)பகவத்ப்ராப்திப்ர திபந்தகங்களாய் ஸ்வாஶ்ரயத்திலே வேர்விழுந்தவை அவற்றை விட்டுப்பறிந்துபோய் மறுவலிடாதபடி வாஸனையோடேபோம் படி பண்ணுகை. (பான்மையே) அவன் ஓரேற்றம் செய்தானாக வன்றிக்கே ப்ரக்ருதியாயிருக்கை. இதுவும் (க) "ஸவ்வா வெஹ்யாஜோக்ஷயிஷ்யாமி-ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே கைங்கர்யத்துக்கும் உபலக்ஷணம். .... (எச)

எழுபத்தஞ்சாம்பாட்டு, (ஒன்றித்யாதி)

| | |
|---|---|
| ஒன்றிநின்று | மநஸ்ஸோடேபகவத்விஷயத்திலே சேர்ந்து நின்று |
| நல் | அநபி(ஸி)ஸம்ஹித பலதயாநன்றான |
| தவம் | காயஶோஷணே பலக்ஷிதகர்மயோகத்தை |
| ஊழியூழிதோறெலாம் | "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" என்கிறபடியே அநந்தகாலங்களிலெல்லாம் |
| நின்றுநின்று | க்ரமேண |
| அவன்குணங்கள் | பரமபாவநனான வெம்பெருமானுடைய குணங்களை |
| உள்ளி | அப்யஸித்து |
| உள்ளம்தூயராய் | பரிஶுத்தாந்தஃகரணராய், |

---

(ஸ்வாஶ்ரயத்திலே)வினைகளானவைதன்னிருப்பிடத்திலே. (போய்) அங்குமிருக்கமாட்டாமல் அவ்விடத்தையும் ஸவாஸநமாக விட்டுப்போய்.

---

(க) கீ-கஅ-கஅ.

| | |
|---|---|
| சென்று சென்று | "ப்ரவ்ருத்தி:" என்றும், "நிவ்ருத்தி:" என்றும், ஸ்ம்ருதித்யாந மென்கிற க்ரமத்திலே தர்ஶநஸமாநாகாரத்தளவும்போய், |
| உம்பரும்பரும் பராயன்றி | பரபக்தி பரஜ்ஞாநபரமபக்திகளாகிற மேலே மேலே போயல்லது |
| தேவதேவர் | நித்யஸூரி நிர்வாஹகனாய், |
| எங்கள் | ஶரணாகதரான வெங்களுடைய |
| செங்கண் | புண்டரீகாக்ஷனை |
| மாலை | வத்ஸலனை |
| யாவர்காண வல்லர். | ஆர்காணஸமாத்தர். (எரு) |

அவ.—எழுபத்தைந்தாம்பாட்டு. இப்படி அவனை ஆஶ்ரயித்து அவனுடைய கடாக்ஷத்தாலே ப்ரதிபந்தகநிரஸந பூர்வகமாக அவனைப் பெறுகையொழிய உபாயாந்தரங்களிலே யிழிந்து ஆஶ்ரயிப்பாருடைய அருமையை யருளிச்செய்கிறார் - மேலேழுபாட்டாலே; இதில் முதற்பாட்டில் - கர்மயோகமேதொடங்கி பரமபக்தி பர்யந்தமாக ஸாதிக்குமவர்களுடைய துஷ்கரதையை அருளிச்செய்கிறார்.

வ்யா;—(ஒன்றிநின்று) (க) "சஞ்சலம்ஹி மந: க்ருஷ்ண - சஞ்சலம்ஹிமந:க்ருஷ்ண" என்கிறபடியே விஷயாந்தரங்களிலே மண்டி அவற்றில் நின்றும் மீட்க அரிதான நெஞ்சை பகவத்விஷயத்தில் உத்தேஶ்ய புத்தியாலே மீட்டு, அம்மநஸ்ஸோடே பகவத்விஷயத்திலே ஒன்றிநின்று. (நல்தவம்செய்து)தபஸ்ஸென்று (உ)"யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந-பஞ்ஜேநதாநேநதபஸாऽநாசகேந"என்றும்,(ங)"யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோऽஸ்மி"

அரு;—எழுபத்தஞ்சாம்பாட்டு.(அநாஶகேந)அநஶநத்தாலே. (ஸூரிகளளவிலே) அவர்களுடைய ஜ்ஞாநத்தையுடையராக்குகை.

(க)கீ-உ- (உ)முண்ப

கார்யமேவதக - யஜ்ஞோதாநம்தபஃ கர்மநத்யாஜ்யம் கார்யமேவதத்'' என்றும் சொல்லுகிற கர்மங்களுக்கும்உபலக்ஷணம். "நற்றவம்'' என்றுஜீவபரயாதாத்ம்யஞ்ஜாந பூர்வகமாகவும் த்ரிவித பரித்யாக பூர்வகமாகவு மநுஷ்டிக்கும் கர்மயோகத்தைச்சொல்லுகிறது. (ஊழியூழிதோறெலாம்) புதுப்புடைவையைஅழுக்குக் கழற்றுமாபோலே அந்தக்கர்மத்தாலே விரோதிபாபம் போமிடத்தில் (க) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு - ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு'' இத்யாதிப்படியே காலதைர்க்யத்தைச் சொல்லுகிறது.

(நின்றுநின்றவன் குணங்களுள்ளி) க்ரமத்தாலே பரமபாவநனுயிருந்துள்ளவனுடைய குணங்களையநுஸந்தித்து, இத்தால் விவேகவிமோகாதி ஸாதநஸப்தகங்களி லப்ப்யாஸத்தைச்சொல்லுகிறது. க்ரமத்தாலே அநவரத பர்வனையும் சொல்லுகிறது. (உள்ளம்தூயராய்) உத்தமான கர்மயோகத்தாலும் பகவத்குணப்யாஸத்தாலும் (உ) "மநஸா துவிசுத்தேந - மநஸா துவிசுத்தேந'' (ங) "மநஸாக்ராஹ்யஃ - மநஸாக்ராஹ்யஃ'' என்றும் சொல்லுகிறபடியேபரிசுத்தாந்தஃகரணராய்,(சென்று சென்று) (ச) "த்ருவாநுஸ்ம்ருதிஃ - த்ருவாநுஸ்ம்ருதிஃ'' என்றும் (ரு) "நிதித்யாஸிதவ்யஃ - நிதித்யாஸித்வ்யஃ'' என்றும் சொல்லுகிறபடியே க்ரமத்தாலே அநவரதபாவனை யளவும்சென்று, (தேவதேவரும்பரும்பராயன்றி)ஸூரிகளளவிலேசெல்ல ஸோபாநக்ரமத்தாலே பரபக்திபரஜ்ஞாந பரமபக்திரூபத்தாலே உத்க்ருஷ்டராய்ப்பெறுவதொழிய (எங்கள்செங்கண்மாலை)ஶரணாகதவத்ஸலனை புண்டரீகாக்ஷனை, "எங்கள்'' என்று-மற்றுள்ள ஆழ்வார்களையுங் கூட்டிக்கொள்ளுகிறாரென்னுதல். தம்மையேபற்றிவர்த்திக்கும் ஶரணாகதஸமூஹத்தைக்கூட்டிக் கொள்ளுகிறாரென்னுதல். "செங்கண்மால்'' என்றது - (சு) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ-ஜிதந்தே புண்டரீகாக்ஷ'' என்கிறபடியே ருசியேதொடங்கி பரமபக்திபர்யந்த

---

(க) வி-பு (உ) (ங) தை-
(ச) (ரு) (சு) ஜிதந்தா

மூ.—புன்புலவழியடைத் தரக்கிலச்சினை செய்து
நன்புலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீஇ
என்பிலெள்கிநெஞ்சுருகி யுள்கனிந்தெழுந்தோர்
அன்பிலன்றியாழியானை யாவர்காணவல்லரே. (எசு)

மாக அத்தலையில் விசேஷ கடாக்ஷத்தாலே ஸித்தியென்று தோற்றுகைக்காக. (யாவர்காணவல்லரே) நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே எங்களுக்கு அவன்காட்ட நாங்கள் கண்டாப்போலே யாவர்காணவல்லார். "உம்பரும்பருமாய் - மேலேமேலே போயல்லது, தேவதேவர் – எங்கள் செங்கண்மால்" என்று கூட்டுவது. .... .... .... .... (எரு)

எழுபத்தாறாம்பாட்டு. (புன்புலவித்யாதி)

| | |
|---|---|
| புல் | புல்லியதான, க்ஷுத்ரங்களான வென்றபடி. |
| புலன் | ஸப்தாதிவிஷயங்களைப்பற்றி நிற்கிற |
| வழி | இந்திரியங்களாகிற மார்க்கத்தை |
| அடைத்து | அவ்விஷயங்களிலேபோகாதபடி நிரோதித்து |
| அரக்கு | அரங்காநின்றுள்ள, கண்ணுக்குத் தெரியாமல் போகிற வென்றபடி, |
| இலச்சினை | லாஞ்சநத்தை யுடைத்தானதாக, வாஸனையை யுடைத்தானதாகவென்றபடி. |
| செய்து | பண்ணி, வாஸனையும் அநுவர்த்தியாதபடி பண்ணி யென்றபடி |
| நல் | நன்றான |
| புல | எம்பெருமானாகிற விஷயத்தில் |
| வழி | இந்த்ரியமார்க்கத்தை |
| திறந்து | ப்ரகாசிப்பித்து, ப்ரவர்த்திப்பித்தென்றபடி; |

(உம்பரும்பர்) என்றது - மேலேமேலே பரபக்த்யாதிகளையுடையராய்என்றது. (எரு)

| | |
|---|---|
| ஞானம்நல் | நன்றான ஜ்ஞாநமாகிற |
| சுடர் | ப்ரபை(ஸ)யை |
| கோளீ | கொளுத்தி, மிகவுமுண்டாக்கியென்றபடி. ஈச்வரனுடைய ஸ்வரூபாதிகளை நன்றாகவறிந்தென்றபடி. |
| என்பில் | அஸ்த்திமயமான ஶரீரத்திலே |
| எள்கி | இரங்கி, ஶிதிலமாயென்றபடி; |
| நெஞ்சு | ஹ்ருதயமானது |
| உருகி | த்ரவீபூதமாய் |
| உள் | உள்ளே |
| கனிந்து | பக்வமாய் |
| எழுந்து | பரமபக்திரூபமாக ஆவிர்ப்பூதமான |
| ஓர் | முக்க்யமான |
| அன்பிலன்றி | ப்ரேமத்தாலல்லது |
| ஆழியானை | "எங்கள் செங்கண்மால்" என்று கீழ்ச்சொன்னபடியே, எங்களுக்கு விரோதி நிரஸநஹேதுவான திருவாழியைத்திருக்கையிலே தரித்தவனை |
| யாவர்காண | யார்காண்கைக்கு |
| வல்லர் | ஸமர்த்தர். (௭௬) |

அவ.—எழுபத்தாறும்பாட்டு. த்ரவ்யார்ஜநாதிக்லேஶமென்ன, பரஹிம்ஸாதி துரிதமென்ன, இவற்றையுடைத்தாய், இந்த்ரிய வ்யாபாரரூபமான கர்மயோகத்தில் காட்டில் இந்த்ரியோபரதி ரூபமான ஜ்ஞாநயோகத்திலே ப்ரதமத்திலே இழியுமவர்களுடைய துஷ்கரதையை அருளிச்செய்கிறார்.

வ்யா. (புன்புலவழியடைத்து) க்ஷுத்ரவிஷயங்களைப் பற்றிப் போருகிற இந்த்ரிய மார்க்கத்தை நிரோதித்து. விஷயங்களுக்குப் புல்லிமையாவது - அல்பமாய் அஸ்த்திரமாய் அபோக்யமாயிருக்கையும், வகுத்தவிஷயத்திலே வைமுக்யத்தைப் பண

ணுவிக்கையும். தத்விஷயமான இந்த்ரியபத(ம)த்தைநிரோதிக்கை யாவது-விஷயங்களிலே சாபலத்தைப்பண்ணி, சேதநனையும்தன் வழியிலே ஆகர்ஷிக்கும் இந்த்ரியங்களை ப்ரத்யாஹாரத்தாலே மீட்கை. (அரக்கிலச்சினைசெய்து) ஶப்தாதிவிஷயங்களினுடைய க்ஷுத்ரதையைஅநுஸந்தித்து வாஸனையுமநுவர்த்தியாதபடி பண்ணி. (க) "ப³லவாநிந்த்³ரியக்³ராமோ வித்³வாம்ஸமபி கர்ஷதி-பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபிகர்ஷதி" என்று ஜ்ஞாநாதிகர்களையும் வாஸனை நலியுமிறே; அதுவும்பிறவாதபடி பண்ணி,

(நன்புலவழிதிறந்து). விலக்ஷணவிஷயத்தில் இந்த்ரியமார்க்கத்தை ப்ரகாசிப்பித்து. இவ்வாத்மாவுக்கு ப்ராப்தமாய் (உ) "ஸாஸ்வாங்கல்டு - என்கிறபடியே ஸாதநவேளையேதொடங்கி கிஸிக்கும் பகவத்விஷயமே இந்திரிங்யகளுக்கு விஷயமாக்கியென்கை. (ஞானநற்சுடர்கொளீ இ) நன்றானஜ்ஞாநப்ரபையை மிகவுமுண்டாக்கி. ஈஶ்வரனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஸ்வஜ்ஞாநத்துக்கு விஷயமாம்படிபண்ணி

(என்பிலெள்கி) எலும்பிலே தட்ட ச்ரீரம் சிதிலமாய். எள்கல் - இறங்கல். (நெஞ்சுருகி) மநஸ்தத்வம்த்ரவீபூதமாய். கீழ்ச்சொன்னஜ்ஞாநம்பரபக்த்யவஸ்த்தமாம்படிவாஸனைபண்ணி (உள்கனிந்தெழுந்தோரன்பிலன்றி) உள்ளேபக்வமாய், பரமபக்திரூபேண ஆவிர்ப்பூதமான ப்ரேமத்தாலே யல்லது பெறவிரகில்லை. (ஆழியானையாவர் காணவல்லரே) "எங்கள் செங்கண்மால்" என்று-கீழ்ச்சொன்னஸ்தாநத்திலே "ஆழியானை" என்கிறார். (உ) "கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்கிறபடியே விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவான பாபத்தையும் பகவத்வைமுக்ய ஹேதுவாயிருந்துள்ள பாபத்தையும் கையில் திருவாழியாலே இருதுண்டமாகவெட்டி, கையும் திருவாழியும் சேர்ந்த சேர்த்தி

அரு;—எழுபத்தாறும்பாட்டு. (பகவத்ஞாநம்). "பகவான்—ஶரீரி, ஜகத்து - ஶரீரம்" என்கிறஜ்ஞாநம். (எசு)

(க) (உ) திருவ.

மூ.—எட்டுமெட்டுமெட்டுமா யொரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள்வல்லர்வானமாளவே. (எஎ)

---

யைக்காட்டி ஸ்வவிஷயமான பக்தியை வர்த்திப்பித்தவனை நான் கண்டாப்போலே யாவர்காணவல்லார். இந்த்ரியங்களுக்கு விஷயாந்தர ப்ராவண்யத்தைத்தவிர்த்து, பகவத்விஷயமேவிஷயமாக்கிதத்விஷயஜ்ஞாநம் பக்திரூபாபந்நஜ்ஞாநமாய், அதுபரபக்த்யாதிகளாய்ப் பழுத்தாலல்லது ஸர்வேஶ்வரனை லபிக்கவிரகில்லையாய்த்து. ... ... ... ... (எசு)

எழுபத்தேழாம்பாட்டு, (எட்டுமித்யாதி)

எட்டுமெட்டு மெட்டுமாய் } மூவெட்டு இருபத்துநாலாய், சதுர்விம்ஶதிதத்வஶரீரகனுயென்றபடி.

(ஒரேழுமேழுமேழுமாய்)

ஓர் — முக்க்யமான

ஏழும் — ஸப்தத்வீபங்களுமாய்,

ஏழும் — ஸப்தகுலபர்வதங்களுமாய்,

ஏழும் — ஸப்தஸமுத்ரங்களுமாய், இவற்றுக்கு ஶரீரியாயென்றபடி.

எட்டுமூன்று மொன்றுமாகி } இத்தைக்கூட்டிப் பன்னிரண்டாக்கி, த்வாதஶாதித்யர்களுக்கு அந்தராத்மாவாயென்றபடி.

நின்ற — இப்படியிருக்கிற

ஆதி — காரணபூதனான

தேவனை — ஆஶ்ரயணீயனான வெம்பெருமானை

எட்டினாய பேதமோடு } அஷ்டாங்கப்ரணாமமாகிற ப்ரணாமவிஶேஷத்தோடே

இறைஞ்சிநின்று — ஆஶ்ரயித்து நின்று,

அவன் — அந்தர்யாமியாய் காரணபூதனாய் ஆஶ்ரயணீயனான வெம்பெருமானுடைய

பெயர் — நாமங்களிலே வைத்துக்கொண்டு
எட்டெழுத்தும் — கீழ்ச்சொன்னவந்தர்யாமித்வாதிகளுக்கு வாசகமான திருவஷ்டாக்ஷரத்தை.
ஓதுவார்கள் — வாயாலே உச்சரிக்குமவர்கள்.
வானம் — பரமபதமாகிறவாகாசத்தை
ஆள் — ஆளுகைக்கு
வல்லரே — ஸமர்த்தரே. "எட்டினையபேதம்" என்கிறவிடத்தில், "ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸகோ வைகுண்ட²பு⁴வநலோகம் க³மிஷ்யதி" என்கிறதைக் கண்டுகொள்வது. (எஎ)

அவ.—எழுபத்தேழாம்பாட்டு. கர்மஜ்ஞானங்களை ஸஹகாரமாகக்கொண்டு ப்ரவ்ருத்தமான பக்தியாலே பகவல்லாபத்தைச்சொல்லிற்று - கீழ்; ஸர்வாந்தர்யாமியாய் ஜகத்காரணபூதனான ஸர்வேஶ்வரனை அஷ்டாங்க ப்ராணாயாமமுன்னாகத் திருமந்த்ரத்தைக்கொண்டு பஜிக்குமவர்களிட்டவழக்கு பரமபதமென்கிறார். இப்பாட்டுமுதலாக இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே பகவத்பஜநத்தை அருளிச்செய்கிறார்.

வ்யா.—(எட்டுமெட்டுமெட்டுமாய்) சதுர்விம்ஶதி தத்வங்களுக்கு ஆத்மாவாய் நின்று ஸத்தையை நோக்குமவன். இந்த ஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவத்தாலே சொல்லுகிறது. இத்தால்—அண்டகாரணமான ப்ராக்ருதஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. (ஒரேழுமேழுமேழுமாய்.) ஸப்தத்வீபங்களும், அவற்றுக்கு தாரகமான ஸப்தகுலபர்வதங்களும், அந்தத்வீபங்களுக்கு அவச்சேதங்களான ஸப்தஸமுத்ரங்களுமாய். அண்டாந்தர்வர்த்திகளான ஸகல லோகங்களுக்கு முபலக்ஷணம். ஸ்தலசரராயும் ஜலசரராயும் பார்வதேயருமான சேதநரை நினைக்கிறது.

(எட்டுமூன்று மொன்றுமாகிநின்ற.) த்வாதஶாதித்யர்களுக்கும் அந்தராத்மாவாய் நின்ற. இது - ஆராத்ய தேவதைகளுக்கு முபலக்ஷணம். (க) "ஸூக்ஷ்மஸ்தூலமாஹ்ருதிஸ்ஸம்யக் - அக்ஷௌப்ராஸ்தாஹ்ருதிஸ்ஸம்யக்." (ஆதிதேவனை) ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துஶரீரனையும் ஸ்தூலசிதசித்வஸ்து ஶரீரனையும் கார்ய காரண மிரண்டுமாய்க்கொண்டு ஸர்வஸமாஶ்ரயணீயனானவனை.

(எட்டினாயபேதமோடிறைஞ்சிநின்று.) அஷ்டாங்க ப்ரணாமத்தைப்பண்ணி, அம்முகத்தாலே ஆஶ்ரயித்து நின்று. ப்ரணாமத்துக்கு அஷ்டாங்கதையாவது - பக்நாபிமாநனாய் விழுகையும், மநோபுத்திகளுக்கு ஈஶ்வரனே விஷயமாகையும், பதத்வயகரத்வயங்களும் ஶிரஸ்ஸும் கூர்மவத்பூமியிலே பொருந்துகையும். (க) "மநோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே। கூர்மவச்சதுர: பாதாந் ஶிரஸ்தத்ரைவ பஞ்சமம் - மநோபுத்த்யபிமாநேநஸஹந்யஸ்யதராதலே। கூர்மவச்சதுரம்பாதாந் சிரஸ்தத்ரைவபஞ்சமம்" என்னக்கடவதிறே. (அவன்பெயரெட்டெழுத்துமோதுவார்கள்) கீழ்ச்சொன்ன ஜகதந்தராத்மபாவத்துக்கு வாசகமான மந்த்ரங்களிற்காட்டில் திருவஷ்டாக்ஷரத்தை வாயாலே உச்சரிக்குமவர்கள். (வல்லர்வானமாளவே) அர்த்தத்தை மநஸ்ஸாலே அநுஸந்தித்தும் வாயாலே சப்தத்தைஉச்சரித்தும், ஶாரீரமான ப்ரணாமத்தைப் பண்ணியும், இப்படிமநோவாக்காயங்களினாலே பஜிக்குமவர்கள் இட்டவழக்கு பரமபதமென்ன. (உ) "ஆபோ நாரா இதி ப்ரோக்தா: - ஆபோநாரா இதிப்ரோக்தா:" என்றும், (ங) "நாராஜ்ஜாதாநி தத்வாநி - நராஜ்ஜாதாநி தத்வாநி" என்றும் - ஜகத்காரணவஸ்துவை நாராயணனென்னக்கடவதிறே. ... ... ... (எஎ)

---

(க) (உ) (ங) (ச)

மூ.—சோர்விலாதகாதலால் தொடக்கறுமனத்தராய்
நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல்
ஆர்வமோடிறைஞ்சிநின் றவன்பெயரெட்டெழுத்தும்
வாரமாகவோதுவார்கள் வல்லர்வானமாளவே. (எஅ)

---

எழுபத்தெட்டாம்பாட்டு. (சோர்விலாத வித்யாதி).

| | |
|---|---|
| நீர் | க்ஷீராப்தியாகிற ஜலத்திலே |
| அராவு | திருவநந்தாழ்வானாகிற |
| அணை | படுக்கையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| நின்மலன் | ஹேயப்ரத்யநீகனான வெம்பெருமானுடைய |
| நலங்கழல் | ஸ்வரூபமான திருவடிகளை |
| ஆர்வமோடு | ப்ரேமத்தோடேகூட |
| இறைஞ்சிநின்று | ஆஸ்ரயித்திருந்து |
| சோர்வு | அந்யவிஷயகத்வமாகிற ஹாநி |
| இலாத | இல்லாத |
| காதலால் | ப்ரேமவிஸேஷத்தாலே |
| தொடக்கு | ஸம்ருதிஸந்ததிரூபமான ஸம்பந்தமானது |
| அறு | விச்சேதியாமலிருக்கிற |
| மனத்தராய் | நெஞ்சையுடையவராய் |
| அவன் | அந்தக்ஷீராப்திநாதனுடைய |
| பெயர் | திருநாமமான |
| எட்டெழுத்து | திருவஷ்டாக்ஷரத்தை |
| வாரமாக | ஆஸ்ரயமாக |
| ஓதுவார்கள் | ததேகநிஷ்டராய்க்கொண்டு சொல்லுமவர்கள் |
| வானமாள | பரமபதத்தை யாளுகைக்கு |
| வல்லரே | ஸமர்த்தர்களே. (எஅ) |

அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு. உபாஸநத்துக்கு ஸ்வாபாஸ்ரயம் வேண்டாவோ வென்ன; கார்யரூபமான ஜகத்திலே ஆஸ்ரிதார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளுகிற க்ஷீராப்திநாதனை ஸ்வாபாஸ்ரயமாகப்பற்றி மந்த்ர ரஹஸ்யத்தாலே முறையறிந்து ஆஸ்ரயித்து இடைவிடாத ப்ரேமத்தை யுடையராயிருக்குமவர்கள் பரமபதத்தை யாளுகை நிஸ்சிதமென்கிறார்.

வ்யா.—(சோர்விலாதகாதலால்) ஸர்வகாலமும் விஷயாந்தரங்களால் அப்ஹ்ருதமாகாதப்ரேமத்தை யுடையராகையாலே. அதாவது - ப்ரேமாதிஸயத்தாலே தத்ஸம்ஸ்லேஷவிஸ்லேஷைக ஸுகதுஃக்கராகை, (தொடக்கறாமனத்தராய்) பகவத்ஸ்ம்ருதி ஸந்ததிரூபேண செல்லாநின்றால் விச்சேதமில்லாத நெஞ்சையுடையராய். (ச) "ஸத்வஸுத்தௌ த்ருவாஸ்ம்ருதிஃ-ஸத்வஸுத்தௌ த்ருவாஸம்ருதிஃ" (ரு) "ஆஹாரஸுத்தௌ ஸத்வஸுத்திஃ ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷஃ" என்கிறவளவைச் சொல்லுகிறது.

(நீரராவணைக்கிடந்தநின்மலன்நலங்கழல்) இப்படிப்ரேமத்தை விளைக்கும் விலக்ஷணவிஷயமான ஸ்வாபாஸ்ரயத்தைச்சொல்லுகிறது (நீரராவணைக்கிடந்த) க்ஷீராப்தியிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற. இத்தால் - நீருறுத்தாமைக்கு அதின் மேலே திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையனாகையாலே ஸௌகுமார்யமும், ஆஸ்ரித ஸம்ஸ்லேஷைக ஸ்வபாவத்வமும், அர்த்தித்வநிரபேக்ஷமாக ஆஸ்ரிதாநுக்ரஹத்தாலே கண்வளர்ந்தருளுகையாலே ஸௌலப்யாதிகளையும் சொல்லுகிறது. (நின்மலன் நலங்கழல்) பஜநவிரோதிபாபங்களைப்போக்கும்ஹேயப்ரத்யநீகனுடைய ருசிஜநகமான திருவடிகளை.

(ஆர்வமோடிறைஞ்சிநின்று) ப்ரேமயுக்தனாய்க்கொண்டு ஆஸ்ரயித்துநின்று. இத்தால். (க) "நாஸ்த்யக்ருதஃ க்ருதேந - நாஸ்த்யக்ருதக்ருதேந" என்கிறபடியே "ஸம்ஸாரம் அநித்யம், ஈஸ்வரன் நித்யன்" என்று ஆஸ்ரயிக்குமளவன்றியே, நிரதிசயபோக்யனெனகிறப்ரேமத்தாலே ஆஸ்ரயிக்கை. (அவன்பெயர் ரெட்டெ

(க) (உ) (ரு)

மூ.—பத்திநோடுபத்துமா யோரேழிநோடொரொன்பதாய்
பத்திநான்றிசைக்கணின்றநாடுபெற்றநன்மையாய்ப்
பதிநயதோற்றமோ டொராற்றன்மிக்கவாதிபால்
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே. (எகூ)

---

(மூத்தும்) க்ஷீராப்திநாதன் திருநாமமான திருவஷ்டாக்ஷரத்தை யும். (உ) "𑌏𑌷 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 - ஏஷநாராயணஸ் ஸ்ரீமாந்" என்றும், "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்றும், (ங) "𑌭𑌵𑌾𑌨𑍍 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋 𑌦𑍇𑌵𑌃-பவாந்நாராயணோதேவ:" என்றும் - தர்மிபுக்கவிடமெங்கும் இத்திருநாமம் ப்ரதமாபிதா(ஹியா) நமாயிருக்குமென்கை,

(வாரமாக ஓதுவார்கள் வல்லர் வானமாளவே). (ச) "𑌨𑌮𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌕𑌶𑌰𑌣𑌾 𑌵𑌯𑌮𑍍 - நமோநாராயணாயேதிமந்த்ரைக ஶரணாவயம்" என்கிறபடியே தந்நிஷ்டராய்க் கொண்டு சொல்லுமவர்கள். பரமதத்துக்கு நிர்வாஹகராக வல்லாரென்கிறார்.

"நீரரவணைக்கிடந்த நின்மலன் நலங்கழல் ஆர்வமோடிறைஞ்சிநின்று - சோர்விலாத காதலால் துடக்கறுமனத்தராய் - அவன் பெயரெட்டெழுத்தும் வாரமாக ஓதுவார்கள் வல்லர்வானமாளவே" என்றந்வயம். ... ... (எஅ)

எழுபத்தொன்பதாம்பாட்டு. (பத்திநோடித்யாதி).

| | |
|---|---|
| பத்திநோடு | தஸதிக்குக்களோடேகூட |
| பத்துமாய் | அந்ததிக்குக்களுக்கு அத்யக்ஷரான |

---

அரு;—எழுபத்தெட்டாம்பாட்டு. நாராயணனென்கிற திருநாமம் பரத்வத்திலேயன் றே க்ஷீராபதிநாதனுக்கு வாசகமாமோவென்ன வருளுகிறார் (ஏஷநாராயண இத்யாதி). (எஅ)

---

(க) (உ)

இந்த்ராதிகள் பதின் மருக்கும் அந்தர்யாமியாய், (இந்த்ராதிஸாநாந்தம் எட்டுப்பேரும், ஸத்யலோகாதிபதியான ப்ரஹ்மாவும், அதோலோகாதிபதியான அநந்தனும், ஆகிய பதின்மர்)

ஒரேழிஞேடு முக்கயமான ஸப்தஸ்வரங்களோடே கூட

ஒரொன்பதாய் அத்விதீயமான ஸ்ருங்காராதிநவநாட்யரஸங்களுக்கு நிர்வாஹகனாய்,

பத்துநால் பத்தும் நாலுமென்றபடி.

திசை ப்ரகாரம், "ஏஷாதிக்" என்கிறபடியே திக்ஸப்தம் ப்ரகாரவாசி.

கண் இடம்.

பத்து நால் திசைக்கண் நின்ற } பதினாலுவகைப்பட்ட

நாடு லோகங்களாலே

பெற்ற லபிக்கப்பட்ட

நன்மையாய் ப்ரயோஜநமாகைக்காக "ஸர்வரஸ:" என்கிறதானே சேதநர்க்கு போக்யமாகைக்காகவென்றபடி.

பத்தினைய தஸவிதமான

தோற்றமோடு ப்ராதுர்ப்பாவத்தோடுவந்து

ஓர் அத்விதீயமான

ஆற்றல் க்ஷமையாலே
மிக்க பூர்ண னை
ஆதிபால் ஆஶ்ரயணீயனைக்காக முற்பாடனை யிருக்கிற வெம்பெருமான் விஷயத்தில்
பத்தராமவர்க்கலாது } ஸக்தராயிருக்குமவர்களுக்கல்லது
முத்தி மோக்ஷபலம்
முற்றல் பக்வமாகைக்கு
ஆகுமே விரகுண்டோ "ஏ" என்கிறது காகுவாய், ஓவென்றபடி. (எகூ)

அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு, ஶ்வேதத்வீபவாஸிகளை யொழிந்த ஸம்ஸாரிகளுக்கு அதுகிலமோவென்ன; அவதாரகந்தமான க்ஷீராப்தியில்நின்றும் தன்மேன்மைபாராதே தஶரதாத்மஜனாய் ஸாவத்தைப் பண்ணி ஸுலபனைவன் திருவடிகளிலே அவதாரரஹஸ்யஜ்ஞாந மடியான பக்தியையுடைவர்களுக்கல்லது முக்தராகவிரகுண்டோ வென்கிறுர்.

வ்யா.—(பத்திஞேடுபத்துமாய்) தஶதிக்குக்களுக்கும், அத்திக்குக்களிலே வ்யவஸ்திதரான தஶாத்யக்ஷருக்கும் நிர்வாஹகனாய். அவர்களாகிறுர் - இந்த்ராதி திக்பாலகர்களெண்மரும், ஊர்த்த்வலோகங்களுக்கு மேலெல்லையான ஸத்யலோகத்துக்கு நிர்வாஹகனான ப்ரஹ்மாவும், அதோலோகத்துக்குக் கீழெல்லையிலே தாரகனான அநந்தனும். (ஓரேழிஞேடொரொன்பதாய்) அத்விதீயமான ஸப்தஸ்வரமும், நாட்யரஸமொன்பதும். அவையாகிறன - இசைகளேழும், (க) "நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா: । பஞ்சமஶ்சேத்யமீஸப்த" என்கிறபடியே

---

(க)

(௨) "𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰𑌹𑌾𑌸𑍍𑌯𑌕𑌰𑍁𑌣𑌵𑍀𑌰𑌰𑍌𑌦𑍍𑌰𑌭𑌯𑌾𑌨𑌕𑌾𑌃 । 𑌬𑍀𑌭𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌨𑌵 𑌨𑌾𑌟𑍍𑌯𑌰𑌸𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃-ஶ்ருங்கார ஹாஸ்ய கருணவீர ரௌத்ரபயாநகா: | பீபத்ஸாத்புதஶாந்தாஶ்ச நவ நாட்யரஸாஸ்ஸ்ம்ருதா:" என்கிறபடியே நாட்யரஸங்களும் இவை சப்தாதிவிஷயங்களுக்கு முபலக்ஷணம். இத்தால்-கீழ்ச் சொன்ன தசாத்யக்ஷரோடு அவர்களுக்கு நிர்வாஹகரான சேதநரோடு வாசியற எல்லார்க்கும் போக்யமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனென்கை.

(பத்திஞன் திசைக்கண்நின்ற நாடுபெற்ற நன்மையாய்). பதிஞலுவகைப்பட்டிருந்துள்ள லோகங்களுக்கு ப்ரயோஜநமான சப்தாதிவிஷயங்களெல்லாம் அவர்களுக்குத் தானேயாகைக்காக, (௩) "𑌸𑌰𑍍𑌵𑌰𑌸𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌦𑌿𑌕𑍍-ஸர்வரஸ:-ஏஷாதிக்" என்கிறபடியே, "திசை" என்று-ப்ரகாரவாசி. "பத்திஞன் திசைக்கணின்றநாடு" என்று-"பத்திஞேடுபத்துமாய்" என்கிறவிடத்தை அநுபாஷிக்கிருர். "பெற்றநன்மை" என்று-"ஏழிஞேடொரொன்பதாய்" என்றவிடத்தை அநுபாஷிக்கிருர், "ஆய்" என்று-ஆகைக்காகவென்றபடி. "உயிர்முதலாமுற்றுமாய்" என்னக்கடவதிறே. (௪) "𑌸𑌰𑍍𑌵𑌰𑌸𑌃 - ஸர்வரஸ:" என்கிற தானே சேதநர்க்கு போக்யனுகைக்காக வென்கை.

(பத்திஞயதோற்றமோ டொராற்றல்மிக்க வாதிபால்). தசப்ராதுர்ப்பாவத்தாலே ஆவிர்ப்பவித்து, ஸம்ஸாரிகள் பண்ணும் பரிபவத்தைப் பொறுத்து ரக்ஷிக்கும் பூர்வஜன்பக்கலிலே. தோற்றமாவது - அதீந்த்ரியஞனதனை சக்ஷுர்விஷயமாக்கு

அரு;—எழுபத்தொன்பதாம்பாட்டு. (ப்ரகாரவாசி) என்றது - பத்துதிக்கோடேகூடி யிருக்கையாலே பத்துவகைப்பட்ட லோகமென்றபடி. பதிஞலுலோகமும் பத்துதிக்கிலே அந்தர்ப்பூத மாகயாலே அநுபாஷிக்கிறது. (முற்றலாகும்) முற்றல்பலமாய், ஆகுமென்கிறஸ்வரத்தாலே பலியாதென்றபடி. (௭௯.

மூ.—வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு
வீசுமேல்நிமிர்ந்ததோளினில்லையாக்கினுய்கழற்கு
ஆசையாமவர்க்கலா லமரராகலாகுமே. (அ௦)

---

கை. (ஆற்றல்) பொறை. பூர்வஜனகைபாவது - ஸம்ஸாரிக ளுக்கு ருசிபிறந்தவன்று ஆஸ்ரயணீயரான நாம் தூரஸ்த்தராக வொண்ணாதென்று ஏற்கவே அவதரித்து நிற்கை.

(பக்தராமவர்க்கலாது) (க) "ஜந்மகர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத:-ஜந்மகர்மசமேதிவ்யமேவம் யோவேத்தித் வத:" என்கிறபடியே அவன்பண்ணின உபகாரத்தை உள்ளபடி அறிந்து அதிலே ஸக்தராயிருக்கு மவர்களுக்கல்லது. (முத்திமுற்றலாகுமே) மோக்ஷபலம் பக்வமாகைக்கு விரகில்லை. (க) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி - த்யக்த்வா தேஹம் புநர்ஜந்மநைதிமாமேதி" என்கிறபடியே விரோதிநிவ்ருத்தி பூர்வகமான பகவல்லாபமுண்டாகவிரகில்லையென்றார் (எகூ)

எண்பதாம்பாட்டு. (வாசியித்யாதி)

| | |
|---|---|
| வாசியாகி | வாஜிரூபேணவந்தென்றபடி; |
| நேசமின்றி வந்து | ஸ்நேஹலேசமில்லாதவனாய் வந்து |
| எதிர்ந்த | எதிரிட்ட |
| தேனுகன் | தேநுகாஸுரனை |
| நாசமாகி | நாசமாக்குகைக்காக |
| நாளுலப்ப | ஆயுஸ்ஸை முடிக்கைக்காக |
| நன்மைசேர் | அழகோடேகூடின |
| பனங்கனிக்கு | தாளபலத்தின் மேலே |
| வீசி | எறிந்து |
| மேல்நிமிர்ந்த | ஶத்ருவினுடைய தேமேலே அபிவ்ருத்தமான |

---

(க) கீதை-ச-கூ.

| | |
|---|---|
| தோளில் | தோளாலே |
| இல்லையாக்கினாய் | அந்த தேநுகனை அஸத்கல்பனாக்கினவுன்னுடைய |
| கழற்கு | திருவடிகளிலே |
| ஆசையாமவர்க்கலால் | ப்ரேமத்தையுடையவர்க்கல்லது |
| அமரராகல் | நித்யஸூரிகளோடே அத்யந்தஸத்ருஶர்களாகை |
| ஆகுமே | ஆகுமோ? (அ௦) |

அவ.—எண்பதாம்பாட்டு. அவதார ரஹஸ்யஜ்ஞாந மடியான ப்ரேமம் மோக்ஷஸாதநமென்றது - கீழ்; இதில் - அவதார விஶேஷமான க்ருஷ்ணனுடைய ஆஶ்ரிதவிரோதி நிரஸநஶீலத்தை அநுஸந்தித்து, அவன் திருவடிகளிலே ஆசையுடையார்க்கல்லது நித்யஸூரிகளோடு ஒரு கோவையாய் அநுபவிக்கைக்கு விரகில்லையென்கிறார்.

வ்யா.—(வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்) காலயவநாதிகளைப்போலே ஸ்வரூபேண வந்து தோற்றாமே வாஜிவேஷத்திலேவந்துதோற்றினானாய்த்து-க்ருஷ்ணன் அவதா(யா)நம்பண்ணாதேமேல் விழுகைக்காக.நேசமின்றி வருகையாவது-(க)"மருண்டு மான்கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும்கடைவாய்வழி சோர" என்று-க்ருஷ்ண சேஷ்டிதங்களாலே திர்யக்குக்களும் ப்ரேமபாவஶமாய்ச் செல்லாநிற்க, துஷ்ப்ரக்ருதியாகையாலே அத்துறையில் விழியாதொழிகை. எதிர்ந்துவருகையாவது - ஆதரமில்லையாகிலு முபேக்ஷகனாகலாமிறே; அதுவுமின்றிக்கே பாத(வாய)கனாய் வருகை.

(நாசமாகி நாளுலப்ப) இப்படிப்பட்ட தேநுகனை ம்ருதப்ராயனாக்கி ஆயுஸ்ஸை முடிக்கைக்காக. (நாசம்) துன்பம். (நன்மைசேர் பனங்கனிக்குவீசி) தர்ஶநீயமாய்ப் பழுத்து நின்ற

---

(க) பெரி-திரு-௩-௬-௧.

மூ:—கடைந்தபாற்கடற்கிடந்து காலநேமியைக்கடிந்
துடைந்தவாலிதந்தனுக் குதவவந்திராமனாய்
மிடைந்தவேழ்மரங்களு மடங்கவெய்துவேங்கடம்
அடைந்தமாலபாதமே யடைந்துநாளுமுய்மினோ. (அக)

---

பனம்பழ முதிரும்படி, பனைத்தலையிலே சுழற்றி யெறிந்து. (க) “க்ருஹீத்வா ‡ ப்ராமணேநைவ ஸோம்பரே கதஜீவிதம் । தஸ்மிந்நேவ ஸ சிக்ஷேப வேகேந த்ருணராஜநி ॥ தத: பலாந்யநேகாநி தாலாக்ராந் நிபதந்கர: । ப்ருதிவ்யாம் பாதயாமாஸ மஹாவாதோ கநாநிவ- க்ருஹீத்வாப்ராமணேநைவஸோம்பரே கதஜீவிதம் । தஸ்மிந்நேவஸசிக்ஷேபவேகேந த்ருணராஜநி। தத:பலாந்யநேகாநிதாலாக்ராந்நிபதந்கர: । ப்ருதிவ்யாம்பாதயாமாஸமஹாவாதோகநாநிவ” என்னக்கடவதிறே. (மேல்நிமிர்ந்ததோளினில்லை யாக்கினாய்கழற்கு) எதிரியளவன்றிக்கேவிஞ்சினதோள்வலியாலே அவனையழியச்செய்தஉன்திருவடிகளுக்கு, ஸங்கல்பத்தாலே யழித்தல், ஆயுதத்தாலேயழித்தலன்றிக்கே, தன்கைதொட்டுத்‡தோள் வலியாலே அழியச்செய்தபடி. (ஆசையாமவர்க்கலாலமரராக லாகுமே) உன்னுடைய விரோதிநிரஸந ஶீலதையை அநுஸந்தித்து உன்பக்கலிலே ப்ரேமமுடையார்க் கல்லது நித்யஸூரிகளோடு ஸத்ருஶராய் தேவரீரை அநுபவிக்கப்போமோ வென்கிறார். .... .... ... .... (அ௦)

எண்பத்தோராம்பாட்டு. (கடைந்தவித்யாதி)

| | |
|---|---|
| கடைந்த | அம்ருதார்த்தம் மதி(யி)க்கப்பட்ட |
| பாற்கடல் | க்ஷீராப்தியிலே |
| கிடந்து | கண்வளர்ந்தருளி |
| காலநேமியை | காலநேமியென்கிறவஸுரனை |
| கடிந்து | வென்று |
| உடைந்தவாலி | தேவதாந்தரஸ்பர்ஶத்தாலே ஸ்வரூப மழிந்திருக்கிற வாலியினுடைய |

---

(க) வி-பு-ரு-அ-௨௦. ‡ தான். † (பா) ஹராட்யா. ஸ.

| | |
|---|---|
| தந்தனுக்கு | தம்பிதனக்கு, மஹாராஜர்க்கென்ற படி. |
| (அன்றிக்கே) | |
| உடைந்த | வாலிபயத்தாலே ஶிதிலனான |
| வாலிதன்தனக்கு | மஹாராஜர்க்கு என்னவுமாம். (தம்பியெனகிறதிலே மவ்வுக்கு "ன" என்று ஆதேஶமாய், தம்பியென்கிற தில் கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்று ஒரு தமிழன்). |
| உதவ | உபகரிக்கைக்கு |
| இராமனாய்வந்து | சக்ரவர்த்தித் திருமகனாயவதரித்து |
| மிடைந்த | நிபிடமான |
| ஏழ்மரங்களும் | ஸப்தஸாலவ்ருக்ஷங்களும், ஸப்தகி(ரி)ரிகளும், (உம்- அநுக்த ஸமுச்சயபரம்) |
| மடங்க | மடங்கும்படியாக |
| எய்து | பாணத்தாலே துளைத்து |
| வேங்கடம் | திருமலையை |
| அடைந்த | ப்ராப்தனான |
| மாலை | ஆஶ்ரிதவ்யாமுக்த(னா)னவெம்பெருமானை |
| பாதமே | திருவடிகளிலே |
| அடைந்து | ஆஶ்ரயித்து |
| நாளும் | நித்யமாக |
| உய்ம்மினோ | உஜ்ஜீவியுங்கோள். ("நாளும்" என்கிறது - மத்யமணிந்யாயத்தாலே "நாளுமடைந்து நாளுமுய்மினோ" என்றந்வயிக்கக்கடவது). (அக) |

அவ.—எண்பத்தோராம்பாட்டு. வ்யூஹ விபவங்கள் தேச கால விப்ரகர்ஷத்தாலே நிலமன்றென்னவேண்டாதபடி பிற்பாடரிழவாமைக்குத்திருமலையிலேவந்து நின்றருளினான், அவன் திருவடிகளையாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்று உபதேஶத்தைத் தலைக்கட்டுகிறார்.

வ்யா.—(கடைந்தபாற்கடல்கிடந்து) தூர்வாஸஶ்ஶாபத்தாலே இந்த்ராதிகளுக்குவந்த ஆபத்தை, கடலைக்கடைந்து பரிஹரித்து, இன்னம் ஆபத்துக்களிலே ப்ரஹ்மாதிகள் வந்த பேக்ஷிக்கலாம்படி அதிலே கண்வளர்ந்தருளி. (காலநேமியைக்கடிந்து) அத்தேவதைகளை புஜபலத்தாலே நலிந்தகாலநேமியாகிற அஸுரனைவென்று. கடத்தல் - வெற்றி. (உடைந்தவாலி தந்தனுக்கு தவவந் திராமனாய்) வாலியாலேயுடைந்த தம்பி தனக்கு. ப்ரஹ்மாதிகாளவல்லாததிர்யக்குக்களுடைய ரக்ஷணத்துக்காக சக்ரவர்த்தித்திருமகனாய் வந்தவதரித்து. தேவதாந்தர ஸ்பர்ஶத்தாலே ஸ்வரூபமழிந்தவாலிக்கு, (க) "ஶரேணாபிஹதோ ராமபாணேநாக்ஷிப்தமாஹத்பரமாங்கதிம்" என்கிறபடியே ஸ்வஹஸ்தவதத்தாலே மோக்ஷப்ரதனைக்காக தஶரதாத்மஜனாய்வந்து. உடைதல்—அழிதல். அதவா, தனக்கு துஷ்ப்ராபமான ருஶ்யமூகத்திலேபகையானமஹாராஜரிருக்கையாலே, "பகைமீளப்பெறுத நாம் என்னராஜ்யம் பண்ணுகிறோம்" என்று நெஞ்சழிந்தவாலியாலே மஹாராஜர்க்குப் பிறந்த ஆபத்தைத் தீர்க்கைக்காக வந்தென்றுமாம்.

(உடைந்தவாலிதந்தனுக்கு) தம்பி தனக்கு. மவ்வுக்கு ன' ஆதேசமாய், 'தம்பி' என்றத்தை 'தன்' என்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது" என்று ஒரு தமிழன். (மிடைந்த

---

அரு;—எண்பத்தோராம்பாட்டு. வாலி தன் தனக்கென்று முமுச்சொல்லாய் வாலிபரமாதல், வாலியுடையதன்தனக்கு - தம்பிதனக்கென்றாய், மஹாராஜர்பரமாதல். (அக)

---

(க)

மூ.—எத்திறத்துமொத்துநின்றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்
முத்திறத்துமூரிநீ ரராவணைத்துயின்றநின்
பத்துறுத்தசிந்தையோடு நின்றுபாசம்விட்டவர்க்
கெத்திறத்துமின்பமிங்குமங்குமெங்குமாகுமே. (அஉ

வேழ்மரங்களுமடங்கவெய்து) ஆபத்திலே ரக்ஷிக்கவரக்கொண்டு ரக்ஷணத்திலே அதிஶங்கைபண்ணின மஹாராஜர்விஶ்வஸிக்கைக்காக இலக்குக்குறிக்கவொண்ணாதபடி மிடைந்துநிற்கிறமராமரங்களேழையும். அநுக்தமான கிரிரஸாதலங்களேழையு மடங்கத் துளைத்து. வாலி, ஸ்வபலபரீக்ஷைபண்ணுவது ஒரு மராமரத்தளவிலேயாயிருக்க, மஹாராஜருடைய அதிஶங்கையை ஸவாஸநமாகப் போக்குகைக்காக ஏழென்று பேர்பெற்றதடைய எய்தாராய்த்து.

(வேங்கடமடைந்த மாலபாதமே யடைந்து) ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுத்தஶீலமும், அவதாரத்தில்தாழ்ந்தார்க்கு முகங்கொடுத்த ஶீலமும், பிற்பாடரானவர்க ளிழவாமைக்குத் திருமலையை யாஶ்ரயித்துநிற்கிற வ்யாமுக்த(ஞு)ன் திருவடிகளை அநந்யப்ரயோஜநரா யாஶ்ரயித்து நாளுமுய்மினோ. "நாளும்-அடைந்துய்மின்" என்றுமாம். கைங்கர்யமென்றும் - உஜ்ஜீவநமென்றும்-பர்யாயம். (க) "சூடடிதொழுதெழு" என்னக்கடவதிறே. ஆஶ்ரிதர்க்குத் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஆஶ்ரயணீயஸ்தலம், திருவேங்கடமுடையானுக்கு ஆஶ்ரணீயஸ்தலம் திருமலை. ... ... ... (அக)

எண்பத்திரண்டாம் பாட்டு. (எத்திறத்துமித்யாதி).

எத்திறத்தும் எவ்வகைப்பட்ட ப்ரகாரத்திலும்; தேவதிர்யக்மநுஷ்யஸ்தாவராதிகளாகிற நாலு ப்ரகாரத்திலுமென்றபடி.

(க) தி-வாய்-க-க-க.

| | |
|---|---|
| ஒத்துநின்று | தத்தஜ்ஜாதீயரோடே ஸஜாதீயனாயவதரித்திருந்து |
| உயர்ந்துயர்ந்த | அஜஹத்ஸ்வபாவனாகையால் வந்தஉத்கர்ஷமென்ன, ஸௌசீல்யாதிகளால் வந்த உத்கர்ஷமென்ன, இவற்றை யுடைய |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே; |
| முத்திறத்து | ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமென்று மூன்றுவகைப்பட்ட |
| மூரிநீர் | நீராகிற மூரியிலே, க்ஷீராப்தியாகிறவிடத்திலே யென்றபடி; |
| அராவு | அநந்தனாகிற |
| அணை | படுக்கையிலே |
| துயின்ற | கண்வளர்ந்தருளின |
| நின் | தேவரீர் விஷயமான |
| பத்து | பரபக்தியாலே |
| உறுத்த | அழுத்தின, மிகுத்தவென்றபடி |
| சிந்தையோடு | மநஸ்ஸோடேகூட |
| நின்று | இருந்து |
| பாசம்விட்டவர்க்கு | இதரவிஷய ஸங்கத்தை த்யஜித்தவர்களுக்கு |
| எத்திறத்தும் இன்பமே | ஸர்வவிதஸுகமே, |
| இங்கும் | ஶரீரத்தோடேயிருக் குமிருப்பிலும் |
| அங்கும் | பரமபதத்திலிருக்குமிருப்பிலும் |
| எங்கும் | உத்க்ரமணதசை, அர்ச்சிராதிமார்க்கமென்கிற விவற்றிலும் |
| ஆகும் | உண்டாம். |

"எ" என்கிறதை "இன்பம்" என்கிறதோடு கூட்டுவது. (அஉ)

அஉ. எண்பத்திரண்டாம்பாட்டு. இதுக்கு முன்பு பரோபதேசம் பண்ணினாராய், மேல் ஈஶ்வரனைக்குறித்து தேவரீர்திருவடிகளிலே ப்ரேமயுக்தர் நித்யஸூரிகளென்கிறார். இதுக்கடி பிறர்க்கு ஸாதநமாகத் தாமுபதேசித்தபக்தி தமக்கு ஸ்வயம் ப்ரயோஜநமானையாலே, தமக்கு ரஸித்தபடியைப் பேசுகிறார். இப்பரபக்திதான் ஸாதகனுக்கு உபாயத்தில் மேலெல்லையாய் ப்ரபந்நனுக்கு ப்ராப்யத்தில் முதலடியாயிருக்குமிறே. இதில் முதற்பாட்டில் - மநுஷ்யத்வே பரத்வத்தையும் அவதாரகந்தமான க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்து, தேவரீர் திருவடிகளிலே ப்ரவணரானார்க்கு ஸர்வ தேசத்திலும் ஸுகமேயாமென்கிறார்.

வ்யா. (எத்திறத்துமொத்துநின்றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்) தேவஜாதியிலும் மநுஷ்யஜாதியிலும் திர்யக்ஜாதியிலும் ஸ்தாவரஜாதியிலும் ஸஜாதியனாயவதரித்து, அஜ்ஜாதியிற்காட்டில் அஜஹத்ஸ்வபாவனாகையாலேவந்த உத்கர்ஷத்தையும், (க) "ஸஉ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந:- ஸஉஶ்ரேயாந்பவதி ஜாயமாந:" என்கிறபடியே குணாதிக்யத்தால்வந்த வுத்கர்ஷத்தையும் ஸ்வபாவமாக வுடையவனே. (பெற்றி) இயல்வு. (திறம்) திரள். ப்ரஹ்மருத்ரமத்யா (ஐய்யா) வதாரத்தோடு மத்ஸ்யாவதாரத்தோடு வாஸியற ஸஜாதீயபாவத்தில் புரையறுகையும், அதிமாநுஷசேஷ்டிதங்களாலே ஸர்வாதிகத்வம் தோற்றுகையும், ஆர்த்யஸாரத்யாதிகளாலே குணாதிக்யம் தோற்றியிருக்கையும்.

(முத்திறத்துமூரிநீரராவணைத்துயின்ற) அவதாரத்தில் சொன்னமேன்மைக்கும் நீர்மைக்கும் ஊற்றாய், மூன்றுவகைப்பட்ட நீரையுடைத்தான கடலையிடமாகக்கொண்டு அந்நீருத்தாமைக்குத் திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின. (முத்திறத்துநீர்) ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் இவை. மூரி - இடம். (நின்பத்தொழுத்தசிந்தையோடு நின்றுபாசம் விட்டவர்

---

(க) யஜு-

மூ.— மட்டுலாவுதண்டுழா யலங்கலாய் புலன்கழல்
விட்டுவீள்விலாதபோகம் விண்ணில்நண்ணியேறினும்
எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால் மனந்தனைக்
கட்டிவீடிலாதுவைத்த காதலின்பமாகுமே. (அ௩)

---

க்கு) உன் திருவடிகளிலே பக்திமிக்க மநோரதத்தோடே நின்று இதரவிஷயத்தில் ஸங்கத்தைவிட்டவர்களுக்கு. "பத்து" என்று - பக்தி. உறுதல்—அழுந்தல். அதாவது - மிகுதி. ஆஶ்ரித பரித்ராணார்த்தமாக அவதரித்த அவதாரத்தின் மேன்மையையும் நீர்மையையும், அதுக்கூற்றான க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிற நீர்மையையும் அநுஸந்தித்துப் பரபக்தியுக்தராய், அப்பக்திபாரவஶ்யத்தாலே இதரவிஷயங்களிலே வைராக்யத்தையுடையராயிருக்கிறவர்களுக்கென்கை. (எத்திறத்துமின்பமிங்குமங்குமெங்குமாகுமே) ஶரீரத்தோடேயிருக்குமிருப்பிலும், பரமபதத்திலிருக்குமிருப்பிலும், உத்க்ரமணதஶையிலும், அர்ச்சிராதிமார்க்கமென்கிற அவஸ்தாவிஶேஷங்களிலும் ஸுகமேயாயிருக்கும். எத்திறத்துமின்பமான ஸர்வேஶ்வரனை உன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளையநுபவித்து, ப்ராப்யதேஶங்களிலும் த்வதநுபவத்தால்வந்த ஸுகமேயல்லதில்லை. விஷயாந்தரப்ராவண்யம் எங்ஙனுமாகிலும் துக்கமேயானாப்போலே பகவத்ப்ராவண்யம் எங்ஙனுமாகிலும் ஸுகமேயாயிருக்குமென்கை.

எண்பத்துமூன்றும்பாட்டு (மட்டித்யாதி)

| | |
|---|---|
| மட்டு | தேனானது |
| உலாவு | வர்த்தித்துக் கொண்டிருக்கிற |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாய் மயமான |

---

அ௨:--எண்பத்திரண்டாம்பாட்டு. "இங்குமங்குமெங்குமாகுமெத்திறத்தும்" என்றாய், முமுக்ஷுஶரீரம், முக்தஶரீரம், ஸூக்ஷ்மஶரீரம் இவையெல்லாவற்றிலும் ஸுகமாயிருக்குமென்கை. திறம் - ப்ரகாரமாய், அத்தால் ஶரீரத்தைச் சொல்லுகிறது. எத்திறத்தும் எல்லாவவஸ்தையிலுமென்றபடி. (அ௨)

| | |
|---|---|
| அலங்கலாய் | மாலையையுடையவனே! |
| புலன் | புலப்பட்டிருக்கிற, தர்ஶநீயமான வென்றபடி; |
| கழல் | தேவரீர் திருவடிகளை |
| விட்டு | த்யஜித்து |
| வீள்வு | வேறுபோக்கு |
| இலாத | இல்லாத |
| போகம் | போகத்தை |
| விண்ணில் | பரமபதத்தை |
| நண்ணிஏறினும் | ஏறிநண்ணினும், பரமபதத்தை யேறி போகத்தைக்கிட்டினுமென்றபடி; |
| எட்டினோடிரண்டெனும் | எட்டுமிரண்டும் பத்தாய், பக்தியென்னப்படுமென்றபடி; |
| கயிற்றினால் | பக்தியாகிற கயிற்றினாலென்றபடி, (கயிறுகையாவது - பந்தகமாயிருக்கை). |
| மனந்தனை | ப்ரதாநேந்த்ரியமான மநஸ்ஸை |
| கட்டி | விஷயாந்தரத்தில் போகாதபடி பந்தித்து, |
| வீடிலாத | விடுகையில்லாத, விச்சேத(பெனுசு)மில்லாதவென்றபடி; |
| வைத்த | தேவர் திருவடிகளிலே வைக்கப்பட்ட |
| காதலே | ப்ரேமமே |
| இன்பமாகும் | ஸுகஸாதந மாத்ரமன்றிக்கே ஸுகமாகும், (ஏயென்கிறதை காதலென்கிறதோடு கூட்டுவது. "பத்து" என்கிற ஶப்தம் தஶஸங்க்யையும் பக்தியையும் சொல்லும், பத்தியென்கிறது கடைக் குறைத்தலாய், "பத்து" என்றுகையாலே; "எட் |

டிரண்டு'' என்கிறஶப்தம்ஸ
வபர்யாயமான பத்து ஶப்தவாச்யு
ஸாமாந்யஸம்பந்தத்தாலே பக்தியை
லக்ஷிக்கிறது. இப்படி சொல்லிற்
று பக்திபினிடத்தில் கௌரவா
திஶயத்தாலே) (அ௯)

அவ.—எண்பத்துமூன்றும்பாட்டு. (க) ''து:க்கஶோக
ஜநநம்-அநந்தக்லேஶபாஜநம்'' என்கிறபடியே து:க்கப்ரசுரமான இஸ்ஸம்ஸாரத்திலே ஸுகமுண்டாகக் கூடுமோவென்னில்; ப்ராப்திதசையில் ஸுகமும், ஸம்ஸாரத்தே யிருந்துவைத்து தேவரீர் திருவடிகளில் விச்சேதமில்லாத ப்ரேமத்தால் பிறக்கும் ஸுகத்துக்குப் போராதென்கிறார்.

வ்யா.—(மட்டுலாவு தண்டுழாயலங்கலாய்) தேன்மாறாத செவ்வித்திருத்துழாய் மாலையாலே யலங்க்ருதனானவனே, இத்தால்-திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிகவஸ்து வென்னுமிடமும், உபயவிபூதி நிர்வஹணத்துக்கிட்ட தனிமாலை யென்னுமிடமும், ஒப்பனையழகும் சொல்லிற்றாய்த்து. (புலன் கழல்விட்டுவீள்விலாத போகம்) தர்ஶநீயமாய் நித்யஸூரிகளுக்கு ஸதாதர்ஶநீயமுமான தேவரீர் திருவடிகளைவிட்டு, வேறு போக்கில்லாதபோக (ஸுக) த்தை. (புலன்கழல்) புலப்படும் திருவடிகளை. (விண்ணில்நண்ணியேறினும்) பரமபதத்தேயேறிக் கிட்டினும்.

(எட்டிரண்டெனுங்கயிற்றினால்) எட்டுமிரண்டும்கூடி-பத்தாய், அத்தை பக்தியென்கிறது. பகவத்பக்தியில் தமக்குள்ள கௌரவாதிஶயத்தாலே மறைத்துச்சொல்லுகிறார். ''கயிறு'' என்று - பந்தகமென்றபடி. (மனந்தனைக்கட்டி) ஸர்வேந்த்ரியங்களுக்கும் ப்ரதாநமான மநஸ்ஸை விஷயாந்தரங்களில் போகாதபடி பந்தித்து. (வீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே) விச்சேதமில்லாதபடி தேவரீர் திருவடிகளிலே வைத்த ப்ரேமம்,

(க) ஜிந்தை-க-௬.

மூ.—பின்பிறக்கவைத்தனன்கொ லன்றிநின்றுதன்கழற்
கன்புறைக்கவைத்தநா ளறிந்தனன்கொலாழியான்
தன்றிறத்தோரன்பிலா வறிவிலாதநாயினேன்
என்றிறத்தி லென்கொலெம்பிரான் குறிப்பில்வைத்ததே.

---

ஸுகத்துக்கு ஸாதநமாயிருக்கை யன்றிக்கே தானேஸுகமா யிருக்கும். ... ... ... (௮௫)

எண்பத்துநாலாம் பாட்டு. (பின்பிறக்க வித்யாதி)

| | |
|---|---|
| எம்பிரான் | என்நாதன் |
| பின் | இந்த ஶரீரா வஸாநத்துக்குப் பின்பு |
| பிறக்க | இன்னும் சிலஶரீரபரிக்ரஹம்பண்ண |
| குறிப்பில் | ஹ்ருதயத்திலே |
| வைத்தனன் கொல் | வைத்தானோ? ஸங்கல்பித்தானோ வென்றபடி; |
| அன்றி | அதன்றிக்கே, |
| தன்கழற்கு | தன்னுடைய திருவடிகளிலே |
| நின்று | ஸ்த்திரமாக |
| அன்பு | ப்ரேமமானது |
| உறைக்க | பரமபக்திரூபேண பரிண மிக்கையாகிற உறப்பையுடையதாம்படியாக, |
| வைத்து | ஸங்கல்பித்து |
| அநாள் | அங்கொருதேஶவிஶேஷத்திலே போய் அநுபவிக்கும்நாளை |
| அறிந்தனன் கொல் | நினைத்திருக்கிறானோ ? |
| ஆழியான் | பரத்வஸூசகமான திருவாழியாழ்வானைத (ய)ரித்திருக்கிற |
| தன் | தன்னுடைய |
| திறத்து | இடையாட்டத்து |
| ஓரன்பிலா | ஸ்வரூபரூப குணவிபூதிவிஷயமான வொருப்ரேமமில்லாத |

அறிவிலாத — ப்ரேமயின்றிக்கேயிருக்கிற தென்கிற ஜ்ஞாநமுமில்லாத
நாயினேன் — நாய்போலே அதிஹீநனான
என்திறத்து — என்னிடையாட்டத்து
எம்பிரான் — என்நாதன்
குறிப்பில்வைத்தது — திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறது
என்கொலோ — என்னோ? ("எம்பிரான், குறிப்பில்" என்கிற பதங்களுக்கு ஆவ்ருத்தியாலேத்விதா அந்வயம்.) (அச)

அவ.—எண்பத்து நான்காம்பாட்டு. "வீடிலாதுவைத்த காதலின்பமாகும்" என்று - கீழ்ப்ரஸ்துதமானபக்தி தம்பக்கல் காணாமையாலும், தம்மை ப்ரக்ருதியோடேயிருக்கக் காண்கையாலும், ஈஶ்வரன் ஸ்வதந்த்ரனாகையாலும், அவன் நினைவாலே பேறாகையாலும், "என் திறத்தில் என்னாதன், தன் திருவடிகளிலே பரமபக்தியுக்தனாம்படி பண்ண நினைத்திருக்கிறானோ, நித்ய ஸம்ஸாரியாய்ப்போக நினைத்திருக்கிறானோ, திருவுள்ளத்தில் நினைத்திருக்கிற தென்னோ" என்கிறார்.

வ்யா;-(பின்பிறக்கவைத்தனன்கொலன்றி)இந்தஶரீராவஸாநத்துக்குமேலேஇன்னமும்சிலஶரீரபரிக்ரஹம் பண்ணும்படியாக என்னை நினைத்திருக்கிறானோ. அன்றிக்கே, (பின்பு இறக்கவைத்தனன்கொல்)தன்பக்கலிலே ஜ்ஞாநம்பிறந்தபின்பும் தன்னைவிஸ்மரிப்பித்து நசிப்பிக்க நினைத்திருக்கிறானோ. நித்யமான ஆத்மாவுக்கு பகவத் ஜ்ஞாநலாபாலாபங்களேயிறே ஸத(உ)ஸத்பாவஹேதுக்கள். (க)"அஸந்நேவ ஸ ப⁴வதி । அஸத்³ப்³ரஹ்மேதி வேத³ சேத் । அஸ்தி ப்³ரஹ்மேதி சேத்³வேத³ । ஸந்தமேநம் ததோ விது³ரிதி" - அஸத் ப்ரஹ்மமேதிவேதசேத் - அஸந்நேவஸபவதி, அஸ்திப்ரஹ்மேதி சேத்வேத, ஸந்தமேநந்ததோவிதுரிதி" என்னக்கடவதிறே,

(க) தை ஆ-சு-க.

(அன்றி) அன்றிக்கே. (நின்று தன்கழற்கன்புறைக்கவைத்த நாளறிந்தனன்) விச்சேதமில்லாதபடி தன்திருவடிகளுக்கு அன்பையுறைக்கவைத்து அநுபவிக்கும் நாள் எனக்கு முண்டாம்படி நினைத்திருக்கிறனே அன்புறைக்கையாவது-பரமபக்தியுக்தனுகை. "வைத்தநுபவிக்கும் நாள்" என்கிறது - ஒருதேஶவிஶேஷத்தி லநுபவத்தை. இத்தால். இச்சேதநனுக்கு ஜந்மமும், விஸ்ம்ருதியும், விநாசமும் - பக்தியில்லாமையாலே; உஜ்ஜீவநம் - பரமபக்தியுக்தனுகையே யென்றதாய்த்து. ஜந்மமாகிறது-விஷயாந்தரப்ராவண்யமேறது.விஸ்ம்ருதியாகிறது விஷயாந்தர ப்ராவண்யகார்யமாகையாலே ஆத்மாவுக்கு உபயமும்விநாசமிறே.

(ஆழியான்றன்திறத்து) ஸர்வாதிகனுன தன்னிடையாட்டத்து. (ஒரன்பிலாவறிவிலாதநாயினேன்)அவன் ஸ்வரூபரூபகுணவிபூதிகளில் ப்ரேமகந்த(மாய)மின்றிக்கே, அதுக்கடியான ஜ்ஞாநலேசமுமின்றிக்கே, ஹேயனுனநான். ப்ரேமகந்தமின்றிக்கே, அதிலேயென்கிற அறிவுமில்லாதவென்றுமாம். "நாயினேன்" என்கிறது-திறந்துகிடந்த வாசல்கள்தோறும்நுழைந்துதிரிகையும், எல்லாராலும்பரிபூ(ஷூ)தனுகையும், உகந்து தொட்டார்க்கும் ஸ்நாநம்பண்ணவேண்டும்படி அமேத்யபதார்த்தமாகையும்.(என்திறத்தில்)ஸம்ஸாரிகளைப் போலே விமுகனுதல்,முக்தரைப்போலேபோக(ஹொம)ப்ரவணனுதலன்றிக்கேயிருக்கிற என்னிடையாட்டத்தில். (எம்பிரான் குறிப்பில்வைத்தது என்கொல்) என்நாதன் திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறதென்னே. "பிறந்தபின்மறந்திலேன்" என்கிறஜ்ஞாநத்தையும், "நடந்தகால்கள்நொந்தவோ" என்கிற ப்ரேமத்தையும்,உபாயமென்றிருக்கிறிலர், ஈஶ்வரன்நினைவே தமக்கு உபாயமென்றிருக்கிறுர். "வரந்தரும் திருக்குறிப்பில் வைத்ததாகில்" என்று-ஸா

---

அரு;--எண்பத்துநாலாம்பாட்டு. பின்பிறக்கவென்னுதல், பின்புஇறக்கவென்னுதல். அவன்நினைவேஸாதநமென்பானென்ன, தன்னுடையஜ்ஞாநம் ஸாதநமாகாதோ வென்னவருளிச்செய்கிறுர்(பிறந்தபின்னித்யாதி).

மூ.—நச்ராவணைக்கிடந்த நாதபாதபோதினில்
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்க நீயினம்
மெய்த்தன்வல்லையாதலா லறிந்தனன் நின்மாயமே
உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே. (அரு)

மாங்யேநவுபாயமாகச்சொல்லுவதுமதுவே, தமக்கு உபாயமாக விசேஷித்துச்சொல்லுவதுமதுவே. இப்பாட்டால்-என்னுடையபூர்வ வ்ருத்தத்தைப்பார்த்துஉபேக்ஷிக்க நினைத்திருக்கிறீரோ, இத்தலையில் விநாசம் தன்னிழவாம்படியானகுடல்துடக்கைநினைத்து உஜ்ஜீவிப்பிக்க நினைத்திருக்கிறீரோவென்றதாய்த்து. (அச)

எண்பத்தஞ்சாம் பாட்டு.(நச்சித்யாதி)

| | |
|---|---|
| நச்சு | உகவாதார்க்கு விஷத்தையுமிழாநின்றுள்ள |
| அராவணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| நாத | ஸர்வேஶ்வரனே ! |
| பாத | திருவடிகளாகிற |
| போதினில் | புஷ்பத்திலே |
| வைத்த | ந்யஸ்தமான |
| சிந்தை | என் மநஸ்ஸை |
| வாங்குவித்து | அதில்நின்றும் மீளும்படிபண்ணி |
| நீங்குவிக்க | அகலும்படிபண்ண |
| நீ | ஸ்வதந்த்ரனான நீ |
| இனம் | இன்னமும் |
| மெய்த்தன் வல்லை | மெய்யேஸமர்த்தன்; |
| ஆதலால் | ஆகையால்,ஒருவஸ்துவைவஸ்வதந்த்ரமாக்கவல்ல ஶக்தியையுடையவனாகையாலே |
| அறிந்தனன் | உன்னைஸ்வதந்த்ரனென்றறிந்துகொண்டேன், |

மாயனே — ஆஸ்சர்யசேஷ்டிதத்தையுடையவனே!
என்னை — உன்பக்கலிலே ந்யஸ்தபரனானவென்னை
நின்மாயமே உய்த்து — த்வதீனையானமாயையோடே சேரும்படி பண்ணி
நின்மயக்கினில் — உனக்குப்பரிகரமாயும், சேதநர்க்கு புத்திப்ரம்ஸஹேதுவுமான ஸப்தாதி விஷயங்களிலேமூட்டி
மயக்கல் — புத்திகெடப்பண்ணாதேகொள். (௮௫)

அவ.—எண்பத்தைந்தாம் பாட்டு. என்னை இப்ப்ரக்ருதியோடேவைத்தபோதே தேவரீர் நினைவு இன்னதென்றறிகிறிலேன், முந்துற முன்னம் உன் ப்ரஸாதத்தாலே திருவடிகளில் பிறந்த ருசியைமாற்றி இதர விஷய ப்ரவணனாக்காதொழிய வேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

வ்யா. (நச்சராவணைக்கிடந்தநாத) உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழுகிற திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஸ்வரனே. நீ உகந்தாரை நித்யகைங்கர்யம கொள்ளும் ஸ்வதந்த்ரனென்றபடி. (பாதபோதினில் வைத்தசிந்தை) உன் திருவடிகளாகிற செவ்விப்பூவிலே வ்யவஸ்த்திதமான மநஸ்ஸை. ப்ராப்தமுமாய் நிரதிஸய போக்யமுமாயிருந்துள்ள திருவடிகளிலே பொருந்தின மநஸ்ஸை யென்கை. (வாங்குவித்து) திருவடிகளில்நின்றும் மீளும்படிபண்ணி. (௧) “நிவேஶிதாத்மா க்வசித் ந்ருத்யதி – நிவேஶிதாத்மாகதமந்யதிச்சதி” என்று மநஸ்ஸையும் விமுகமாம்படி பண்ணி. (நீங்குவிக்கநீயினம் மெய்த்தன்வல்லை.) நெடுங்காலம் அகன்றதுபோராமே யின்னமகலும்படிபண்ணவல்ல ஸர்வஸக்தியானநீமெய்யேவல்லை. (ஆகலாலறிந்தனன்) ஒருத்தனைக்கேள்விகொண்டு கார்யம் செய்யவேண்டாதபடி வஸ்துவை வஸ்த்வந்தரமாக்கவல்ல ஸக்தியையுடையையாகையாலே உன்னை ஸ்வத

(௧) ஸ்தோத்ரரத்நம்-௨௭.

மூ;—சாடுசாடுபாதனே சலங்கலந்தபொய்கைவாய்
ஆடரவின்வன்பிடர் நடம்பயின்றநாதனே
கோடுநீடுகையசெய்ய பாதநாளுமுள்ளினால்
வீடதாகமெய்செயாதவண்ணமென்கொல்கண்ணனே(அகூ)

ந்த்ரனென் றறிந்துகொண்டேன். (நின்மாயமேயுய்த்து நின்மய க்கினில்மயக்கல்.) உமக்குச் செய்யவேண்டுவ தென்னென்ன; (க) "ஐஐரயா-மமமாயா" என்கிறபடியே தேவரீரிட்டவழக்கான ப்ரக்ருதியோடே நித்யஸம்ஸ்ருஷ்டனும்படி பண்ணினாய்; உன க்குப்பரிகரமான ஶப்தாதிவிஷயங்களிலே மூட்டிஎன்னை யறிவு கெடுக்கப் பாராதொழியவேணும். சேதநரையறிவுகெடுக்கும வை யாகையாலே "மயக்கு" என்று - ஶப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது. (என்னை) உன்பக்கலிலே ந்யஸ்தபரனாய் உன்கை பார்த்திருக்கிற வென்னை. (மாயனே) "நம்மை யொழியச் செல் லாதாரை ஶப்தாதிகளிலேமூட்டி யறிவுகெடுப்புதோமோ, ஸ்வத ந்த்ரரையன்றோ நாம் அங்ஙன் செய்வது" என்ன; ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனே. (உ) "உபாநஶேஷாணாம் ஸாயநாழ்-உபமாநமஶேஷாணாம்ஸாதூநாம்" என்கிறபடியே ப்ரஹ்லாதனை எதிரம்புகோக்கப்பண்ணவல்லே, ப்ராதிகூல்யத்தில் வ்யவஸ்த்திதனான ஶிஶுபாலனுக்கு ஸாயுஜ்யப்ரதனாகவும் வல் லே, இதுவன்றோ தேவரீருடையஸ்வாதந்த்ர்ய மென்கிறார்.(அரு)

எண்பத்தாறும்பாட்டு. (சாடித்யாதி)

| | |
|---|---|
| சாடு | ஶகடாஸுரனை |
| சாடு | சாடாநின்றுள்ள, நிரஸியாநிற்கிறவெ ன்றபடி |
| பாதனே | திருவடிகளையுடையவனே! |
| சலங்கலந்த | விஷப்ரசுரமாகையாலே ஜலத்தோடு மிஶ்ரமான |

பொய்கைவாய் யமுநாஸரஸ்ஸினுடைய விடத்திலே

(க) கீ-எ-கச. (உ) வி-பு-க-கரு-கருகூ.

ஆடரவின் — க்ரோதத்தாலே ஆடா நின்றுள்ள காளியனுகிறஸர்ப்பத்தினுடைய
வன்பிடர் — வலியதானபிடரியிலே
நடம்பயின்ற — நர்த்தநத்தையுண்டாக்கின
நாதனே — வகுத்தஸ்வாமியானவனே;
கோடு — ஸ்ரீபாஞ்சஜந்யமாகிறஸங்க்கத்தி
நீடு — நித்யஸம்யுக்தமான [னுலே
கைய — திருக்கையையுடையவனே!
செய்யபாதம் — சிவந்திருக்கிற வுன்னுடையதிருவடிகளை
நாளுமுள்ளினல் — ஸர்வகாலமும் அநுஸந்தித்தால்
கண்ணனே — ஆஸ்ரிதஸுலபனானவனே!
வீடதாக — நான் மோக்ஷஸ்த்தனாக
மெய்செய்யாத வண்ணம் — மெய்யாகச்செய்யாத ப்ரகாரம்
என்கொல் — என்னோ?(மெய்செய்கையாவது-ஜ்ஞாநலாபத்தாலே "யாவர்நிகரகல்வானத்தே" என்னுமாஸ்வாஸமாத்ரமன்றிக்கே தேஹ ஸம்பந்தத்தை யறுக்கையும், நித்யஸூரிகள் போக (ஹோம) த்தைத்தருகையும்). (அகூ)

அவ;—எண்பத்தாறும்பாட்டு. உம்மை நம்பக்கல்நின்றும கற்றி ப்ரக்ருதிவஸ்யராக்குவோமாக நம்ப்க்கலிலே அதிஸங்கை பண்ணுவானென்னென்ன; விரோதிநிரஸநஸமர்த்தனனீ என் ப்ரக்ருதிஸம்பந்தத்தையறுத்துஎன்னிவைத்தலைக்கட்டாதொழிந்தால் அதிஸங்கை பண்ணுதே செய்வதென் னென்கிறார்.

வ்யா. — (சாடுசாடுபாதனே) ஸகடாஸுரன் முடியும்படி திருவடிகளை நிமிர்த்தவனே! அநுகூலர்க்கு உத்தேஸ்யமான திருவடிகளேயாய்த்து ப்ரதிகூலர்க்கு நாஸகரமாய்த்து. இதிறே

வஸ்துஸ்வபாவம்.(க)"விடமுமமுதமுமாய்" என்னக்கடவதிறே. இத்தால் — விரோதிநிரஸநத்தில் உனக்கு வருத்தமுண்டாய்த் தானிழக்கிறேனோ வென்கை. (சலங்கலந்த பொய்கைவாய்) விஷமேப்ரசுரமாய் அத்தோடே யமுநாஜலமும் மிஸ்ரமாயிருந்துள்ள பொய்கையிலே. (உ) "தஸ்யாஸ்ஸாதிமஹாபீமவிஷாக்நிஸ்ரிதவாரிணம் । ஹ்ரதம்காளியநாகஸ்ய ததர்ஸாதிவிபீஷணம் - தஸ்யாஸ்ஸாதிமஹாபீமம் விஷாக்நிஸ்ரிதவாரிணம்। ஹ்ரதம்காளியநாகஸ்யத தர்ஸாதிவிபீஷணம்" என்னக்கடவதிறே.

(ஆடரவின் வன்பிடர் நடம்பயின்ற) அப்பொய்கையிலே வர்த்திக்கிற காளியனுடைய திண்ணிய பிடரியிலே நின்று ஸஞ்சரிக்கிறஸஞ்சாரம் வல்லாராடினாப்போலே யிருக்கை. "ஆடரவு" என்று - க்ரோதத்தாலே யாடுகிற அரவென்றுமாம். "ஆடல்" என்று - நடையாட்டமும், கூத்தும். (நாதனே) வகுத்த ஸ்வாமியானவனே. விரோதிநிரஸநம் உகப்பாகைக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. இத்தால் - என்விரோதியைப் போக்குகை†உனக்குத்தகவல்லாமேயிழக்கிறேனோ,ஸம்பந்தமில்லாமே யிழக்கிறேனோவென்கை.

பகவத் ஸமாஸ்ரயணத்துக்கும்அநுபவத்துக்குமாக ஸ்ருஷ்டமான ஸரீரத்திலே அஹங்காரலேஸமுண்டானால் அதுநிரஸநீயமென்று தோற்றுகைக்காக, ஸகடாஸுரநிரஸநத்தை யருளிச்செய்தார். தனக்கு போக்யமானஆத்மாவுக்கு, விஷ ஸம்ஸர்க்கம் போலே நிரஸநீயம்தேஹஸம்பந்தமென்றுதோற்றுகைக்காகக்காளியமர்த்தநத்தை யருளிச்செய்தார். அநுகூலமாகவைத்ததொன்றிறே ஸகடம், உபஜீவ்யமாயிருப்பதொன்றிறேயமுநாஜலம்.

(கோடுநீடுகைய) ஸர்வகாலமும் திருக்கைக்கு நிரூபகமென்னும்படி அத்தைப்பிரியாத ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே. என்விரோதியைப் போக்குகைக்கு உன்கையில் பரிகரமில்லாமே யிழக்கிறேனோ; என்கையில் பரிகரமுண்டாயிழக்கிறேனோ

---

அரு;—எண்பத்தாறும் பாட்டு. (ஆடரவு) ஆடல் - ஸஞ்சரமாய், அத்தால்வர்த்திக்கிற அரவென்னுதல். மெய்செய்கை - ஸரீரமிருக்கச்செய்தே ஒருஜ்ஞாந விஸேஷத்தாலே மெய்போலே தோற்றியிருக்கை, ஸரீ

---

(க)தி-வாய்-கூ-ரு-க. (உ)வி-பு-ரு-எ-ரு. †(பா) உனக்கு உகப்பில்லாமே.

மூ.—நெற்றிபெற்றகண்ணன்விண்ணி னாதனோடுபோதின்மேல்
நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர்
கற்றபெற்றியால் வணங்குபாதநாத வேதநின்
பற்றலாலோர்பற்று மற்ற துற்றிலேனுரைக்கிலே. (அஎ).

---

வென்கை.(செய்யபாதம் நாளுமுள்ளினால்) உன்திருமேனிக்குப் பரபாக(ஸாம)மாய் ஆகர்ஷகமான திருவடிகளை ஸர்வகாலமும் அபாஶ்ரயமாக அநுஸந்தித்தால். இத்தால் — நான் அந்யப ரனாய்த்தானிழக்கிறேனோ வென்கை.

(வீடாகமெய்செயாத வண்ணமென்கொல்.) இப்படிமுமுக்ஷுவானிருக்க, ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுத்திருவடிகளைப் பெறுமவனாக மெய்செய்யா தொழிகிற ப்ரகாரமென்னோ. மெய்செய்கையாவது-விஷயீகாரமாத்ரத்திலே, (க) "முடியாதென்னெனக்கேலினி" என்னப்பண்ணுதல், ஜ்ஞாநலாபத்தாலே (உ)"யாவர்நிகரகல்வானத்தே" என்னப்பண்ணுதல்செய்யுமிவ்வளவுகளாலேவந்த ஆஶ்வாஸமொழியதேஹ ஸம்பந்தத்தை அறுக்கையும்,நித்யஸூரிகள்பரிமாற்றத்தைப்பண்ணித் தருகையும்.(கண்ணனே)ஸம்ஸாரிகளுக்கு இச்சையே தொடங்கி பரமபக்தி பர்யந்தமாக எல்லா அவஸ்தைகளையுமுண்டாக்கி முக்தராக்குகையன்றேஅவதாரத்துக்கு(ஃ)பலம், அநுபாவ்யமாயிருப்பதொரு கர்மவிசேஷமுண்டாயோ அவதரித்தது; ஆக, நீர்நம்பக்கலிலேஅதிஶங்கைபண்ணுகைக்கு ஹேதுவென்னென்ன;நீமுமுக்ஷுவைத்து என்னபிமதஞ் செய்யாமைக்கு ஹேதுவைச் சொல்லலாகாதோ, நான் இஶ்ஶங்கைக்கு ஹேதுவைச்சொல்லாதபடி யென்கிறார். (அசு).

எண்பத்தேழாம்பாட்டு. (நெற்றியித்யாதி).

| | |
|---|---|
| நெற்றி | லலாடத்திலே |
| பெற்ற | லபிக்கப்பட்டிருக்கிற |
| கண்ணன் | கண்ணை யுடைத்தான ருத்ரனாலேயும் |

---

ரநிவ்ருத்தி பூர்வகமாக யதாவான பகவதநுபவத்தைக்செய்கை. நான்இஶ்ஶங்கைக்கு ஹேதுசொல்லாதபடி என்னபிமதம் செய்யாமைக்கு ஹேது வைச்சொல்லலாகாதோ வென்கிறாரென்று வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது. ... ... ... (அசு).

---

(க) தி-வாய்-உ-கூ-எ. (உ) திவாய்-ச-ரு-அ.

(அன்றிக்கே)

| | |
|---|---|
| நெற்றி | நெற்றியிலே |
| கண் | கண்ணை |
| பெற்றவன் | பெற்றிருக்கிற ருத்ரனாலேயும் |
| விண்ணின் | ஸ்வர்க்கத்துக்கு |
| நாதனோடு | நாதனாயிருக்கிற விந்த்ரனோடும் |
| போதின்மேல் | திருநாபீ கமலமாகிற புஷ்பத்தின் மேலிருப்பானாய் |
| நல் | நன்றான |
| தவத்த | தபஸ்ஸையுடையவனாய், ("தவத்து" என்று பாடமானபோது - தபஸ்ஸாலேயென்றபடி, |
| நாதனோடு | சதுர்த்தசபுவந நிர்வாஹகனான ப்ரஹ்மாவோடுங் கூடியிருக்கிற |
| மற்றுமுள்ள வானவர் | ஹவிர்ப்பாக புக்குகளான ஸகலதேவதைகளாலும் |
| கற்றபெற்றியால் | அவரவர் கற்ற ப்ரகாரங்களாலே |
| வணங்கு | ஆஸ்ரயிக்கப்பட்டிருக்கிற |
| பாத | திருவடிகளையுடையவனே! |
| நாத | நாதனாக |
| வேத | வேதப்ரதிபாத்யனானவனே! |
| உரைக்கில் | சொல்லில் |
| நின்பற்றலால் | உன்னுடைய திருவடிகளாகிற அபாஸ்ரயத்தை யொழிய |
| மற்றோர்பற்றது | வேறொரு அபாஸ்ரயத்தை |
| உற்றிலேன் | தீண்டிலேன். (அஎ) |

அவ. எண்பத்தேழாம்பாட்டு. "செய்யபாதம் நாளுமுள்ளினால்" என்று நீயே எனக்கு அபாஸ்ரயமென்கையாலே நம்மையொழியவுமக்கு வேறொரு பற்றில்லை யோவென்ன, அபாஸ்ரயமாக ஸம்பாவனையுள்ள ப்ரஹ்மருத்ரர்கள் ஸ்வா(மி)திகாரி

ஸித்திக்குதேவரீர் கைபார்த்திருக்கும்படியாய்விழுந்தபின்பு, ஸர்வாதிகரான தேவரீரையொழிய வேறொரு பற்றையுடையே னல்லேனென்று தம்முடைய அதிகாரத்துக்கு அபேக்ஷிதமான அநந்யகதித்வக்யா(வ்)ாபநம் பண்ணுகிறார் மேல்.

வ்யா;—(நெற்றிபெற்றகண்ணன்) நெற்றியிலே கண்ணையுடைய ருத்ரன். தன்னுடைய ஶக்த்யதிஶயத்துக்கு ப்ரகாசகமாகையாலே லலாட நேத்ரத்தைத் தனக்குப்பேறாக நினைத்திருக்கிறானைத்து. (விண்ணின்நாதனோடு போதின்மேல் நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர்) ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனான இந்த்ரனோடே, திருநாபீகமலத்தைப் பிறப்பாகவும் ஸ்தாநமாகவுமுடையனாய் துஷ்கரமானதபஸ்ஸாலே சதுர்த்தஶபுவநஸ்ரஷ்டாவுமாய் அதுக்கும்நிர்வாஹகனுமான ப்ரஹ்மாவோடே, ஹவிர்ப்பாகபுக்குக்களான ஸகலதேவதைகள். ஸம்ப்ரதிபந்நக்ஷேத்ரஜ்ஞரான தேவர்களோடும் இந்த்ரனோடுங்கூட ப்ரஹ்மருத்ரர்களைச் சொல்லிற்று - அவர்களோபாதி இவர்களும் க்ஷேத்ரஜ்ஞரென்று தோற்றுகைக்காக.

(கற்றபெற்றியால வணங்குபாத) தாந்தாங்கற்ற ப்ரகாரங்களாலே ஆஶ்ரயிக்கும் திருவடிகளையுடையவனே. கற்றப்ரகாரங்களென்கையாலும், ஆஶ்ரயணத்தைச் சொல்லுகையாலும் - இவர்களுடைய ஶாஸ்த்ரவஶ்யதையும் ஜ்ஞாநஶக்திகளுடைய வைஷம்யங்களையும் சொல்லுகிறது. (நாதவேத) நாதனாக வேதப்ரதிபாத்யனானவனே. தேவர்களுடைய ஆஶ்ரயணத்துக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. (க) "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் - தமீஸ்வராணாம்பரமம் மஹேஸ்வரம்" (உ) "பதிம் விஶ்வஸ்ய - பதிம்விஸ்வஸ்ய" என்னக்கடவதிறே. (நின்பற்றலாலோர்பற்று மற்றதுற்றிலேன்) உன்திருவடிகளே அபாஶ்ரயமாக விருக்குமதொழிய எனக்குவேறொரு அபாஶ்ரயஸ்பர்ஶமில்லை. உறுதல் - தீண்டுதல். (உரைக்கிலே) தேவதாந்தர ஸ்பர்ஶமில்லையென்று சொல்லுகையும் எனக்கவத்யமென்கை. (அஎ)

(க) ஶ்வேதாஶ்வ-சு-எ. (உ) தை-நா-கக.

மூ. —வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய்
அள்ளலாய்க்கடைந்தவன் றருவரைக்கோராமையாய்
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்தசிவம்
வள்ளலாரையன்றிமற்றோர் தெய்வநான்மதிப்பனே.

---

எண்பத்தெட்டாம்பாட்டு. (வெள்ளையித்யாதி).

| | |
|---|---|
| வெள்ளை | வெண்மையையுடைய |
| வேலை | ஸமுத்ரத்திலே, க்ஷீராப்தியிலே யென்றபடி; |
| வெற்பு | மந்தரமாகிற பர்வதத்தை |
| நாட்டி | நட்டு |
| வெள் | வெளுத்திருக்கிற |
| எயிற்று | தந்தங்களையுடைத்தான |
| அராவு | வாஸுகியாகிற பாம்பை |
| அளாய் | அளாவி, சுற்றியென்றபடி, |
| அள்ளலா | நிபிடமாகும்படி ("அள்ளே காதும்செறிவும் கூர்மையும்" என்னக்கடவதிறே) |
| கடைந்தவன்று மதி(யி)த்தவன்று, | |
| அரு | துர்த்த(ஃ-யஃ)ரமான |
| வரைக்கு | மந்தரபர்வதத்துக்கு |
| ஓராமையாய் | தா(யா)ரகமான அத்விதீயகூர்மமாய்; (அன்றிக்கே, தாரணார்த்தமாகக் கூர்மஜாதியிலே அந்யதமனுமென்றுமாம்) |
| உள்ளநோய்கள் | துர்வாஸஸ் ஶாபத்தாலே யுண்டான அஶ்ரீப்ரவேஶ ஸத்வஜ்ஞாநபல ஹாநி அஸுரபரிபவாதிகளா லுண்டான துஃக்கங்களாகிற நோய்களை |
| தீர் | நிவர்த்திப்பிக்கிற [மருந்தை |
| மருந்து | லக்ஷ்மீகடாக்ஷமும், அம்ருதமுமாகிற |

வானவர்க்கு தேவதைகளுக்கு
அளித்த கொடுத்த
எம் வள்ளலாரை யன்றி } எனக்கு ப்ரகாஶிப்பித்த அவ்வௌதார்யததை யுடையவனையன்றி
மற்றோர்தெய்வம் வேறொரு தேவதையை
நான் அநந்யப்ரயோஜநனாய் அநந்யஶரணனாயுள்ள நானும்
மதிப்பனோ ஆஶ்ரயணீயமாகநினைப்பேனோ. (அஅ)

அவ; — எண்பத்தெட்டாம்பாட்டு. ப்ரஹ்மருத்ராதிகளுடைய அதிகாரம் ஈஶ்வரனாலே யென்றார் - கீழ், இதில் - அவர்கள் தங்களாபந்நிவ்ருத்திக்கு தேவரீர் கைபார்த்திருக்கும்படிபரமோதாரரான தேவரீரையொழிய வேறொருவரைதேவதையாக மதிப்பனோவென்கிறார்.

வ்யா;—(வெள்ளைவேலைவெற்புநாட்டி) வெளுத்தகடலிலே மந்தரபர்வதத்தைநாட்டி. காளமேகநிபஶ்யாமனானதான் க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளும்போதை அந்தப்பரபாக(ஸாம்ய)ரஸம் அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாயிருக்க, அத்தைக்குலைத்து ப்ரயோஜநாந்தர பரர்க்காக அக்கடலிலேகொடுபுக்கு மந்தரத்தைநாட்டி. (வெள்ளெயிற்றராவளாய்) வெளுத்த தந்தபங்க்தியைக்காட்டுகிற வாஸுகியை அதிலேசுற்றி. தன்னை மந்தரபர்வதத்திலேசுற்றி வலிக்கப்புக்கவளவிலே தன்பலஹாநிதோற்றப் பல்காட்டுகிற வாஸுகிக்கு பலாதா(ஆப்யாய)நத்தைப் பண்ணி அந்த மந்தரத்திலேசுற்றி. (க) "தேஜஸா நாகராஜாநம் ததாப்யாயித வாந்ப்ரபு: - தேஜஸாநாகராஜாநம் ததாப்யாயித வாந்ப்ரபு: "என்னக்கடவதிறே. (எயிறு)பல்லு. (அரவு) பாம்பு. (அளாய்) அளாவி—சுற்றி.

(அள்ளலாய்க்கடைந்தவன்று) (உ) " ஸுரேஷோ பாஹூ

(க) வி-பு-க-கூ -கூக. (உ) ரா-யு-கக -௩க.

திருச்சந்தவிருத்தம்அஅ-பா, வெள்ளைவேலைவ்யாக்யானம். உடுள் ஊயிஃ - அப்ரமேயோமஹோததிஃ " என்கிறபடியே அம்மஹார்ணவத்தை, (க)"கடல்மாறுசுழன்றழைக்கின்றவொலி" என்னும்படி திரைகள் எதிரேவந்து செறியும்படி கடைந்தவன்று. (அள்ளல்) செறிவு. "அன்று" என்கிறது—ஈஸ்வராபிமாநிகளான ஸகலதேவதைகளும் தங்களாபந்நிவ்ருத்திக்கு அவன் கையைப் பார்த்திருந்தவன்றென்கை. (அருவரைக்கோராமையாய்) அம்மந்தரம் ஆழங்கால்படாமே தன்முதுகிலேநின்று சுழலும்படி அத்விதீயமான ஆமையாய்த(ய)ரித்து. அஜ்ஜாதியிலே அந்யதமனென்றுமாம். (உ) "க்ஷீரோதமத்யே பகவாந் கூர்மரூபீ ஸ்வயம் ஹரிஃ। மந்த்ராத்ரேரதிஷ்டானம் ப்ரமதோபூந்மஹாமுநே" என்னக்கடவதிறே.

(உள்ளநோய்கள்) "ஈஸ்வரோஹம்" என்றிருக்கிறவர்களுக்கு ஒருப்ராஹ்மணஶாப மாத்ரத்தாலே தன்னையும் தன்விபூதியையும் ஸ்ரீ அப்ரவேசிக்கையும், அத்தாலே ஸத்வம் குடிபோகையும், அத்தாலே ஜ்ஞாநஹாநியும் பலஹாநியும், அந்தபலஹாநியாலே வந்த அஸுரபரிபவமும், இவற்றால்வந்த து:க்கபரம்பரைகளும் நோய்களிறே. (தீர்மருந்துவானவர்க்களித்த) இவர்கள் துரிதங்கள்போக அம்ருதத்தையும் பிராட்டியுடையவிசேஷகடாக்ஷத்தையும் கொடுத்த. அம்ருதப்ரதானத்தாலே ப(ப)லத்தையும், பிராட்டியுடைய விசேஷகடாக்ஷத்தாலே ஐஸ்வர்யத்தையும் கொடுத்தானென்கை. (ங) "ததஸ்ஸ்ரீஃ ... ஹரிவக்ஷஸ்ஸ்தலம் ... அதேம்ருதேசபலிபிர்த்தேவைர்த்தைத்ய சமூஸ்ததா। ... மாநாதேதோதேவா ஹரிவக்ஷஸ்தலஸ்தயா। லக்ஷ்ம்யா மைத்ரேய ஸஹஸா பராந்நிர்வ்ருதிமாகதாஃ" என்னக்கடவதிறே. (எம்வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வம் நான்மதிப்பனே) (ச) "உசா

(க) தி-வாய்-எ-ச-உ. (உ) வி-பு-க-கூ-அஅ. (ங) வி-பு-க-கூ. (ச) கீ-எ-கஅ

மூ.—பார்மிகுத்தபாரமுன் னொழிச்சுவானருச்சுனன்
தேர்மிகுத்துமாயமாக்கி நின்றுகொன்றுவென்றிசேர்
மாரதர்க்குவான்கொடுத்து வையமைவர்பாலதாம்
சீர்மிகுத்தநின்னலாலோர் தெய்வநான்மதிப்பனே. (அகூ)

---

ஸாஹஸ்ரவஸெவெதெ - உதாராஸ்ஸர்வ ஏவைதே ” என்கிறஔ தார்யத்தை எனக்கு ப்ரகாஶிப்பித்தவனை யொழிய அநந்யப்ர யோஜநனாய் அநந்யஶரணனாயிருந்துள்ள நான் வேறொருதைவ த்தை ஆஶ்ரயணீயமாக நினைப்பனோ. (அஅ)

எண்பத்தொன்பதாம் பாட்டு. (பாரித்யாதி)

| | |
|---|---|
| பார் | பூமிக்கு |
| மிகுத்த | அதிகமாகத்தோற்றியிருந்த |
| பாரம் | பாரத்தை |
| முன் | முற்பாடனாய்க்கொண்டு |
| ஒழிச்சுவான் | ஒழிச்சுகைக்காக |
| அருச்சுனன் | அர்ஜுநனுடைய |
| தேர் | தேரை |
| மிகுத்து | மிகவும் நடத்தியென்னுதல், உத்க்ருஷ்டபரிகரமாகத்தோற்றுவித்தென்னுதல், |
| மாயம் | பகலை இரவாக்குகை முதலான வாஶ்சர்யங்களை |
| ஆக்கி | உண்டாக்கி |
| நின்று | முகம் தோற்றாமே நின்று |
| கொன்று | எதிரிகளைக்கொன்று |
| வென்றிசேர் | தங்களை ஜயபாகி(ஸாமி)க்களாக அபிமாநித்துக் கொண்டிருக்கிற |
| மாரதர்க்கு | துர்யோதநாதி மஹாரதர்க்கு |
| வான்கொடுத்து | வீரஸ்வர்க்கத்தைக் கொடுத்து |

வையம் — பூமியானது
ஐவர் — பஞ்சபாண்டவர்களுடைய
பாலதாம் — பக்கத்ததாம்படி
சீர் — புகழை
மிகுத்த — அதிகமாகப்பண்ணின
நின்னலால் — உன்னையொழிந்த
ஓர் தெய்வம் — ஒரு தேவதையை
நான் — "ஆஶ்ரிதபக்ஷபாதீ" என்றறிந்தநான்
மதிப்பனே — ஆஶ்ரயணீயமாகநினைப்பேனோ? (அகூ)

அவ;—எண்பத்தொன்பதாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளையும் மேன்மைகுலையாதபடி நின்று ரக்ஷித்தவளவன்றிக்கே, (க) "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:- க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்சபாண்டவா:" என்கிறபடியே பாண்டவர்களுக்கு தூத்யஸாரத்யங்களைப் பண்ணித்தாழநின்று ஸத்யஸங்கல்பனாய்க்கொண்டு அவர்கள் விரோதிவர்க்கத்தை அழியச்செய்து ராஜ்யத்தைக் கொடுத்த உன்னையொழிய வேறொருதைவமுண்டென்று நான் நினைத்திருப்பனோ வென்கிறார்.

வ்யா.—(பார்மிகுத்தபாரம்) ஸர்வம்ஸஹையான பூமி தன்னால் பொறுக்கவொண்ணாதென்று சொன்ன மிக்கபாரத்தை. (உ) "காலநேமிர்ஹதோயோஸௌ - காலநேமிர்ஹதோயோஸௌ" என்று தொடங்கி, (௩) "ததாந்யே ச மஹாவீர்யா: ந்ருபாணாம் பவநேஷ்வதே । ஸமுத்பந்நா துராத்மாநஸ் தாந் ந ஸங்க்யாதுமுத்ஸஹே - ததாந்யேசமஹாவீர்யா ந்ருபாணாம்பவநேஷ்வதே - ஸமுத்பந்நா துராத்மாநஸ்தாந்நஸங்க்யாதுமுத்ஸஹே" என்றாளிறே. (முன்னெழிச்சுவானருச்சுனன் தேர்மிகுத்து) தான் முற்பாடனாய் அத்தைத்தவிர்ப்பிக்கைக்காக அர்ஜுநனுடையதேரைப்பார்த்தப்பார்த்தவிடமெல்லாம்நடத்தி, அர்ஜு

(க) பார-த்ரோ-கஅ௩. (உ) வி-பு-௫-க-உ௩. (௩) வி-பு-௫-க-உ௫.

நனுக்குத் தான் முற்பாடனாகையாவது - (க) "விஸ்ருஜ்ய ஸஸரம் சாபம் - விஸ்ருஜ்யஸஸராஞ்சாபம்" என்று இருந்த அர்ஜுநனை (உ) "கரிஷ்யே வசநம் தவ - கரிஷ்யே வசநந்தவ" என்னப்பண்ணுகையும், யுத்தமத்யத்தில் விஜயபரிகரங்களில் உத்க்ருஷ்டபரிகரம் தேரென்று எதிரிகள் மதிக்கும்படி தேரைநடத்துகையும், ஆயுதமெடுக்கக் கடவதன்றாக ப்ரதிஜ்ஞை பண்ணுகையாலே ஸாரத்யவேஷத்திலே அதிகரித்துத் தேரைக்கொண்டே விஜயவ்யாபாரங்களடையப் பண்ணினானாய்த்து. (மாயமாக்கி) ஆஸ்சர்யங்களை யுண்டாக்கி. அதாவது - பகலை இரவாக்குகையும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும். ஆஸ்ரிதார்த்தமாகக் காலவ்யவஸ்தையையும் தன் ஸ்வபாவ வ்யவஸ்தையையும் அழித்தானென்கை. (நின்றுகொன்று) அர்ஜுநன் செய்தானென்னும்படி முகந்தோற்றாமே நின்று எதிரிகளைக்கொன்று,

(வென்றிசேர்மாரதர்க்குவான்கொடுத்து) "நாம் யுத்தோந்முகரானவன்று விஜயமும் நம்மது, அத்தாலே பூமியும் நம்மதாகக் கடவது" என்றிருந்த மஹாரதரான துர்யோதநாதிகளென்ன, அவர்களுக்குத் துணையாய்வந்த த்ரோணாதிகளென்ன, இவர்களுக்கு வீரஸ்வர்க்கத்தைக் கொடுத்து, (வையமைவர்பாலதாம் சீர்மிகுத்த நின்னலால்) அவர்களுக்கு "ஒருபதந்யாஸமும் கொடோம், ஸாகல்யேந எங்களது" என்ற பூமியைப் பாண்டவர்கள் பக்கலிலேயாம்படி புகழைமிகுத்தவுன்னையொழிய. (சீர்) புகழ். பாண்டவர்கள் விஜயிகளாய் பூமியை ஸாகல்யேந லபித்தார்களென்னும்படி புகழைமிகுத்த வென்னுதல்; "ஆஸ்ரிதபக்ஷபாதி" என்னும் தன் புகழைமிகுத்தானென்னுதல். (ஓர்தெய்வம் நான் மதிப்பனே) ஆஸ்ரிதபக்ஷபாதி யென்றறிந்த நான் வேறொரு தைவத்தை ஆஸ்ரயணீயமாக நினைப்பேனோ. .... (அக)

---

(க) கீ-க-சஎ. (உ) கீதை-கஅ-எங.

மூ.—குலங்களாயவீரிரண்டிலொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள் நாவிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்புனிதநின்
இலங்குபாதமன்றிமற்றோர் பற்றிலேனெம்மீசனே. (௯௦)

---

தொண்ணூறும்பாட்டு. (குலங்களாயவித்யாதி)

(இப்பாட்டிலே "பொறியிலேன்" என்கிற பதம் துடங்கிக் கீழ்நோக்கிக் காரணபரம்பரையைச் சொல்லுகிறதென்றும், "குலங்களாய" என்று துடங்கி-பாடக்ரமத்தாலே கார்யபரம்பரையைச் சொல்லுகிறதென்றும் இரண்டு நிர்வாஹம்).

அதில் முந்தினது-

பொறியிலேன் ஶப்தாதிவிஷயங்களிலே அகப்பட்டுநின்றேன்; (பொறியென்று- யந்த்ரமாய், மத்ஸ்யாதி க்ரஹணயந்த்ரஸத்ருஶமான ஶப்தாதிவிஷயங்களைக் காட்டுகிறது. "இல்" என்று-இடமாய், அதிலே அகப்பட்டேனென்கிறது.)

புலன்களைந்தும் (அதுக்கடியாக) பஞ்சேந்த்ரியங்களையும்

வென்றிலேன் ஜயித்திலேன்;

நலங்களாய (அதுக்கடியாக)சேதநருடைய குணாநுகுணமாக நல்வழிநடத்துகிற

நல் நன்றான

கலைகள் வேதங்கள்

நாவிலும் நாவிலும்

நவின்றிலேன் ஶீலிக்கப்பெற்றிலேன். (நவிலுகை-பயிலுகை.)

ஈரிரண்டாய (அதுக்கடியாக) நாலுவகைப்பட்டிரு
க்கிற
குலங்கள் வர்ணங்களில் வைத்துக்கொண்டு
ஒன்றிலும் ஒரு வர்ணத்திலும்
பிறந்திலேன் பிறக்கப்பெற்றிலேன்;
இது மூந்தின நிர்வாஹம்.

(இனி யதாபாட நிர்வாஹம்;-ஸப்தார்த்தம் அதுவாயி
ருக்கச்செய்தே, ஒன்றிலும் பிறந்தி
லேன், பிறவாமையினாலே நாலிலும் ந
வின்றிலேன்; நவிலாமையாலே புல
ன்களை வென்றிலேன், வெல்லாமை
யினாலே பொறியிலகப்பட்டேனெ
ன்று கண்டு கொள்வது).

புனித விஷயப்ராவண்யத்தாலே அஸுத்தரா
யிருக்குமவரையும் ஸுத்தராக்க
வல்ல ஸுத்தியுடையவனே:
நின் உன்னுடைய
இலங்கு ப்ரகாஸிக்கிற
பாதமின்றி திருவடிகளையொழிய
மற்றோர்பற்று வேறொரு ஜீவநோபாயம்
இலேன் உடையவனல்லேன்;
எம் அகிஞ்சநராயும் அகதிகளாயுமிருக்கிற
வெங்களுக்கு
ஈசனே நிர்வாஹகனானவனே
[எமீசனே! குலங்களாயவென்று தொடங்கி அந்வயம்]

அவ.—தொண்ணூறும்பாட்டு. உன்னையொழிந்தாரொருவர் ஆஸ்ரயணீயரல்லரென்று தம்முடைய அநந்யகதித்வம் சொன்னார் - கீழ்; இப்பாட்டில் - ஆஸ்ரயணீயர் தேவரீரேயானாலும் தேவரீரை லபிக்கைக்கு தேவரீர்திருவடிகளையொழிய என்பக்கல் உபாயமென்று சொல்லலாவ தில்லையென்று தம்முடைய ஆகிஞ்சந்யத்தை யருளிச் செய்கிறார்.

வ்யா.—( குலங்களாயவித்யாதி ) இப்பாட்டு "பொறியிலேன்" என்கிற பதந்தொடங்கிக் கீழ்நோக்கிக் காரணபரம்பரையாலேயும், பாடக்ரமத்தாலே கார்யபரம்பரையாலேயும் இரண்டுமுகமாக நிர்வஹித்துப்போரும். நம்மை லபிக்கைக்கு உம்முடைய பக்கலுள்ளதென்னென்ன; ஸம்ஸாரபீஜமான ஶப்தாதி விஷயங்களிலே அகப்பட்டு நின்றேன், இதிறேஎன்பக்கலுள்ளது. "பொறி" என்று - ஶப்தாதிவிஷயங்களைச் சொல்லுகிறது. வறள் நாற்றத்தைக்காட்டி அகப்படுத்திக் கொள்ளுமதாகையாலும், அகப்பட்டால் பின்பு புறப்பட விரகற்றிருக்கையாலும், விநாஶத்தோடே தலைக்கட்டுகையாலும், ஶப்தாதிவிஷயங்களை புருஷார்த்தமென்று ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிற ஸம்ஸாரத்திலே இது அகப்படத்தகாதென்றறிந்த நீர் அவ்விஷயங்களிலே இந்த்ரியங்கள் போகாமே நோக்கமாட்டிற்றிலீரோ வென்ன; (புலன்களைந்தும் வென்றிலேன்) இந்த்ரியங்கள் ஸ்வவஶத்திலேயென்னைக்கொடுபோக அவையிட்ட வழக்காய்த்திரிந்தேனித்தனைபோக்கி, அவற்றிலே ஓரிந்த்ரியத்தை நியமிக்க க்ஷமனாய்த்திலேன். (க) "இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:- இந்த்ரியாணிப்ரமாதீநிஹரந்திப்ரஸபம்மந:"என்னக்கடவதிறே.

அரு;—தொண்ணூறும் பாட்டு. (பாடக்ரமம்) பொறியிலேன்தொடங்கி பதம்பேறியாமல் கீழ்நோக்கி அவரோஹணமாகவருகை. (கார்யபரம்பரையாவது)ஒன்றினுடையகார்யம் ஒன்றினுக்காகக்கொண்டு அடிதொடங்கி மேல்நோக்கி ஆரோஹணமாகப்போருகை.

(க) கீதை-உ-௬௦.

(க) "யமேஷ்ண வாவ வநஃதி - தர்மேண பாபமபநுததி" என்றும், (உ) "ஶாந்தோ தாந்த உபரதஃ" என்றுமித்யாதிகளாலே வேதங்கள் இந்த்ரியஜயத்துக்கு வழிசொல்லாநின்றன, அவ்வேதங்களிலே யிழியமாட்டிற்றிலீரோ வென்ன;

(நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவின்றிலேன்) நலங்களாய கலைகளாவது - (ந) "த்ரைகுண்யவிஷயா வேதாஃ- த்ரைகுண்யவிஷயாவேதாஃ" என்கிறபடியே சேதநருடைய குணாநுகூலமாக நின்றநின்ற நிலைகளிலே நல்வழிபோக்கும்படி மாதாபித்ருஸஹஸ்ரங்களிற்காட்டிலும் வத்ஸலதரங்களாகை. நற்கலைகளாவது - மோக்ஷ தத்ஸாதநங்களிலே நோக்கையுடைத்தாகை. இப்படிப்பட்ட நாலுவேதங்களிலும் ஶீலிக்கப் பெற்றிலேன். நவிலுதல்—பயிலுதல். (கலை) வேதம். ப்ரதமத்திலே அத்யயநம் பண்ணினார்க்கிறே தத்பலமான அநுஷ்டாநம், அதிறே இந்த்ரிய ஜயத்துக்கு ஸாதநம். ஆக இப்படி இந்த்ரியஜயத்தில் நான் தூரஸ்தனென்கை.

இந்த இந்த்ரியஜயத்துக்கு ப்ரதமாநமான அத்யயநாதிகளில் இழியா தொழிவா னென்னென்னில்; (குலங்களாயவீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன்) உபேக்ஷையாலே இழியாதொழிந்தேனல்லேன், அயோக்யனாகையாலே யிழியப் பெற்றிலேன். அத்யயநம் த்ரைவர்ணிகாதிகாரமிறே. சதுர்த்தவர்ணத்திலேஜநித்தவனுக்கும் பாகயஜ்ஞாத்யதிகாரமுண்டு; த்ரைவர்ணிக ஶுஶ்ரூஷணத்திலே அதிகாரமுண்டு, அத்தாலே விரோதிபாபம் போகையாலே இந்த்ரியஜயத்துக்கு ஸாதநமாகலாம்; அந்நாலுவர்ணத்திலும் பிறக்கப்பெற்றிலேன்; இவ்வுத்க்ருஷ்ட வர்ணத்திலே ரிஷிபுத்ரராய்த்திருவவதரித்த விவர் நாலு வர்ணத்திலும் பிறந்திலே னென்பானென்னென்னில்; யதுகுலத்

(அதிகாரமிறே) "நாலுவர்ணத்திலுமென்பானென்னென்ன" என்றுபூரிப்பது. (பாகயஜ்ஞம்) யாகத்துக்கு ப(வி) சிக்கைக்கு காஷ்ட்டாதி

(க) தை-நா-எசு. (உ) ப்ருஹ-௬ச-உ௩. (௩) கீதை-உ-சரு.

திலேவந்தவதரித்தக்ருஷ்ணன், வளர்ந்தருளின கோபகுலத்தையே தனக்குக்குலமாக நினைக்திருந்தாப்போலே இவரும், வளர்ந்தருளினபடியைநினைத்தருளிச் செய்கிறார். (க) "மொவர்வொயாஉவம்வம்ஸம்ஐஜுஹுஸவிஷ்யதி - கோபாலோயாதவம் வம்ஸம் மக்நமப்யுத்தரிஷ்யதி" என்று அவதரித்தகுலம் ‡ கோபகுலம், ரக்ஷ்யகுலம் யதுகுலமாகச் சொல்லாநின்றதிறே. (௨) "ஸவிதாயஸ்துவொஷகஃ- ஸபிதாயஸ்துபோஷகஃ" என்னக்கடவதிறே.

அதவா, நாலுவர்ணத்திலும் எனக்கந்வயமில்லாதபடியாலேத்ரைவர்ணிகர்க்கே விஹிதமான அத்யயநத்துக்கு அயோக்யனானேன், அத்யயநம் பண்ணப்பெறுமையாலே வேதார்த்தஜ்ஞாநமில்லையாய், அதின்பலமான வேதார்த்தாநுஷ்டாநமில்லாமையாலே இந்த்ரியஜயம் பண்ணப்பெற்றிலேன். அஜிதேந்த்ரியனாகையாலே விஷயங்களின்கையிலே அகப்பட்டுநின்றேனென்கிறாரென்னவுமாம்.

ஸம்ஸாரபீஜமான விஷயாந்தரப்ராவண்யமொழிய உம்முடைய பக்கலொரு முதலில்லையாகில், உமக்கு உஜ்ஜீவநஹேதுவாக நீர்நினைத்திருந்ததென்னென்னில்; (புனித) விஷயாந்தர ப்ராவண்யத்தாலே † (அநுஷ்டாந கார்யமாகத்) தந்தாம்பக்கல் அஸக்தராய்த் தந்தாம்பக்கல்ஸக்திஹேதுவின்றிக்கே யிருக்கும் குறைவாளரையும் ஸ்வஸ்பர்ஸத்தாலேஸக்தராக்கவல்லஸக்தியையுடையவனல்லையோ, அதாவது—உத்க்ருஷ்டஜந்மமென்ன, வேதஸ்பர்ஸமென்ன, வேதார்த்தாநுஷ்டாநமென்ன, இவற்றினுடையஸ்தாநத்திலேபகவதநுக்ரஹம் நின்றுவிஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்துத்தருகை. (நின்னிலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன்) - இருட்டு மிக்க தனையும் விளக்கொளி வீடுபெறுமாபோலே குறைவாளர்க்கு முகங்கொடுக்கையாலேவிளங்காநின்றுள்ளதிருவடிகளையொழிய

(க) வி-பு-ரு-௨௦-௬௯. (௨)
‡ கோபாலகுலமாகச் சொல்லாநின்றதிறே. † குண்டலித மதிகபாடம்.

மூ.—

பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்டு
எண்ணிலாவரக்கரை நெருப்பினால் நெருக்கினாய்
கண்ணலாலோர்கண்ணிலேன் கலந்தசுற்றம்மற்றிலேன்
எண்ணிலாதமாயநின்னை யென்னுள்நீக்கலென்றுமே. (கூக)

---

வேறு ஜீவநோபாயத்தை யுடையேனல்லேன். (எம்மீசனே) வேறுமுதலின்றிக்கே அக(ம)திகளான எங்களுக்குநிர்வாஹகனானவனே. (கூ0)

தொண்ணூற்றோராம்பாட்டு. (பண்ணித்யாதி.)

| | |
|---|---|
| பண் | "குறிஞ்சி, காந்தாரம், காமரம்" இத்யாதியான பண்ணோடே |
| உலாவு | சேர்ந்தும் |
| மென் | ம்ருதுவாயுமிருக்கிற |
| மொழி | பேச்சையுடையளாய் |
| படை | வாளாகிற வாயுதம் போன்றதாய் |
| தடம் | இடமுடைத்தான |
| கணாள்பொருட்டு | கண்களையுடைய ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் பொருட்டு |
| எண்ணிலா | அஸங்க்யாதரான |
| அரக்கரை | ராக்ஷஸரை |
| நெருப்பினால் | ஸராக்நியாலே |
| நெருக்கினாய் | நெருக்கின நீ |
| கண் | எனக்கு நிர்வாஹகன்; |
| அலால் | உன்னையன்றியிலே |
| ஓர் கண்ணிலேன் | வேறு நிர்வாஹகரையுடையேனல்லேன்; |
| கலந்த | நெஞ்சு பொருந்தின |
| மற்றுசுற்றமிலேன் | வேறு பந்துவர்க்கத்தையுடையேனல்லேன்; |

எண்ணிலாத அஸங்க்யேயமான
மாய ஆஸ்சர்ய ஸக்தியுடையவனே!
நினைன ஸர்வஸக்தியான வுன்னை
என்னுள் அகிஞ்சநனை வென்பக்கல் நின்றும்
என்றும் நான் கலங்கினவன்றும்
நீக்கல் அகற்றுதொழியவேணும். (கூக)

அ. — தொண்ணூற்றோராம்பாட்டு. (க) "ஸாஷூஹவூபொகூரி-ஸாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி" என்றுபேறு உம்மதாலுல் உம்முடையவிரோதி நிவ்ருத்திக்குநீரேகடவீராகவேண்டாவோ, "நின்னிலங்கு பாதமன்றி மற்றோர்பற்றிலேன்" என்கிறதெத்தாலே யென்ன; ப்ராங்யாயத்தாலே. அதென்னென்னில்; அஸோகவநிகையிலேயிருந்த பிராட்டி தேவரீரை லபிக்கைக்கு ராக்ஷஸவதத்திலே அவள்யத்நம் பண்ணுமன்றன்றோநான் என்னுடைய விரோதியைப் போக்குகைக்கு யத்நம்பண்ணுவது, ஆனபின்பு அநந்யகதியாய் அகிஞ்சநனை என்னை ஸ்வரக்ஷணத்திலே மூட்டி அகற்றுதொழிய வேணுமென்கிறார்.

வ்யா.— (பண்ணுலாவுமென்மொழி) பண்ணோடேசேர்ந்த ம்ருதுவான பேச்சையுடையவள். (உ) "ஜயாஜயாஸாவாகிரோஹஜஹாஜீ-மதுராமதுராலாபாகிமாஹமமபாமிநீ" என்று சக்கரவர்த்தித்திருமகன்வாய்ப்புலத்தும்படியானவார்த்தைப்பாடுடையவளிறே. (ந) "பண்ணை வென்றவின்சொல் மங்கை" என்றவளிறே. (படைத்தடங்கணுள் பொருட்டு) வாள் போலே ஒளியையும் இடமுடைமையையு முடைத்தான திருக்கண்களையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகள் பொருட்டு. (ச) "நஜீவெயம் க்ஷணஜவிவிநா தாஜஸிதேக்ஷணாழ - நஜீவேயம் க்ஷணமபிவிநா தாமஸிதேக்ஷணாம்" என்று அவர் வ்யதிரேகத்தில் தரிக்கமாட்டாத கண்களிறே. ஆக, எதிர்த்தலையை "அகலகில்லேன்" என்னப்பண்ணும் பேச்சழகையும் கண்ணழகையு

(க) பூர்வமீமாம்ஸை-ந-எ-கஅ. (உ) ரா-ஸா-கூகூ-கஅ. (ந) கம். (ச) ரா-ஸா-கூகூ-கO.

முடையவளென்கை. தம்முடைய வெறுமைசொல்ல இழிந்தவர் பிராட்டியுடைய ஏற்றங்களைச் சொல்லுகிறது, நிஷ்க்ருஷ்டமான இவ்வாத்மஸ்வரூபம் பிராட்டியோபாதியும் ஸ்ரீசௌஸ்துபத்தோபாதியும் விலக்ஷணமென்கைக்காக. ஜ்ஞாநம்பிறந்த பின்பு பிராட்டி அசோகவநிகையிலேயிருந்தாப்போலே, அஸஹ்யமிறே சேதநனுக்குஶரீரம்.

(எண்ணிலாவரக்கரை) அவளைப்போலே விரோதிகள் அஸங்க்யாதராகவேணுமோ, அஞ்சாதொழிலாகாதோ. (நெருப்பினால் நெருக்கினாய் கண்) ஶராக்நியாலே அழியச்செய்தநீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். (க) "யதாராகவநிர்முக்தஶ்ஶரஃ - யதாராகவநிர்முக்தஶ்ஶரஃ" என்கிறபடியேஶரஸ்தாநீயனானதிருவடியையிட்டு லங்கையைதஹித்து, ராக்ஷஸரைக் கண்கலங்கும்படி பண்ணின நீ எனக்கு நிர்வாஹகனென்னுதல். இத்தால் - என்னுடைய விரோதிவர்க்கத்தையும் பஸ்மமாகப் பண்ணவேணுமென்கை. (அலாமையார் கண்ணிலேன்) (உ) "லோகாநாம் த்வம் பரோதர்மஃ - லோகாநாம்த்வம்பரோதர்மஃ" என்கிறதேவரீரையொழிய வேறொரு நிர்வாஹகரை யுடையேனல்லேன். (ங) "தயரதற்குமகன்றன்னை யன்றி மற்றிலேன்றஞ்சம்" என்கிறார். (ச) "நத்வாகுர்மி தஶக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹதேஜஸா - நத்வாகுர்மி தஶக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹதேஜஸா" என்று - பிராட்டிக்கு ஶக்தியுண்டாயிருக்க, ப்ராப்தயில்லாதே தவிர்ந்தாள்; எனக்கு ஶக்தியுமில்லையென்கிறார். (கலந்தசுற்றம் மற்றிலேன்) நெஞ்சுக்குப்பொருந்தின பந்துவர்க்கத்தை வேறு உடையேனல்லேன். உத்பாதகரான மாதா பிதாக்கள் "தைவம் ரக்ஷிக்கிறது" என்று காட்டிலேவிட்டுப்போனார்கள்; வளர்த்தவர்களை (ரு) "பிதரம்மாதரம்தாராந் - பிதரம்மாதரம்தாராந்" என்கிறபடியே நான்விட்டேன். (சு) "ஹித்வாஹித்வாவஹிதார்யாவஸ் - ப்ராதா பர்த்தாச பந்துஶ்சபிதாச மமரா

---

(க) ரா-ஸு-க. (உ) (ங) சு-அ தி-வாய்-ங. (ச) ரா-ஸு-உஉ-உ0. (ரு) ஶரணகதிகயம். (சு) ரா-அ-ருஅ-ஙக.

௯௨—விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற்கண்மாதரார்
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய வேலைநீர்
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்தநின்றனக்
கடைக்கலம்புகுந்தவென்னை யஞ்சலென்னவேண்டுமே ()

கவ:" என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் தேவரீரே யென்கிறார். பிராட்டிக்குத் தனியிருப்பிலே திருவடிவந்து முகங்காட்டினார், அப்படியேயிருப்பதொரு குளிர்ந்தவிழியும் தேவரீரையொழிய எனக்கில்லை யென்கிறார். ஜநககுலத்தில் பிறந்த ஆபிஜாத்ய முண்டு அவளுக்கு. "குலங்களாயவீரிரண்டிலொன்றிலும்பிறந் திலேன்" என்றீரே நீரென்ன;

(எண்ணிலாதமாய) அஸங்க்யேயமான ஆஸ்சர்ய ஶக்தியையுடையவனல்லையோ. இத்தால்-நிஹீநஜந்மாவாய் ஶாஸ்த்ராதிகாரியுமன்றிக்கே யிருந்துள்ள பக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்த ஶக்தியன்றோ தேவரீருடைய ஶக்தியென்கை. ராவணனும் குறியழியாதே யிருக்க இக்கரையிலே அவன் தம்பியை லங்காராஜ்யத்துக்கு அபிஷேகம் பண்ணிற்று அவன் ஜந்மம்பார்த்தோ. (க) †"ஸுஹ்ருஜ்ஜ்ஞாராஜயஜ்ஞா - அபிஜ்ஞோராஜதர்மாணும்" என்கிறபடியே ‡அவன் ஜ்ஞாநாதிகனன்றோவென்ன, * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிற்று ஜ்ஞாநாஜ்ஞாநங்களில் உள்மானம் புறமானம் பார்த்தோ? (நின்னையென்னுள் நீக்கல்) ஸர்வஶக்தியாயிருந்துள்ள வுன்னை, அகிஞ்சநனாயிருந்துள்ள என்பக்கல் நின்றும், க்ஷுத்ரமான உபாயாந்தரங்களைக்காட்டி யகற்றாதொழியவேணும். (என்றுமே) நான் கலங்கினவன்றும் என்னை விடாதொழியவேணும். .... .... ... .... (கூக)

தொண்ணூற்றிரண்டாம் பாட்டு. (விடைக்குலங்களித்யாதி)

[முன்வேலை நீர்படைத்து, அதில்கிடந்து, கடைந்து அடைத்து, விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேல்கண்மாதரார் கடிக்கலந்த தோள்புணர்ந்தகாலியாய

(க) ரா-யு- † (பா) ஸுஹ்ருஜ்ஜ்ஞா ‡ (பா) அவள் ஜ்ஞாநாதிகை.

நின்றனக்கு அடைக்கலம் புகுந்த வென்னை அஞ்சலென்ன வேண்டுமே] என்றந்வயம்.

| | |
|---|---|
| முன் | ஆதிகாலத்திலே |
| வேலை | எல்லையான, அன்றிக்கே - திரைக்கிளர்த்தியையுடைய |
| நீர் | ஏகார்ணவஜலத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| அதில்கிடந்து | தந்தேகதேஶமானக்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி |
| கடைந்து | தேவர்களுக்காக அந்தக்ஷீராப்தியைமதநம்பண்ணி |
| அடைத்து | (அந்ததேவர்களுக்கு விரோதியான ராவணநிரஸநார்த்தமாக) ஸேதுபந்தத்தாலே அந்தக்ஷீராப்திஸஜாதீயமான கடலைஅடைத்து |
| விடை | எருதுகளுடைய |
| குலங்கள் | நாநாவர்ணங்களான |
| ஏழடர்த்து | ஏழையும்நெரித்து |
| வென்றி | ஜயஶீலமான |
| வேல் | வேல்போலேயிருக்கிற |
| கண் | கண்களையுடையளாய் |
| மாதரார் | யௌவநாரம்பத்தை யுடையளானநப்பின்னைப் பிராட்டியுடைய |
| கடி | செவ்வியோடும் பரிமளத்தோடும் |
| கலந்த | சேர்ந்த |
| தோள் | தோள்களை |
| புணர்ந்த | ஸம்ஶ்லேஷித்த |
| காலியாய | பசுக்களுக்கு நிர்வாஹகனான விடையனானவனே; |

| | |
|---|---|
| நின்றனக்கு | உனக்கு |
| அடைக்கலம்புகுந்த | ரக்ஷணீயத்வேந பரமென்றுபற்றின |
| என்னை | அநந்யஶரணனானவென்னை |
| அஞ்சலென்ன வேண்டுமே | "பயப்படாதேகொள்" என்றொருவார்த்தை யருளிச் செய்யவேணும். (௯௨) |

அவ;—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு "நின்னையென்னுள் நீக்கல்" "என்றீர், நாம் உம்மையகலாதொழிகைக்குநம்மளவிலே நீர்செய்ததென், நாம் உமக்குச் செய்யவேண்டுவதென்?" என்னச் நிருபாதிகஶரண்யரான தேவரீர்திருவடிகளிலே ப்ரபந்நனான என்னை "உன்னுடையகார்யம் எனக்கு ப(ஹ)ரம், நீ பயப்பட வேண்டா" என்று என் பயந்தீர (க)"மோக்ஷயிஷ்யாமி-மாஶுச:" என்னவேணுமென்கிறார்.

வ்யா.—(விடைக்குலமித்யாதி) "முன் - வேலைநீர்படைத்து, அதிற்கிடந்து – கடைந்து – அடைத்து – விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய-நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை அஞ்சலென்ன வேண்டும்" என்றந்வயம். (முன்வேலைநீர்படைத்து) (௨)"ஸிஸ்ருக்ஷுர்விவிதா:–அப ஏவஸஸர்ஜாதௌ" என்கிறபடியே ஏகார்ணவ ஸ்ருஷ்டியைப்பண்ணி. "வேலைநீர்" என்று - எல்லையான கடலென்னுதல்; திரைக்கிளர்த்தியையுடைத்தான கடலென்னுதல். "வேலை" என்று - எல்லையும், திரையும். "நீர்" என்று - கடல். (அதில்கிடந்து) அதிலே கிடந்து. "ஸ்ருஷ்டமான ஜகத்திலே சேதநர்க்கு ஆஶ்ரயணருசிபிறந்தவன்று ஶரண்யரான நாம் தூரஸ்த்தராக வொண்ணாது" என்று க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி. (கடைந்து) அக்கிடை பலித்து தேவர்கள் ஐஶ்வர்யத்தை யிழந்து, (௩) "ஶரணம் த்வாமநுப்ராப்தா: ஸ

(க) கீ-௧௮-௬௬. (௨) மநு-௧-௮. (௩) வி பு ௧-௯.

த்ராதேவதாகணா: - ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தாதேவதாகணா:" என்கிறபடியே ஶரணம்புகுர; அவர்கள் இழந்தவற்றை, கடலைக்கடைந்து அக்கடலிலே யுண்டாக்கிக்கொடுத்தவனென்கை, (அடைத்து) அந்த தேவதைகள் குடியிருப்பழியும்படி அதிக்ரமத்திலே நடந்த ராவணாதி கண்டக நிரஸநார்த்தமாக, தஶரதாத்மஜனாய் வந்தவதரித்து லவணார்ணவத்தையடைத்து.

(விடைக்குலமித்யாதி) ப்ரஹ்மாதிகளுக்கு ஶரண்யனாய் அவர்களாபத்திலே உதவினவளவன்றிக்கே, தாழ்ந்தார்க்கு முகம்கொடுக்கைக்காக கோபஸஜாதீயனாய் வந்தவதரித்து ரக்ஷித்தபடி சொல்லுகிறது மேல்; (விடைக்குலங்களேழடர்த்து) விடையேழடர்க்கென்னுதல், விடைக்குலமடர்த்தென்னுதல் செய்யாதே, இப்படி சொல்லுகிறது - (க) "சாதுர்வர்ண்யம்மயாஸ்ருஷ்டம் - சாதுர்வர்ண்யம்மயாஸ்ருஷ்டம்" என்கிறபடியே கோஜாதியிலும் வர்ணபேதமுண்டாகையாலே நாநாவர்ணமான ரிஷபங்களேழையுமடர்த்து. நப்பின்னைப் பிராட்டியோட்டை போகத்துக்கு இடைச்சுவராகையாலே நாநாஸ்வபாவங்களான விடையேழையுமூட்டியாக நெரித்து. (குலம்) வர்ணம். "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்றாரிறே.

(வென்றிவேல்கண் மாதரார் கடிக்கலந்த தோள்புணர்ந்த காலியாய) (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ - ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றும், (ங) "தூதுசெய்கண்கள்" என்றும்சொல்லுகிறபடியே ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும் தேவரீரையும் தோற்பிக்கவல்ல நோக்கையுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய பரிமளிதமான தோளையநுபவித்து அவளுக்குப்ரியமாக ரக்ஷகாபேக்ஷையுடைய பசுக்களுடைய ரக்ஷணமே ப்ரயோஜநமாயிருக்குமவனே. (ச) "ஸர்வகந்த: - ஸர்வகந்த:" என்கிற அவன் திருமேனியையும் பரிமளிதமாக்கும் தோளென்கை (ரு) "யுவதிஸ்சகுமாரிணீ - யுவதிஸ்சகுமாரிணீ" என்கிறபடியே ஸ்வ

---

(க) கீ- (உ) ஜித-க-க. (ங) தி-வாய்-கூ-கூ-கூ. (ச) சாந்தோ-ங-கச-ச-

ஸத்ருசமான பருவத்தை யுடையவளானையாலே செவ்வியையுடைய தோளென்னவுமாம். (வென்றிவேல்கண்) வென்றியைவிளைக்கும் வேல்போலே நோக்கையுடைய கண். "கடி" என்று-செவ்வியும், நாற்றமும்.

(நின்றனக்கடைக்கலம்புகுந்தவென்னை) (௧) "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் - யோப்ரஹ்மணம் விததாதிபூர்வம் - ... முமுக்ஷுர்வைஶரணமஹம் ப்ரபத்யே" என்று ஜகத்காரணவஸ்து ஶரண்யமென்னுமிடம் ஶ்ருதிஸித்தம். (௨) "ஶரணம் த்வாமநுப்ராப்தா: - ஶரணந்த்வாமநுப்ராப்தா:" என்றும், (௩) "... லோகாநாம் த்வம்பரோ தர்ம:" என்றும் வ்யூஹவிபவங்களில் ஶரண்யதை ஆப்தவாக்ய ஸித்தம். அங்ஙனன்றிக்கே, (௪) "மாமேகம் ஶரணம் வ்ரஜ - மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்று தேவரீர் திருவடிகளிலே ப்ரவணனான என்னை. (என்னை) அநந்யஶரணனான என்னை. அடைக்கலம் புகுருகையாவது - என்கார்யம் தேவரீர்க்கே பரமென்று பற்றுகை. (௫) "... - தவைவாஸ்மிஹிபர:" என்னக்கடவதிறே. (அஞ்சலென்னவேண்டுமே) தேவரீர் பூர்த்தியையும் என்சிறுமையையும் இடைச்சுவரான் விரோதியின் கனத்தையும் பார்த்து நானஞ்சாதபடி (௪) "மாஶுச: - மாஶுச:" என்று ஒருவார்த்தைஅருளிச்செய்ய வேணும். (௪) "மாமேகம் ஶரணம் வ்ரஜ - மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்றதேவரீர்க்கு, (௪) "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி") மாஶுச: - மாஶுச:" என்கைஅரிதோ? .... (௯௨)

அரு'—தொண்ணூற்றிரண்டாம் பாட்டு. (இழந்தவற்றை) இழந்த பதார்த்தத்தை. (கடிக்கலந்த) கலக்கை - எங்கும்வ்யாபிக்கையாய், அத்தால்மிகுதிசொல்லுகிறது, " நின்றனக்கு " என்கையாலே வ்யூஹவிபவாந்தரங்களைவ்யாவர்த்திக்கிறது. ... ... ... (௯௨)

(௧) ஶ்வே-௬-௧௮. (௨) வி-பு-௧. (௩)
(௪) கீ ௧௮-௬௬. (௫) ஸ்தோ-ரத்-

மூ.—சுரம்பரங்கு தண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே
விரும்பிநின்றிறைஞ்சுவேற் கிரங்கரங்கவாணனே
கரும்பிருந்தகட்டியே கடற்கிடந்த கண்ணனே
இரும்பரங்கவெஞ்சரந் துரந்தவில்லிராமனே. (கூரு)

தொண்ணூற்றுமூன்றும் பாட்டு. (சுரும்பித்யாதி).

| | |
|---|---|
| கரும்பு | ஸர்வதோமதுரமாய் |
| இருந்த | ஸ்வாபாவிகமானரஸ்யதையையுடைய |
| கட்டியே | ஶர்க்கரைபோலே போக்யனானவனே; |
| கடல் | க்ஷீராப்தியிலே [(கட்டி-கன்னல்) |
| கிடந்த | கண்வளர்ந்தருளுகிற |
| கண்ணனே | ஸுலபனானவனே; |
| இரும்பு | இரும்புபோலே த்ருடமான எதிரிகள் |
| அரங்க | அழுந்தும்படி [ஶரீரத்திலே |
| வெஞ்சரம் | அக்நிபோன்ற பாணங்களை |
| துரந்த | நடத்தின |
| வில் | தநுஸ்ஸையுடைத்தான |
| இராமனே | தஶரதாத்மஜனானவனே; |
| அரங்கவாணனே | கோயிலுக்கு நிர்வாஹகனானவனே! |
| சுரும்பு | வண்டுகள் |
| அரங்கு | படிந்திருக்கிற |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாயானது |
| துதைந்து | ஸ்பர்ஶித்து |
| அலர்ந்த | விகஸித்துவருகிற |
| பாதமே | உன்னுடைய திருவடிகளையே |
| விரும்பி | ஸ்வயம் ப்ரயோஜநமாகருசித்து |
| நின்று | ஆத்மாந்தமாக நின்று |
| இறைஞ்சுவேற்கு | அநுபவிக்கையிலே யிழிந்த வெனக்கு |
| இரங்கு | க்ருபைபண்ணியருள வேணும் (கூரு) |

அவ;—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு. "அடைக்கலம் புகுந்தவென்னை யஞ்சலென்னவேண்டுமே" என்று - என்பயங் கெட (௧) "ஶாஸ்த்ரவக்ஷ-மாஶுச:" என்னவேணுமென்றார்-கீழ்; "அவ்வளவே அமையுமே" என்ன "உபாயாந்தரங்களைக்காட்டி என்னை அகற்றுதொழிகைக்காகச்சொன்ன வார்த்தையன்றோ அது; தேவரீருடையநிரதிஶயபோக்யதையைக்கண்டு அநுபவிக்க ஆசைப்படுகிற வெனக்குவிஷயாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக தேவரீரையே நான் அநுபவிக்கும்படி என் பக்கலிலே இரங்கியருளவேணும்" என்று பெரியபெருமாள் திருவடிகளிலே, அநுபவத்தையபேக்ஷிக்கிறார்.

வ்யா. (சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே) வண்டுபடிந்து ஶ்ரமஹரமான திருத்துழாய்த்தாரானது அலர்ந்துவருகிற திருவடிகளையே. இத்தால் - திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிக வஸ்துவென்னு மிடத்தையும், திருவடிகளோட்டைச்சேர்த்தியாலே திருத்துழாய்க்குச் செவ்வியும் விகாஸமு முண்டாகையாலே, திருவடிகளோடே சேர்ந்தார்க்கு செவ்வியும் விகாஸமுமுண்டாமென்னு மிடத்தையும், திருத்துழாயாலேஅலங்க்ருதமா யிருக்கையாலேநிரதிஶயபோக்யமென்னு மிடத்தையும் சொல்லிற்று.

(விரும்பிநின்றிறைஞ்சு வேற்கிரங்கு) அநுபவருசிபிறந்து அநுபவிக்கையிலே யிழிந்த வெனக்கு இரங்கு. "இவன் நாஶகரமானவிஷயாந்தரத்தில்நின்றும் மீளுவான், நிரதிஶயபோக்யமான நம்மையநுபவிப்பான்" என்றுக்ருபைபண்ணியருளவேணும். தேவரீர்க்கு ஒருஇரக்கமாத்ரம், அது இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநம்; ஆனபின்பு இத்தனையும் செய்தருளவேணும். (அரங்கவாணனே) கோயிலுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு கண்வளர்ந்தரு

அரு;—தொண்ணூற்றுமூன்றாம் பாட்டு. (துதைந்து) செவ்வ்யாய்; (இரக்கமாத்ரம்) எனக்குஜ்ஜீவநமென்று பூரிப்பது. ஆடிக்கட்டியாகையின்றி

(௧) கீதை-௧௮. ௬௬.

ளுகிறவனே. தந்தாம்பக்கல் முதலின்றிக்கேயிருக்க அநுபவத்திலேயிழிந்தவர்களுக்கும், தேவரீரழகாலே விஷயாந்தரப்ராவண்யத்தைத் தவிர்த்து, தேவரீர்பக்கல் ஆதரத்தைப்பிறப்பித்து அநுபவிப்பிக்கைக்காகவன்றோ கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. (க) "போதரே யென்று சொல்லிப்புந்தியில்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த வழகன்" என்னக்கடவதிறே.

(கரும்பிருந்தகட்டியே) இவர்க்குருசிபிறப்பித்த வுபாத்யாயரைச் சொல்லுகிறது. 'கோதுண்டாதல், கழிக்குமம்ஶ முண்டாதலின்றிக்கே ஸர்வதோமுகமாய் ஸாரஸ்யத்தையுடைத்தாய் பாகவிசேஷத்தால் வந்த ஸாரஸ்யமின்றிக்கே ஸ்வாபாவிகமான ஸாரஸ்யத்தை யுடைத்தா யிருப்பதொரு கன்னல்போலே நிரதிஶய போக்யனானவனே. (கடல்கிடந்தகண்ணனே) பெரியபெருமாளுடைய அவதாரகந்த (௩௫) த்தைச்சொல்லுகிறது. திருப்பாற்கடலிலே அபேக்ஷா நிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற ஸௌலப்யத்தை யுடையவனே. ப்ரஹ்மாவுக்காக க்ஷீராப்திநாதன் உகந்தருளினபடியாலே அங்குத்தை ஸௌலப்யமும் வடிவழகும் பெரியபெருமாள் பக்கலிலே ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம் படியிறே யிருப்பது.

(இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே) எதிரிகள் ஶரீரத்திலே அழுந்தும்படி *தீ(ஜீ)ப்தபாவக ஸங்காஶமான அம்புகளைவிட்ட வில்லையுடைய தஶரதாத்மஜனே. இத்தால்-(உ) "நஞ்சேவகனார் மருவியபெரியகோயில்" என்கிறபடியே சக்ரவர்த்தித் திருமகனுடைய வீரமும் அபிராமதையும் பெரியபெருமாள் பக்கலிலே அநுபவிக்கலாயிருக்கை. (௩) "தெவஸ்யாஜ்ஞ ஹோவா

க்கே, "இருந்தகட்டி" என்று இருந்தபடியே கட்டியென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கோதுண்டாகி லித்யாதி). (கந்தம்) அவதாரமூலம். ... ... ... (௬௩)

(க) திருமாலை-௪௬. (உ) திருமாலை-௧௧. (௩) ரா-அயோ-அ௩அ.

மூ.—ஊனின்மேயவாவிநீ யுறக்கமோடுணர்ச்சி நீ
ஆனின்மேயவைந்துநீ யவற்றுள் நின்றதூய்மை நீ
வானினோடுமண்ணுநீ வளங்கடற்பயனுநீ
யானுநீயதன்றி யெம்பிரானும் நீயிராமனே. (கூச)

---

ஹா— ஸவஸௌஸவூஜெ—நா ஹாபூ- மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸர்வஸத்வமநோஹரம்'' என்னக்கடவதிறே. ப்ராப்தராய் ஸந்நிஹிதராய் நிரதிஶய போக்யபூதராய் விரோதிநிரஸநஶீலராய் தேவரீரிருக்க, இத்தலையில்ருசியுண்டாயிருக்க, நான் இழக்க வேண்டுகிறதென்? இரங்கி யருளவேணுமென்கை. "கரும்பிருந்தகட்டியே - கடல் கிடந்தகண்ணனே - இருப்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லிராமனே - அரங்கவாணனே - சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமேவிரும்பி நின்று இறைஞ்சுவேற்கிரங்கு'' என்றந்வயம். ... .... .... (கூரு)

தொண்ணூற்றுநாலாம் பாட்டு. (ஊனித்யாதி)

| | |
|---|---|
| உறக்கமோடு | நித்ரையோடு |
| உணர்ச்சி | ப்ரபோத (லொபாய) மானது |
| நீ | உன்னதீநம்; |
| வளம் | அழகியதான |
| கடல் | ஸமுத்ரத்தினுடைய |
| பயனும் | ப்ரயோஜநபூதமான வம்ருதமும் ரத்நாதிகளும் |
| நீ | உன்னதீநம்; |
| ஆனில்மேய | பசுக்களிலுண்டான |
| ஐந்தும் | பஞ்சகவ்யங்களும். |
| நீ | உன்னதீநம்; |
| அவற்றுள் | அந்தபஞ்சகவ்யங்களிலே |
| நின்ற | வர்த்திக்கிற |
| தூய்மை | ஶுத்தியும் |

| | |
|---|---|
| நீ | உன்னதீநம்; |
| ஊனில்மேய | ஶரீரத்தில்வர்த்திக்கிற |
| ஆவி | பஞ்சவ்ருத்திப்ராணனும் |
| நீ | உன்னதீநம் |
| வானினோடு | ஆகாஶத்தோடு கூடின |
| மண்ணும் | பூமியும் |
| நீ | உன்னதீநம்; |
| | (அதவா) |
| வானினோடு | பரமாகாஶத்தோடு |
| மண்ணும் | ஸம்ஸாரமும் |
| நீ | உன்னதீநமென்னுமாய்; |
| யானும் | பத்த (வஃ) னானும் |
| நீ | உனக்குப்ரகாரபூதன்; |
| அதன்றி | அதொழிய |
| இராமனே | சக்ரவர்த்தித்திருமகனே; |
| எம்பிரானும் நீ | அகிஞ்சநரான வெங்களுக்குநிர்வாஹகனும் நீ. (கூச) |

அவ—தொண்ணூற்றுநான்காம்பாட்டு. த்வதநுபவ விரோதிகளைப் போக்கவும், அநுகூலங்களானவற்றை யுண்டாக்கவும், அநுபவந்தன்னை அவிச்சி(ஜ்ஜி)ந்நமாக்கவும் வேணுமென்ற பேக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, "இரங்கு" என்று—இவ்வளவுமபேக்ஷிக்கவமையுமோவென்ன; உனக்கு ப்ரகாரமாயிருக்குமதொழிய ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு பதார்த்த மில்லாமையாலே என்னபிமதஸித்திக்கு உன்னிரக்கமே யமையுமென்கிறார்.

வ்யா.—"உறக்கமோடுணர்ச்சி நீ - வளங்கடல் பயனும் நீ; - ஆனில்மேயவைந்தும் நீ, அவற்றுள் நின்ற தூய்மைநீ - ஊனில்மேயவாவிநீ - வானினோடு மண்ணும் நீ - யானும்நீ, அதன்றி யெம்பிரானும்நீ இராமனே" என்றந்வயம். (உறக்கமோடுணர்ச்

நீ) தமோகுணப்ரபவத்தால் வந்த நித்ரையும், ஸத்வகுணகார்யமான உணர்த்தியும் உன்னதீநம். இத்தால் - சேதநர்க்கு விஷயப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞாநமும், பகவத்ப்ராவண்ய ஹேதுவான ஜ்ஞாநமும் நீயிட்ட வழக்கென்கை. (௧) "[illegible] - அநாதிமாயயா ஸுப்த:" என்று அஜ்ஞாநத்தை நித்ரையாகச் சொல்லக்கடவதிறே. (வளங்கடல்பயனும் நீ) கண்டார்க்கு ஆகர்ஷகமான கடலில் அம்ருதமும் ரத்நாதிகளும் உன்ஸங்கல்பாதீநம். இது - ப்ரயோஜநாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் - உன்பக்கல் ப்ராவண்யத்துக்கு விரோதியாய் அஜ்ஞாநகார்யமான பந்தக பதார்த்தங்களெல்லாம் நீயிட்ட வழக்கென்கை.

(ஆனில்மேயவைந்தும்நீ) பசுக்களில் ஸுத்திகரமாகச்சொல்லுகிற பஞ்சகவ்யமும் உன்னதீநம். (அவற்றுள் நின்ற தூய்மை நீ) அந்த பஞ்சகவ்யங்களுக்குண்டான ஸுத்தியும் உன்ஸங்கல்பாதீநம். பரமபாவநரான தேவரீரோட்டை ப்ரத்யாஸத்தியிறே பதார்த்தங்களுக்கு ஸுத்திஹேது. கோப்ராஹ்மணர்க்கு பகவத்ஸமாராதநோபகரணங்களாகையாலேயிறே ஸுத்திஹேதுத்வம். (௨) "[illegible] - ப்ராஹ்மணாம்கவாஞ்சைவ குலமேகந்த்விதாக்ருதம் । அங்யத்ரமந்த்ராஸ்திஷ்டந்தி ஹவிரங்யத்ரதிஷ்டதி" என்னக்கடவதிறே. கருமத்துக்கு ஸுத்திஹேதுத்வம் பகவத்ஸமாராதநமாகையாலே; ஜ்ஞாநத்துக்கு ஸுத்திஹேதுத்வம் பகவத்விஷயமாகையாலே. (௩) "[illegible] - க்ஷேத்ரஜ்ஞஸ்யேஸ்வரஜ்ஞாநாத் விஸுத்தி:பரமாமதா" என்னக்கடவதிறே. (௪) "[illegible] - பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ" (௫) "[illegible] - பவித்ராணாம்ஹிகோவிந்த: பவித்ரம்பர

(௧) மாண்டூ-௨-௨௧. (௨) (௩)
(௪) ரா. உத்தர-௮௨-௯. (௫) பார-ஆரண்ய-௮௮-௨௭.

ஜேச்யதே" இத்தால் - அநாதிகாலம்விஷயாந்தர ப்ராவண்யத்தா லேவந்த அஸம்பந்தத்தை பரிஹாரமான பாவநபதார்த்தங்களும் நீயிட்ட வழக்கென்கை (ஊனில்மேய ஆவிநீ) ஶரீரத்திலே தா(யா)ரகமாக த்திக்கிற ஞ்சவ்ருத்திப்ராணனும் நீயிட்டவழக்கு. இத்தால்-ஶரீரஸத்திதியும் ஶரீரவியோகமும் நீயிட்டவழக்கென்கை.

(வானினோடு மண்ணும்நீ) நிராலம்பநமான ஆகாஶத்திலே வாய்வாதிகள் ஸஞ்சரிக்கிறதும், நீரிலே கிடக்கிற பூமி கரையாதே ஸகலாதா(யா)ரபூதையாகிறதும் உன்னாலே. அதவா, பந்தகமான ஸம்ஸாரமும்‡முக்தப்ராப்யமான நித்யவிபூதியும் நீயிட்ட வழக்கென்றுமாம். (யானும்நீ,பத்த(லே)னை நானும்உனக்கு ப்ரகாரபூதன். இத்தால் - எனக்கு ருசியில்லாதவன்றும், (க) "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம் - ததாமிபுத்தியோகந்தம்" என்கிறபடியே என்னுடைய ருசி நீயிட்டவழக்கு. (அதன்றி) அதொழிய. (எம்பிரானும் நீ ராமனே) நினைத்தார்க்கு நினைத்ததைக் கொடுக்கவல்லவனென்கைக்கு உதாஹரணம் சொல்லுகிறது. சக்ரவர்த்தித்திருமகனை நீயே அகிஞ்சநரான எங்களுக்கு ஸ்வாமி. (உ) "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" - அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:" என்கிறபடியே - ஸ்தாவரபர்யந்தமாக அழகாலும் சீலத்தாலும் பிரிந்தால் தரிக்கமாட்டாதபடி பண்ணின நீயே எங்களுக்கு நிர்வாஹகன். (ங) "ஸர்வே ஹி ஸுக்ருதைர்யுக்தா: ஸம்ஸக்தாஸ்ஸ்வஜநா நர:। யஶ: ... ராஜ்யே ... - அலமத்யஹிபுக்தேந பரமார்த்தைரலஞ்சந:। யதாபஶ்யாமிநிர்யாந்தம் ராமம்ராஜ்யேப்ரதிஷ்டிதம்"(ச)[புற்பாமுதலாவித்யாதி](ரு)"யா கதிர்யஜ்ஞஶீலாநாம்" - யாகதியர்ஜ்ஞஶீலாநாம்" என்று ஒருபக்ஷிக்கு மோக்ஷங்கொடுத்தவனே எங்களுக்கு நிர்வாஹகன்.* அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினவனே எங்களுக்கு நிர்வாஹகன்

அரு;—தொண்ணூற்றுநாலாம் பாட்டு. "ராமஃ" என்கையாலே நினைத்தார்க்கு நினைத்ததைக்கொடுக்குமென்கிறது. அழகாலும் ஶீலத்தாலும் மோக்ஷ பர்யந்தம் வேண்டினார்க்கு வேண்டினது கொடுப்பானென்கைகுப்ரமாணங்கள்பலவு மருளிச்செய்கிறார் (அலமத்யஹிபுக்தேந) என்று தொடங்கி. ... ... ... (௯௪)

(க) கீ-௧௦-௧௦. (உ) ரா-அ-௫௯-அ. (ங) ரா-அ. (ச) தி-வாய்-எ-௫-௧. (ரு) ரா-ஆர-

‡ (பா) நித்ய.

மூ.—அடக்கரும்புலன்களைந் தடக்கியாசையாமவை
துடக்கறுத்துவந்து நின் றொழிற்கண்நின்றவென்னைநீ
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும்
கடற்கிடந்தநின்னலாலோர்கண்ணிலேனெம்மண்ணலே. ()

---

தொண்ணூற்றைந்தாம் பாட்டு. (அடக்கருமித்யாதி)

அடக்கரும் நியமிக்கவரிதான
புலன்களைந்து பஞ்சேந்த்ரியங்களை
அடக்கி நீயேஉன்விஷயமாக்கி
ஆசையாமவை விஷயாந்தரங்களிலாசையென்று பேர் பெற்றவைகளை
துடக்கு வாஸனையாகிற ஸம்பந்தத்தோடுகூட
அறுத்துவந்து தவிர்த்துப்புருஷார்த்தத்தின்மேலெல்லையிலேவந்து
நின் உன்னுடைய
தொழில்கண் கைங்கர்யமாகிற தொழிலிடத்து
நின்றவென்னை நிலைநின்றவென்னை
நீ இந்த்ரியஜயமே துடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தினநீ,
விடக்கருதி விடநினைத்து,
மெய்செயாது அந்யதாஸங்கல்ப்ய,அந்யதாசாரத்தைப்பண்ணி
மிக்கோராசை விஷயாந்தரங்களிலேருசியைப் பிறப்
யாக்கிலும் பித்தாயாகிலும்,
எம்அண்ணலே எனக்குநிருபாதிகஸ்வாமியானவனே;
கடல் திருப்பாற்கடலிலே
கிடந்த என்னுடையஹிதார்த்தமாகக் கண் வளர்ந்தருளின
நின்னலால் உன்னையொழிய

ஓர்கண்ணி வேறொருநிர்வாஹகரையுடையேனல்
லேன் லேன். (கூரு)

அவ;—தொண்ணூற்றைந்தாம்பாட்டு. "எம்பிரானும் நீயி ராமனே'' என்று - நினைத்தார்க்கு நினைத்தத்தைக் கொடுக்க வல்ல ஶக்தனுமாய், ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்தித்திருமகனே உபாயமென்றார் -கீழ்; இதில் - அவ்வுபாயத்தில் தமக்குண்டான அத்த்யவஸாயத்தை யருளிச்செய்கிறார். பாஹ்ய விஷயருசியைத் தவிர்த்து, உன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து, கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கும்படி புகுர நிறுத்தின நீ, என்னை உபேக்ஷித்துவிஷயாந்தரப்ரவணனும்படி கைவிட்டாலும் உன்னையொழிய வேறொருகதியில்லையென்று தம்முடைய அத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார்.

வ்யா.—(அடக்கரும்புலன்களைந்தடக்கி) ஆசார்யோபதேஶத்தாலும் ஶாஸ்த்ர வாஸனையாலும் இந்த்ரியங்களை நியமிக்க விழிந்தால் நியமிக்கவரிய ஶ்ரோத்ராதிகளைந்தையும் ஆகர்ஷகமான தன்திருவடிவைக்காட்டி விஷயங்களில் போகாதபடி மீட்டு, அவற்றுக்குத் தானே விஷயமாம்படி நியமித்து. ஈஶ்வரன் வடிவழகைக்காட்டி மீட்டானென்கைக்கு இங்கு ஶப்தமுண்டோ வென்னில், கீழே-"புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்'' என்றவராகையாலே இங்குச்சொன்ன இந்த்ரியநியமநம் ஈஶ்வரனாலே யென்னுமிடம் அர்த்தாத்ஸித்தம். தபோப(ங)ங்கம் பண்ணவந்தஊர்வஶியை மாத்ருபுத்தியாலே நமஸ்கரித்துநின்ற அர்ஜுநனும், (க)"தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்'' - தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்'' என்னும்படியிறே இந்த்ரிய நியமநத்தினருமையிருப்பது. (ஆசையாமவை தொடக்கறுத்து) அவ்வடிவில் பாவநத்வத்தாலே விஷயங்களில் ருசியை வாஸனையோடே தவிர்த்து. விஷயாந்தரருசிக்கடி பாபமேயிறே. (வந்து

(க) கீதை-கூ-௩௪

மூ,—வரம்பிலாதமாயமாய வையமேழும்மெய்ம்மையே
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய்
வரம்பிலாதபல்பிறப் பறுத்துவந்துநின்கழல்
பொருந்துமாதிருந்தநீ வரஞ்செய்புண்டரீகனே. (கூசு)

நின்தொழில்கண்ணின்றவென்னை) புருஷார்த்தத்தின் மேலெல்லை யிலேவந்து உன் திருவடிகளிலே கைங்கர்யத்தை அர்த்தித்து நின்றவென்னை.

(நீவிடக்கருதி) இந்த்ரியஜயமேதொடங்கி இவ்வளவும் புகுரநிறுத்தின நீ உபேக்ஷிப்பாயாக நினைத்து. (மெய்செயாது) ஆரம்பித்தகார்யத்தை முடியநடத்தாதே. மெய்செய்யாதொழிகையாவது—ஆத்மோஜ்ஜீவநத்தை ஆரம்பித்து தத்விபரீதமாக ஆசரிக்குமது-மித்யா(ஶ்ர)வ்யாபாரம். (க) "கூநூஶாஸஜூஷூ கூநூஶாவாதீதிஶ்ரீவாஸ்ஹஉஷூதெ -அந்யதாஸங்கல்ப்யாந்யதாசரதீதிமித்யாசாரஸ்ஸ உச்யதே" என்னக்கடவதிறே. (மிக் கோராசையாக்கிலும்) விஷயாந்தரங்களிலேருசியைப் பிறப்பித்தாயாகிலும், ஸ்வவிஷயத்தில் ருசிக்கு க்ருஷிபண்ணினவன் ஶப்தாதிவிஷயங்களில்ருசிக்குஉத்பாதகனாகக்கூடாது,அப்படிக்கூடினும்.

(கடல்கிடந்தநின்னலாலோர் கண்ணிலேன்) நான் அபேக்ஷியாதிருக்க என்னுடைய ஹிதார்த்தமாக த்ரிபாத்விபூதியிலிருப்பைவிட்டுவிஸத்ருஶமானஸம்ஸாரத்திலேதிருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற வுன்னையொழிய வேறொரு நிர்வாஹகரையுடையேனலலேன். (எம் அண்ணலே) அபேக்ஷாநிரபேக்ஷமாக என்னுடைய ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கடி எனக்கு நிருபாதிக ஸ்வாமியாகையாலே யென்கிறார். உபேக்ஷித்தாலும் விடமாட்டாமைக்கடி நிருபாதிகஸ்வாமித்வம். (அண்ணல்) ஸ்வாமி. .... ... ... ... (கூரு)

தொண்ணூற்றாறும் பாட்டு. (வரம்பித்யாதி)

| | |
|---|---|
| வரம்பு | ஸங்க்க்யாபரிச்சேதம் |
| இலாத | இன்றிக்கேயிருக்கிற |

(க)

| | |
|---|---|
| மாய | மூலப்ரக்ருதியை ஸ்வாதீநமாக வுடையவனே! |
| மாய | ஆஶ்சர்யமானஜ்ஞாநஶக்த்யாதி குணங்களையுடையவனே |
| வையமேழும் | ஸப்தலோகஸ்த்த ஜநங்களும் |
| மெய்ம்மையே | மெய்யாகவே |
| வரம்பிலூழி | அஸங்க்க்யாதமான்கல்பங்கள் |
| ஏத்திலும் | ஸ்தோத்ரம் பண்ணினாலும் |
| வரம்பிலாத | எல்லைகாணவொண்ணாத |
| கீர்த்தியாய் | ரக்ஷகத்வப்ரதையையுடையவனே; |
| வரம்பிலாத | ஓரொன்றேஸங்க்க்யாபரிச்சேதஶூந்யமான |
| பல் | தேவாதிபேதேந பலவிதமான |
| பிறப்பு | ஜந்மங்களை |
| அறுத்து | ஒழித்து |
| வந்து | அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேஶவிஶேஷத்திலேவந்து |
| நின்கழல் | ஸுஸ்ரீபோக்யமான உன்திருவடிகளிலே |
| பொருந்துமா | ப்ருதக்ஸ்த்தித்யநர்ஹமாகப் பொருந்தும்படியாக |
| திருந்த | ஶிக்ஷிதமாம்படியாக |
| நீ | என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாகஅவஸரப்ரதீக்ஷணை நீ |
| வரம் | ப்ரஸாதத்தை |
| செய் | பண்ணியருளவேணும். |
| புண்டரீகனே | புண்டரீகாக்ஷனே; (கூசு) |

அவ;—தொண்ணூற்றாறும்பாட்டு. தம்முடைய வ்யவஸாயத்தையருளிச்செய்தார் - கீழில்பாட்டில்; இதில் - "அஞ்சலென்னவேண்டுமே" என்றும், "இரங்கரங்கவாணனே" என்றும்

பலபடியாக அபேக்ஷியாநின்றீர், உம்முடைய ப்ராப்யத்தை நிர்ணயித்துச்சொல்லீரென்ன; ஸம்ஸாரத்தையறுத்து உன் திருவடிகளிலே பொருந்தும்படியாக ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென்று தம்முடைய ப்ராப்யத்தைப்ப்ரார்த்திக்கிறார்.

வ்யா.—(வரம்பிலாதமாய) அளவிறந்த ஸ்வரூபத்தையும் அளவிறந்த மஹதாதிபரிணாமங்களையு முடைத்தான ப்ரக்ருதி தத்வத்தை ஸ்வாதீநமாகவுடையவனே. (மாயை) ப்ரக்ருதி. (க) "அநந்தஸ்ய ந தஸ்யாந்தம் ஸங்க்யாநம் வாபி வித்யதே - அநந்தஸ்யநதஸ்யாந்தம்ஸங்க்யாநாம்வாபிவித்யதே" என்னக்கடவதிறே. இத்தால் — பந்தகமான ப்ரக்ருதி நீயிட்டவழக்கென்கை. (மாய) ஆஸ்சர்யமான ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணங்களையுடையவனே. (மாயம்) ஆஸ்சர்யம். இத்தால் - கீழ்ச்சொன்ன ப்ரக்ருதியிலே பத்தராய் தந்நிவ்ருத்த்யர்த்தமாக தேவரீரை ஆஸ்ரயித்த சேதநர்க்குதத்ஸம்பந்தத்தை யறுத்துக்கொடுக்கைக்கடியான ஜ்ஞாநஶக்த்யாதி குணங்களையுடையவனென்கை. (வையமேழும் மெய்ம்மையே வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாத கீர்த்தியாய்) ஸப்தலோகங்களும் ஸ்தோதாக்களாக, தந்தாமுடையஶேஷத்வத்தை யுணர்ந்து ஸ்வரூபாநுரூபமாக அநந்யபரராய்க்கொண்டு அஸங்க்யாதமான கல்பங்களெல்லாமேத்தினுலும் எல்லைகாணவொண்ணாத ரக்ஷகத்வப்ரதையையுடையவனே. இத்தால் - அசித்ஸம்ஸர்க்கத்தை யறுத்துத் திருவடிகளோடேசேர்த்து ரக்ஷித்துப்போந்த ரக்ஷகத்வ ப்ரதையைப் பரிச்சேதிக்கவொண்ணாதென்கை. (உ) "வர்ஷாயுதைர்யஸ்ய குணாநுவாதே... வர்ஷாயுதைர்யஸ்ய குணநஶக்யா வக்தும்ஸமேதைரபிஸர்வலோகை: । சதுர்முகாயுர்யதிகோடிவக்த்ர:"

(வரம்பிலாதபல்பிறப்பறுத்து) நம்மைப்புகழாதே அபேக்ஷிதத்தைச்சொல்லீரென்ன; அஸங்க்யேயமான பலவகைப்பட்ட

(க) (உ) பாரத கர்ணம்.

மூ;—வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்
கைய! செய்யபோதில்மாது சேருமார்ப! நாதனே!
ஐயிலாயவாக்கைநோ யறுத்துவந்துநின்னடைந்
துய்வதோருபாயம்நீ யெனக்குநல்கவேண்டுமே. (௬எ)

பிறப்பை யறுத்து. பலவகையாவது —தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரங்கள். அஸங்க்யாதமாவது - ஒருஜாதியிலே பிறக்கும் ஜந்மத்துக்குத் தொகையற்றிருக்கை. காலம்அநாதி. ஆத்மாநித்யன். பண்ணிவைக்கவல்லகர்மங்களுக்கு அவதியில்லாமையாலே கர்மாநுகுணமாகப் பிறக்கவிருக்கிற பிறவிக்குத்தொகையில்லை; ஜந்மங்களை அறுத்து. (வந்துநின்கழல்பொருந்துமா) அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்திலேவந்து, ஸ்ரீ ரிபோக்யமான திருவடிகளிலே, (௧) "ஶாயாவாஸத்வமநுக ச்சேத் - சாயாவாஸத்வமநுகச்சேத்"என்கிறபடியே ப்ருதக்ஸ்திதிப்ரார்ஹமாகப் பொருந்தும்படியாக. (திருந்த)(௨)"நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம் - நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம் "என்கிறபடியே திருவடிகளுக்குப் புறம்பானவற்றை ஸ்மரியாதே கைங்கர்யஸுகமே ஸுகமாம்படி. (நீவரஞ்செய்) என்னுடைய உஜ்ஜீவநார்த்தமாக * ஆள்பார்த்துழிதருகிற நீ ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும். (புண்டரீகனே) புண்டரீகாவயவனே. புண்டரீகாக்ஷனே!. திருக்கண்களே ப்ரசுரமாயிருக்கையாலே புண்டரீகனெனகிறார். (௩) "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே - விஜ்ஞாநம்யஜ்ஞம்தநுதே" என்னக்கடவதிறே. இத்தால் - ப்ரஸாதத்தைப்பண்ணுகையாவது- ஒருவிஶேஷ கடாக்ஷமென்கை. .... .... ... (௬௬)

தொண்ணூற்றேழாம்பாட்டு. (வெய்யவித்யாதி).

| | |
|---|---|
| சீர் | வாத்ஸல்யகுணத்தாலே, |
| வெய்ய | ப்ரதிபக்ஷத்துக்கு துஸ்ஸஹமான |
| ஆழி | திருவாழியென்ன, |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யமென்ன, |

(௧) பரமஸம்ஹிதா (௨) சாந்தோ-அ-௧௨-௩, (௩) தை-ஆந.

| | |
|---|---|
| தண்டு | ஸ்ரீகௌமோதகி யென்ன |
| வில்லும் | ஸ்ரீஸார்ங்கமென்ன |
| வாளும் | ஸ்ரீநந்தமென்ன (இவற்றை) |
| ஏந்து | தரித்துக்கொண்டிருக்கிற |
| கைய | திருக்கைகளையுடையவனே; |
| (அன்றிக்கே) | |
| வெய்யவாழி சங்கு தண்டுவில்லுவாளுமேந்தும் | ஸ்ரீபஞ்சாயுதங்களை தரித்திருக்குமவையாய், |
| சீர் | வெறும்புறத்திலே அழகியனவாயுமிருக்கிற |
| கைய | திருக்கைகளையுடையவனே யென்றுமாம்; |
| செய்ய | சிவந்திருக்கிற |
| போதில் | பத்மமாகிற புஷ்பத்திலிருக்கிற |
| மாது | ஸுகுமாரையான பெரிய பிராட்டியார் |
| சேரும் | நித்யவாஸம் பண்ணுகிற |
| மார்ப | திருமார்பையுடையவனே, |
| நாதனே | ஸர்வஸ்வாமியானவனே. |
| ஐயில் | ஶ்லேஷ்மத்திலே |
| ஆய | உண்டான |
| ஆக்கை | ஶரீரமாகிற |
| நோய் | வ்யாதியை |
| அறுத்து | ஒழித்து |
| வந்து | ஒரு தேஶவிஶேஷத்திலேவந்து |
| நின் அடைந்து | ப்ராப்யனானவுன்னைப்ராபித்து |
| உய்வதோருபாயம் | அடிமை செய்து உஜ்ஜீவிப்பதொருவழியை |
| நீ | ஸ்ரியஃபதியாய் ஸர்வதிவ்யாயுதோபேதனான நீ |

எனக்கு உன்கைபார்த்திருக்கிறவெனக்கு
நல்கவேண்டும் தந்தருளவேணும். (ஐயவென்பது - ஶ்லேஷமம். "ஐயே - அழகும் இடைச்சொலும் கோழையும் இருமலும், யதியும், நாதனும், சுவாமியும் மந்தாரமும்" என்னக்கடவது) (கூள)

அவ,—தொண்ணூற்றேழாம்பாட்டு. "வரஞ்செய் புண்டரீகனே" என்றநின்றீர், நம்முடையவிஶேஷகடாக்ஷத்துக்கு உம்முடையபக்கலிலே ஒரு முதல் வேண்டாவோவென்ன; திருமார்விலே பிராட்டியெழுந்தருளியிருக்கத் திருக்கையிலே திவ்யாயுதங்களிருக்க ஒருமுதல்வேணுமோ, அங்ஙனேயொருநிர்ப்பந்தம் தேவரீர்க்குண்டாகில் என் விரோதியைப்போக்கி உன்னைக்கிட்டியடிமை செய்கைக்கு ஹேதுவாயிருப்பதொரு உபாயத்தை தேவரீரே தந்தருளவேணுமென்கிறார். அகிஞ்சநனாய் தேவரீர்கைபார்த்திருக்கிற எனக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தோடு ததுபாயத்தோடு வாசியற தேவரீரே தந்தருளவேணுமத்தனையன்றோ வென்கிறார்.

வ்யா.—(வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்கைய) காணவே யெதிரிகள் தரைப்படும்படியான ஸ்ரீபஞ்சாயுதங்களையும், அநவரதம் வாத்ஸல்யத்தாலே திருக்கையிலே யேந்தினவனே. வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி யிருக்கிற கையிலே திவ்யாயுங்களை யேந்தினவனேயென்றுமாம். திவ்யாயுதங்களை யேந்தினபடியே யிருக்கிறது தேவரீர்க்கு ஒரு விரோதியுண்டாயோ, என்விரோதியைப் போக்குகைக்காக வன்றோவென்கை. (க)"எப்போதுங்கைகழலா நேமியான் நம்மேல்வினைகடிவான்" என்னக்கடவதிறே.

(செய்யபோதில்மாதுசேருமார்ப) சிவந்த தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடையளாயிருக்கையாலே ஸுகுமாரையாய்த்திருமேனிக்குப் பரபாக(ஹாஸ)ரூபததாலே ஆபரணபூதையான பிரா

(க) பெரியதிருவ-அஎ

மூ•—மறந்துறந்துவஞ்சமாற்றி யைம்புலன்களாசையும்
துறந்துநின்கணாசையே தொடர்ந்துநின்றநாயினேன்
பிறந்திறந்துபேரிடர் சுழிக்கணின்றுநீங்குமா
மறந்திடாதுமற்றெனக்கு மாயநல்கவேண்டுமே. (கூஅ)

ட்டி (க)"அகலகில்லேனிறையும்"என்றுசொல்லப்படும் திருமார்வையுடையவனே. இத்தால்-ஆஶ்ரயணவிரோதிபாபத்தைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டி ஸந்நிதியுண்டாயிருக்க,அநுபவவிநாஶ்யமான பகவத்ப்ராப்தி விரோதிகளை அழியச்செய்கைக்குப் பரிகரமுண்டாயிருக்க,மாத்ருபித்ருஸந்நிதியிலேநோவுபடுவாரைப்போலே, ஶரீரஸம்பந்தத்தாலே நோவுபடக்கடவேனோ வென்கை. (நாதனே) ஸர்வஸ்வாமியானவனே. இத்தால் – இவள் புருஷகாரமாகாதே கையிலே பரிகரமுமின்றிக்கே யொழிந்தவன்றுதான் ஆருடைமநோவுபடுகிறது. இப்படியிருக்க, புருஷார்த்தஸித்திக்கு என்தலையிலேயுமோருபாயம் வேணுமேன்றுதேவரீர்க்குநிர்ப்பந்தமுண்டாகில் அத்தை தேவரீரேதந்தருளவேணுமேன்கிறார் மேல்;

(ஐயிலாயவாக்கை நோயறுத்து) ஶ்லேஷ்மத்தை ப்ரக்ருதியாகவுடைய ஶரீரமாகிற நோயையறுத்து. தேஹாத்மாபிமாநிகளுக்கு ப்ரார்த்தநீயமானஶரீரம்ஜ்ஞாநம்பிறந்தால்வ்யாதியாயிறேயிருப்பது. (உ)"எய்ந்ததம்மெய்குந்தமாக விரும்புவர்" என்னக்கடவதிறே.

(வந்துநின்னடைந்து) ஒரு தேஶவிஶேஷத்திலேவந்து நிரதிஶயபோக்யனான உன்னைப்ராபித்து. (உய்வதோருபாயம்) அடிமைசெய்து உஜ்ஜீவிப்பதொருவழியை, (நீயெனக்கு நல்கவேண்டுமே) ஶ்ரிய:பதியாய் திவ்யாயுதோபேதனாய் எனக்கில்லாதவையெல்லாம் தரக்கடவநீயே, எல்லாவற்றுக்கு முன்கைபார்த்திருக்கிற வெனக்குத் தந்தருள்வேணும். நல்குதல்-கொடுத்தல். அதாகிறது - தருதல். (கூஎ)

தொண்ணூற்றெட்டாம்பாட்டு. (மறமித்யாதி).

மறம் கோபத்தை

(க) தி-வாய்-கூ-கம-கம. (உ) ச-திருவ-எகூ.

| | |
|---|---|
| துறந்து | விட்டு |
| வஞ்சம் | க்ருத்ரிமத்தை |
| மாற்றி | தவிர்த்து |
| ஐம்புலன்கள் | பஞ்சேந்த்ரியங்களுடைய |
| ஆசையும் | இதரவிஷயத்திலுண்டான ஸங்கத்தையும் |
| துறந்து | விட்டு |
| நின்கண் | உன்பக்கல் |
| ஆசையை | ப்ரேமத்தையே |
| தொடர்ந்து | உறவுபண்ணி; ஆதரித்தென்றபடி. |
| நின்றநாயினேன் | இப்படியிருந்துள்ள வநந்யகதியான வடியேன் |
| பிறந்து | ஜந்மாதிஷட்விகாரத்தையு மடைந்து |
| இறந்து | மரணாதிகளையுமடைந்துபடுகிற |
| பேரிடர் | மஹாதுஃக்கமாகிற |
| சுழிக்கணின்றும் | சுழியிடத்தில் நின்றும் (சுழி-சக்ரம்) |
| நீங்குமா | நீங்கும் ப்ரகாரத்தை |
| மறந்திடாது | ஸம்ஸாரத்திலே நான் பட்டதுஃக்கத்தை விஸ்மரியாதே |
| மற்று | துஃக்கநிவ்ருத்திக்கு மேற்பட்ட புருஷார்த்தத்தையும் |
| எனக்கு | அஶக்தனானவெனக்கு |
| மாய | ஆஶ்சர்யஶக்தியுக்தனே |
| நல்கவேண்டும் | தந்தருளவேணும். (கூஅ) |

அவ;—தொண்ணூற்றெட்டாம்பாட்டு. "நம்முடையவிஶேஷகடாக்ஷத்துக்கு உம்முடையதலையிலே ஒரு கைம்முதல்வேணுமே"என்ன; "நீயே தரவேணுமென்னக்கடவீரோ"என்று பகவதபிப்ராயமாக; புருஷார்த்தருசியாலே வந்த ப்ராதிகூல்யநிவ்ருத்தியும் புருஷார்த்தருசியுமே ஆலம்பநமாக நான்ஸம்ஸாரதுரிதத்தைத்தப்பும்படி நீயே பண்ணியருளவேணுமென்கிறார்.

வ்யா;—(மறம்துறந்து) மறமாகிறது - கோபம். அதினை ல்லே - பரஸம்ருத்திபொறுமைதொழிகையும், பராநர்த்தஸிந்தையும். அத்தைவிட்டு. (வஞ்சம்மாற்றி) க்ருத்ரிமத்தைத் தவிர்த்து. அதாகிறது - அநுகூலனாய்த்தோற்றி ப்ராதிகூல்யத்தோடே தலைக்கட்டுகை. வஞ்சம் - பொய். (ஐம்புலன்களாசையும் துறந்து) இந்த்ரியங்களுக்கு இதரவிஷயங்களி லுண்டான ஸங்கத்தையும் விட்டு. கீழ் - "பொறியிலேன்" என்று இத்தைஅகப்பாடாகச் சொன்னார்; இதிலே - கீழ்ச்சொன்ன கோப க்ருத்ரிமங்களுக்கு ஹேதுவான விஷயாந்தர ஸங்கத்தையும்விட்டு. அவை தான் புருஷார்த்தருசி பிறந்தார்க்கு† அஸம்பாவிதங்கள். (நின் கழலையே தொடர்ந்துநின்ற) உன்பக்கலாசையையே ஆதரித்துநின்ற. அதாகிறது - பகவத்ப்ரேமம் வேணுமென்றிருக்கிற ஆதரம். தொடர்வு - உறவு. (நாயினேன்) ப்ராதிகூல்ய நிவ்ருத்தியும் புருஷார்த்தருசியுமொழிய; புருஷார்த்தஸித்திக்கு முதலொன்று மின்றிக்கே யிருக்கிற அநந்யகதி. (பிறந்திறந்து பேரிடர் சுழிக்கண் நின்று நீங்குமா) பிறப்பது சாவதான மஹா துஃக்க சக்ரத்தில்நின்றும்நீங்கும்படி. "பிறந்து" என்கிறவிது—ஷட்பாவவிகாரங்களுக்கும் உபலக்ஷணம். "இறந்து" என்கிறது-நரகாதிகளுக்கும் உபலக்ஷணம்.

(மறந்திடாது மற்றெனக்கு மாய நல்கவேண்டுமே.) ஸம்ஸாரத்திலே நான்பட்ட துஃக்கத்தையும் என்னுடைய பூர்வவ்ருத்தத்தையும் தேவரீருடையஸ்வாதந்த்ர்யத்தையும்பார்த்து விஸ்மரியாதே, அபேக்ஷாமாத்ரத்தையும் ஸம்பந்தத்தையும் பார்த்து, விரோதிநிரஸநத்திலே அஶக்தனை எனக்கு தந்நிவ்ருத்தி பூர்வகமாகப்புருஷார்த்தத்தைத் தந்தருளவேணும். "மற்று" என்கிறது விரோதி நிவ்ருத்தி ஸமநந்தரத்திலே லபிக்குமதனையா

அரு;—தொண்ணூற்றெட்டாம் பாட்டு. (விட்டு) அவன்விடுவிக்கவிட்டபடி சொல்லுகிறுரென்று பூரித்து. (அவைதான்) ப்ராதிகூல்யநிவ்ருதிதான், (மற்று) விரோதிக்கு மற்றான புருஷார்த்தம். ... (கூஅ)

† (ப) ஸம்பாவிதங்கள்.

மூ—காட்டிநான் செய்வல்வினைப் பயன்றனால் மனந்தனை
நாட்டிவைத்துநல்லவல்ல செய்யவெண்ணினரெனக்
கேட்டதன்றியென்னதாவி பின்னைகேள்வநின்னொடும்
பூட்டிவைத்தவென்னைநின்னுள் நீக்கல்பூவைவண்ணனே.

லே. (மாய) (க) "மமமாயா-மமமாயா" என்கிறபடியே ஸம்ஸார சக்ரத்தையறுத்துநித்யஸூரிகளோடே ஒருகோவையாக்கவல்ல ஆஶ்சர்யஶக்தியுக்தனே. .... .... .... (கூஅ)

தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. (காட்டியித்யாதி)

பின்னைகேள்வ நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனான க்ருஷ்ணனே;

| | |
|---|---|
| என்னதாவி | என்னுடைய ஆத்மாவை |
| நின்னொடும் | உன்பக்கலிலே |
| பூட்டிவைத்த வென்னை | ஸமர்ப்பித்த வென்னை |
| நான்செய் | என்னாலே செய்யப்பட்ட |
| வல் | ப்ரபலமான |
| வினை | பாபங்களை |
| காட்டி | என்நெஞ்சிலேபடுத்தி |
| பயன்றனால் | அந்தப்பாபபலத்தாலே |
| மனந்தனை | என்னுடையநெஞ்சை |
| நாட்டிவைத்து | "இது அநுபவிக்கப்ராப்தம்" என்கிற துணிவிலே நிறுத்திவைத்து, |
| நல்லவல்ல | நல்லதன்றிக்கே யிருக்கிற கொடியசெயல் [களை |
| செய்யவெண்ணினர் | (யமபடர்) செய்யக்கோலினர். |
| எனக்கேட்டது | என்று கேட்டுப்போந்தவற்றை |
| அன்றி | தவிர்த்து |
| பூவைவண்ணனே | பூவைப்பூபோலே நிறத்தையுடையவனே! |
| நின்னுள்நீக்கல் | உன்பகல்நின்றும் அகற்று தொழியவேணும். (கூகூ) |

கீதை-எ-கச.

அ,—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. புருஷார்த்தருசி பிறந்தபின்பு அத்தால்வந்த ப்ராதிகூல்ய நிவ்ருத்தியை உம்முடைய பக்கல் முதலாகச் சொல்லாநின்றீர்; அநாதிகாலம் நரக ஹேதுவாகப் பண்ணின ப்ராதிகூல்யங்களுக்குப் போக்கடியாக நீர் நினைத்திருந்ததென்னென்ன; நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக, (க) "ஸவ்ர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி-ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற உன் திருவடிகளிலே ந்யஸ்தபரனை இதொழிய வேறுபோக்கடியுண்டோ, ஆனபின்பு கீழ்ச் சொன்ன கர்மமடியாக வருகிற யமவஶ்யதையைத் தவிர்த்து, எனக்கு உன் திருவடிகளிலே அவிச்சிந்நமான போக(ஹோம)த்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

வ்யா,—(காட்டிநான்செய்வல்வினை) நான்செய்த ப்ரபலமான பாபங்களை யமபடர் எனக்குக்காட்டி. வாசிகமாயும் மாநஸமாயுமுள்ள பாபங்களை யொழிய, செய்தவையாய், நரகப்ரவேஶம்பண்ணி அநுபவிக்கவேண்டின ப்ரபலபாபங்களை. இத்தால் - இவர்கள் என்னை நலிகிறார்களென்று நான் நினையாதபடி பண்ணுமவர்களென்கை. (பயன்றனில் மனந்தனை நாட்டிவைத்து) இந்த பாபபலம் நமக்கு இவ்வளவும் அநுபவிக்க ப்ராப்தமென்று பலத்திலேயும் என்மநஸ்ஸைப்பூட்டிவைத்து. (நல்லவல்லசெய்யவெண்ணினர்) கொடிய செயல்களைச்செய்யவெண்ணினர். இவனுக்கு முதலிலேபண்ணின பாபத்தை யறிவித்து இப்பாபபலம் நாம்இவ்வளவு மநுபவிக்கவேணுமாகாதேஎன்னும் நெஞ்சைப்பிறப்பித்துப் பின்னையாய்த்து க்ரூரமான செயல்களை அவர்கள்செய்ய நினைப்பது. (எனக்கேட்டதன்றி) என்று கேட்டுப்போந்தவற்றையகற்றி, இப்படி ஶாஸ்த்ரத்திலே கேட்டுப்போந்த யமவஶ்யதையைத் தவிர்த்து,

---

அரு;—தொண்ணூற்றொன்பதாம் பாட்டு. பாபத்தைக்காட்டி நலிகையாலே நான் நினையாதபடி - நான்வெறுக்காதபடி பண்ணுவர்களென்கை. "நல்லவல்லசெய்ய வெண்ணினர்" என்றபதத்தையும் கூட்டி அருளிச்செய்கிறார் (இந்தப்பாப பலமித்யாதி). ... ... (கூகூ).

---

(க) கீதை-கஅ-சுசு.

மூ,—பிறப்பினேடுபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமஃ
திறப்பவைத்தஞானநீச ரைக்கரைக்கொடேற்றுமா
பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம்
பெறற்கரியமாயனே யெனக்குநல்கவேண்டுமே. (க00)

---

(என்னதாவி பின்னைகேள்வ நின்னொடும்பூட்டி வைத்தவெ ன்னை) நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனாகையால் வந்த நீர்மையையுடைய க்ருஷ்ணனே! பாபப்ரசுரனாய் அகிஞ்சநனை என்னுடைய ஆத்மாவை உன்பக்கலிலே ஸமர்ப்பித்தவென்னை. "காவியாய - நின்றனக்கடைக்கலம் புகுந்தவென்னை" என்றத்தை ஸ்மரிக்கிறார். பூட்டி வைக்கையாவது - "நீவிடக்கருதி மெய்செயாது மிக்கோராசையாக்கிலும் - நின்னலாலேலார்கண்ணிலேன்" என்றத்தை ஸ்மரிக்கிறார். (நின்னுள்நீக்கல்பூவை வண்ணனே) பூவைப்பூப்போலே நிறத்தையும் ஸௌகுமார்யத்தையுமுடைய வடிவையுடையவனே! நின்பக்கல்நின்றும் அகற்றுதொழியவேணும். புஷ்பஹாஸ ஸுகுமாரமான வடிவழகை ஸர்வகாலமும் விச்சேதியாதே அநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்.

"பின்னைகேள்வ - என்னதாவி நின்னொடும் பூட்டிவைத்தவென்னை - காட்டி நான் செய்வல்வினைப்பயன்றனால் மனந்தனை நாட்டிவைத்து நல்லவல்ல செய்ய வெண்ணினரெனக்கேட்டதன்றி - பூவைவண்ணனே - நின்னுள் நீக்கல்" என்றந்வயம்.

நூறும்பாட்டு. (பிறப்பித்யாதி)

| | |
|---|---|
| பிறப்பினேடு | ஜந்மத்தோடேகூடின |
| பேரிடர் | தாபத்ரய ரூபமஹாதுஃக்கத்தைவிளைக்கிற |
| சுழிக்கள்நின்றும் | ஸம்ஸாரசக்ரத்தினின்றும் |
| நீங்கும் | நீங்குகைக்குறுப்பான |

| | |
|---|---|
| அஃது | ஸ்ருதிப்ரஸித்தமான தத்வஹிதங்களை |
| இறப்பவைத்த | இறக்கும்படியாக வைத்த, மறக்கும் படியாகவைத்த வென்றபடி; |
| ஞானநீசரை | ஸர்வோத்தமராகத்தங்களை அபிமானித் திருக்கும்வேதவாதரதராகிறநீசரை |
| கரைக்கொடு | கரையிலேகொண்டு |
| ஏற்றுமா | ஏற்றுகைக்குபாயமாகவேதாந்தங்களி லேசொல்லியிருக்கிற |
| பெறற்கரிய | பெறுதற்கரிதான |
| நின்னபாத | உன் திருவடிகள் விஷயமான |
| பத்தியான | பக்தியாகிற |
| பாசனம் | மரக்கலத்தை |
| பெறற்கறியமாயனே | உன் கேவலக்ருபையொழியவேறொன் றால் பெறுவார்க்கரிய வாஸ்சர்ய பூதனே. |
| எனக்கு | எல்லாவற்றுக்கும் உன் க்ருபையல்ல தறியாத வெனக்கு |
| நல்கவேண்டும் | தந்தருளவேணும். (௧௦௦) |

அவ;—நூறும்பாட்டு. இப்படி அவிச்சின்னமான அநுப வத்துக்கு ப்ரபபக்தி யுக்தனாக வேண்டாவோவென்ன; அப்பர பக்தியைத் தந்தருளவேணுமென்கிறார்.

வ்யா;—(பிறப்பினோடுபேரிடர் சுழிக்கணின்று நீங்குமஃ திறப்பவைத்த) ஜந்மத்தோடே கூடினதாபத்ரயரூபமான மஹா துःக்கத்தை விளைக்கக்கடவதான ஸம்ஸாரசக்ரத்தில் நின்றும் நீங்குகைக்குறுப்பான தத்வஹிதங்களைமறைத்துவைத்தவர்கள். தத்வஹிதங்களை "அஃது" என்றது - ஸ்ருதிப்ரஸித்தியாலே. அதாவது - ஸ்வர்க்க தத்ஸாதநங்களை வேதார்த்தமென்றிருக் கை. (௧) 'வெதவாதரதாः பார்த்த நாந்யதஸ்தீதிவாதிநः'-வேத வாதரதாः பார்த்தநாந்யத ஸ்தீதிவாதிநः" என்றிறே அவர்

(௧) கீதை-௨௪௨-

கள்னிர்ணயம். இறக்கையாவது-நஶிக்கை. அதாகிறது-(௧)"[illegible] அதர்ஶநே" என்கிறபடியே மறைக்கை. (ஞானநீசரை.) ஸர்வஜ்ஞராகத் தங்களை அபிமாநித்திருக்கும் நீசரை. "யாரும் வையகத்தொன்றிநின்றுவாழ்தலின்மைகண்டு நீசர்" என்றவர்கள் கேவலநீசர்; இவர்கள் ஜ்ஞாநநீசர். (கரைக்கொடேற்றுமா) இவர்களைக்கரையிலே கொண்டேற்றுகைக்குஉபாயமாக.(௨) "[illegible] - ஸோத்வநஃ பாரமாப்நோதி தத்விஷ்ணோஃ பரமம் பதம்" என்கிறபடியே - ஸம்ஸாராத்வா(யா)வுக்குக் கரையாவது - பகவத்விஷயமிறே. அத்தை லபிக்கைக்கு உபாயமாகவே தாந்தங்களில் சொல்லிவைத்த.

(பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம்) பெறுதற்கரியஉன் திருவடிகளை விஷயமாகவுடைத்தான பரமபக்தியாகிற பாசனத்தை. ப்ராப்யனானவனிற் காட்டில் தத்விஷயபக்தி துர்லபமிறே. (௩) "[illegible] - யாப்ரீதிரவிவேகாநாம்" என்றும், [௪] "[illegible] - முக்திஸ்தஸ்யகரேஸ்த்திதா" என்றும், (௪) "[illegible] - ஸமஸ்தஜகதாம்மூலேயஸ்யபக்திஃ ஸ்திரா த்வயி" என்றும்சொல்லக்கடவதிறே. (பாசனம்) மரக்கலம்; அத்தாலே-தநத்தைலக்ஷிக்கிறது. (௫)'தனமாயதானேகைகூடும்' என்னக்கடவதிறே. (௬) "[illegible]-யமேவைஷவ்ருணுதேதேநலப்யஃ" என்றும், (௭) "[illegible]" ஹ்ருதாமநீஷா மநஸாபி க்லுப்தஃ என்றும் வேதாந்தங்கள் உன் திருவடிகளைப்பெறுகைக்குஸாதநமாகபக்தியை உபதேஶித்து வைத்ததிறே; அந்தபக்தியை. (பெறற்கரியமாயனே.) உன் கேவலக்ருபையை யொழிய வேறொருவழியாலே உன்னைப்பெறவிருப்பார்க்குஸித்தியாத ஆஶ்சர்யபூதனே.(எனக்கு நல்கவேண்டுமே) பெறவேண்டுமவைஎல்லா

---

(௧) பா-தாதுபாடம். (௨) கடவல்லி-௧-௩-௯. (௩) வி-பு-௧-௨௦-௧௯.
(௪) வி-பு-௧-௨௦-௨௭. (௫) ௧-திருவ-௪௩. (௬) கடவ-௧-௨-௨௩.
(௭) தை-நா-

மூ,—இரந்துரைப்பதுண்டுவாழி யேமநீர்நிறத்தமா
வரந்தருந்திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்னுசீர்ப்
பரந்தசிந்தை யொன்றிநின்று நின்னபாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே. (க0க)

லாவற்றுக்கும் உன் க்ருபையை யல்லதறியாத எனக்கு அந்த பக்தியை தேவரீர் தந்தருளவேணும். ப்ரயோஜநாந்தரபரர்க்கு மோக்ஷருசியைப்பிறப்பித்து தத்ஸாதநமானபக்தியைக்கொடுத்தருளக்கடவ தேவரீர், அநந்யப்ரயோஜநனுய் அநந்யஸாதநனுயிருந்துள்ள எனக்கு த்வதநுபவபரிகரமாக அந்தபக்தியைத் தந்தருளுகை தேவரீர்க்கு அபிமதமன்றோ, அத்தைத்தந்தருளவேணுமென்றதாய்த்து. .... (க00)

நூற்றோராம்பாட்டு. (இரந்தித்யாதி)

| | |
|---|---|
| ஏம | வலிதாயிருக்கிற, மஹத்தாயிருக்கிறவென்றபடி. |
| நீர் | கடல்போன்ற |
| நிறத்து | நிறத்தையுடைத்தான |
| அமா | நிருபாதிக பந்துவானவனே! |
| இரந்து | யாசித்து |
| உரைப்பது உண்டு | விண்ணப்பம் செய்யவேண்டுவது ஒன்றுண்டு; |
| வாழி | மங்களாஶாஸநம், |
| வரந்தரும் | இவ்வாத்மாவுக்கு நன்மைகளைக்கொடுப்பதே ஸ்வபாவமான |
| திருக்குறிப்பில் | திருவுள்ளத்தில் |
| வைத்ததாகில் | எனக்குத்தரநினைத்ததாகில் |
| மன்னு | ஸ்த்திரமான |
| சீர் | நன்மையை,("திருக்குறிப்பில் வைத்ததாகில்" என்ற பூர்வேண அந்வயம்) |

| | |
|---|---|
| பரந்த | விஷயங்களிலே விஸ்த்ருதமான |
| சிந்தை | என் மநஸ்ஸு |
| ஒன்றிநின்று | மற்றொன்றில் போகாதே ஒருமைப்பட்டு நின்று |
| நின்னபாத பங்கயம் | உன்னுடைய பத்மம் போன்ற திருவடிகளை |
| நிரந்தரம் | விச்சேத(ஜ்ஜே)மில்லாதபடி |
| நினைப்பதாக | நினைக்கும்படி |
| நீ நினைக்கவேண்டும் | நீ திருவுள்ளமாகவேணும். |

(க0க)

அ,—நூற்றோராம்பாட்டு. நீர் நம்மை ப்ரார்த்திக்கிற பரம பக்தி - விஷயாந்தரங்களினின்றும் நிவ்ருத்தமான இந்த்ரியங்களைக்கொண்டு நம்மை அநவரதபா(ஸ)வனைபண்ணுமத்தாலே ஸாத்யமன்றோவென்ன; அங்ஙனேயாகில்,ஜிதேந்த்ரியனாய்க்கொண்டு அநவரதபாவனை பண்ணுவேனாக தேவரீர் திருவுள்ளமாகவேணுமென்கிறார்.

வ்யா.—(இரந்துரைப்பதுண்டு). (க) "ஶிரஸாயாசதஸ்தஸ்ய"-ஶிரஸாயாசதஸ்தஸ்ய" என்கிறபடியே திருவடிகளிலே பக்நாபி(ஸந்ஹி)மாநனாய்க்கொண்டு விழுந்து, தலையாலே தேவரீரையிரந்துவிண்ணப்பம் செய்யப்புகுகிற தொருகார்யமுண்டு. வகுத்தவிஷயத்திலே ஸ்வரூபப்ரயுக்தமான அநவரதபாவனையை அர்த்திக்கிறாராகில்,இப்படிக்கூசிச்சொல்லுகிறதென்னென்னில், தம்முடையபூர்வ வ்ருத்தத்தைப்பார்த்தும்,தத்வத்தினுடையஉத்துங்கதையைப்பார்த்து மருளிச்செய்கிறார். பூர்வவ்ருத்தத்தைப் பார்த்தால்கிட்டக்கூசவேணும்,கிட்டினாலும் உன் உத்துங்கதையைப்பார்த்தால்"அநாதரிக்கிறானோ"என்றுகூசவேணும். (வாழி)

(க)ரா-யு-கஉஅ-உ0.

அவன்முகம் பார்க்கைக்காக மங்களாஶாஸநம்பண்ணுகிறேனென்னுதல்; அநவரதபாவநைக்கு விஷயமான அவனழகை யநுஸந்தித்து மங்களாஶாஸநம் பண்ணுகிறேனென்னுதல்.

(ஏமநீர்நிறத்தமா) (௧) "ஸமுத்ரஇவ காம்பீர்யே ... - அப்ரமேயோமஹோததி:" என்கிறபடியே - அபரிச்சிந்நமான கடல்போலேயிருக்கிற திருநிறத்தையுடையஎன் நிருபாதிகபந்துவே. (ஏமம்) உறவு; (௨) "ஸநோபந்து: - ஸநோபந்து:" என்றும் (௩) "அஹம்வோபாந்தவோஜாத: - அஹம்வோபாந்தவோஜாத:" என்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் — இரந்தல்லது நிற்கவொண்ணாதபடியையும், மங்களாசாஸநம்பண்ணியல்லது நிற்கவொண்ணாதபடியான வடிவழகையும், ப்ராப்தியையும் சொல்லுகிறது.

(வரந்தருந்திருக்குறிப்பில்வைத்ததாகில் மன்னுசீர்) இவ்வாத்மாவுக்குஸ்வரூபாநுரூபமான நன்மைகளை, அபேக்ஷித்தார் அபேக்ஷித்த வரங்களைத்தந்தல்லது நிற்கமாட்டாத திருவுள்ளத்திலேவைத்ததாகில். எனக்குத்தர நினைத்தாகில். (சீர்) நன்மை. அதாகிறது-கைங்கர்யஸாம்ராஜ்யம்.

இந்தக்கைங்கர்யத்துக்கடியாயிருந்துள்ள அநவரதபாவநையை அபேக்ஷிக்கிறார்மேல்; (பரந்தசிந்தையொன்றி நின்று) ஶப்தாதி விஷயங்களிலேபரந்த என்னுடைய மநஸ்ஸு, மற்றொன்றில்போகாதே உன்பக்கலிலே ஒன்றிநின்று. (நின்னபாதபங்கயம்) ப்ராப்தமாய், நிரதிஶய போக்யமாகையாலே ஆகர்ஷகமுமான உன் திருவடிகளை. (நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே) அம்மநஸ்ஸு நிரந்தரமாகநினைக்கவற்றாம்படி நீ திருவுள்ளமாகவேணும். என் நினைவும் என்செயலும் † அகிஞ்சித்கரம். உன் நினைவுக்கே பலப்ராப்தியுள்ளதென்கை. ()

அரு;— நூற்றோராமபாட்டு. (ஏமநீர்) ஏமம் - நெடுமை. (௧0௧)

† (பா) விபரீதம் (௧) ரா-யு ௧௬-௩௧. (௨) (௩) வி-பு-டு ௩௩-௩௩.

மூ.—விள்விலாதகாதலால் விளங்குபாதபோதில்வைத்
துள்ளுவேனதூனநோ யொழிக்குமாதெழிக்கு நீர்
பள்ளிமாயபன்றியாய வென்றிவீரகுன்றினால்
துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றலொன்றுசொல்லிடே. ()

---

நூற்றிரண்டாம்பாட்டு. (விள்வித்யாதி).

| | |
|---|---|
| தெழிக்கும் | கோ(வொ)ஷிக்கிற |
| நீர் | கடலை |
| பள்ளி | படுக்கையாகவுடைத்தாயிருக்கிற |
| மாய | ஆஶ்சர்யமான ஸௌஶீல்யாதி குணயுக்தனே! |
| பன்றியாய | வராஹஸஜாதீயனாயவதரித்த |
| வென்றிவீர | ஹிரண்யாதிகளை ஜயித்த வீரத்தையுடையவனே! |
| குன்றினால் | மலைகளாலே, (ஜாதாவேகவசநம்) |
| துள்ளுநீர் | துள்ளுகிற ஸமுத்ரத்திலே |
| வரம்புசெய்த | ஸேதுபந்தத்தைப் பண்ணின |
| தோன்றல் | ராஜாவான சக்ரவர்த்தித்திருமகனே! |
| விள்வு | ப்ரயோஜநாந்தரங்களைப்பற்றிநெகிழ்தல் |
| இலாத | இல்லாமலிருக்கிற |
| காதலால் | ப்ரேமத்தாலே |
| விளங்கு | உஜ்ஜ்வலமான |
| பாதபோதில் | திருவடித்தாமரைகளிலே |
| வைத்து | நெஞ்சைவைத்து |
| உள்ளுவேனது | அத்திருவடிகளையே தஞ்சமென்று நினைத்திருக்கிற வென்னுடையதான |
| ஊனநோய் | ஊனத்தை - ஜ்ஞாநஸங்கோசத்தை விளைக்கக்கடவதான ஶரீரஸம்பந்தமாகிற வ்யாதியை |
| ஒழிக்குமா | ஒழிக்கும் ப்ரகாரத்தை |
| ஒன்றுசொல் | ஒருவார்த்தையருளிச்செய்யவேணும். |
| விடே | |

(௧௦௨)

அவ;-நூற்றிரண்டாம்பாட்டு;-விச்சேத(ஜ்ஜ)ப்ரஸங்கமில்லாத அநவரதபா(ஹா)வனைக்குஶரீரஸம்பந்தமறவேணுங்காணுமென்ன; எனக்குருசியுண்டாயிருக்க தேவரீர்ஸர்வஶக்தியாயிருக்கஅநுவர்த்திக்கிற இவ்வசித்ஸம்ஸர்க்கத்தைதேவரீரறுத்துத்தந்தருளுமளவும்நான் தரித்திருக்கும்படிஇன்னபடி செய்கிறேமென்று ஒரு வார்த்தையாகிலும் அருளிச்செய்யவேணுமென்கிறார்.

வ்யா;—(விள்விலாதகாதலால்) ப்ரயோஜநாந்தரங்களைப்பற்றி நெகிழாதே அநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு திருவடிகளில்பண்ணினப்ரேமத்தாலே. (௧)"விள்கைவிள்ளாமைவிரும்பி" என்னக்கடவதிறே. (விளங்குபாதபோதில்வைத்து) அந்த ப்ரேமத்தாலே உஜ்வலமான திருவடித்தாமரைகளிலே நெஞ்சைவைத்து. அநந்யப்ரயோஜநரான ஆஶ்ரிதருடைய ஸந்நிதியிலே அலருமதிறே திருவடித்தாமரைகள். இத்தால் - நான் ப்ரயோஜநாந்தரபரனாய் அசித்ஸம்பந்த மநுவர்த்திக்கிறதோ, தேவரீர் ஆஶ்ரிதவத்ஸலரல்லாமே யநுவர்த்திக்கிறதோவென்கை.

(உள்ளுவேனதூனநோயொழிக்குமா.) அத்திருவடிகளையே தஞ்சமென்று நினைத்திருக்கிற வெனக்கு ஊனத்தை விளைக்கும் ஶரீரஸம்பந்தமாகிறநோயைப்போக்க நினைத்திருக்கில்; இவர்க்கு ஊனமாகிறது,— ஸ்வஸ்வரூபவிஷயமான ஜ்ஞாநஸங்கோசமும், பகவத்ஜ்ஞாந ஸங்கோசமும், பகவதநுபவஸங்கோசமும். இவற்றை விளைக்குமதிறே தேஹஸம்பந்தம். "சரீரம்" என்றும், "வ்யாதி" என்றும் - பர்யாயமிறே. இத்தால்-வேறொன்றைத் தஞ்சமென்றிழக்கிறேனோ, ஶரீரத்திலாதரமுண்டாயிழக்கிறேனோ. (தெழிக்குநீர்ப்பள்ளிமாய) தேவரீரோட்டை ஸ்பர்ஶத்தாலே கோஷிக்கிறகடலிலே ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகக்கண்வளர்ந்தருளுகிற ஆஶ்சர்யமான ஸௌலப்யாதிகுணயுக்தனே. தெழிக்கை - முழங்குகை. (பன்றியாயவென்றிவீர) விஸத்ருஶமான ஸம்ஸாரத்திலே ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகக் கண்வளர்ந்

(௧) தி-வாய்-௧-௬-ஞ.

மூ.—திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே
இருக்கலந்தவேதநீதி யாகிநின்றநின்மலா
கருக்கலந்தகாளமேக மேனியாயநின்பெயர்
உருக்கலந்தொழிவிலா துரைக்குமாறுரைசெயே (௧௦௩)

---

தருளுகிற இவ்வளவேயன்றிக்கே, நீருக்கும் சேற்றுக்குமிருயாத மஹாவராஹமாய் பாதாளகதையான பூமியை யெடுத்து ஹிரண்யாக்ஷனைவென்ற வீரத்தை யுடையவனே.

(குன்றினால்துள்ளுநீர்வரம்பு செய்ததோன்றல்) தன்னில் கிடக்கும் பதார்த்தங்களைக் கரையிலே பொகடும்திரைக் கிளர்த்தியையுடைய கடலிலே அழுந்தக்கடவ மலைகளைக்கொண்டு அணைசெய்த சக்ரவர்த்தித் திருமகனே. (தோன்றல்) அரசன். பரமபத நிலயரான தேவரீர் ஆஶ்ரிதார்த்தமாக ஸம்ஸாரத்திலேவந்து ஸுலபராயும் தேவரீரையழியமாறி நஷ்டோத்தரணம் பண்ணியும், ஆஶ்ரிதவிரோதிகளையழியச்செய்தும், அதிமாநுஷ சேஷ்டிதங்களைப் பண்ணியும், இப்படிநீர்மையாலும் ஶக்தியாலும் குறைவற்ற தேவரீர்க்கு, என் ஶரீரஸம்பந்தத்தை யறுக்கைக்கு என் கையில் பொருளுண்டோவென்கை. (ஒன்றுசொல்லிடே) இரண்டு தலையிலும் குறைவற்ற பின்பு இது அநுவர்த்திக்கிறது நீ நினையாமையிறே. தேவரீர் நினைக்குமளவும் தரித்திருக்கும்படி "இன்னவளவிலே செய்கிறோம்" என்று ஒரு வார்த்தை யருளிச்செய்யவேணும்.

"தெழிக்குநீர்ப்பள்ளிமாய பன்றியாய வென்றிவீர குன்றினால் துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றல் - விள்விலாதகாதலால் விளங்குபாதபோதில் வைத்து உள்ளுவேனதூனநோயொழிக்குமா - ஒன்று சொல்லிடே" என்றந்வயம்-(௧௦௨)

நூற்றுமூன்றும் பாட்டு. (திருவித்யாதி).
திரு பெரியபிராட்டியார்

| | |
|---|---|
| கலந்து | ஸம்ஶ்லேஷித்து |
| சேரும் | நித்யவாஸம் பண்ணுகிற |
| மார்ப | திருமார்பையுடையவனே ! |
| தேவ | ப்ரஹ்மாதிகளுக்கும் |
| தேவ | நித்யஸூரிகளுக்கும் |
| தேவனே | நிர்வாஹகனானவனே ! |
| இருக்கலந்த | ருக்குக்கள் கலந்த |
| வேத | வேதத்தை யுடைத்தா யிருக்கையை: வேத ப்ரதிபாத்யதையை யென்றபடி. |
| நீதியாகநின்ற | ஒழுக்கமாகி நின்ற; ஸ்வபாவமாகவுடைய வென்றபடி. |
| நின்மலா | ஹேயப்ரத்யநீகனானவனே! |
| கரு | பொன்னோடே |
| கலந்த | சேர்ந்த |
| காளமேக | நீலதோயத(?)ம் போன்ற |
| மேனி | திருமேனியுடைய |
| ஆய | இடையனான க்ருஷ்ணனே! (அன்றிக்கே கருவித்யாதி - நீரைகர்ப்பத்திலே யுடைய காளமேகம்போன்ற திருமேனியையுடைய க்ருஷ்ணனே) |
| நின்பெயர் | உன் திருநாமங்களை |
| உருக்கலந்து | உன்னுடைய வடிவழகோடுங் கூட |
| ஒழிவிலாது | ஒழிவில்லாமல் படிக்கு |
| உரைக்குமாறு | சொல்லும் ப்ரகாரத்தை |
| உரைசெய் | அருளிச்செய்யவேணும். (௧௦௩) |

அவ.—நூற்றுமூன்றாம்பாட்டு. "அசித்ஸம்பந்தம் தேஹாவஸாநத்திலே போக்குகிறோம், நீர் பதறுகிறதென்?" என்ன; அங்ஙனேயாகில் தேவரீருடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழகுக்கும் வாசகமான திருநாமங்களை நான் இடைவிடாதே மநநம்பண்ணிப் பேசுகைக்கு ஒருப்ரகாரமருளிச்செய்ய வேணுமென்கிறார்.

வ்யா. (திருக்கலந்துசேருமார்ப)பிராட்டி தேவரீரோடே ஸம்ஶ்லேஷித்து, அந்தஸம்ஶ்லேஷத்தில் அதிஶங்கித்து(க) "அகலகில்லேனிறையும்" என்று நித்யவாஸம் பண்ணுகிறதிருமார்வையுடையவனே; பத்த(வஸ)ரோடும் முக்தரோடும் நித்யரோடும் வாசியற (உ) "ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம் - ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே - ஸர்வர்க்கும் அபாஶ்ரயபூதையான பிராட்டிதான் நித்யஸாபேக்ஷையாம்படியன்றோ தேவரீருடையபெருமை. (தேவதேவதேவனே) (ங) "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா: - யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்தி தேவா:" என்கிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கு மோக்ஷருசிபிறந்தவன்று ப்ராப்யரான நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யனாய்க் கொண்டு நிர்வாஹகனானவனே. தேவரீரும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே யெடுத்துக் கைநீட்டுகையே யாத்ரையாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்கை.

(இருக்கலந்தவேதநீதியாகிநின்றநின்மலா)(ஸீ)ரிக்ப்ரசுரமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கையையே ஸ்வபாவமாக வுடையையாய் நின்றஹேயப்ரத்யநீகனே. (நீதி) ஒழுக்கம். அதாகிறது - ஸ்வபாவம். (ச) "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ - ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" (ரு) "தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: - தத்விஷ்ணோ:பரமம்பதம் ஸதாபஶ்யந்திஸூரய:" (சு) "அபஹதபாப்மா - அபஹதபாப்மா" இத்யாதிவாக்யங்களாலே ஶ்ரிய: பதித்வமென்ன, ஸூரிபோக்யதையென்ன, ஹேயப்ரத்யநீகதையென்ன, இப்படிகளாலேவேதைக ஸமதிக(யிமு)

---

(க) தி-வாய்-சு-௧௦-௧௦ (உ) ஶ்ரீஸூக்தம் (ங) புருஷஸூக்தம்
(ச) யஜு-ங-அஷ்டகம் (ரு) ஸாம உத்தர (சு) சாந்தோ-அ-எ-௧

மூ.—கடுங்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை
இடந்துகூறுசெய்தபல் படைத்தடக்கைமாயனே
கிடந்திருந்துநின்றியங்கு போதுநின்னபொற்கழல்
தொடர்ந்துவீள்விலாததோர் தொடர்ச்செனக்கவேண்டுமே.

மயனென்கை, (கருக்கலந்தகாளமேகமேனியாய) பொன்போலே புகர்த்துக் கறுத்து மேகம்போலே யிருக்கிற திருமேனியையுடைய. க்ருஷ்ணனே. (கரு) பொன். (க) "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவபாஸ்வரா - நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" (உ) "அஜாயமானோ பஹுதா விஜாயதே - அஜாயமானோபஹுதாவிஜாயதே" என்று - விக்ரஹத்தையும் அவதாரஸௌலப்யத்தையும் சொல்லிற்றிறே. (௩) "நவமாஸத்ருதம்கர்ப்பம் - நவமாஸத்ருதம்கர்ப்பம்" என்னுமாபோலேநீரையுள்ளேயுடைய காளமேகமென்னவுமாம். (கரு) கர்ப்பம். இத்தால் - தாபஹரமாய் ஆகர்ஷகமுமான வடிவோடே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து ஆஸ்ரிதர்க்கு ஸுலபனானவனென்கை.

(நின்பெயருருக்கலந்தொழிவிலாதுஉரைக்குமாறுரைசெயே) ஸ்ரிய:பதி,*அயர்வறுமமரர்களதிபதி.ஹேயப்ரத்யநீகன்,விலக்ஷணவிக்ரஹயுக்தன், ஆஸ்ரிதஸுலபனென்றுநிர்த்தோஷப்ரமாணப்ரதிபாத்யனான் உன்குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை வடிவழகோடே இடைவிடாதே நான் பேசுகைக்கு வழியையருளிச்செய்யவேணும். .... .... .... (கoரு)

நாற்றுநாலாம்பாட்டு. (கடுங்கவந்தனித்யாதி)

| | |
|---|---|
| கடும் | க்ரூரனான் |
| கவந்தன் | கபந்தனென்ன, |
| வக்கரன் | தந்தவக்த்ரனென்ன, |
| கரன் | க(வ)ரனென்ன, |
| முரன் | முரனென்ன, இவர்களுடைய |

அரு;—நூற்றுமூன்றாம்பாட்டு. (கருக்கலந்த) கரு - பொன்னுதல். (கo)

(க) தை-௩-கக. (உ) யஜு-அஷ்ட-௩. (௩)

| | |
|---|---|
| சிரமவை | ஶிரஸ்ஸுகளை |
| இடந்து | பேதி(ஹேதி)த்து |
| கூறுசெய்த | ஶரீரங்களை (ஷி) சிந்நபி(ஷி)ந்நமாகப்பண்ணின |
| பல் | நாநாவிதமான |
| படை | ஆயுதங்களையுடைத்தாய் |
| தடம் | தடாகம்போலே குளிர்ந்திருக்கிற |
| கை | திருக்கைகளையுடைய |
| மாயனே | ஆஶ்சர்யஶக்தியுக்தனே ! |
| கிடந்து | ஶயித்தும் |
| இருந்து | உபவேஶித்தும் |
| நின்று | ஸ்த்திதித்தும் |
| இயங்கு | ஸஞ்சரித்தும்போருகிற |
| போது | காலங்களிலே |
| நின்ன | உன்னுடையதான |
| பொற்கழல் | பொன்போலே ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை |
| தொடர்ந்து | மேல்விழுந்து |
| வீள்விலாதது | இடைவிடாதபடியான |
| ஓர் தொடர்ச்சி | ஒரு செறிவை, நைரந்தர்யத்தை யென்றபடி; |

நல்கவேண்டும் பண்ணித்தந்தருள்வேணும். (௧௦௪)

அவ;—நூற்றுநான்காம்பாட்டு.(க)"யத்கரோஷியதஶ்நாஸி—யத்கரோஷியதஶ்நாஸி" என்றும்,(உ) "த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா: - த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா:" என்று மித்யாதிகர்மத்தாலே விரோதிபாபத்தைப்போக்கி,(ங) "ஸததம் கீர்த்தயந்த: — ஸததம் கீர்த்தயந்த:" என்கிறபடியே நம்மை யநுபவிக்கும்வழி சொல்லிவைத்திலோமோ, "உரைசெய்" என்கிறதென்னென்ன; நீ ப்ரதிபந்தக நிரஸநஸமர்த்தனாயிருக்க,நான்கர்மத்தாலேவிரோ

(க) கீ-கூ-உஎ. (உ) கீ (ங) கீ-கூ-கச.

தியைப்போக்க வென்பதொன்றுண்டோ, நீயே என் விரோதியைப்போக்கி உன்னை நான் மேல்விழுந்து இடைவிடாதே யநுபவிக்கும்படி பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்.

வ்யா;—(கடுங்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை) அற வெட்டியனான கபந்தன், தந்தவக்ரன், கரன், முரன், இவர்களுடைய தலைகளை. அல்லாதாரிற்காட்டில் கபந்தனுக்கு வெட்டிமையாவது - பிராட்டியைப்பிரிந்து கடலும் மலையும் விசும்புந்துழாவித்திரிகிற தசையிலே எதிரம்புகோக்கவந்த வெட்டிமையை நினைத்து வெறுக்கிறார். (இடந்துகூறுசெய்த) அவர்கள் தலைமண்டையையிடந்து ஶரீரங்களை, (க) "ஹிஸஂஸிஸஂஸஷெஷ-ழ்ந் ஒிந்நம்பிந்நம்ஶரைர்த்தக்த்தம்" என்கிறபடியே ஶகலமாக்கினவனே. ஆஸுரராக்ஷஸர்களை யழியச்செய்தாப்போலே என்னுடைய பாபரூபமான ப்ரதிபந்தகங்களையழிச் செய்யவேணுமென்கை. (பல்படைத்தடக்கைமாயனே) அவர்களையழியச்செய்கைக்குப் பலவகைப்பட்ட ஆயுதங்களை, ஆஶ்ரிதரைக் குளிரத்தடவக்கடவதிருக்கையிலே தரித்த ஆஶ்சர்யஶக்தியுக்தனே. ஒன்றேப்ரதிகூலர்க்கு பாதகமாய் அதுதானே அநுகூலர்க்கு ரக்ஷகமுமாயிருக்கை ஆஶ்சர்யமிறே. என்னுடைய விரோதியைப்போக்குகைக்கு திவ்யாயுதங்கள் வேண்டா, இங்கவமையுமென்கை. (க) "ஸவ்யேஷவ்ஹஷ்ட்ஹஸ்தம் கரிஷ்யதி ஶ்ரீமாந்நஜ்ஜோஸிஃ: அயேஷப்ருஷ்டேமமஹஸ்தபத்மம் கரிஷ்யதி ஸ்ரீமதநந்தமூர்த்திஃ" என்றும், "அணிமிகுதாமரைக்கையை யந்தோ அடிச்சியோந்தலைமிசை நீ யணியாய்" என்றும் ஆஶ்ரிதரை உஜ்ஜீவிப்பிக்குங் கையிறே. (தடம்) குளிர்த்தி.

ஆனாலும் உமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன: (கிடந்திருந்து நின்றியங்கும்போதும்) (௩) "ஆஸீநாவாஶயாநாவாதிஷ்டந்தோயத்ரகுத்ரவா - ஆஸீநாவாஶயாநாவாதிஷ்டந்தோயத்ரகுத்ரவா" என்கிறபடியே கிடந்துமிருந்தும் நின்றும்

(க) வி-பு-ரு-௬௭-௨அ.(௨) தி-வாய்-௧௦-௩. (௨)

மூ.—மண்ணையுண்டுமிழ்ந்துபின் னிரந்து கொண்டளந்தமண்
கண்ணுளல்லதில்லையென்று வென்றகாலமாயினாய்
பண்ணைவென்றவின்சொல்மங்கை கொங்கைதங்குபங்கயக்
கண்ண! நின்னவண்ணமல்லதில்லை யெண்ணும்வண்ணமே.

---

ஸஞ்சரித்தும் இப்படிகளாலே தேஹயாத்ரை நடத்தும்போதும். (நின்னபொற்கழல்) வகுத்த சேஷியான தேவரீருடைய ஸ்ப்ருஹணீயமமன திருவடிகளை. தேஹயாத்ராசேஷமான காலமும்விடவொண்ணாத திருவடிகளென்கை. (தொடர்ந்துவீள்வி லாததோர் தொடர்ச்சி நல்கவேண்டுமே) மேல்விழுந்து இடைவிடாதபடியான † ஸ்வபாவத்தை எனக்குப்பண்ணித்தந்தருள வேணும். தொடர்ச்சி - செறிவு. இத்தால் - அநுபவவிரோதிகளை தேவரீரே போக்கவும், ஸர்வகாலமும் ஸ்ப்ருஹணீயமான தேவரீர் திருவடிகளை இடைவிடாதே அநுபவிப்பேனாகவும் பண்ணித் தந்தருளவேணுமென்றதாய்த்து. (௧௦௪)

நூற்றைந்தாம்பாட்டு. (மண்ணையித்யாதி).

| | |
|---|---|
| மண்ணை | பூமியை |
| உண்டு | ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து |
| உமிழ்ந்து | ஸ்ருஷ்டிகாலத்திலேவெளிநாடுகாணப் புறப்படவிட்டு |
| பின் | அதுக்குப்பின்பு |
| இரந்து | மஹாபலி பக்கலிலே அர்த்தித்து |
| கொண்டு | பெற்று |
| அளந்து | அளந்துகொண்டு |
| மண் | "ஜகத்தானது |
| கண்ணுளல்லது | கடாக்ஷத்திலல்லது |
| இல்லையென்று | ஸ்திதிக்கமாட்டாது" என்று |
| வென்ற | ப்ரளய மஹாபலி ப்ரப்ருதிகளை ஜயித்த |

(அன்றிக்கே)

| | |
|---|---|
| வென்ற | ஸகலபதார்த்தங்களையும் பரிணமிஹ துகயார்ஜபித்த |
| காலமாயினாய் | காலத்தை விபூதியாகவுடையவனே! |
| பண்ணை | கா(மா)நத்தை |
| வென்ற | ஜயித்த |
| இன்சொல் | மதுராலாபத்தையுடையளாய் |
| மங்கை | பருவத்தையுடையளான பெரிய பிராட்டியாருடைய |
| கொங்கை | திருமுலைத்தடங்களிலே |
| தங்கு | வர்த்திக்கிற |
| பங்கயக்கண்ண | புண்டரீகாக்ஷனே! |
| எண்ணும்வண்ணம் | உன்வடிவழகை அநுபவிக்கவேணுமென்கிற மநோரதப்ரகாரத்துக்கு ஹேது |
| நின்னவண்ணமல்ல | உன் வடிவழகல்லது வேறொன்றில்லை. |

தில்லை (௯௫)

அவ.—நூற்றைந்தாம்பாட்டு. நான்சொன்ன உபாயங்களிற்† விழியாதொழிகைக்கும்நான்செய்தபடி காண்கையுமொழியபோக[ஹேது]த்திலேத்வரிக்கைக்கு ஹேதுவென்னென்ன; பிராட்டி புருஷகாரமாக குணாதிகரான தேவரீர்விஷயீகாரத்தையே தஞ்சமென்றிருக்குமவனாகையாலே உபாயாந்தராபேக்ஷையில்லை; தேவரீர்வடிவழகிலந்வயமே போகத்தில்த்வரிக்கைக்கடியென்கிறார்.

வ்யா;(மண்ணையுண்டுமிழ்ந்து)ப்ரளயாபத்திலே அபேக்ஷியாதிருக்க ஆபத்தே முதலாக வரையாதே இஜ்ஜகத்தைத் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நோவுபடாதபடி ஸ்ருஷ்டிகாலத்திலே உமிழ்ந்து. இத்தால் - தன்பக்கல் விமுகராநாளவிலும் வத்ஸலனென்கை. (பின் இரந்துகொண்டளந்து) ஸ்ருஷ்டமானபின்பு அஜ்ஜகத்தை மஹாபலி அபஹரிக்க, அவன்பக்கலிலே அர்த்தியாய்ச் சென்று இரந்து, இந்த்ரனுக்கு

†(பா) லே இழைக்கும்.

த்ரைலோக்யஸாம்ராஜ்யத்தைக் கொடுத்து, அவ்வளவுக்கு மேலே சதுர்த்தபுருஷார்த்தத்தையுங் கொண்டானே. ஸகலசேதநர் தலையிலும் உன் திருவடிகளை வைத்து. இத்தால், விமுகரானாரளவிலும் ஶீலவானுமாய் ஸௌலப்யமுமாயிருக்குமவனென்கை. தன்னை அழியமாறித் †தான் இரக்கையிறே ஶீலம்; எல்லார் தலையிலும் திருவடிகளை வைக்கையிறே ஸௌலப்யம்.

(மண்ணுங் கண்ணுமல்லதில்லையென்று) விமுகரான ஸம்ஸாரிகளைக் குறித்து இப்படிச் செய்த கருணைக்கடியென்னென்னில்; இஜ்ஜகத்துக்கு நம் கடாக்ஷமொழிய வேறு ஸ்திதியில்லையென்று. (வென்றகாலமாயினாய்) ஸகலபதார்த்தங்களும் தன்னையிலே அகப்படும்படி ஸகலபரிணாமத்துக்கும் நிர்வாஹகமான காலத்துக்கும் நிர்வாஹகனானவனே. இத்தால் - ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக் கர்மீபவித்தும் அந்யபேக்ஷத்வத்தால் முறையழிந்தும், இப்படி காலவஶ்யரான சேதநர்க்கு தேவரால்லல்லது காலத்தை ஜயிக்க விரகில்லையென்கை. (௧) "காலோஹ பவதி யத்ர நகாஷுஷு த்ரிவெவஷஸ:-காலம் ஸபசதேயத்ர நகாலஸ்தத்ர வை ப்ரபு:" என்னக்கடவதிறே. "மண்கண்ணுள்ளதில்லை யென்றுமென்ற" என்று கீழே அந்வயிக்கவுமாம். அப்பக்ஷத்தில், மஹாபலிப்ரளயம் முதலான விரோதிகளை உன்பேருகவென்றமென்கை.

(பண்ணைவென்றவின்சொல்மங்கைகொங்கை தங்குபங்கயக் கண்ண) (௨) "ஜயாநாஜயாநாஸா - மதுரா மதுராலாபா" என்கிறபேச்சையும் பருவத்தையுமுடைய பிராட்டியுடைய திருமுலைத்தடத்திலே தங்கிய அபாஶ்ரயமாகவுடைய புண்டரீகாக்ஷனே! இத்தால்-பருவத்தாலும் பேச்சாலும் அவயவஶோபையாலும் விலக்ஷணையான பிராட்டிக்கு வல்லபனானபடியாலே பூர்வவ்ருத்தத்தை விஸ்மரித்து, என்பக்கலிலே கீழ்ச்சொன்ன ஆபத்ஸகத்வாதிகுணப்ரேரிதமான விசேஷகடாக்ஷத்தைப் பண்ணினவனென்கை.

(பின்னைவண்ணமல்லதில்லையெண்ணும் வண்ணமே) தேவரீரை இடைவிடாதே யநுபவிக்கவேணுமென்கிற மநோரத ப்ர

(௧) பார-மோக்ஷ- (௨) ரா-ஸு-கக-கடு †(பா) தாழநிற்கையிறே.

மூ.—கறுத்தெதிர்ந்தகாலநேமி காலனோடுகூடவன்
றறுத்தவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய்
தொறுக்கலந்தவூனமஃது தொழிக்கவன்றுகுன்றமுன்
பொறுத்தநின்புகழ்க்கலாலோர் நேசமில்லை நெஞ்சமே.

காரத்துக்குஹேது உன்வடிவழகல்லது வேறொன்றில்லை; உன்னுடைய விசேஷ கடாக்ஷத்துக்கடியானவாத்ஸல்யாத்யாதம குணங்களொழியவே உன்வடிவழகே யெனக்கு இம்மநோரதத்துக்கும் ஹேதுவென்கை.

நூற்றொன்பதாம்பாட்டு. (கறுத்தித்யாதி)

| | |
|---|---|
| கறுத்து | கோபித்து |
| எதிர்ந்த | எதிரிட்ட |
| காலநேமி | காலநேமியானவன் |
| காலனோடுகூட | ம்ருத்யுவோடே கூடும்படியாக |
| அன்று | அவனாலே ப்ரஹ்மாதிகளுக்கு ஆபத்து வந்தவன்று |
| அறுத்த | அவன்தலையையறுத்த |
| ஆழிசங்குதண்டுவில்லும் வாளும் | ஸ்ரீஸுதர்ஸநபாஞ்சஜந்ய கௌமோதகி ஸார்ங்கநந்தகங்களாகிற பஞ்சாயுதங்களை |
| ஏந்தினாய் | பூவேந்தினாப்போலே தரித்துக்கொண்டிருக்கிறவனே! |
| தொறு | பசுக்களுக்கு |
| கலந்த | அவர்ஜநீயதயாப்ராப்தமான |
| ஊனமஃது | அந்தவூனத்தை, ஆபத்தையென்றபடி; |
| ஒழிக்க | போக்குகைக்காக |
| அன்று | பசுக்களும் இடையரும் ஆபந்நராகப்ரஸங்கித்தவன்று |
| குன்றம் | கோவர்த்தநமாகிற பர்வதத்தை |
| முன் | ஒருவர்க்காகிலும் நோவுண்டாவதற்கு முன்பு |

| | |
|---|---|
| பொறுத்த | தரித்துக்கொண்டு ஸஹித்த |
| நின் புகழ்க்கலால் | உன்னுடையவாபத்ஸகத்வமாகிற குணத்துக்கல்லது |
| நெஞ்சம் | என்னுடைய நெஞ்சுக்கு |
| ஓர் நேசமில்லை | வேறொரு ஸ்நேஹமில்லை. [௧௦௯] |

அ.—நாற்றாம்பாட்டு "நின்னவண்ணமல்லதில்லை" என்று—தாம்வடிவழகிலே துவக்குண்டபடியைச் சொன்னார் கீழ்; இதில்—தேவர்களுடைய ஆபத்ஸகத்வத்துக்கல்லது நான் நெகிழிலும் என் நெஞ்சு வேறொன்றில் ஸ்நேஹியாதென்கிறார்.

வ்யா;—(கறுத்தெதிர்ந்த காலநேமிகாலனோடே கூட (க்ருத்தனாய் எதிரிட்ட காலநேமியாகிறவஸுரனை ம்ருத்யுவோடே கூடும்படி இந்த்ராதிகளுடைய ஐஶ்வர்யத்தையும் அவர்கள் பக்கலில் ஈஶ்வராநுக்ரஹத்தையும் பொறாதே க்ருத்தனாய்த்து. (௧) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்-ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறவிஷயத்திலே கிடீர்! க்ருத்தனாய்த்து. (௨) "ஸமோநாவ நூ: ஸநோபந்து:"(௩) "அஹம்வோபாந்தவோ ஜாத: - அஹம் வோபாந்தவோ ஜாத:" என்கிறபடியே நிருபாதிகபந்துவின் பக்கலிலேயிறே கோபித்தது ஓரஞ்ஜலியாலேயொரு நீராக்கலாம் விஷயத்திலே துஷ்ப்ரக்ருதியாகையாலே எதிரம்புகோத்து நலித்தானென்கை. அநுகூலித்தாரைத்தன்னோடே கூட்டுகையும் ப்ரதிகூலித்தாரை யமனோடே கூட்டுகையுமிறே தேவரீர்க்கு (ஸ்வபாவம். (அன்று) காலநேமியாலே இந்த்ராதிகளுக்கு ஆபத்து வந்தவன்று.

(அறுத்தவாழி சங்குதண்டுவில்லும் வாளுமேந்தினாய்(ஸபரிகரனான காலநேமியைத் தலையையறுத்த திருவாழி தொடக்கமான ஸ்ரீபஞ்சாயுதங்களை தரித்தவனே. திருவாழியாலே அவன் தலையறுப்புண்டபின்னும் "தேவர்களுக்கு எவராலே என்னவிரோதம் வருகிறதோ என்று" (௪) "கைகழலாநேமியான்" என்கிறபடியே திவ்யாயுததரனாயிருக்கிறபடி.

---

(௧) கீ-ரு-௨௯. (௨) (௩) வி-பு-ரு-௧௩-௧௩. (௪) பெரியதிருவ-அ௪

மூ.—காய்சினத்தகாசிமன்னன் வக்கரன்பவுண்டிரன்
மாசினத்தமாலிமா சுமாலிகேசிதேனுகன்
நாசமுற்றுவீழநாள் கவர்ந்த நின்கழற்கலால்
நேசபாசமெத்திறத்தும் வைத்திடேனெம் ஈசனே. (௧௦௭)

---

(தொறுக்கலந்தவூனமஃதொழிக்க) இந்த்ராதிகளுக்கு அஸுரனால் வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லிற்றுக்கீழ்; இந்த்ரனால் பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்த ஆபத்தைப்போக்கினபடி சொல்லுகிறது மேல். பசுக்களுக்கு அநுபவவிநாஶ்யமான வ்யாபத்தைப்போக்குகைக்காக. அஸுரர்களால் வந்த ஆபத்துக்கு ரக்ஷ்யனான இந்த்ரனால் வந்த ஆபத்தாகையாலே அநுவிபத்தே அநுமாய்த்து.(அன்று)(௧) "மொமொவீஜநவ ஜ்ஞவஉதீவாத-ஃ-கோநோபீஜநஸங்குலமதீவார்த்தம்" என்கிறதசையிலே. (தொறு) பசு. (குன்றமுன்பொறுத்த நின்புகழ்க்கலால்.) கோவர்த்தநத்தை(ய)தரித்து ரக்ஷித்த உன்கல்யாணகுணத்துக்கல்லது. இந்த்ரன்ப்ராதிகூல்யத்தில்வ்யவஸ்திதனல்லாமைபோல, அழியச்செய்யும் திவ்யாயுதங்களுண்டாயிருக்கத் தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்தைமலையையெடுத்து நோக்கினனென்கை. "முன்" என்கிறது-ஒருத்தருக்குநோவுவருவதற்கு முன்பென்கை.(௨)"வரைமுனேந்தும்" என்று - அவன் அநாயாஸேந தரிக்கச்செய்தேயும், அவன்ஸௌகுமார்யத்தையநுஸந்தித்து"பொறுத்த"என்கிறார் இவர். (ஓர்நேசமில்லை நெஞ்சமே.) வ்யக்த்யந்தரத்திலாதல், குணாந்தரத்திலாதல் எனக்குப்ராவண்யம் ஸம்பவிக்கிலும் என்மநஸ்ஸுக்கு ப்ராவண்யலேசமில்லை. ஆக, ப்ரயோஜநாந்தரபரரான இந்த்ராதிகளுடைய ஆபத்தை ஆயுதத்தாலே பரிஹரித்தும், ஸ்வாபிமாநத்துக்குள்ளே கிடக்கிற பசுக்களுக்கு மிடையருக்கும் வந்த ஆபத்தை மலையையெடுத்து ரக்ஷித்தும், இப்படியால்வந்த உன் ஆபத்ஸகத்வத்துக்கல்லது என்னெஞ்சுக்கு வேறொருஸ்நேஹமில்லையென்றதாய்த்து.(௧௦௬)

நூற்றேழாம்பாட்டு. (காயித்யாதி)

காய் ஸாத்விகரைக்கொல்லாநிற்கிற

---

(௧) வி-பு-௫-௧௧-௧௩. (௨) திருமாலை-௩௬.

| | |
|---|---|
| சினத்த | கோபத்தையுடைத்தான |
| காசிமன்னன் | காஶீராஜன |
| வக்கரன் | தந்தவக்ரன் |
| பவுண்டிரன் | பௌண்ட்ரகன் |
| மா | மஹத்தான |
| சினத்த | கோபத்தையுடைய |
| மாலி | மாலியென்ன |
| மா | மஹாநான |
| சுமாலி | ஸுமாலியென்ன |
| கேசி | கேஶியென்ன |
| தேநுகன் | தேநுகனென்ன (இவர்கள்) |
| நாசம் | துஃக்கத்தை |
| உற்று | அடைந்து |
| வீழ | ம்ருதராய்விழும்படியாக (அன்றிக்கே "வீழ" என்று - விடுதலாய், ப்ராணனே விடும்படி யென்னுமாம்). |
| நாள் | அவர்களுடைய வாயுஸ்ஸை |
| கவர்ந்த | வாங்கின |
| நின் | உன்னுடைய |
| கழற்கலால் | திருவடிகளுக்கொழிய |
| எத்திறத்தும் | எவ்விஷயத்திலும் |
| நேசம் | பக்தியாகிற |
| பாசம் | கயிற்றை |
| எமீசனே | எனக்கு ஸ்வாமியானவனே! |
| வைத்திடேன் | வையேன். (௧0௭) |

அவ,—நூற்றேழாம்பாட்டு. கீழிரண்டுபாட்டாலே-தமக்கும் தம்முடையதிருவுள்ளத்துக்கு முண்டானபகவத்ப்ரேமத்துக்கடியானவடிவழகையும் ஆபத்ஸகத்வத்தையும்பேசினார்; இதில்-அந்த ஸங்கவிரோதியான ப்ரபலப்ரதிபந்தகங்களை ப்ரபலரானஅஸுரர்களைஅழியச்செய்தாப்போலே போக்கின உன் திருவடிகளுக்கல்லதுவேறொருவிஷயத்தில் நான்ஸங்கம் பண்ணேனென்கிறார்

மூ.—கேடில்சீர்வரத்தனைக் கெடும்வரத்தயனரன்
நாடினோடுநாட்டமா யிரத்தனோடுநண்ணினும்
வீடதானபோகமெய்தி வீற்றிருந்தபோதிலும்
கூடுமாசையல்லதொன்று கொள்வனோ குறிப்பிலே. (௧0அ)

---

வ்யா. (காய்சினத்தகாசிமன்னன்)காயும் சினத்தையுடைய காஸிராஜன். ஸாத்விகரைக்கொன்றல்லது விடாதகோபத்தையுடையவனென்கை. காய்தல் - கொல்லல். அப்படியிருக்கும் தந்தவக்ரன். (பவுண்டிரன்) "ஈஸ்வரோஹம்" என்றிருக்கும் பௌண்ட்ரகவாஸுதேவன். (மாசினத்தமாலி). பெரியசினத்தையுடையமாலி. (மாசுமாலி)மஹாநுஸுமாலி. பெரியசினத்தையுடையனுமாய்(ஸு)பத்ராகாரனுமாயிருக்குமவனென்கை. (கேசி)ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகளுக்கும் பாத(பாய)கனான கேசி. (தேனுகன்)க்ருஷ்ணனை அநுவர்த்திக்கிறஇடையர்க்கும் பசுக்களுக்கும் பயங்கரனான தேநுகன். இவ்வாஸுரவர்க்கத்தினுடையக் ரௌர்யத்தைப்பேசிற்று-தம்முடைய ப்ரதிபந்தகங்களினுடைய க்ரௌர்யம்தோற்றுகைக்காக.(நாசமுற்றுவீழநாள்கவர்ந்த)துக்கத்தையநுபவித்தும்ருதராய்விழும்படி ஆயுஸ்ஸைவாங்கின. நாசம்- துஃக்கம்."வீழ்தல்" என்று - விடுதலாய்,ப்ராணனைவிடும்படியென்னுமாம்.இத்தால்-ஆஸ்ரித விரோதிகளை ஸ்வஶத்ருக்களைப்போலேகண்ணற்றுக்ரூரமாகவதி(யி)த்தபடி(நின்கழற்கலால்நேசபாசமெத்திறத்தும்வைத்திடேன்) விரோதிநிரஸநஶீலனான உன் திருவடிகளிலல்லது, பக்தியாகிறகயிற்றை எவ்விஷயத்திலும் வையேன். பந்த(ஸ்ர)கமாகையாலேபக்தியை "கயிறு"என்கிறது. "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால்" என்னக்கடவதிறே (எம்ஈசனே) என்னுயனே. விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவான பாபங்களையும்தேவரீர்பக்கல்ப்ரேமத்துக்கு விரோதியான. பாபங்களையும்போக்கி இவ்வளவுபுகுரநிறுத்துகைக்கடி இத்தையுடையவனாகையென்கை .... .... .... (௧0எ)

நூற்றெட்டாம் பாட்டு. (கேடிலித்யாதி)
[ "கேடில் சீர்வரத்தனைய் அயன், கெடும்வரத்தரன்",
என்று கூட்டுவது ]

கேடில் சீர் அழிவில்லாத ஸம்பத்தையுடையனும்படி

வரத்தனயயன் பகவத்ப்ரஸாதத்தையுடையப்ரஹ்மா, (வரம் - ப்ரஸாதம். "தேவவர ஸாதேவாரணே ஜாஜாதரிவாஃவா ஜாந" என்னக்கடவதிறே).

கெடும்வரத்தன் தன்னாலே ஸர்வமும் உபஸம்ஹ்ருதமாம்படிபகவத் ப்ரஸாதத்தைப்பெற்றருத்ரன்,

(அதவா)

| | |
|---|---|
| கேடில் சீர் | அழிவில்லாதஸம்பத்தையுடையனாய் |
| வரத்தனாய் | வரப்ரதாநக்ஷமனுமான |
| அயன் | ப்ரஹ்மா, |
| கெடும் | ஸர்வஸம்ஹார்த்ருவத்தையுடையனாய் |
| வரம் | வரப்ரதாநக்ஷமனுமான |
| அரன் | ருத்ரன், (அத்தென்கிறது - சாரியைச்சொல்) |
| நாடினோடு | இவர்களுடையவைஶ்வர்யமான நாட்டோடே கூட |
| நாட்டமாயிரத்தன் | ஆயிரம் கண்களையுடைய இந்த்ரனுடைய |
| நாடு | ஐஶ்வர்யமான நாட்டை |
| நண்ணிலும் | ப்ராபித்தாலும் |
| வீடதான | அப்படிப்பட்ட மோக்ஷரூபமான |
| போகம் | போகத்தை |
| எய்தி | அடைந்து |
| வீற்றிருந்தபோதிலும் | நிரதிஶயாநந்தநிர்ப்பாரனையாகிறஅதிஶயத்தைப் பெற்றிருந்தபோதிலும் |

குறிப்பில் நெஞ்சாலே
கூடுமாசை } உன்னைக் கூடவேணுமென்கிற வா
யல்லது } சையன்றிக்கே
ஒன்றுமிகொள்வனோ ஒன்றை விரும்புவேனோ? (௧௦அ)

அவ—; நூறறெட்டாம்பாட்டு. "நின்புகழ்க்கலால் ஓர்நேச மில்லை நெஞ்சம்" என்றும், "நின்கழற்கலால்நேசபாசமெத்திறத்தும் வைத்திடேன்" என்றும் சொல்லக்கேட்டு அவர் "இதுக்கு விஷயமாக நம்மைக்கிட்டி அநுபவிக்கப் பார்த்தானிலா?"என்ன; போகமோக்ஷஸுகங்களை அநுபவிக்கப் பெற்றாலும் உன்னை ப்ராபிக்கவேணுமென்னுமாசையொழிய மற்றொன்றை விரும்பேனென்கிறார்.

வ்யா.—(கேடில் சீர்வரத்தனாய்க் கெடும்வரத்தயனரன்) [கேடில் சீர்வரத்தனாய- அயன், கெடும்வரத்தனாய- அரன்]அழிவில்லாத ஸம்பத்தையுடையனாம்படி பகவத் ப்ரஸாதம் பெற்றவனாயிருக்கிற ப்ரஹ்மா, ஸர்வத்துக்கும் தன்னாலே உபஸம்ஹாரமாம்படி பகவத்ப்ரஸாதம்பெற்ற ருத்ரன். அதவா''அழிவில்லாத ஸம்பத்தை யுடையனாய் வரப்ரதாநக்ஷமனான ப்ரஹ்மாவும், ஸர்வஸம்ஹாரத்தை யுடையனாய், வரப்ரதாநக்ஷமனான ருத்ரனும் என்றுமாம்.

(நாடினோடு நாட்டமாயிரத்தன் நாடுநண்ணினும்) இவர்களுடைய நாட்டோடேகூட ஸஹஸ்ராக்ஷனுடைய நாட்டையும் பெற்றாலும். (நாட்டம்) கண். "நாடு" என்று நாட்டிலுள்ள விஷயங்களை நினைக்கிறது. அதாகிறது - ப்ரஹ்மருத்ராதிகளுடைய மூவகைப்பட்ட ஐஸ்வர்யத்தை நானொருத்தனும் பெற்றாலும். இவ்வைஸ்வர்யம்மூன்றுக்கும் ஏகாஸ்ரயத்திலே ஸம்பாவனையில்லையிறே; கூடாததுகூடினாலும்,

(வீடதான போகமெய்தி)அதுக்குமேலே பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷமாகிற போகத்தைப்ராபித்து மோக்ஷமாகிறது.

---

அரு,— நூற்றெட்டாம்பாட்டு வரததனாய் - வரத்தை லபித்தவனா

மூ.—சுருக்குவாரையின்றியே சுருங்கிநாய்சுருங்கியும்
பெருக்குவாரையின்றியேபெருக்கமெய்துபெற்றியோய்
செருக்குவார்கள்தீக்குணங்கள் தீர்த்ததேவதேவனென்
றிருக்குவாய்முனிக்கணங்க ளேத்தயானுமேத்தினேன். ()

ஸம்ஸாரநிவ்ருத்தி மாத்ரமாதல், ஒருதேஸவிஸேஷப்ராப்தியாத லன்று; கைங்கர்யபோக(ஹேது)மென்கை. (வீற்றிருந்தபோதிலும்)கைங்கர்யோப கரணங்களால் குறைவற்றிருந்தபோதிலு மென்னுதல்; நிரதிஸயாநந்த நிர்ப்பரனாயிருந்தபோதிலு மென்னுதல். கைங்கர்யோபகரண ஸம்பத்தி ஸங்கல்பமாத்ரத்தாலே உண்டாமதிறே. போகமோக்ஷங்கள் ஏகாஸ்ரயத்திலேஸம்பவிக்கிலும்.

(கூடுமாசையல்லது ஒன்றுகொள்வனோகுறிப்பிலே)உன்னைக்கூடவேணுமென்னு மாசையல்லது வேறொன்றை நெஞ்சால் விரும்புவனோ. (௧) "[illegible] | [illegible] — தர்மார்த்தகாமைꞏகிந்தஸ்யமுக்திஸ்தஸ்யகரேஸ்த்திதா | ஸமஸ்தஜகதாம்மூலேயஸ்யபக்திஸ்ஸ்திராத்வயி" (௨) "விஜ்ஞா[illegible] - விஜ்ஞாநம் யதிதம்ப்ராப்தம்" என்றிறே பகவத்ஜ்ஞாந பக்திகள் ரஸித்தவர்களுடைய வார்த்தை. (௧௦௮)

நூற்றொன்பதாம்பாட்டு. (சுருக்குவாரையித்யாதி)
சுருக்குவாரையின்றியே } ஒருகர்மம், ஒரு காலம் ஒரு கர்த்தா, இவர்களாகிற ஹேதுக்களின்றிக்கே,

ன்னுதல். (வீற்றிருக்கை) மூவருடைய ஐஸ்வர்யத்தாலும் அவ்வருகுள்ளாரில்வேறுபாடுதோற்ற விருக்கையாதல்; மோக்ஷத்திலே ஆனந்த நிர்ப்பரனாயிருக்கையாதல். ஆனந்த நிர்ப்பரனாயிருந்தால் கைங்கர்யம் வேண்டாவோவென்னவருளிச் செய்கிறார் (கைங்கர்யேத்யாதி). (௧௦௮)

(௧) வி-பு-௧-௨௦-௨௭. (௨) ஜித-௧

| | |
|---|---|
| சுருங்கினாய் | வாமநனாய் |
| சுருங்கியும் | அப்படி சுருங்கியிருக்கச்செய்தேயும் |
| பெருக்குவாரையின்றியே | கர்மகாலகர்த்தாக்களாகிற வ்ருத்தி (ஹி) ஹேதுக்களின்றிக்கே |
| பெருக்கமெய்து | வ்ருத்தி(ஷ்டி)யடைந்தமையாகிற |
| பெற்றியோய் | ஸ்வபாவத்தையுடையவனே! |
| செருக்குவார்கள் | இந்த்ராதிகளைபாதி (யி)க்கிறமஹாபலிப்ரப்ருதிகளுடைய |
| தீக்குணங்கள் | அஹங்காரமமகாரங்களாகிற நாஶகரஸ்வபாவங்களை |
| தீர்த்த | போக்கின |
| தேவதேவன் | ஸர்வேஶ்வரனே! |
| என்று | இப்படி |
| இருக்குவாய் | ருக்ப்ரதேஶங்களும் |
| முனிக்கணங்கள் | முநிஸமூஹங்களும் |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ண |
| யானும் | அநந்யப்ரயோஜநனானநானும் |
| ஏத்தினேன் | ஸ்தோத்ரம்பண்ணினேன். (ஸாதநபுத்த்யா (ய்)ா) ஸ்தோத்ரம் பண்ணினேனல்லேனென்கை) (௧௦௬) |

அவ. நூற்றெண்பதாம்பாட்டு. கீழ் - நம்பக்கல் உமக்குண்டாகச் சொன்னஆசை ஸ்வயத்நத்தாலே அநவரத(ஸா)பாவனை பண்ணியும்ஸததம் கீர்த்தநம் பண்ணியும்பெறுவாருடையஆசை போலேயிருந்ததீ !, "நிரந்தரம்நினைப்பதாக நீ நினைக்க வேண்டும்" என்றும் "திருக்கலந்துசேருமார்பதேவ தேவதேவனே" என்று தொடங்கி, "நின்பெயருருக் கலந்தொழிவிலா துரைக்குமா றுரைசெய்" என்றும்,

"கூடுமாசையல்லதொன்றுகொள்வனே" என்றும் பேசினீரே யென்ன; உன்னுடைய ஆஸ்சர்ய சேஷ்டிதங்களனைவனை ப்ரேரிக்ககாலக்ஷேபார்த்தமாகப் பேசினேனித்தனை, அதுதானும் வேதங்களும் வைதிகபுருஷர்களும்பேசிப்போரக்காண்கையாலே பேசினேனித்தனை யென்கிறார்.

வ்யா. (சுருக்குவாரை யின்றியே சுருங்கினாய்) ஒருகர்மத்தாலே ஒருகாலத்திலே ஒருகர்த்தாவாலுண்டாம் ஹ்ராஸமின்றிக்கே ஆஸ்ரிதாநுக்ரஹம்பண்ணரிக்க இச்சையாலேவாமநனாய். சேதநர் கர்மபேதத்தாலுங்கர்த்ருபேதத்தாலும் க்ரிமிகீடங்களாகாநின்றார்களிறே. கலிகாலமும் சேதநரை அங்குஷ்டமாத்ரமாக்கா நின்றதிறே. லங்காப்ரவேச ஸமயத்தில் அந்யபாரதந்த்ர்யத்தாலே திருவடி ஹ்ரஸ்வரூபனானானிறே. (சுருங்கியும்) அப்படியே † சிறுகியிருக்கச் செய்தேயும் (பெருக்குவாரை யின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்) பூர்வோக்தமானவ்ருத்தி ஹ்ராஸ ஹேதுக்களின்றிக்கேயிருக்கப் பெருக்கமெய்தும் ஸ்வபாவனே. (பெற்றி) இயல்வு. இத்தால் — அர்த்தித்வத்துக்கு ஏகாந்தமான வாமந வேஷத்தைக்கொண்டு, கையிலே நீர்விழுந்த ஸமநந்தரத்திலே செய்ததுவாய்த்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்து சதுர்த்தச புவநங்களிலுண்டான ஸகல சேதநர் தலையிலும் வரையாதே திருவடிகளை வைக்கையாலே ஆஸ்ரிதார்த்தமாகவ்ருத்திஹ்ராஸாதிகள் இவனுக்கு ஸ்வாபாவிகமென்கை (செருக்குவார்கள்) இந்த்ராதிகளைநலிந்து த்ரைலோக்யத்தை அபஹரித்து, (க) "[illegible] - நயஷ்டவ்யம்

அரு.— நூற்றெண்பதாம்பாட்டு. (கர்த்த்ருபேதம்) தான்கர்த்தாவாய்ச் செய்கையன்றிக்கே தனக்கொரு கர்த்தாவுண்டாய் அவனுக்குப் பரதந்த்ரனாய்க் கொள்ளும்வடிவு. இதுதிருவடிபக்கலிலே கண்டோமென்கிறது. ... ... ... ... ... (௧௦௬)

† (பா) சுருங்கி

மூ.—தூயனாயுமன்றியுஞ் சுரும்புலாவுதண்டுழாய்
மாயநின்னைநாயினேன் வணங்கிவாழ்த்துமீதெலாம்
நீயுநின்குறிப்பினிற் பொறுத்துநல்குவேலைநீர்ப்
பாயலோடுபத்தர்சித்தம் மேயவேலைவண்ணனே. (கக௦)

தாதவ்யம்'' என்று ஈஶ்வராஜ்ஞையை அதிலங்கித்து, இப்படிச் செய்தோமென்னும் அநுதாபமுமின்றிக்கே செருக்கி வர்த்திக்கிற மஹாபலிபோல்வாருடைய. (தீக்குணங்கள் தீர்த்த தேவதேவன்) அஹங்காரம மகாரமாகிற நாஶகமானஸ்வபாவத்தைத் தன்னுடைய அர்த்தித்வத்தால்தவிர்த்து, இந்த்ராதிகளுக்குக் குடியிருப்பைக் கொடுத்த ஸர்வேஶ்வரனே!

(என்றிருக்குவாய் முனிக்கணங்களேத்த) இப்பாசுரத்தாலே த்ரைவிக்ரமாபதாநத்தைப்பற்றி வேதஸ்த்தலங்களும் வைதிகரான முநிஸமூஹங்களும், (க) "விஷ்ணோர்நுகம் வீர்யாணி ப்ரவோசம் - விசக்ரமேப்ருதிவீமேஷஏதாம்" (க) "த்ரிர்தேவ: ப்ருதிவீமேஷ ஏதாம் - த்ரிர்த்தேவ:ப்ருதிவீமேஷ ஏதாம்" இத்யாதிவேதங்களும், (௨)"ஸஹஸ்ரநாமாதி ஸ்தோத்ரை: ... ஸங்கைஸ்ஸஹஸ்ராணாம் திவிபூதலஸ்த்தை: ததாமநுஷ்யைர்க்ககநேசகேசரை:। ஸ்துத:" இத்யாதிகளாலே ஶௌநகாதிகளும் ஏத்தக்கண்டவாறே. (யானுமேத்தினேன்) தேவரீருடைய ஸௌஶீல்யத்தையும் ஸௌலப்யத்தையும் விரோதிநிரஸந ஶீலத்தையும் பேசி, காலக்ஷேபம் பண்ணியல்லது நிற்கமாட்டாமையாலேயானுமேத்தினேனித்தனை. இது வொழிய ஒருஸாதநபுத்த்யா யேத்தினேனல்லேனென்கை.

நூற்றெருபதாம்பாட்டு. (தூயனாயுமித்யாதி)

| | |
|---|---|
| சுரும்பு | வண்டுகள் |
| உலாவு | ஸஞ்சரிக்கிற |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| துழாய் | திருத்துழாயையுடைய |

(க) விஷ்ணுஸூக்தம் (௨) வி-தர்ம-௬௩-௩௩.

| | |
|---|---|
| மாய | ஆஸ்சர்யபூதனே! |
| வேலைநீர் | ஸமுத்ரஜலமாகிற |
| பாயலோடு | படுக்கையோடுகூட |
| பத்தர் | பக்திமான்களுடைய |
| சித்தம்மேய | ஹ்ருதயத்திலே வந்திருக்கிற |
| வேலைவண்ணனே | கடல்போன்றநிறத்தையுடையவனே! |
| தூயனாயும் | ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஶுத்தியை அநுஸந்தித்தும், |
| அன்றியும் | அந்தஸ்வரூபத்துக்கு அஹங்காரமமகாரங்களால் வந்த அஶுத்தியை அநுஸந்தியாமலும், |
| நாயினேன் | நாய்போலே அத்யந்தநிஹீநனானநான் |
| நின்னை | பரமபாவநனாய், பரமபோக்யனானவுன்னை |
| வணங்கிவாழ்த்துமீதெலாம் | நமஸ்கரித்து மங்களாஶாஸநம்பண்ணுகையாகிற விதெல்லாம் |
| நீயும் | க்ஷமாநிதியானதேவரீரும் |
| நின்குறிப்பினில் | உம்முடைய திருவுள்ளத்திலே |
| பொறுத்து | க்ஷமித்து |
| நல்கு | ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணும். (கக0) |

அவ;—நூற்றொருபதாம்பாட்டு. (க) "தத்வஜ்ஞாலோவிவஜ்வ:-தத்விப்ராஸோவிபக்யவ:" என்கிறபடியே அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(ரான)ரும் தேவர்களும் முநிகணங்களும் எத்திப்போந்தவிஷயத்தை நித்யஸம்ஸாரியாய்ப்போந்த நான் எத்தக்கடவேனல்லேன்; தன் செல்லாமையாலே புகழ்ந்தானென்று திருவுள்ளம் பற்றிப்

(க) விஷ்ணுஸூக்தம்.

பொறுத்தருளவேணுமென்று, கீழ் "ஏத்தினேன்" என்றவனுக்கு க்ஷாபணம்பண்ணுகிறார்.

வ்யா.—(தூயனுயுமன்றியும்) (க) "க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத்விஶுத்திঃ பரமா மதா-க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வர ஜ்ஞாநாத்விஶுத்திঃபரமாமதா" என்கிறபடியே தேவரீருடையபாவநத்வத்தை அநுஸந்தித்து நான்யோக்யனென்று பரிமாறியும், ஆகர்ஷகமான தேவரீருடைய வடிவைக்கண்டு மேல்விழுந்து நான் நித்யஸம்ஸாரியென்று புத்திபண்ணுதே பரிமாறியும். அதவா, (உ) "நஹிஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹ வித்யதே-நஹிஜ்ஞாநேநஸத்ருஶம்பவித்ரமிஹவித்யதே" என்கிறபடியேஸ்வரூபஜ்ஞாநத்தாலேஶுத்தனென்று பரிமாறியும், அந்தஸ்வரூபத்துக்கு அஹங்கார மமகாரங்களால் பிறந்த அசுத்தியையும் புத்தி பண்ணுதே பரிமாறியும் போந்தேனென்றுமாம்.

(சுரும்புலாவுதண்டுழாய்மாய) தம்தண்மையையும் அத்தலையில் வைலக்ஷண்யத்தையும் பாராதேயோக்யனென்று ப்ரமிக்கைக்கு ஹேதுசொல்லுகிறது. வண்டுகள் அபிநிவேசிக்கும் திருத்துழாயாலே அலங்க்ருதமாய்ஆஶ்சர்யமானகுணசேஷ்டிதங்களையுடையவனே!; திர்யக்குக்களுக்கும் ஸ்ப்ருஹைபண்ணவேண்டும்படியிறே போக்யதையிருப்பது. ஒப்பனையழகும் குணசேஷ்டிதங்களுமாய்த் து இவரைமேல்விழப்பண்ணிற்று. (நின்னை) ஸர்வாதிகனாய் பரமபாவநனாய்ஸர்வபோக்யனாயிருக்கிறவுன்னை. (நாயினேன்) உன்னுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாதாப்போலே என்னுடைய நிகர்ஷத்துக்கும் அவதியில்லையென்கிறார். (நாயினேன்) திறந்த வாசலெல்லாம்நுழைந்து,நுழைந்தவாசலெல்லாவற்றிலும்பரிபூ(ஶு)தனாய், தேவரீர் உகந்து தொடிலும் அங்குத்தைக்கு அவத்யம் விளையும்படியானஸ்வரூபத்தையுடைய நான்,

(வணங்கிவாழ்த்து மீதெலாம்) ஒன்றைச்செய்து அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறேனே, திருவடிகளிலே தலையாரவணங்கி

அரு;—நூற்றுப்பத்தாம்பாட்டு. (தூயனாய்) ஶுத்தனாயும். (அன்றியும்) அஶுத்தனாயும். அவனுடைய பாவநத்வத்தையும் தன்னுடைய அயோக்யதையையும் அநுஸந்திக்கை - ஶுத்தி. அவதாரத்தில் ஜா

(க) யாஜ்ஞ-ஸ்ம்ரு. (உ) கீ-௪-௩௮.

மூ.—வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்குமாறில்போர்
செய்துநின்னசெற்றதீயின் வெந்தவர்க்கும்வந்துனை
எய்தலாகுமென்பராத லாலெம்மாயநாயினேன்
செய்தகுற்றம் நற்றமாகவேகொள் ஞாலநாதனே. (௧௧௧)

---

வாயாரவாழ்த்திப்போருகிற இதெல்லாம். (நீயும்) நானும் ப்ரேமத்தாலே தவிரமாட்டுகிறிலன், க்ஷாந்தியை ஸ்வபாவமாகவுடைய நீயும் பொறுக்கவேணும். (நின்குறிப்பினில் பொறுத்துநல்கு)காக ஶிஶுபாலாதிகளுடையஅபராதத்தைத்திருவுள்ளத்தாலே பொறுத்தாப்போலே என்னபராதத்தையும் திருவுள்ளத்தாலே பொறுத்து, அவ்வளவன்றிக்கே, இவன்ப்ராதிகூல்யத்தில்வ்யவஸ்திதனல்லனென்று ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும்.

(வேலைநீர்ப்பாயலோடு பத்தர்சித்தம்மேய வேலைவண்ணனே) இது தம்மைப்பொறுக்கைக்குஹேதுவருளிச்செய்கிறார்-திருப்பாற்கடலாகிற படுக்கையோடே அக்கடல் செவ்வேநின்றாப்போலே ஶ்ரமஹரமான வடிவோடே ஆஶ்ரிதருடைய ஹ்ருதயத்தில் ஸகலதாபங்களும் போம்படி நித்யவாஸம்பண்ணும் ஸ்வபாவனே. ஆஶ்ரிதருடையஹ்ருதயத்திலே புகுரக்கணிசித்துத் திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷனாய் வந்துகண்வளர்ந்தருளி, ஆஶாலேசமுடையாருடைய ஹ்ருதயத்தில்ஶ்ரமஹரமாகப்புகுருமவனுகையாலே, என்னைப் பொறுத்து நல்கவேணுமென்கிறார். .... (௧௧௦)

நூற்றுப்பதினோராம் பாட்டு. (வைதித்யாதி)

| | |
|---|---|
| நின்னை | ஸ்தவ்யனான வுன்னை, |
| வல்லவா | உள்ளஶக்திப்ரகாரம் |
| வைது | பருஷித்து |
| பழித்தவர்க்கும் | நிந்தித்த ஶிஶுபாலாதிகளுக்கும் |
| மாறில் | நிஸ்துலமான |
| போர் | யுத்தத்தை |
| செய்து | பண்ணி |

---

ஶியபுத்தியும், தன்தோஷம்பாராமல்மேல்விழுகையும்-ஆஸக்தி; இதுமுந்தினவர்த்தம். திருவுள்ளத்தாலே பொறுத்தாப்போலே - பொறுத்தென்றந்வயம் (வேலைவண்ணம்) நிறமும். ஸ்வபாவமும். ... ... (௧௧௦

| | |
|---|---|
| நின்ன | உன்னுடையதான |
| செற்றம் | கோபமாகிற |
| தீயில் | அக்நியிலே |
| வெந்தவர்க்கும் | தக்த (உஹ) ராணவாலிப்ரப்ருதிகளுக்கும் |
| உன்னை | ஸர்வாதிகனானவுன்னை |
| வந்தெய்தலாகுமென்பர் | வந்துப்ராபிக்கலாமென்று ருஷிகள் சொல்லாநின்றார்கள்; |
| ஆதலால் | ஆகையாலே |
| எம்மாய | என்னுடைய தயாக்ஷாந்த்யாத்யாஸ்சர்யகுணயுக்தனே! |
| ஞாலநாதனே | ஜகத்துக்கு ஶேஷியானவனே! |
| நாயினேன் | அநந்யகதியாயிருக்கிறநான் |
| செய்தகுற்றம் | பண்ணின குற்றத்தை |
| நற்றமாகவே | குணமாகவே |
| கொள் | கொண்டருளவேணும். (௧௧௧) |

அவ;—நூற்றுப்பதினொராம்பாட்டு. தம்முடைய தண்மையை அநுஸந்தித்து, "பொறுத்து நல்கு" என்றார் - கீழ்ப்பாட்டில், இதில்-பகவத் ப்ரபாவத்தை யநுஸந்தித்து காலக்ஷேபார்த்தமாகப் பண்ணின அநுகூலவ்ருத்தியால் வந்த குற்றத்தையும் ப்ராமாதிகமாகச்செய்த குற்றத்தையும்குணமாகக்கொள்ளவேணுமென்கிறார்.

வ்யா.—(வைதுநின்னை) (க) 'ஸ்துதிப்ரிய:-ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:' என்று புகழப்படும் உன்னைபபருஷிக்கைக்கு விஷயமாக்கி. பருஷந்தானென்னென்னில்; அபிஷிக்தக்ஷத்ரியனன்றிக்கே, அவர்களுக்குப்பெண்கொடுத்து, பெண்குடியானயதுவம்ஶத்திலே

நூற்றுப்பதினொராம் பாட்டு. (பெண்குடி) கொடுத்துக் கொள்ளுகிற ஸம்பந்தமாத்ரமொழிய அபிஷேகத்துக்கு யோக்யதையில்லாதகுடி.

(க) ஸஹஸ்ரநாமம்

பிறந்தானென்றும், இடக்கையும் வலக்கையுமறியாதஇடைக்குலத்திலே பிறந்தானென்றுமாய்த்துப் பருஷிப்பது. (வல்லவா பழித்தவர்க்கும்) அவ்வம்ஶங்களுக்கும் அவத்யமானதூத்யஸாரத்யநவநீதசௌ(வ்ள)ர்யாதிகளைவ்ருத்தஹாநியாகச்சொல்லிப்பழித்து. (பழி) குற்றம். வல்லவா பழிக்கையாவது - உள்ளஶக்தியெல்லாம் பகவந்நிந்தையிலேயாக்குகை. (மாறில்போர்செய்து நின்ன செற்றத்தீயில் வெந்தவர்க்கும்,) எதிரில்லாத யுத்தத்தைப்பண்ணி, உன் கோபாக்நியாலேதக்த(உஷ்ண)ரானவர்களுக்கும். மஹாராஜரோடேவாலிபண்ணினயுத்தத்தையாய்த்துஇவர் 'மாறில்லாதபோர்' என்கிறது. அவர்களாகிறார் ஶிஶுபாலனும் வாலியும்முதலானவர்கள்.

(வந்துனையெய்தலாகுமென்பர்) ஸர்வாதிகனை உன்னைவந்து ப்ராபிக்கலாமென்று ரிஷிகள் சொல்லாநின்றார்கள். (க) "[illegible]" - பகவச்சக்ரேணவ்யாபாதிதஸ்ததஸ்மராஞ்ஜக்தகிலாகஸஞ்சயோபகவதாந்தமுபநீதஸ் தஸ்மிந்நேவலயமுபயயௌ" என்று சிசுபாலமோக்ஷத்தைச்சொன்னன்ஸ்ரீபராஶரபகவாந்;(உ)'[illegible]† [illegible]'-ராமபாணஹதக்ஷிப்ரமாவஹத்பரமாங்கதிம்" என்றுவாலியுடையபரமகதிப்ராப்தியைச்சொன்னஸ்ரீவால்மீகிபகவாந். (ஆதலால்) உன்னை நிந்தித்தார்க்கும் எதிரிட்டார்க்கு மகப்படகுணப்ரபாவத்தாலேஉன்னைப்பெறலாமென்றுமஹர்ஷிகள் சொல்லுகையாலே. (எம்மாய) ஆஶ்ரிதருடைய அபராதங்களைப் பொறுக்கைக்கடியானதயாக்ஷாந்த்யாஶ்சர்யகுணங்களை எனக்கு ப்ரகாஶிப்பித்தவனே.

(நாயினேன் செய்தகுற்றம் நற்றமாகவேகொள்) அநந்யகதியாய்உன்னை பார்த்திருக்கிறநான் ப்ராமாதிகமாகச்செய்த குற்றத்தையும் குணமாகக்கொள்ளவேணும். (ஞாலநாதனே) ஜகத்துக்கு நிருபாதிகசேஷியானவனே. ஜ்ஞாநாஜ்ஞாந விபாக(ஸாம)மின்றிக்

---

(வல்லவா) அவன் தோஷமுள்ள வளவுமென்னுதல்; தன்ஶக்தியுள்ளவளவுமென்னுதல். ... ... ... (௧௧௧)

---

†(பா)ஸஙக்ஷிப்ர (க)வி-பு-ச-௧௰-௧௫. (உ) ரா-கி-எ-அ.

மூ.—வாள்களாகிநாள்கள்செல்ல நோய்மைகுன்றிமூப்பெய்தி
மாளுநாளதாதலால் வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஆளதாகுநன்மையென்று நன்குணர்ந்ததன்றியும்
மீள்விலாதபோகம்நல்க வேண்டும் மாலபாதமே. (கக௨)

---

கே. இருந்ததேகுடியாக இஜ்ஜகத்தையுடையவனென்று-குற்றத்தைக்குணமாகக்கொண்டருளுகைக்குஹேது சொல்லுகிறது.(ககக)

நூற்றுப்பன்னிரண்டாம் பாட்டு. (வாள்களாகிபித்யாதி)

| | |
|---|---|
| என்னெஞ்சமே | எனக்கு பவ்யமான மநஸ்ஸே! |
| வாள்களாகி | ஆயுஸ்ஸை ஈரும்வாள்போலே |
| நாள்கள் | திவஸங்கள் |
| செல்ல | கழிய, |
| நோய்மை | ரோகத்திலே |
| குன்றி | பலஹாநியாக, |
| மூப்பு | ஜரையை |
| எய்தி | ப்ராபித்து |
| மாளும்நாளது | மாளுமந்ததிவஸம் "வந்துப்ராப்தமாயிற்று" என்றத்யாஹார்யம். |
| (அன்றிக்கே) | |
| மாளும்நாள் | முடியும் நாள் |
| அது | அப்படிப்பட்டது, அநியதமென்றபடி; |
| ஆதலால் | ஆகையாலே |
| வணங்கிவாழ்த்து | ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே வணங்கி ஸ்தோத்ரம்பண்ணப்பார். (காலக்ஷேபார்த்தமாக ஸ்தோத்ரம் பண்ணப் பாரென்றுமாம்). |
| அதன்றியும் | காலக்ஷேபார்த்தமே யன்றிக்கே |
| ஆளதாகும் | அந்தவடிமைசெய்கை |
| நன்மையென்று | புருஷார்த்த மென்று |

நன்குணர்ந்து நன்றாக புத்திபண்ணி

"வணங்கிவாழ்த்து" என்றநுஷங்கம்.

மீள்விலாத புநராவ்ருத்தியில்லாத

போகம் கைங்கர்யபோக(ஸௌம)த்தை

மாலபாதம் ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளே

நல்கவேண்டும் நமக்குத்தரவேண்டும்.

"நீவணங்கிவாழ்த்து" என்று இங்கும் அநுஷங்கம். (ககஉ)

அவ—; நூற்றுப்பன்னிரண்டாம்பாட்டு. கீழ்ரண்டு பாட்டாலே - இத்தலையில் குற்றத்தைப் பொறுக்கவேணுமென்று க்ஷாமணம்பண்ணி இக்குற்றங்கள் குணமாகவேணுமென்று சொன்னார்; இப்பாட்டில் - திருவுள்ளத்தைக் குறித்து, ஆயுஸ்ஸு இன்னபோது முடியுமென்று தெரியாது. அவன் திருவடிகளிலே வணங்கிவாழ்த்தி காலக்ஷேபம் பண்ணப்பாரென்கிறார்.

வ்யா;—(வாள்களாகி நாள்கள் செல்ல) ஆயுஸ்ஸையீரும்வாள்போலே நாள்கழிய. தேஹாத்மாபிமாநிகள் தேஹத்தில் விருப்பத்தாலே ஆயுஸ்ஸுப்போகாநின்றதென்று அஞ்சாநிற்பர்கள்; (க) "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்" என்கிறபடியே பகவத் ஸமாஶ்ரயணத்துக்குக் கண்டகாலமு வ்யர்த்தமாய்ப்போகாநின்றதென்று மோக்ஷருசியுடையார் வெறுப்பர்கள்; ஆஶ்ரயித்தவர்கள் பகவதநுபவத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமே போகாநின்றதென்று வெறுப்பர்கள். (நோய்மைகுன்றி மூப்பெய்தி) யௌவநாவஸ்த்தையிலுண்டாக்கக்கடவ வ்யாதிரோகாதிகளாலேகுன்றி. பலஹாநியே ப்ரக்ருதியாய் மூப்பை ப்ராபித்து. பால்யத்தில் ஜ்ஞாநம் குறைந்திருக்கும்;வார்த்த(க்ய)த்தில்ஶக்திகுறைந்திருக்கும்; இரண்டுமுண்

நூற்றுப்பன்னிரண்டாம் பாட்டு. "ஆக்கைவிடும் பொழுதெண்ணே" என்றிருக்கவேண்டியிருக்க, ஆயுஸ்ஸுப்போகிறதென்று வெறுப்பானென்னென்னவருளிச்செய்கிறார் (தேஹாத்மாபிமாநிகளித்யாதி). (நோய்மை)பலம்

(க) விஷ்ணுதத்வே

டான யௌவநாவஸ்தையில்ரோகாத்யுபாதி(யி)களினுலேஜ்ஞாநஶ
க்திகள் குறைந்திருக்கும். இவையாய்த்துஉள்ள ஆயுஸ்ஸிலேவரும்
ப்ரத்யூஹங்கள்.

(மாளும் நாளது) மாளும் அந்த திவஸமாய்த்து - முடியும்
நாளாய்த்து ப்ராப்தமாய் நிற்கிறதென்கை. அதவா, (மாளும்) முடி
யும், (நாளது) ஆயுஸ்ஸின் ஸ்வபாவமென்றுமாம். (ஆதலால் வண
ங்கிவாழ்த்து) ஆயுஸ்ஸு அஸ்த்திரமாகையாலும், உள்ளஆயுஸ்ஸு
க்கு ப்ரத்யூஹங்கள்பலவுமுண்டாகையாலும்,"நாளைச்செய்கிறோம்"
என்றிருக்குமதன்று, உள்ளபோதே தலைபடைத்த ப்ரயோஜநம்பெ
றத் திருவடிகளிலேவணங்கி, (க) "ஸாஜிஹ்ராயாஹரிம்ஸௌதி-
ஸாஜிஹ்வாயாஹரிம் ஸ்தௌதி" என்கிறபடியே-வாய்படைத்த
ப்ரயோஜநம்பெற வாழ்த்தப்பார். காலக்ஷேபம் நமக்கு பகவதநுப
வத்தாலல்லது செல்லாதாகையாலே வணங்கிவாழ்த்தப்பாரென்று
மாம். (என்னெஞ்சமே) எனக்கு பவ்யமான நெஞ்சமே. உன்னு
டைய கார்யமான ஸ்ம்ருதிக்கு நான்சொல்லவேண்டா விறேயென்
கிறார். "நின்புகழ்க்கலால் நேசமில்லை நெஞ்சமே" என்று தம்மி
லும் பகவத்ப்ரவணமாயிறே தம்முடைய திருவுள்ளமிருப்பது.

(ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்ததன்றியும்) கீழ்ச்
சொன்னகாலக்ஷேபமேயன்றிக்கே அடிமைசெய்கையே புருஷார்த்
த்மென்று ஸ்வரூபஜ்ஞாநமடியாகபுத்திபண்ணி வணங்கி வாழ்த்
தப்பார்.(ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்து) (உ) "த்யா
யம்ஸ்ஸ்துவந்நமஸ்யம்ஶ்ச - த்யாயந்ஸ்துவந்நமஸ்யம்ஶ்ச" என்று பகவ
த்ப்ராப்திக்கு இவற்றை ஸாதநமாகச்சொல்லாநின்றபின்பு அதுக்
காளுலோ வென்ன.

(மீள்விலாதபோகம் நல்கவேண்டும் மாலபாதமே) ஸர்வாதிக
னான ஸர்வேஶ்வரன் திருவடிகள், நமக்கு (௩) "நசபுநராவர்த்
ததே. நசபுநராவர்த்ததே" என்கிறபடியே யாவதாத்மபா(ஹா)
வியானகைங்கர்யபோக (ஹோம)த்தைத் தரவேணும்; நீவணங்கி

(க)விஷ்ணுதர்ம-க. (உ)ஸஹஸ்ரநாம (௩) சாந்தோ-அ-கடு-க

நன்குணர்ந்து நன்றாக புத்திபண்ணி
"வணங்கிவாழ்த்து" என்றநுஷங்கம்.

| | |
|---|---|
| மீள்விலாத | புநராவ்ருத்தியில்லாத |
| போகம் | கைங்கர்யபோக(ஸௌம)த்தை |
| மாலபாதம் | ஸர்வாதிகனான ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளே |

நல்கவேண்டும் நமக்குத்தரவேண்டும்.

"நீவணங்கிவாழ்த்து" என்று இங்கும் அநுஷங்கம். (௧௧௨)

அவ—; நூற்றுப்பன்னிரண்டாம்பாட்டு. கீழிரண்டு பாட்டாலே - இத்தலையில் குற்றத்தைப் பொறுக்கவேணுமென்று க்ஷாமணம்பண்ணி இக்குற்றங்கள் குணமாகவேணுமென்று சொன்னார்; இப்பாட்டில் - திருவுள்ளத்தைக் குறித்து, ஆயுஸ்ஸு இன்னபோது முடியுமென்று தெரியாது. அவன் திருவடிகளிலே வணங்கிவாழ்த்தி காலக்ஷேபம் பண்ணப்பாரென்கிறார்.

வ்யா;—(வாள்களாகி நாள்கள் செல்ல) ஆயுஸ்ஸையிரும்வாள் போலே நாள்கழிய. தேஹாத்மாபிமாநிகள் தேஹத்தில் விருப்பத்தாலே ஆயுஸ்ஸுப்போகாநின்றதென்று அஞ்சாநிற்பர்கள்; (௧) "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய நிவேதிதும்" - விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய நிவேதிதும்" என்கிறபடியே பகவத் ஸமாஸ்ரயணத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமாய்ப்போகாநின்றதென்று மோக்ஷருசியுடையார் வெறுப்பர்கள்; ஆஸ்ரயித்தவர்கள் பகவதநுபவத்துக்குக் கண்டகாலம் வ்யர்த்தமே போகாநின்றதென்று வெறுப்பர்கள். (நோய்மைகுன்றி மூப்பெய்தி) யௌவநாவஸ்த்தையிலுண்டாக்கக்கடவ வ்யாதிரோகாதிகளாலே குன்றி. பலஹாநியே ப்ரக்ருதியாய் மூப்பை ப்ராபித்து. பால்யத்தில் ஜ்ஞாநம் குறைந்திருக்கும்; வார்த்த(யௌ)கத்தில்ஶக்திகுறைந்திருக்கும்; இரண்டுமுண்

நூற்றுப்பன்னிரண்டாம் பாட்டு. "ஆக்கைவிடும் பொழுதெண்ணே" என்றிருக்கவேண்டியிருக்க, ஆயுஸ்ஸுப்போகிறதென்று வெறுப்பானென்னென்னவருளிச்செய்கிறார் (தேஹாத்மாபிமாநிகளித்யாதி). (நோய்மை)பலம்

(௧) விஷ்ணுதத்வே

டான யௌவநாவஸ்தையில்ரோகாத்யுபாதி(யி)களிலுலேஜ்ஞாநஶ க்திகள் குறைந்திருக்கும். இவையாய்த்துஉள்ள ஆயுஸ்ஸிலேவரும் ப்ரத்யூஹங்கள்.

(மாளும் நாளது) மாளும் அந்த திவஸமாய்த்து - முடியும் நாளாய்த்து ப்ராப்தமாய் நிற்கிறதென்கை. அதவா, (மாளும்) முடியும், (நாளது) ஆயுஸ்ஸின் ஸ்வபாவமென்றுமாம். (ஆதலால் வணங்கிவாழ்த்து) ஆயுஸ்ஸு அஸ்த்திரமாகையாலும், உள்ளஆயுஸ்ஸுக்கு ப்ரத்யூஹங்கள்பலவுமுண்டாகையாலும், "நாளைச்செய்கிறோம்" என்றிருக்குமதன்று, உள்ளபோதே தலைபடைத்த ப்ரயோஜநம்பெறத் திருவடிகளிலேவணங்கி, (க) "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி - ஸாஜிஹ்வாயாஹரிம் ஸ்தௌதி" என்கிறபடியே-வாய்படைத்த ப்ரயோஜநம்பெற வாழ்த்தப்பார். காலக்ஷேபம் நமக்கு பகவதநுபவத்தாலல்லது செல்லாதாகையாலே வணங்கிவாழ்த்தப்பாரென்றுமாம். (என்னெஞ்சமே) எனக்கு பவ்யமான நெஞ்சமே. உன்னுடைய கார்யமான ஸ்ம்ருதிக்கு நான்சொல்லவேண்டா விறேயென்கிறார். "நின்புகழ்க்கலால் நேசமில்லை நெஞ்சமே" என்று தம்மிலும் பகவத்ப்ரவணமாயிறே தம்முடைய திருவுள்ளமிருப்பது.

(ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்ததன்றியும்) கீழ்ச்சொன்னகாலக்ஷேபமேயன்றிக்கே அடிமைசெய்கையே புருஷார்த்த்மென்று ஸ்வரூபஜ்ஞாநமடியாகபுத்திபண்ணி வணங்கி வாழ்த்தப்பார். (ஆளதாகும் நன்மையென்று நன்குணர்ந்து) (உ) "ப்ரீயம்ஸு வஸுதேவஸ்ய - த்யாயந்ஸ்துவந்நமஸ்யம்ஶ்ச" என்று பகவத்ப்ராப்திக்கு இவற்றை ஸாதநமாகச்சொல்லாநின்றபின்பு அதுக்காளலோ வென்ன.

(மீள்விலாதபோகம் நல்கவேண்டும் மாலபாதமே) ஸர்வாதிகனான ஸர்வேஸ்வரன் திருவடிகள், நமக்கு (௩) "நசபுநராவர்த்ததே - நசபுநராவர்த்ததே" என்கிறபடியே யாவதாத்மபா(ஹா)வியானகைங்கர்யபோக (ஹோம)த்தைத் தரவேணும்; நீவணங்கி

(க)விஷ்ணுதர்ம-க. (உ)ஸஹஸ்ரநாம (௩) சாந்தோ-அ-கடு-க

மூ.—சலங்கலந்தசெஞ்சடைக் கறுத்தகண்டன்வெண்டலைப்
புலன்கலங்கவுண்ட பாதகத்தன் வன்றுயர்கெட
அலங்கன்மார்பில்வாசநீர் கொடுத்தவனடுத்தசீர்
நலங்கொள்மாலைநண்ணும்வண்ணமெண்ணுவாழிநெஞ்சமே.

---

வாழ்த்தப்பார். (௧) "𑌨𑌮 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 - நமஇத்யேவவாதிந:" (௨) "𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌸𑍋 𑌵𑌿𑌪𑌨𑍍𑌯𑌵𑌃 - தத்விப்ராஸோவிபந்யவ:" என்றிவை ப்ராப்யாந்தர்ப்பூதமாயிறே யிருப்பது. நீஇத்தைச் செய்யப்பாரென்றுகருத்து. .... .... ... (௧௧௨)

நூற்றுப்பதின்மூன்றும்பாட்டு. (சலங்கலந்தவித்யாதி)

| | |
|---|---|
| நெஞ்சமே | வாராய்மநஸ்ஸே ! |
| சலம் | கங்காஜலத்தோடே |
| கலந்த | மிஶ்ரமான |
| செஞ்சடை | சிவந்த ஜடையையுடையனாய் |
| கறுத்தகண்டன் | நீலகண்ட்டத்தையுடையனாய் |
| வெண்டலை | ப்ரஹ்மஶிரஸ்ஸினுடைய வெளுத்தகபாலத்திலே |
| புலன்கலங்க | ஸர்வேந்த்ரியங்களும் க்ஷுபி(ஷி)தமாம்படியாக |
| உண்ட | ஜீவித்த |
| பாதகத்தன் | ப்ரஹ்மஹத்யையாகிற பாதகத்தையுடைய ருத்ரனுடைய |
| வன் | ப்ரபலமான |
| துயர் | து:க்கமானது |
| கெட | நஶிக்கும்படியாக |
| அலங்கல்மார்பில் | திருமாலையையுடைய திருமார்பிலேயிருக்கிற |
| வாசநீர் | பரிமளிதமான ஜலத்தை |
| கொடுத்தவன் | கொடுத்து ரக்ஷித்தவனாய், |
| அடுத்தசீர் | ஸ்வரூபாநுபந்தித்வத்தாலேநித்யஸம்பத்தமான கல்யாணகுணங்களாலே யுண்டான |

---

(௧)பாரத-ஶாந்தி-௩௩௭. (௨)ஸாம-உத்தர.

நலங்கொள் — வைலக்ஷண்யத்தையுடைய
மாலை — ஸர்வேஶ்வரனை
நண்ணும்வண்ணம்-கிட்டும்ப்ரகாரமானவவனுடைய இரக்கத்தை
எண்ணு — புத்திபண்ணியிரு;
வாழி — நீவாழவேணும். (உனக்கு இந்த வ்யவஸாயம் ஒரு படிப்படவுண்டாயிடுகவென்றபடி). (ககரு)

அவ;—நூற்றுப்பதின்மூன்றும்பாட்டு. "மீள்விலாதபோகம் நல்கவேண்டும்" என்று கீழ்ச்சொன்ன கைங்கர்யபோகம் பாரதந்த்ர்யத்தினுடைய எல்லையிலே பெறுமதாயிருக்க, தத்விருத்த(ஸ)மான துர்மாநாதிகளாலே உபஹதராயிருந்தோம்; நமக்கு அந்தப் பேறுபெறுகைகூடுமோவென்ன; திருவுள்ளத்தைக் குறித்து, துர்மாநத்தாலேப்ரஹ்மஶிரஸ்ஸை யறுத்தருத்ரனுடைய பாதகத்தைப் போக்கினவனே நமக்குப் பாரதந்த்ர்ய விரோதியான துர்மாநத்தைப் போக்கிப் பேற்றைத்தரும், நீ அவனை உபாயமென்று புத்தி பண்ணியிருவென்கிறார்.

வ்யா.—(சலங்கலந்த செஞ்சடைக் கறுத்தகண்டன்) கங்காஜலத்தை ஸாகல்யேந தன்னுள்ளே யடக்கினதாய், சிவந்த ஜடையையும் க்ஷீராப்திஸமுத்தி(த்)தமான விஷத்தாலேகறுத்த கண்டத்தையுமுடைய ருத்ரன். கங்காத(ர)த்வமும்நீலகண்டத்வமும் இவனுடைய ஶக்திக்கு ஸூசகமாயிருக்கிறது. சிவந்த ஜடையென்கையாலே - இந்த ஶக்தி ஸாதித்துப்பெற்றதென்கைக்கு ஸூசகம். இப்போது இவனுடைய ஶக்திசொல்லுகிறதென்னென்னில்; கு(ரூ)ரூபாதகஹேதுவா யிருந்துள்ள இந்த துர்மாநத்துக்கடிஇந்தஶக்தியென்கைக்காக. ஸத்ப்ரக்ருதிகளுக்குண்டானஶக்தி ஸாத்விகர்க்கு நிழலாமாபோலே, துர்மாநிகளுக்குண்டானது பிறர்க்கும் பாத(வாய)கமாயிறே யிருப்பது. (வெண்தலை) (க) "முடையடர்த்தசிரமேந்தி" என்கிறபடியே ப்ரஹ்மஶிரஸ்ஸை அறுத்தநாள்தொடங்கி

(க) திரு-மொ-எ.

சி(ரி)ரகாலம் தரித்துக்கொண்டு திரிகையாலே ரக்தாதிஸ்பர்ஶங்கள்போய் அஸ்தி(ஸ்தி)மாத்ரமாகையாலே வெளுத்த ஸிர:கபாலத்திலே.

(புலன்கலங்க வுண்ட) பூர்வகாலத்திலே, தன்னுடைய ஶக்தியையும், லோகமடங்க † ஆதரிக்கும்படியான ஐஶ்வர்யத்தையு மநுஸந்தித்து, பின்புபாதகியாய் ஸிர:கபாலத்திலே ஜீவிக்கும்படியான ஸ்வரூபஹாநியையுமநுஸந்தித்து, ஸர்வேந்த்ரியங்களும் க்ஷுபி(பி)தமாம்படி அதிலே ‡ ஜீவித்துத் திரிந்தவன். (பாதகத்தன் வன்துயர் கெட) பிதாவுமாய் லோககுருவுமாயிருந்துள்ள அவன் தலையையறுக்கையாலே வந்த பாதகத்தையுடையவனுடைய வலிய து:க்கம் கெட. "வன்துயர்" என்கிறது - ப்ராயஸ்சித்த ஸாத்யமாதல் அநுபவவிநாஶ்யமாதலன்றிக்கே, ஒரு ஸர்வஶக்திபோக்க வேண்டும்படியாயிருக்கையாலே.

(அலங்கல்மார்வில் வாசநீர்கொடுத்தவன்) திருமாலையையுடைத்தான திருமார்வில் பரிமளிதமான நீராலே அக்கபாலத்தை நிறைத்தவன். "அலங்கல் மார்வு" என்றது - ப்ரயோஜநாந்தர பரரோடு அநந்ய ப்ரயோஜநரோடு வாசியற ஆபத்தே முதலாக ரக்ஷிக்கைக்கிட்ட தனிமாலையென்று தோற்றுகைக்காக. "வாசநீர்" என்றது—அதுதான் (௧) "ஸர்வ்வகந்த: - ஸர்வகந்த:" என்கிற விக்ரஹத்திலே உத்பந்நமானஜலமாகையாலே. முன்பு (௨)"ஊறு செங்குருதி" என்றது - பரிக்ரஹித்த விக்ரஹத்தினுடைய ஸஜாதீய பா(ஹா)வத்தினுடைய மெய்ப்பாடு தோற்றுகைக்காக. (அடுத்தசீர்நலங்கொள்மாலை) ஸ்வரூபாநுபந்தியான கல்யாண குணங்களால் வந்த வைலக்ஷண்யத்தையுடைய ஸர்வேஶ்வரனை.

(நண்ணும் வண்ணமெண்ணு) இப்படி துர்மாநியானவனுடைய பாதகத்தைப் போக்கினவன், அநந்யப்ரயோஜநரான நம்முடைய துர்மாநாதிகளைப் போக்குவிக்கக் குறையில்லை. நீ அவனைப்ராபிக்கும் ப்ரகாரம் அவனிரக்கமேயென்று புத்திபண்ணியிரு. அதாகிறது அவனை நம்தலையாலே ப்ராபிக்க விரகில்லை, அவன்றானே யிரங்கித் தன்னைத்தந்தருள வேணுமென்று வ்யவஸ்திதனாயிருக்கை, (நெஞ்சமே - வாழி) நெஞ்சமே, உனக்கு இந்தவ்யவஸாயம் ஒருபடிப்பட உண்டாயிடுக. .... ... .... .... (௧௧௩)

(௧)சாந்தோ-௩-௧௪.(௨) ௪௨. † (பா) ஆஶ்ரயிக்கும் ‡ (பா) ஜீவித்திருந்தவன்.

மூ.—ஈனமாயவெட்டு நீக்கி யேதமின்றிமீதுபோய்
வானமாளவல்லையேல் வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஞானமாகிநாயிறுகி ஞாலமுற்றுமோரெயிற்
றேனமாயிடந்தமூர்த்தி யெந்தைபாதமெண்ணியே. (கக௪)

நூற்றுப்பதினாலாம்பாட்டு. (ஈனமாயவித்யாதி)

என்னெஞ்சமே என்னுடைய மநஸ்ஸே !

| | |
|---|---|
| ஈனமாய | ஜ்ஞாநஸங்கோசமாகிறகுறைவைப் பணு கிற |
| எட்டு | அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதிஸம் பந்தங்களாகிற வைந்தும், தாபத்ரயம் மூன்றும், ஆகவிவ்வெட்டையும் |
| நீக்கி | போக்கி |
| ஏதமின்றி | ஸாம்ஸாரிகஸகலதுக்கங்களும்போய் |
| மீதுபோய் | அர்ச்சிராதிமார்க்கத்தாலே லீலாவிபூ திக்குமேலேபோய் |
| வானமாளவல்லை-யேல் | பரமபதத்தையநுபவிக்கவேண்டியி ருந்தாயாகில் |
| ஞானமாகி | ஆத்மஜ்ஞாநப்ரதனாய் |
| நாயிறுகி | ஆதித்யனைப்போலே ஐந்த்ரியகஜ்ஞாந ஹேதுவுமாய் |
| ஞாலமுற்றும் | பூமியடங்க |
| ஓரெயிற்று | அத்விதீயமான தம்(ஒ)ஷ்ட்ரையிலே |
| ஏனமாய் | வராஹமாய் |
| இடந்த | அண்டபித்தியிலொட்டைவிடுவித்த |
| மூர்த்தி | ஸர்விரிபோக்யமான பூர்ணஷாட்குண்ய விக்ரஹத்தையுடைய |
| எந்தை | ஸ்வாமியினுடைய |
| பாதம் | திருவடிகளை |
| எண்ணி | உபாயமாக அத்யவஸித்து |
| வணங்கிவாழ்த்து- | காலக்ஷேபார்த்தமாக வணங்கி வாழ்த்தப்பார். (கக௪) |

அவ;—நூற்றுப்பதினன்காம்பாட்டு. இப்படியானல் நமக்கு க்ருத்ய மென்னென்ன; ஜ்ஞாநப்ரதாநமே தொடங்கி பரமபத ப்ராப்தி பர்யந்தமாக நம்பேற்றுக்குஉபாயம்-ரக்ஷோத்த(ஐ)ரணம் பண்ணின ஸ்ரீவராஹநாயனர் திருவடிகளையாக நினைத்து,ஶரீராவஸாநத்தளவும்காலக்ஷேபார்த்தமாக அவனைவாழ்த்தப்பாரென்கிறர்

வ்யா.—(ஏனமாயவெட்டும் நீக்கி) சேதநர்க்குக்குறையான அவித்யாதிகளெந்தையும் ஶரீரஸம்பந்தப்ரயுக்தமான தாபத்ரயங்களையும்நீக்கி. இவை இவனுக்கு ஜ்ஞாநஸங்கோசகரமாகையாலே, "ஏனம்" என்கிறது. (ஏனம்) குறைவு. (ஏதமின்றி) ஸாம்ஸாரிகமான ஸகலதுக்கங்களும் போய்துக்கஹேதுவான அவித்யாதிகள் போகையாலே தத்கார்யமான துக்கங்களும்போமிறே. (ஏதம்)துன்பம். (மீதுபோய்வானமாளவல்லையேல்) துக்கஸம்பந்தமுள்ள லீலாவிபூதிக்குமேலேஅர்ச்சிராதிமார்க்கத்தாலேபோய், பரமபதத்திலே, (க)"ஸஸ்வராட்பவதி-ஸஸ்வராட்பவதி" என்கிறபடியே குறைவற்றவிருப்பைவேண்டி யிருந்தாயாகில். (வணங்கி வாழ்த்தென்னெஞ்சமே) உன்வழியே என்னைக்கொண்டுபோகையன்றிக்கே, எனக்கு பகவதநுபவத்துக்கு ஸஹகாரியான நெஞ்சே!, காலக்ஷேபார்த்தமாக அவன்திருவடிகளிலே வணங்கி வாழ்த்தப்பார். வணங்கிவாழ்த்துகை காலக்ஷேபமாகில் கீழ்ச்சொன்ன பேற்றுக்கு முதலேதென்ன; இன்னதென்கிறதுமேல்.

(ஞானமாகி ஞாயிறாகி) ஆந்தரமான அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்குகைக்கு ப்ரகாஶகமான ஜ்ஞாநமாய், பாஹ்யபதார்த்த ப்ரகாஶகனான ஆதித்யனாய். இத்தால்—ஆத்மஜ்ஞாந ஹேதுவுமாய் ஐந்த்ரியிகஜ்ஞாநஹேதுவு மென்றதாய்த்து. பாஹ்யவிஷயங்களை உள்ளபடி அறிந்தாலாய்த்து விடலாவது. ஆத்மவிஷயத்தையுள்ளபடி யறிந்தாலாய்த்துப்புருஷார்த்தருசியுண்டாவது. ஆக, ஜ்ஞாநப்ரதனும் ஸர்வேஶ்வரனென்கை. (ஞாலமுற்று மோரெயிற்றேனமா யிடந்தமூர்த்தி) மஹா வராஹமாய், பூமியையடங்க அக்னிநீய

(க) சாந்தோ-எ-உரு-உ.

மூ.—அத்தனாகியன்னையாகி யாளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப் பொழித்துநம்மையாட்கொள்வான்
முத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார்
எத்தினாலிடர்க்கடற் கிடத்தியேழைநெஞ்சமே. (கக௫)

---

மானாயிற்றாலே யிடந்த விலக்ஷண விக்ரஹயுக்தன். "மூர்த்தி" என்று-ஸூரிபோக்யமான பூர்ணஷாட்குண்யவிக்ரஹத்தையுடையவனைச் சொல்லுகிறது. அவ்வடிவையுடையவன் கிடீர்! தன்னையறியமாறிநஷ்டோத்த(ஐ)ரணம் பண்ணினானென்று கருத்து. (எந்தை) அந்நீர்மையைக்காட்டி என்னை யெழுதிக்கொண்டவனென்னுதல்; அவ்வடிவையுடையவன் தன்னையறியமாறுகைக்கடி-இத்தையுடையவனாகையாலேயென்னுதல். (பாதமெண்ணியே) அவன் திருவடிகளையேஉபாயமாகஅநுஸந்தித்து.மஹாவராஹமாய்ப்ரளயார்ணவத்தினின்றும்பூமியைஉத்த(ஐ)ரித்தாப்போலே, ஸம்ஸாரார்ணவத்தினின்றும்நம்மைஉத்தரிக்குமென்று அத்ய(ய)வஸித்து "வணங்கிவாழ்த்து" என்கிறார். "ஏனமாயவெட்டு நீக்கி யேதமின்றிமீதுபோய் வானமாளவல்லையேல் - ஞாலமாகிநாயிறாகி ஞாலமுற்றுமோரெயிற்றேனமா யிடந்தமூர்த்திஎந்தைபாதமெண்ணியே — வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே" என்றந்வயம். (கக௪)

நூற்றுப்பதினைந்தாம்பாட்டு. (அத்தனாகியித்யாதி)

| | |
|---|---|
| முத்தனார் | (முக்தனாரென்றபடி) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(மூ)ராயிருக்கிற |
| முகுந்தனார் | முக்திபூமிப்ரத(ஃ)ர்கையாலே முகுந்தஸமாக்யையையுடையரானவர் |
| ஒத்து | ஜ்ஞானைகாகாரதயா ஏகரூபமாய் |
| ஒவ்வாத | தேவாதிபேதேநநாநாவிதமாயிருக்கிற |
| பல்பிறப்பு | நம்முடையவநேக ஜந்மங்களை |
| ஒழித்து | போக்கி |
| நம்மை யாட் கொள்வான் | நம்மையடிமைகொள்ளுகைக்காக |
| அத்தனாகி | பிதாவுமாய் |

அன்னையாகி மாதாவுமாய்
ஆளுமெம்பிராளுமாய் } அடிமைகொள்ளக்கடவ என்ஸ்வாமியுமாய்
புகுந்து ப்ரவேஸித்து
நம்முள் நம்மிடத்திலே
மேவினர் ஒரு நீராகப் பொருந்தினர்.
ஏழைநெஞ்சமே-அறிவில்லியான நெஞ்சே !
எத்தினல் எத்தாலே
இடர்க்கடல் து:க்கஸாகரத்திலே
கிடத்தி கிடக்கிருய். (௧௧௫)

அவ;—நூற்றுப்பதினைந்தாம்பாட்டு. அவன், (௧) "அவாக்யநாதர:" என்கிறபடியே ஸ்வயம்நிரபேக்ஷன், நாம்அநேகஜந்மங்களுக்கடியான கர்மங்களைப் பண்ணிவைத்தோம்; 'அவன் திருவடிகளே உபாயம்' என்று நினைத்தமாத்ரத்திலே நம்மை ரக்ஷித்தருளக்கூடுமோவென்று ஶோகித்த திருவுள்ளத்தைக் குறித்து, ஸர்வவிதபந்துவுமாய் வந்துஸகலவிரோதிகளையும்போக்கித்தன்னைத் தருவானாக ஏறிட்டுக்கொண்டான்,நீஇனி ஶோகிக்க வேண்டாவென்று திருவுள்ளத்தைக்குறித்து (௨) "மாஶுச:" என்கிருர்.

வ்யா. (அத்தனுகி) ஹிதமே ப்ரவர்த்திப்பிக்கும் பிதாவுமாய். (அன்னையாகி) ப்ரியமேப்ரவர்த்திப்பிக்கும்மாதாவுமாய். பிதாசெய்யுமுபகாரத்தை மாதா செய்யமாட்டாள்; மாதா செய்யுமுபகாரத்தைப்பிதாசெய்யமாட்டான். இரண்டுவகைப்பட்டஉபகாரத்தையும் அவன்றனே செய்யவல்லனுயிருக்கை. (௩) "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவ:" என்றும், (௪) "உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தை" என்றும் சொல்லக்கடவதிறே. அதவா,(அத்தனுகிஅன்னையாகி)ஜ்ஞாநத்துக்குஉத்பாதகனுமாய்உத்பந்நஜ்ஞாநத்துக்கு

(௧) சாந்தோ-௩-௧௪-௨. (௨) கீ-௧௮-௬௬. (௩) பார-ஆரண்ய.
(௪) தி-வாய்-௫-௭-௭.

வர்த்த(ய-ல)கனுமாயிருக்குமவனென்னவுமாம். (க)"மஹீயாநுத்பாதகாத் - கரீயாந்ப்ரஹ்மத:பிதா" என்றுஜ்ஞாநோத்பாதகனைப்பிதாவென்று சொல்லக்கடவதிறே. இவ்வளவால்-கீழ்ப்பாட்டில் "ஞானமாகி" என்றதனைவிவரிக்கிறது. (ஆளும் எம்பிரானுமாய்) அடிமைகொள்ளக்கடவ என்ஸ்வாமியுமாய். உத்தமான ஜ்ஞாநகார்யமாய்க்கொண்டு, கைங்கர்யருசிபிறந்தால் அடிமைகொள்ளுகைக்கு ஸ்வாமியுமாமென்கை. இவைதான் ஸர்வவித பந்துவுமா யிருக்கிறபடிக்கு உபலக்ஷணம். (உ) "மாதா பிதா ப்ராதா நிவாஸ ஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண: - மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர் நாராயண:" என்றும், (௩)"எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றமெனக்கரசென்னுடைவாழ்நாள்"என்றும் சொல்லக்கடவதிறே.

(ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்து நம்மையாள் கொள்வான்) இப்படி ஸர்வவிதபந்துவுமாய்த்து எதுக்காக வென்னில்; விரோதிநிவ்ருத்தி பூர்வகமாக ஸ்வரூப ப்ராப்தமான அடிமைகொள்ளுகைக்காகவென்கிறார். (ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து) ஒன்றுக்கொன்று நெடுவாசிபட்டு,இப்படி அஸங்க்யாதமான ஜந்மத்தைத் தவிர்த்து. ஆத்மஸ்வரூபம் ஏகமாயிருக்க,ஒருத்தனுக்கு ஒருத்தனுடையஜந்மம் ப்ராப்யமாயும்,அவன்றனக்கே ஒருத்தனுடையஜந்மம் த்யாஜ்யமாயுமிறேயிருப்பது. அதவா,ஓராகாரத்தாலேஒத்தும்,ஓராகாரத்தாலேவைஷம்யப்பட்டுமிருக்குஞ்ஜந்மங்களென்றுமாம். ஜ்ஞாநைகாகாரதயா ஏகரூபமாய், கர்மத்தாலே தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபத்தாலே விஷமமாயுமிருக்கை. (ச)"மகிழலசொன்றேபோல்மாறும்பல்யாக்கை" என்னக்கடவதிறே. (நம்மையாள்கொள்வான்) நித்யஸம்ஸாரிகளாய்ப்போந்த நம்மை நித்யஸூரிகளைக்கொள்ளும் அடிமைகொள்ளுகைக்காக ஜந்மங்கள்தோறும் உடன்கேடாய்ப்போந்ததாகையாலே திருவுள்ளத்தைக் கூட்டி "நம்மை என்கிறார்.

(முத்தனார்) அவ்ப்ருஷ்டஸம்ஸாரகந்த(ம-ஷ)ரானவர். "முத்தர்" என்று - ப்ராக்வ(ஐ)ஸாபாவத்தைச் சொல்லுகிறதன்று, ஹேய

(க) மநுஸ்ம்ருதி. (உ) ஸுபா. (௩) தி-மொ-௫-௧-௬. (ச) க-திருவ-௪௬.

மூ.—மாறுசெய்தவாளரக்க னுலப்பவன்றிலங்கை
நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்டவீரனார்
வேறுசெய்துதம்முளென்னை வைத்திடாமையால்நமன்
கூறுசெய்துகொண் டிறந்த குற்றமெண்ணவல்லனே.

ப்ரத்யநீகதை ஸ்வாபாவிகமாகையாலே ப்ராகபாவத்தைச்சொல்லுகிறது. இத்தால் முக்தவ்யாவ்ருத்தி சொல்லுகிறது.(முகுந்தனார்). முக்தி பூமிப்ரதரானவர். இத்தால் - நித்யவ்யாவ்ருத்தி சொல்லுகிறது. ஆக இரண்டாலும்-விரோதி நிவ்ருத்தி ஹேதுவான ஜ்ஞாநஶக்த்யாதி பூர்த்தியையும் மோக்ஷப்ரத(ஈ)த்வத்துக் கடியான ஔதார்யத்தையும் சொல்லிற்றாய்த்து.(புகுந்துநம்முள்மேவினார்) (௧) "க்ஷிபாமி-க்ஷிபாமி"என்கிறபடியே த்யாகவிஷயமாம்படிசூழ்த்துக்கொண்டநம்முடையநெஞ்சில்,ஹேயப்ரத்யநீகரானவர்புகுந்து ஒருநீராகப் பொருந்தினார். நம்முடைய தண்மை பாராதே தம்முடைய பெருமையும்பாராதே நம்முடையஸர்வப(ஃ)ரத்தையும் தாமேயிட்டுக்கொண்டு செய்வாராகப் புகுந்து பொருந்தினாரென்கிறார்.

(எத்தினாலிடர்க்கடல் கிடத்தி) நம்முடைய ஹிதமறிகைக்கு நாம் ஸர்வஜ்ஞராயோ, அவன் அஜ்ஞனாயோ?; ஹிதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்கு நாம்ஶக்தராயோ, அவன் அஶக்தனாயோ?;கார்யம் செய்துகொள்ளுகைக்கு நாம் ப்ராப்தராயோ, அவன் அப்ராப்தனாயோ?. தன்மேன்மை பாராதே தாழநின்று உபகரிக்குமவனாயிருக்க,து:க்கஸாகரத்திலே கிடக்கிறது எத்தினாலே?(ஏழைநெஞ்சமே) பகவத்விஷயத்தில் கைவைப்பதற்கு முன்பு ஶோகிக்கவுமறியாதே, ஆனைக்கழுத்திலே யிருந்தாற்போலிருந்த அறிவுகேடுபோலேகாண் - நம்காரியத்துக்கு அவன் கடவனானபின்பு இன்று ஶோகிக்கிற அறிவுகேடுமென்கை. (ஏழையர்) அறிவிலார். "முத்தனார் முகுந்தனார் - ஒந்நொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மையாட்கொள்வான் - அத்தனாகி அன்னையாகி ஆளுமெம்பிரானுமாய்-புகுந்து நம்முள் - மேவினார் ; ஏழைநெஞ்சமே-எத்தினால் இடர்க்கடல் கிடத்தி" என்றந்வயம். ... ... ... (௧௧௫)

நூற்றுப்பதினாறும்பாட்டு. (மாறித்யாதி)

மாறுசெய்த எதிரிட்டுக்கொண்ட

(௧) கீதை -௧௬-௧௯.

| | |
|---|---|
| வாள் | ஆயுதத்தையுடைய |
| அரக்கன் | ராவணனுடைய |
| நாள் | ஆயுஸ்ஸானது |
| உலப்ப | நஶிக்கும்படியாக |
| அன்று | பிராட்டியைப்பிரித்தவன்று |
| இலங்கை | லங்கையை |
| நீறுசெய்து | பஸ்மமாக்கி, |
| சென்று | வாநரஸைந்யத்தோடே சென்று |
| கொன்று | ஸபரிகரமாகவதி(யி)த்து |
| வென்றிகொண்ட-ஜயத்தை யடைந்த | |
| வீரனர் | மஹாவீரரான சக்ரவர்த்தித்திருமகனவர் |
| வேறுசெய்து | "இவன்நமக்குரக்ஷ்யனன்று"என்கையாகிறவேறுபாட்டைச் செய்து |
| தம்முள் | தம்திருவுள்ளத்தில் |
| என்னை | ந்யஸ்தப(ஹ)ரனனவென்னை |
| வைத்திடாமையால்-வையாதபடியாலே | |
| நமன் | யமனனவன் |
| கூறுசெய்து கொண்டு | பெருமாளோடேகூடினவென்னைப் பிரித்து |
| இறந்தகுற்றம் | கழிந்தபாபத்தை |
| எண்ணவல்லனே-எண்ணஶக்தனே? (௧௧௬) | |

அவ-நூற்றுப்பதினறும்பாட்டு. மேலுள்ள ஜந்ம பரம்பரைகளுக்கடியான கர்மத்தைப்போக்கி அடிமை கொள்வானக ஏறிட்டுக்கொண்டானென்றார்-கீழ்; இதில்-"நரகஹேதுவான பாபத்தைப் பண்ணி,நாம்அத்தாலேயமவஶ்யராயன்றே யிருக்கிறது"என்றதிருவுள்ளத்தைக் குறித்து, நமக்குந் தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனர், தம்மோடே நம்மைக் கூட்டிக்கொண்டபின்பு யமனல் நாம் செய்தகுற்றம் ஆராயமுடியுமோவென்கிறார்.

வ்யா;—(மாறுசெய்த) எதிரிட்டுக்கொண்ட. (௧) "ஸீதாப்ரணாசவிவ்ருத்தோஸி-ரிபூணாமபிவத்ஸல:" (௨) "யதிவாராவணஸ்ஸ்வயம்-யதிவாராவணஸ்ஸ்வயம்" என்றிருக்கிற விஷயத்தையிறே எதிரிட்டுக்கொண்டது. தம்பியோபாதி அநுகூலித்துப் பிழைத்துப் போகலாயிருக்க, துஷ்ப்ரக்ருதியாகையாலே கிடீர்! எதிரிட்டுக்கொண்டது. (வாளரக்கன் நாள் உலப்ப) வாலியைக்கொன்று அவ்வரசிலே மஹாராஜரை அபிஷேகம்பண்ணினபடியைக் கேட்டிருக்கச்செய்தேயிறே எதிரிட்டு, ருத்ரன்பக்கல் பெற்றவாளையும், ப்ரஹ்மா தனக்குக்கொடுத்தவாயுஸ்ஸையும்தனக்கு ப(வ)லமாக விஸ்வஸித்திருக்கையாலே தம் கையில்வாளிருக்க ஒருவராலும் ஜயிக்கவொண்ணாது, வரத்தால்வந்த ஆயுஸ்ஸுண்டாயிருக்க ஒருவரால் கொல்லவொண்ணாதென்றிருந்தானாய்த்து. (வாளரக்கன் நாள் உலப்ப) ராவணனுடைய அந்தவாளையும் ஆயுஸ்ஸையும் முடிக்கைக்காக. யாதொன்றைத் தனக்கு பலமாக விஸ்வஸித்திருந்தான், அத்தையாய்த்து அழித்தது. (உலப்பு) முடிவு. (௩) "உலப்பிலானே" என்றும், (௪) "உலப்பில் கீர்த்தியம்மானே" என்னும் சொல்லக்கடவதிறே. (அன்று). (௫) "சுரிகுழற்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்" என்கிறபடியே-அவன் ப்ராதிகூல்யத்திலே கைவளர்ந்தவன்று. பரஹிம்ஸை பண்ணின வளவன்றியே, தேவதைகள் குடியிருப்பை அழித்தவளவே யன்றியே, (௬) "நயஷ்டவ்யம் நதாதவ்யம் நஹோதவ்யம் - நயஷ்டவ்யம்நதாதவ்யம்நஹோதவ்யம்" என்கிறபடியே-ஈஸ்வராஜ்ஞாதிலங்கநம் பண்ணினவளவேயன்றிக்கே, ஜகஜ்ஜீவநமான மிதுநத்தை, கடலுக்கு அக்கரையும் இக்கரையுமாம்படி பண்ணின ப்ராதிகூல்யமிறே. (இலங்கை நீறுசெய்து) இப்படி செய்யச்செய்தேயும் "அநுகூலிக்குமாகில் இவனை வ்யர்த்தமே அழியச்செய்கிறதென்" என்று பார்த்தருளி, ஒருதனியானைப்போகவிட்டு லங்கையை ப(ஹ)ஸ்மமாக்கி. (சென்று) அவ்வளவிலும் அநுகூலியாமையாலே ரிஸ்யமூகத்தில் நின்றும் கடற்கரையிலே சென்றுவிட்டு, லங்கைக்கரணான கடலையணைசெய்து, லங்கையைச்சென்று அடைமதிள்படுத்தி. (கொன்று)

---

(௧) ரா-யு-௫௦-௫௬. (௨) ரா-யு-௧௮-௩௫. (௩) தி-வாய்-௫-௮-௪.
(௪) தி-வாய்-௬-௧௦-௧. (௫) தி-மொ-௫-௭-௭- (௬)

மூ.—அச்சநோயோடல்லல்·பல் பிறப்பவாயமூப்பிவை
வைத்தசிந்தைவைத்தவாக்கைமாற்றிவானிலேற்றுவான்
அச்சுதனனந்தகீர்த்தி யாதியந்தமில்லவன்
நச்சுநாகணைக்கிடந்த நாதன்வேதகீதனே. (ககஎ

அவ்வளவிலும் (க) "ந நமேயம்-நநமேயம்" என்கிற ப்ரதிஜ்ஞாநு குலையாமையாலே ஸபரிகரமாக ராவணனைக்கொன்று. (வென்றி கொண்டவீரனார்) அவனைஜயித்து வீரஸ்ரீயோடே நின்றவா.

(வேறுசெய்து தம்முளென்னை வைத்திடாமையால்) இவன்நம க்குப்புறம்பா யிருப்பா னொருவனென்று தம்முடைய திருவுள்ளத் தில் என்னை நினையாமையாலே. "வேறுசெய்து" என்கிறது - நாம் பண்ணின கர்மத்துக்கு கர்த்தாவும் ப(ஹ)லபோக்தாவும் நாமேயெ ன்றிருக்கை. "என்னை"என்று-அவன் திருவடிகளிலே ப(ஹ)ரந்யா ஸம் பண்ணினவென்னை யென்றபடி. எனக்கு எதிரிகளானவர்கள் தமக்கு எதிரிகளாம்படித்தமக்கு அந்தரங்கனாக்கி வைக்கையாலே யென்கை. (நமன்கூறு செய்துகொண்டு) செய்தார் செய்தகுற் றங்களைஆராயக்கடவயமன், என்னைவிப(ஹ)ஜித்துக்கொண்டு. ஆண் பிள்ளையான சக்ரவர்த்தித்திருமகனார், தம்மோடே கூட்டிக்கொள்ள யமனாலே பிரிக்கலாமோ. இப்பாட்டு-சக்ரவர்த்தித்திருமகனைச்சொ ல்லுகிறது;—(உ) "அன்றுசராசரங்களை வைகுந்தத்தேற்றி"என்று சொல்லுகிறபடியே யமவஸ்யமான ஸ்தாவர ஜங்கமங்களை இருந் தபடியே விஷயீகரித்து பரமபதத்தேறக் கொண்டுபோன ஏற்றத் தை நினைத்து. கூறுசெய்கை - பிரிக்கை. (இறந்த குற்றமெண்ண வல்லனே) செய்துகழிந்தபாபத்தை எண்ணவல்லனோ. கீழ்க்கழி ந்தபாபமாவது- அநுதாபதசையையும் ப்ராயஸ்சித்த தசையை யுங்கழித்து, நரகாநுபவம்பண்ணியேகழிக்கவேண்டுமவையென்கை. "எண்ணவல்லனே" என்றது - பாபம் பண்ணினானென்று தன்க்ரு ஹத்திலே யிருந்து நினைக்கவும் சக்தனல்லனென்றபடி. ... (ககசு)

நூற்றுப்பதினேழாம்பாட்டு. (அச்சமித்யாதி)

அச்சம் பயமென்ன,
(நோயோடு)

(க) ரா-யு-௩கூ-கக. (உ)பெரு-தி-௧0-௧0.

நோய் வ்யாதியென்ன, இவற்றோடு கூடின
அல்லல் ஆதி(யி)யென்ன,
மூப்பு ஜரையென்ன,
பல்பிறப்பு அநேகஜந்மங்களென்ன
ஆயவிவை ஆனவிவைகளையும்
வைத்தசிந்தை இவைகளை அநுபவிக்கிற மநஸ்ஸையும்
வைத்தவாக்கை - கீழ்ச்சொன்னவற்றுக்கு ஆஸ்ரயமான
ஶரீரத்தையும்
மாற்றி தவிர்த்து
வானில் பரமபதத்திலே
ஏற்றுவான் ஏறப்பண்ணும் ஸ்வபாவத்தையுடைய
வன்,
அச்சுதன் ஆஸ்ரிதரை யொருநாளும் நழுவவிடாத
வன்,
அனந்தகீர்த்தி அத்தால்வந்த அபரிச்சிந்ந குணவத்தா
ப்ரதை(ய)யையுடையவன்,
ஆதியந்தமில்லவன்-ஆஸ்ரிதவிஷயத்தில் செய்யுமவற்றுக்
கு முதலும் முடிவுமில்லாதவன்
நச்சு ப்ரதிகூலவிஷயத்தில்விஷத்தையுமிழ்கிற
நாகணை திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே
கிடந்த கண்வளர்ந்தருளுகிற
நாதன் ஸர்வஸ்வாமியானவன்
வேதகீதன் வேதங்களாலே அச்யுதத்வாதிநர்ப்ரதி
பாதிக்கப்படுமவன்.

"இப்படிப்பட்டவன் வானிலேற்றுவான்"
என்றந்வயம். (௧௧௭)

அவ,—நூற்றுப்பதினேழாம்பாட்டு. யமவஶ்யதாஹேதுவான கர்மங்கள்போனாலும் தேஹாரம்பகமாயிருந்துள்ள ப்ராரப்த(ஶ) கர்மம் கிடக்கிறதில்லையோவென்ன; அந்தப்ராரப்தகர்மத்தையும் த(சா)தாஸ்ரயமானதேஹத்தையும்போக்கிப்பரமபதத்திலேகொண்டு

போவானென்பு நம்பெற்றுக்கு ஓருறுநறையில்லை யென்கிறார். பூர்வாக(ஸ)மாகிறது - தேஹபரம்பரைக்கு ஹேதுவாயும், நரக ஹேதுவாயும்,ப்ராரப்தமாய் அநுபவ விநாஸ்யமாயும்மூன்றுவகைப் பட்டாய்த் திருப்பது. அதில் உபாஸகனுக்கு ப்ராரப்தகர்ம மொழிந்தவை நஷ்டமாகக்கடவது; ப்ராரப்தகர்மம் அநுபவவிநாஸ்யமாகக் கடவது; ப்ரபந்நனுக்கு பகவத்ப்ரஸாதத்தாலே த்ரிவிதகர்மங்களும் அநுபவிக்கவேண்டுவதில்லை.

வ்யா. (அச்சநோயோடல்லல் பல்பிறப்பவாய மூப்பிவை) பயம், வ்யாதி, அத்தோடே கூடின ஆதி(யி), ஜரை, அநேகஜந்மமாகிற இவை. பயமாவது-ஆ(யி)திகளில்லென்று ப்ருக்கப்ரதமத்திலெடுத்தது-ஆதிவ்யாதிகள் எல்லாத்துக்கும்ஸாதாரணமாயிருக்கையாலே. அதாகிறது-ஆகா(மா)மியான து:கத்துக்கு ஹேதுவான லிங்கதர்ஶநத்தாலேவரும் மாநஸ து:க்கம்-பயமாகிறது. அது ஸர்வது:கஸாதாரணமிறே. வ்யாதியாகிறது - ஶிரோரோகாதிகள். ஆதியாகிறது - காமக்ரோதாதிகள். "நோயோடல்லல்" என்றது - இரண்டும்ஆத்யா(ஶ்யா)த்மிகமாகையாலே. இதுதான்ஆதிபௌதிகத்துக்கும் ஆதிதைவிகத்துக்கும் உபலக்ஷணம். ஜரையாகிறது - பால்ய யௌவநங்களுக்கும் உபலக்ஷணம். ப்ராரப்தகர்மங்களை, அநேகஜந்மஸம்பாவனையாலே "பலபிறப்பு" என்கிறது. 'ஆய இவை" என்கிறது-ஸங்க்ருஹீதங்களான அநுபவங்களைச் சொல்லுகிறது.

(வைத்தசிந்தை)உக்தமான இவற்றையநுஸந்தித்திருக்கிறமநஸ்ஸையும். (வைத்தவாக்கை).அந்த மநஸ்ஸுக்கு ஆஶ்ரயமானஶரீரத்தையும். (மாற்றி). ஆக-ப்ராப்த கர்மபலமான ஆதி(யி)வ்யாதிகளையும், அவற்றை யநுபவிக்கிற கரணங்களையும் ஸர்வத்துக்கும் ஆஶ்ரயமான தேஹஸம்பந்தத்தையும், இவற்றை யடங்கத்தவிர்த்து. (வானிலேற்றுவான்). (க) "நோபஜநம் ஸ்ம்ருந்திதம்ஶரீரம்-நோபஜநம் ஸ்மரந்நிதம்ஶரீரம்" என்கிறபடியே இவற்றை ஸ்மரிக்கைக்கும் அவஸரமில்லாத பரமபதத்திலே ஏறப்பண்ணும் ஸ்வபாவன். இஸ்ஸ்வபாவத்தை யுடையவனென்ன; (அச்சுதன்) திருவடிகளை ஆஶ்ரயித்தாரை ஒருநாளும் ஒருபடியாலும் நழுவவிடாதவன்.

---

(க) சாந்தோ-அ-கஉ-௩.

மூ.—சொல்லினுந்தொழிற்கணும் தொடக்கறாதவன்பினும்
அல்லுநன்பகலினோடானமாலைகாலையும்
அல்லிநாண்மலர்க்கிழத்தி நாதபாதபோதினைப்
புல்லியுள்ளம் வீள்விலாது பூண்டுமீண்டதில்லையே. (௧௧அ)

(அனந்தகீர்த்தி). இப்படி ஆஶ்ரிதரக்ஷணத்தைப் பண்ணுகை யாலுண்டான அபரிச்சேத்யமான குணப்ரதையை யுடையவன். (ஆதியந்தமில்லவன்) ஆத்யந்தரஹிதன், அதாகிறது - ஆஶ்ரித விஷயத்தில் செய்யநினைத்திருக்குமவற்றுக்கு முதலும் முடிவுமின் றிக்கே யிருக்கை. (நச்சுநாகணைக்கிடந்தநாதன்). ஆஶ்ரிதரை ஒரு காலும் பிரியமாட்டாதவர்வஸ்வாமி, ப்ரதிகூலர்பக்கலிலே நஞ்சை உமிழ்வானுமாய், ஜாதிப்ரயுக்தமான மென்மைகுளிர்த்தி நாற்றங்க ளையுடையனுமான திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலேகண்வளர் ந்தருளுகிறவன். (நாதன்). தாழநின்று உபகரிக்கைக்கும், ஆஶ் ரிதரைப் பிரியமாட்டாமைக்கும் ஹேது - உடையவனாகையாலே. (வேதகீதனே) அச்யுதனாகவும் வகுத்த ஸ்வாமியாகவும் நாராய ணானுவாகத்திலே ப்ரஸித்தனானவன். (௧) "ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் நாராயணம் - ஶாஶ்வதம் சிவமச்யுதம் நாராயணம்" என்னக் கடவதிறே. .... ... ... (௧௧௭)

அவ;—நூற்றுப்பதினெட்டாம்பாட்டு. "வைத்தசிந்தைவை த்த வாக்கைமாற்றி" என்று ப்ராரப்த கர்மாவஸாநமான விரோதி நிவ்ருத்திக்கும், "மீள்விலாதபோகம் நல்கவேண்டும்" என்றும் "நம் மையாட்கொள்வான்" என்றும், "வானிலேற்றுவான்" என்றும் சொன்ன ப்ராப்யஸித்திக்கும், ஈஶ்வரனேகடவானென்று திருவுள் ளத்தைக்குறித்து அருளிச்செய்தார் - கீழ்ப்பாட்டில்; ஈஶ்வரனை நோக்கி, தம்முடைய திருவுள்ளத்துக்குண்டான ப்ராப்ய ருசியை ஆவிஷ்கரிக்கிறார் - இதில்.

நூற்றுப்பதினெட்டாம்பாட்டு. (சொல்லினுமித்யாதி)
சொல்லினும் வாக்கிலும்
தொழில்கணும் காயிகவ்யாபாரங்களிலும்
தொடக்கு ஸம்பந்தம்

(௧) தை-நா-௧௧.

| | |
|---|---|
| அறுத | விச்சேதி(ஹ்ரூ)யாத |
| அன்பினும் | ப்ரேமத்திலும், |
| நல் | நன்றான |
| அல்லினோடும் | ராத்திரியோடும்கூடின |
| மாலை | ஸாயம் ஸந்த்யையிலும் |
| நல்பகலினோடு | நல்ல அஹஸ்ஸோடுகூடின |
| காலையும் | ப்ராதஸ்ஸந்த்யையிலும் |
| வல்லி | படர்ந்திருக்கிற |
| நாள் | ஸத்யோவிகஸிதமான |
| மலர் | தாமரைப்பூவையிருப்பிடமாகவுடைய |
| கிழத்தி | நாயகியானபெரிய பிராட்டியாருக்கு |
| நாத | ஸ்வாமியானவனே! |
| பாதபோதினை | உன்னுடைய திருவடித்தாமரையை |
| உள்ளம் | என்னுடையமநஸ்ஸானது |
| புல்லி | அணைந்து |
| வீள்விலாது | விச்சேதியாமல்படிக்கு |
| பூண்டு | ப்ரவணமாய் |
| மீண்டதில்லையே- | இருவருமான சேர்த்தியிலே அநுபவிக்கவிழிந்து குணாந்தரங்களிலும் மீளுகிறதில்லை. (கக௮) |

வ்யா.(சொல்லினும்தொழிற்கணும் தொடக்கறாதவன்பினும்) வாசிகமானஸ்துதி கீர்த்தநாதிகளும், காயிகமான ப்ரதக்ஷிணாஞ்ஜல்யாதிகளும், மாநஸமானப்ரேமமும், ஆக, மநோவாக்காயவ்யாபாரங்களுக்கு பகவத்விஷயமே விஷயமாகை. தொடக்கறாதவன்பாகிறது-விஷயாந்தர ஸ்பர்ஶமில்லாத ப்ரேமம்.

(அல்லும்நன்பகலினோடானமாலைகாலையும்) தமோபிபூ(ஹீஸூ)தியோடும் விஷயாந்தர ப்ராவண்யத்தோடும் செல்லக்கடவராத்ரியும், தேஹயாத்ராஶேஷமாகப் போதுபோக்கக்கடவ அஹஸ்ஸும்; ராத்ரியோடே கூடின ஸாயம்ஸந்த்யையும், அஹஸ்ஸோடே கூடின

மூ.—பொன்னிசூழரங்கமேய பூவைவண்ணமாயகேள்
என்னதாவியென்னும் வல்வினையினுட்கொழுந்தெழுந்
துன்னபாதமென்னநின்ற வொண்சுடர்க்கொழுமலர்
மன்னவந்துபூண்டுவாட்ட மின்றியெங்குமின்றதே. (கககூ)

---

ப்ராதஸ்ஸந்த்யையும் கரணத்ரயங்களுக்கும் ஏகம் விஷயமானாப் போலே, ஸர்வகாலத்துக்கும் விஷயம் அதுவேயாகை. "நன்பகல்" என்றத்தை எல்லாக்காலத்துக்கும் கூட்டி, நன்றான இரவும், நன்றான பகலும், நன்றானஸந்த்யையுமென்கிறார் - பகவத் விஷயத்தோடே செல்லுகையாலே.

(அல்லிநாண்மலர்க்கிழத்திநாத) படர்ந்த செவ்வித்தாமரைப் பூவைப் பிறப்பகமாகவுடையவளாகையாலே ஸௌகந்த்யஸௌகுமார்யாதிகளாலே அதிகையான பிராட்டிதான், (க) "அகலகில்லேனிறையும்" என்று மேல்விழும் ஸர்வாதிகனே. வல்லிபோலேயாய் செவ்வித்தாமரைப்பூவைப் பிறப்பாகவுடையவளென்றுமாம். இத்தால் இவர் திருவுள்ளத்துக்கு ஒருமிதுநமே ப்ராப்யமென்ற தாய்த்து. (பாதபோதினைப்புல்லி) உன்திருவடிகளாகிற தாமரைப்பூவைப் பற்றி. ஶ்ரியப்பதியான உன் திருவடித் தாமரைகளை மநோவாக்காயங்களினாலே ஸர்வகாலமும்பற்றியென்றபடி. புல்லல்-அணுகுதல்.

(உள்ளம்வீள்விலாதுபூண்டு) என்மநஸ்ஸு ஒருகாலும் விச்சேதமில்லாதபடி அதிப்ரவணமாய். (மீண்டதில்லையே.) இருவரும் சேர்ந்த சேர்த்தியழகிலே அநுபவிக்கவிழிந்து அதில் பர்யாப்தி பிறவாமையாலே குணாந்தரங்களிலும் மீண்டதில்லை. (கககூ)

நூற்றுப்பத்தொன்பதாம்பாட்டு. (பொன்னியித்யாதி)

| | |
|---|---|
| பொன்னி | திருக்காவேரியாலே |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற |
| அரங்கமேய | கோயிலிலே யெழுந்தருளியிருக்கிற |
| பூவைவண்ண | பூவைப்பூப்போன்ற நிறத்தையுடைய |
| மாய | ஆஶ்சர்யபூதரான பெரியபெருமாளே! |

---

(க) தி-வாய்-௬-௧0-௧0.

| | |
|---|---|
| கேள் | கேட்டருளவேணும்; |
| என்னதாவியென்னும் | என்னுடைய வாத்மாவாகிற |
| வல்வினையினுள் | ப்ரபலபாபராஸியிலே |
| கொழுந்து | ஸ்ரத்தா (ஙா) ங்குரமானது |
| எழுந்து | உதித்து, |
| உன்னபாதமென்ன | உன்னுடைய திவ்ய விக்ரஹமென்று [நின்ற |
| நின்ற | வேதாந்தங்களில் ப்ரதிபாத்யமாக |
| ஒண்சுடர் | நிரவதிக தேஜஸ்ஸென்ன, |
| கொழுமலர் | ஸ்ப்பீதமான புஷ்பமென்ன, (இவைகளிலே) |
| மன்னவந்து | ஸ்த்திரமாகவந்து |
| பூண்டு | வ்யக்த்யந்தரங்களிலன்வயியாதபடி அவகாஹித்து |
| வாட்டமின்றி | குறையாமல்படிக்கு |
| எங்கும் | ஸ்வரூபகுண விபூதிகளிலெங்கும் |
| நின்றதே | வ்யாபியாநின்றது. |

(பாதமென்று, சேஷபூதன் வார்த்தையாகையாலே திருமேனி லக்ஷிக்கிறது.) (கககூ)

அவ;—நூற்றுப்பத்தொன்பதாம்பாட்டு. கரணத்துக்கும் கர்த்த்ருபாவம் பிறக்கும்படியாக உமக்கு நம்பக்கலிலே பிறந்த அபி (ஹி) நிவேஶம் ஸம்ஸாரத்தில் கண்டறியாததொன்று யிருந்தது, இவ்வபிநிவேசத்துக்கடி யென்னென்று பெரியபெருமாள் கேட்டருள ; உம்முடைய வடிவழகையும் சீலத்தையும் காட்டி தேவரீர்பண்ணின க்ருஷி பலித்த பலமன்றோ வென்கிறார்.

வ்யா,— (பொன்னிசூழரங்கமேய பூவைவண்ண) காவேரி சூழ்ந்தகோயிலிலே மதர்த்த (உடூல)மாக நித்யவாஸம் பண்ணுகிற

பூவைவண்ணனே. கோயிலுக்கு ஒருதோள்மாலை யிட்டாப்போலே அலங்காரமாய்த்துத் திருப்பொன்னி. பரமபதத்துக்கு விரஜை போலே யாய்த்து-கோயிலுக்குத் திருப்பொன்னி. பரமபதத்திலே நித்யவாஸம்-அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(மாஸ)ரான நித்யஸூரிகளை அநுபவிப்பிக்கைக்கு; க்ஷீராப்தியில் நித்யவாஸம், ஸ்வேதத்வீபவாஸிகளை காதாசித்கமாக அநுபவிப்பிக்கைக்கு; கோயிலில் நித்யவாஸம், பாபராஸியான வெனக்கு தேவரீர் பக்கலிலே ருசிபிறப்பித்து அநுபவிப்பிக்கைக்கு. நிறத்தாலும் ஸௌகுமார்யத்தாலும் பூவைப் பூவை ஒப்பாகச்சொல்லும்படியாக ஆகர்ஷமான வடிவையுடையவனென்கை. (மாய.) இப்படி வேறொருவ்யக்தியில் காணவொண்ணாத ஆஸ்சர்யமான ஸீலத்தையும் ஸௌலப்யத்தையு முடையவனே. (கேள்.) உன்னுடைய அழகாலும் சீலத்தாலும் எனக்குப் பிறந்தருசிவிசேஷத்தைக் கேட்டருளவேணும். உபகரித்த தேவரீர் விஸ்மரித்தாலும் உபகாரஸ்ம்ருதியையுடைய என்பக்கலிலே கேட்டருளீரென்கிறார்.

(என்னதாவியென்னும் வல்வினையினுள் கொழுந்தெழுந்து)என்னுடைய ஆத்மாவென்றுபேராய் பாபராசியான இதினபக்கலிலே உன்னைக்குறித்து ஸ்ரத்தை(ஸ)யானது உதித்தது. கர்மயோகத்தாலே விரோதிபாபம் போனால் பிறக்கக்கடவ ஸ்ரத்தை, பாப ப்ரசுரனான தலையிலும் தோற்றும்படியிறே தேவரீருடைய ஸௌந்தர்யத்தினேற்றமிருப்பது. ஸ்வஸ்வரூபத்தை ஜ்ஞாநாநந்த லக்ஷணமாக நினைத்திருக்கை யன்றிக்கே, * ஸ்வாநாயாநாநேய - அபராதாநாமாலயமாகவாய்த்து இவர் நினைத்திருப்பது.

(உன்னபாதமென்னநின்ற வொண்சுடர்க்கொழுமலர்.) உன்னுடைய திவ்யவிக்ரஹமென்று வேதாந்தங்களிலே தேஜோமயமாகவும், கொழுவியமலர்போலே ஸுகுமாரமாகவும் சொல்லப்படுகிறபடியே, கீழ்ப்பிறந்த ஸ்ரத்தைக்கு-தேஜோமயமாய், (க) "யுவா ஸுவாஸா: - யுவாகுமார:" என்கிறபருவத்தை யுடைத்தாய், அக்

(க) ருக்வேதம்-௨-௨-௨௫.

மூ.—இயக்கறுதபல்பிறப்பி லென்னைமாற்றியின்றுவந்
து யக்கொண்மேகவண்ணனண்ணி யென்னிலாயதன்றன்மை
மயக்கினான் தன்மன்னுசோதி யாதலாலென்னாவிதான்
இயக்கெலாமறுத்தருத வின்பவீடுபெற்றதே. (௧௨௦)

திருச்சந்தவிருத்தம் முற்றிற்று.

---

திருமழிசைப்பிரான் திருவடிகளேசரணம்.

---

யந்தஸேஷகுமாரமான வடிவேவிஷயமென்னகை. "பாதம" என்று ஸேஷபூதன் வ்யவஹாரமிருக்கிறபடி. (மன்னவந்துபூண்டு.) பிரியாதபடி வந்துபூண்டு. பூண்கையாகிறது - வ்யக்த்யந்தரங்களிலும் அந்வயியாதொழிகை.

(வாட்டமின்றி யெங்குநின்றதே.) க்ஷுத்ரவிஷயவாஸனையால் சலிப்பிக்கவொண்ணாதபடி உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகள் எங்கும்வ்யாப்தமாய் நின்றது. அவ்விக்ரஹந்தான் ஷாட்குண்ய விக்ரஹமென்னும்படி குணப்ரகாஶக மாகையாலே குணங்களிலே மூட்டிற்று; அக்குணங்கள் தானாஸ்வாஶ்ரயமான திவ்யாத்மஸ்வரூபத்திலே மூட்டிற்று; அஸ்ஸ்வரூபந்தான் ஸ்வநியாம்யமான விபூதியிலே மூட்டிற்று. ஆக, என்னுடைய ஆதரத்துக்குள்ளே, ஸ்வரூபரூபகுணவிபூதிகளெல்லாம் அந்தர்ப்பூதமாய்த்தென்கை. (௧௧௯)

நாற்றிருபதாம்பாட்டு (இயக்கறுதவித்யாதி).

| | |
|---|---|
| இயக்கு | இயங்குதல்; நடையாட்ட மென்றபடி; |
| அறுத | விச்சேதியாத; அந்யோந்ய ஸம்பந்த(மு)மான வென்றபடி; |
| பல்பிறப்பில் | அநேகஜந்மங்களில் நின்றும் |
| என்னை | அஜ்ஞனனவென்னை |
| மாற்றி | (மாற்றவென்றதாய்) மாற்றுகைக்காக வென்றபடி; |
| இன்றுவந்து | நிர்ஹேதுகமாகவந்து |

| | |
|---|---|
| உயக்கொள் | உஜ்ஜீவிப்பிக்கிற |
| மேகவண்ணன் | காளமேகநிபஸ்யாமனானவன் |
| நண்ணி | நான் இருந்தவிடத்திலே கிட்டி |
| என்னிலாயதன்னுளே | "தன்னிலாயன்னுளே" என்றுகூட்டி, தனக்கு ப்ரகாரமான என்ஹ்ருதயத்திலே |
| தன் | தன்னுடைய |
| மன்னு | நித்யமான |
| சோதி | ஜ்யோதிர்மயமான திவ்யமங்கள விக்ரஹத்தை |
| மயக்கினான் | பிரிக்கவொண்ணாதபடி கலந்தான். (மயக்கம்-செறிவு) |
| ஆதலால் | ஆகையாலே |
| என்னாவிதான் | என்னுடைய வாத்மாவானது |
| இயக்கெலாம் | அந்யோந்ய ஸம்பந்தங்களான அவித்யாகர்மவாஸநா ருசிப்ரக்ருதி ஸம்பந்தங்களை யெல்லாம் |
| அறுத்து | போக்கி |
| அறாதவின்பவீடு | யாவதாத்மபாவி விச்சேதமில்லாத நிரதிஶயாநந்தமான கைங்கர்யரூப மோக்ஷத்தை |
| பெற்றதே | லபித்ததே. |

அண்ணாவப்பங்கார் திருவடிகளேசரணம்.



அவ, — நூற்றிருபதாம்பாட்டு. "உன்னபாதமென்ன நின்ற ஒண்சுடர்க்கொழு மலர் மன்னவந்துபூண்டு" என்று - வடிவழகிலேபிறந்த ஆதரத்துக்கு அவ்வடிவே விஷயமானபடியைச்சொன்னார் - கீழ்; இதில் - கிடந்தானை கண்டேறுமாபோலே தாமே அவ்விக்ரஹத்தைப்பற்றுகையன்றிக்கே, நிர்ஹேதுகமாகப்பெரிய

பெருமாள், தம்முடைய விக்ரஹத்தை என்னுள்ளே பிரியாதபடி வைக்கையாலே விரோதிவர்க்கத்தையடையப்போக்கி, அபுநராவ்ருத்தி லக்ஷணமாய் நிரதிஶயாநந்தரூபமான கைங்கர்யத்தைப் பெற்றேனென்று, (௧) "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்று உபகாரஸ்ம்ருதியோடே தலைக்கட்டுகிறார்.

வ்யா.—(இயக்கறுதபல்பிறப்பிலென்னைமாற்றி) (௨) "மாறியாறிப்பலபிற ப்பும் பிறந்து" என்கிறபடியே - விச்சேதியாதே தேவ திர்யங்மநுஷ்யஸ்தாவராத்மகமான பலவகைப்பட்டிருக்குமதுள்ள ஜந்மங்களில்நின்றும், அஜ்ஞனாய்நித்யஸம்ஸாரியாய்ப்போந்த என்னை மாற்றநினைத்து. இயக்கறுமையாவது - ஒருதேஹத்துக்கு ஆரம்பகமான கர்மத்தை யநுபவிக்க விழிந்து, அநேகதேஹாரம்பகமான கர்மத்தைப் பண்ணுகையாலே தேஹபரம்பரைக்கு விச்சேதமின்றிக்கே செல்லுகை. (இயங்கு) - நடையாட்டம். "இயக்கல்" என்று வல்லொற்றாய்க்கிடக்கிறது. மாற்றநினைத்ததை "மாற்றி" என்பானென்னென்னில்; (௩) "உயிர்முதலாய் முற்றுமாய்" என்றாப்போலே. (இன்றுவந்துயக்கொள் மேகவண்ணனண்ணி.) விஷயாந்தர ப்ராவண்யத்தைத்தவிர்த்து, தன்பக்கலிலே பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத்தரும் காளமேக நிபஶ்யாமனானவன், எனக்கு நினைவின்றிக்கேயிருக்க, இன்று நிர்ஹேதுகக்ருபையினாலே நானிருந்த விடத்தேவந்துகிட்டி. நண்ணுதல் - அணைதல். "நச்சு நாகணைக்கிடந்தநாதன்" என்றும், "பொன்னிசூழரங்கமேய பூவை வண்ணன்" என்றும் சொல்லிப்போந்த வராகையாலே, இங்கும் "உயக்கொள்மேகவண்ணன்" என்று பெரியபெருமாள் திருமேனியைத்தமக்கு உஜ்ஜீவநஹேதுவென்கிறார். (என்னிலாயதன்னுளே) அஹம்புத்தி ஶப்தங்கள் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி, தனக்கு ப்ரகாரமானஎன்னுடைய ஹ்ருதயத்திலே. (௪) "தத்த்வமஸி - தத்வமஸி" என்று உபதேசித்து, (௫) "ஸ ஹம் ப்ரஹ்மாஸ்மி-அஹம்ப்ரஹ்

(௧) தி-வாய்-௧௰-௧௰-௧௰. (௨) தி-வாய்-௨-௬-௮. (௩) தி-வாய்-௭-௬-௨.
(௪) சாந்தோ-௬-௮-௭. (௫) கஷீதகி.

மாஸ்மி" என்று அநுஸந்தித்துப்போந்த அர்த்தமிறே இவர் இங்கு அருளிச்செய்கிறார். இந்த ஶரீராத்ம ஸம்பந்தம் இங்குச்சொல்லுகிறது - தன்பேறாக உபகரித்த விதாக்கு ஹேதுவாக.

(மயக்கினான் தன்மன்னுசோதி) அபிமதமாய் அநுரூபமாய் ஜ்யோதிர்மயமான திவ்யமங்கள விக்ரஹத்தோடே பிரிக்கவொண்ணாதபடி கலந்தான். (மயக்கம்) செறிவு. அதாவது தன்னையொழிய எனக்கு ஒரு க்ஷணகாலமும் செல்லாதபடி பண்ணினானென்கை. (ஆகையால்) இப்படி தான் மேல்விழுந்து இவ்வளவும் புகுரநிறுத்துகையாலே. (என்னாவிதான்) தனக்கு அநந்ய ஶேஷமாய் ஸ்ரீகௌஸ்துபம்போலே அபிமதமுமான என் ஆத்மாவானது.

(இயக்கெலாமறுத்து) அந்யோந்யகார்ய காரணபாவத்தாலே ஒழுக்கறுத அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களையறுத்து. "இயக்கறுதபல்பிறப்பில்" என்று - காரணமான தேஹஸம்பந்தங்களைச்சொல்லிற்றாய், தத்கார்யமான அஜ்ஞாந கர்மங்களென்ன, ததாஶ்ரயமான வாஸநாருசிகளென்ன இவற்றையும்கூட்டி "எலாமறுத்து" என்கிறார். (அறாத இன்பவீடுபெற்றதே) யாவதாத்மபாவி விச்சேதமில்லாத நிரதிஶயாநந்தமான கைங்கர்யரூப மோக்ஷத்தைப்பெற்றது. (௧௨௦)

—oo✠oo—

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

திருச்சந்தவிருத்த வ்யாக்யாநம்

ஸம்பூர்ணம்.

